ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

ஸர்வம்விஷ்ணுமயம்ஜகத்,

---

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

தெய்வப்புலமைக்

## கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்தது.

ஆறுவது

## யுத்தகாண்டம்.

---

டிலெகிராப் ஆபிசுமானேஜர்

ம-ள-ள-ஸ்ரீ-

## திரு-வீராசாமிபிள்ளையவர்கள்

கேட்டுக்கொண்டபடி,

இயற்றமிழாசிரியர்

அ-வீராசாமிசெட்டியாரவர்கள்

மாணாக்கரும், நார்மல்கலீஜ்தமிழ்ப்புலவரும்

ஆகிய

கோமளபுரம்,

## இராசகோபாலபிள்ளையவர்களால்

பத்துப்பிரதிகளைக்கொண்டாராய்ந்து

கரலிகிதவழூஉக்களைந்து

ஆ-முத்தியாலுநாயகரது,

வாணீநிகேதனவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

இரத்தாட்சிஸு மார்கழிமீ.



ஹரி ஓம்.







நன்றாக குருவாழ்க குருவேதுணை.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## ௬—வது. யுத்தகாண்டம்.

### முதலாவது—கடல்காண்படலம்.

தனியன்.

கம்பர்வீட்டுளொருசிறுபுன்கட்டுத்தறியுங்கவிசெயுமென்
றிம்பர்நாட்டுமன்பதைகூறிருஞ்சொல்புலவீர்கேட்டுவந்தாம்
சம்புநீட்டுசடைத்தலைக்குத்தகுவர்தலைக்குத்திருப்பாத
அம்புநாட்டுமால்சரிதமன்னோர்பாடலதுவியப்பே.

காப்பு.

ஒன்றேயென்னினொன்றேயாம்பலவென்றுரைக்கிற்பலவேயாம்
அன்றேயென்னினன்றேயாமாமேயென்னினாமேயாம்
இன்றேயென்னினின்றேயாமிலதென்றுரைக்கினிலதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கைநமக்கிங்கென்னோபிழைப்பம்மா. (௧)

நூல்.

ஊழிதிரியுங்காலத்துமுலையாநிலையவுயர்கிரியும்
வாழிவற்றாமறிகடலுமண்ணும்வடபால்வான்றோயப்
பாழித்தெற்குள்ளனகிரியுநிலனுந்தாழப்பரந்தெழுந்த
ஏழுபத்தின்பெருவெள்ளமகரவெள்ளத்திறுத்ததால். (௨)

பொங்கிப்பரந்தபெருஞ்சேனைபுறத்துமகத்தும்புடைசுற்றச்
சங்கிற்பொலிந்தகையானைப்பிரிந்தபின்புதமக்கினமாம்
கொங்கிற்பொலிந்ததாமரையின்குழுவுந்துயில்வுற்றிதழ்குவிக்கும்
கங்குற்பொழுதுந்துயிலாதகண்ணன்கடலைக்கண்ணுற்றான். (௩)

சேயகாலம்பிரிந்தகலத்திரிந்தான்மீண்டுஞ்சேக்கையின்பால்
மாயன்வந்தானினிவளர்வானென்றுகருதிவருதென்றல்
தூயமலர்போனுரைத்தொகையுமுத்துஞ்சிந்திப்புடைசுருட்டிப்
பாயலுதறிப்படுப்பதேயொத்ததிரையின்பரப்பம்மா. (௪)

வழிக்குங்கண்ணீரழுவத்துவஞ்சியழுங்கவந்தடுத்த
பழிக்குங்காமன்பூங்கணைக்கும்பற்றாநின்றான்பொற்றோளைச்
சுழிக்குங்கொல்லனுலைவுலையிற்றுள்ளும்பொறியிற்சுடுமென்றே
கொழிக்குங்கடலினெடுந்திரைவாய்த்தென்றறூற்றுங்குறுந்திவலை. (௫)

நென்னற்கண்டதிருமேனியின்றுபிறிதாய்நிலைதளர்வான்
தன்னைக்கண்டுமிரங்காதுதனியேகதறுந்தடங்கடல்வாய்ப்
பின்னற்றிரைமேற்றவழ்கின்றபிள்ளைத்தென்றல்கள்ளுயிர்க்கும்
புன்னைக்குறும்பூநறுஞ்சுண்ணம்பூசாதொருகாற்போகாதே. (௬)

சிலைமேற்கொண்டதிருநெடுந்தோட்குவமைமலையுஞ்சிறிதேய்ப்ப
நிலைமேற்கொண்டுமெலிகின்றநெடியோன்றன்முன்படியேழும்
தலைமேற்கொண்டகற்பினுண்மணிவாயென்னத்தனித்தோன்றிக்
கொலைமேற்கொண்டாருயிர்குடிக்குங்கூற்றங்கொல்லோகொடிப்பவளம். எ

another reading

ஆரமில்லைமயிலிருந்தசூழலென்றுமனஞ்செல்ல
வீரவில்லினெடுமானம்வெல்லநாளுமெலிவானுக்
சோழில்லாநிருத்தோடென்னவுறவுண்டுனக்கேழை எழுமணி.
[illegible] (அ)

பூர்துவனை...தற்...த்திருந்...ளிங்கரிடார்கொடியேன்
தந்தபாவைதவப்பாவைதனிமைதகவோவெனத்தளர்ந்து
சிந்துகின்றநறுந்தாளக்கண்ணீர்ததும்பித்திரைத்தெழுந்து
வந்துவள்ளன்மலர்த்தாளின்வீழ்வதேய்க்குமறிகடலே. (௯)

பள்ளியரவிற்பேருலகம்பசுங்கல்லாகப்பனிக்கற்றை
துள்ளுநறுமென்புனறெளிப்பத்தூநீர்க்குழவிமுறைசுற்றி
வெள்ளிவண்ணநுரைக்கலவைவெதும்புமண்ணறிருமேனிக்
கள்ளியப்பத்திரைக்கரத்தாலரைப்பதேய்க்குமணியாழி. (௧0)

கொங்கைக்குயிலைத்துயர்நீக்கியிமையோர்க்குற்றகுறைமுற்ற
வெங்கைச்சிலையன்றூணியினன்விடாதுமுனிவின்மேற்செல்லும்
கங்கைத்திருநாடுடையானைக்கண்டுநெஞ்சங்களிகூர
அங்கைத்திரைகளெடுத்தோடியார்த்ததொத்ததணியாழி. (௧௧)

நாயகருங்கடலையெய்தியிதனுக்கெழுமடங்கு
நாயநெடுமானந்துயரங்காதலிவைதழைப்ப
நாகுமேல்விளைவென்றிருந்தானிராமனிகலிலங்கைப்
நாயகாரியமுநிகழ்ந்தபொருளும்பேசுவாம். (௪௨)

கடல்காண்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௩.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௨-வது—மந்திரப்படலம்.

பூவருமயனொடுபுகுந்துபொன்னகர்
மூவகையுலகினுமழகுமுற்றுற
ஏவெனவியற்றினன்கணத்தினென்பரால்
தேவருமருள்கொளத்தெய்வத்தச்சனே. (௧)

பொன்னினுமணியினுமமைந்தபொற்புடை
நன்னகர்நோக்கினனகநோக்கினான்
முன்னையினழகுடைத்தென்றுமொய்கழன்
மன்னனுமுகந்துதன்முனிவுமாறினான். (௨)

முழுப்பெருந்தனிமுதலுலகின்முந்தையோன்
எழிற்குறிகாட்டிநின்றியற்றியீந்தனன்
பழிப்பருமுலகங்களவையும்பன்முறை
அழித்தழித்தியற்றுவாற்கரிதுண்டாகுமோ. (௩)

திருநகர்முழுவதுந்திருந்தநோக்கிய
பொருகழலிராவணனயற்குப்பூசனை
வரன்முறையியற்றிநீவழிக்கொள்வாயென்றான்
அரியனதச்சற்குமுதவியாணையான். (௪)

அவ்வழியாயிரமாயிரம்மவிர்
செவ்வழிச்செம்மணித்தூணஞ்சேர்த்திய
இவ்வெழின்மண்டபத்தரிகளேந்திய
வெவ்வழியாசனத்தினிதுமேவினான். (௫)

வரம்பறுசுற்றமுமந்திரத்தொழில்
நிரம்பியமுதிஞருஞ்சேனைநீள்கடற்
றரம்பெறுதலைவருந்தழுவத்தோன்றினான்
அரம்பையர்கவரியோடாடுந்தாரினான். (௬)

முனைவருந்தேவருமற்றுமுற்றுளோர்
எனைவருந்தவிர்கெனவேயவாணையான்
புனைகுழன்மகளிரோடினைஞர்ப்போக்கினான்
வினைவுறுகாரியநிகழ்த்துநெஞ்சினான். (௭)

பண்டிதர்பழையவர்கிழவர்பண்பினர்
தண்டலின்மந்திரத்தலைவர்சார்கெனக்
கொண்டுடனிருந்தனன்கொற்றவாணையான்
வண்டொடுகாலையும்வரவைமாற்றினான். (அ)

ஆன்றமைகேள்வியரெனினுமாண்டொழிற்
கேன்றவர்நண்பினரெனினும்யாரையும்
வான்றுணைச்சுற்றத்துமக்கடம்பியர்
போன்றவரல்லரைப்புறத்துப்போக்கினான். (கூ)

திசைதொறுநிறுவினனுலகுசேரினும்
பிசைதொழின்மறவரைப்பிறிதென்பேசுவ
விசையுறுபறவையும்விலங்கும்வேற்றவும்
அசைதொழிலஞ்சினசித்திரத்தினே. (க0)

தாழ்ச்சியிங்கிதனின்மேற்றருவதென்னினி
மாட்சியொர்குரங்கினாலழிந்தமாநகர்
ஆட்சியுமமைவுமென்னரசுநன்றெனச்
சூழ்ச்சியின்கிழவரைநோக்கிச்சொல்லினான். (கக)

சுட்டதுகுரங்கெரிசூறையாடிடக்
கெட்டதுகொடிநகர்கிளையுநண்பரும்
பட்டனர்பரிபவம்பரந்ததெங்கணும்
இட்டவிவ்வரியணையிருந்ததென்னுடல். (க௨)

ஊறுகின்றனகிணறுதிரமொண்ணகர்
ஆறுகின்றிலதனலகினுநாவியும்
தேறுமங்கையர்நறுங்கூந்தலின்சுறு
நாறுகின்றதுநுகர்ந்திருந்துநாமெலாம். (க௩)

மற்றிலதாயினுமலைந்தவானரம்
இற்றிலதாகியதென்னும்வார்த்தையும்
பெற்றிலம்பிறந்திலமென்னும்பேறலால்
முற்றுவதென்னினிப்பழியின்மூழ்கினும். (க௪)

என்றவனியம்பலுமெழுந்திறைஞ்சினான்
கன்றியகருங்கழற்சேனைகாவலன்
ஒன்றுளதுணர்த்துவென்றொருங்குகேளென
நின்றனனிகழ்த்தினன்புணர்ப்பினெஞ்சினன். (க௫)

வஞ்சனைமனிசரையியற்றிவாணுதற்
பஞ்சனமெல்லடிமயிலைப்பற்றுதல்
அஞ்சினர்தொழிலெனவறிவித்தேற்கது
தஞ்செனவுணர்ந்திலையுணருந்தன்மையோய். (க௬)

கரன்முதல்வீரரைக்கொன்றகள்வனை
விரிகுழலுங்கைமூக்கரிந்தவீரரைப்
பரிபவஞ்செய்ஞ்ஞரைப்படுக்கலாதுநீ
அரசியலழிந்ததென்றயர்திபோலுமால். (கஎ)

தண்டமென்றொருபொருட்குரியதக்கரைக்
கண்டவர்பொறுப்பரோவுலகங்காவலர்
வண்டமரலங்கலாய்வணங்கிவாழ்வரோ
விண்டவருறுவலியடக்கும்வெம்மையோர். (சஅ)

செற்றனனொதிமூழுங்தேவர்தானவர்
கொற்றமும்வீரமும்வலியுங்கூட்டற
முற்றிமூன்றுலகுநீமுதல்வனாயது
வெற்றியோபொறைகொலோவிளம்பல்வேண்டுமால். (கக)

விலங்கினருயிர்கெடவிலக்கிமீள்கலா
திலங்கையினிதிருந்தின்பந்துய்த்துமேல்
குலங்கெழுகாவலகுரங்கிற்றங்குமோ
உலங்குநம்மேல்வரவொழிக்கற்பாலதோ. (உ0)

தேவருமடங்கினரியக்கர்சிந்திநர்
தாவருந்தானவர்தருக்குத்தாழ்ந்தனர்
யாவருமிறைவனென்றிறைஞ்சுமேன்மையர்
மூவருமொதுங்கினருனக்குமொய்ம்பினோய். (உக)

போயினகுரங்கினைத்தொடர்ந்துபோயவண்
ஏயினருயிர்குடித்தெவ்வந்தீர்கலம்
வாயினுமனத்தினும்வெறுத்துவாழ்துமேல்
ஓயுநம்வலியெனவுணரக்கூறினன். (உஉ)

மற்றவன்பின்னுறமகோதரப்பெயர்க்
கற்றடந்தோளினனெரியுங்கண்ணினன்
முற்றுறநோக்கினன்முடிவுமன்னதால்
கொற்றவகேளெனவினையகூறினன். (உங)

ஏற்றமென்பிறிதினியெவர்க்குமின்னுயிர்
மாற்றருமுறைமைசால்வலியின்மாண்பமை
கூற்றுவன்றன்னுயிர்கொள்ளுங்கூற்றெனத்
தோற்றுநின்னேவறன்றலையிற்சூடுமால். (உச)

வெள்ளியங்கிரியினைவிடையின்பாகனோ
டள்ளிவிண்டொடவெடுத்தார்த்தவாற்றலாய்
சுள்ளியினிருந்துறைகுரங்கின்றோள்வலிக்
கெள்ளுதிபோலுநின்புயத்தையெம்மொடும். (உரு)

மண்ணினும்வானினுமற்றுமுற்றுநின்
கண்ணினுநீங்கினர்யாவர்கண்டவர்
நண்ணரும்வலத்தினர்யாவர்நாயக
எண்ணிலரிறந்தவரொண்ணலாவதோ. (௨௬)

இடுக்கிலணியம்புவதில்லையீண்டெனை
விடுக்குவையாமெனிற்குரங்கைவேரறுத்
தொடுக்கருமனிசரையுயிருண்டுன்பகை
முடிக்குவென்யானெனமுடியக்கூறினான். (௨௭)

இச்சிரத்தவனுரைத்திறுக்குமெல்லையின்
வச்சிரத்தெயிற்றவன்வல்லைகூறினான்
அச்சிரத்தைக்கொருபொருளின்றாயினும்
பச்சிரத்தம்பொழிபரிதிக்கண்ணினான். (௨௮)

போயினமனிசரைக்குரங்கைப்பூமியில்
தேயுமின்கைகளாற்றின்மினென்றமை
எயினையிருக்குவதன்றியென்னினி
ஆயுமதெம்வயினயிர்ப்புண்டாங்கொலோ. (௨௯)

எவ்வுலகத்துநின்னேவல்கேட்கிலாத்
தெவ்வினையறுத்துனக்கடிமைசெய்தயான்
தவ்வினபணியுளதாகத்தான்கொலோ
இவ்வினையென்வயினீகலாதென்றான். (௩௦)

நின்மினென்றவன்றனைவிலக்கிநீயிவை
என்முனுமெளியர்போலிறுத்தியோவென
மன்முகநோக்கினன்வணங்கிவன்மையால்
துன்முகனென்பவனினையசொல்லினான். (௩௧)

திக்கயம்வலியிலதேவர்மெல்லியர்
முக்கணன்கயிலையுமுரணின்றாயது
மக்களுங்குரங்குமேவலியவாமெனின்
அக்கடவிராவணற்கமைந்தவாற்றலே. (௩௨)

பொலிவிதுபொதுவறவெண்ணும்புன்றொழில்
மெலியவர்கடனமக்கிறுதிவேண்டுவார்
வலியினரொனினவர்க்கொதுங்கிவாழ்துமோ
ஒலிகழலொருவநம்முயிருக்கன்பினால். (௩௩)

கண்ணியமந்திரக்கருமங்காவல
மண்ணியன்மனிசருங்குரங்குமற்றவும்
உண்ணியவமைந்தனவுணவுக்குட்குமேல்
திண்ணியவரக்கரிற்றீரர்யாவரோ. ( [illegible] )

எரியுறமடுப்பதுமெதிர்ந்துளோர்படப்
பொருதொழில்யாவையும்புரிந்துபோவதும்
வருவதுங்குரங்குநம்வாழ்க்கையூர்கடந்
தரிதுகொலிராக்கதர்க்காழிநீந்துதல். (௩௫)

வந்தனதிருக்கையுமரணும்வன்மையும்
வெந்தொழிற்றானையின்விரிவும்வீரமும்
சிந்தையினுணர்பவர்யாவரோசிலர்
உய்ந்துதம்முயிர்கொடிவ்வுலகத்துள்ளுளார். (௩௬)

ஒல்வதுவினையினுமுறுதியோரினும்
வெல்வதுவிரும்பினும்வினையம்வேண்டினும்
செல்வதங்கவருழைச்சென்றுதீர்ந்தறக்
கொல்வதுகருமமென்றுணரக்கூறினான். (௩௭)

காவலன்கண்ணெதிரவனைக்கைகவித்
தியாவதுண்டினிநமக்கென்னச்சொல்லினான்
கோவமும்வன்மையுங்குரங்குக்கேயெனு
மாபெரும்பக்கனென்றொருவன்வன்மையான். (௩௮)

முந்தினர்முரணிலர்சிலவர்மொய்யமர்
நந்தினர்தமரொடுநனிநயந்ததோ
வந்தொருகுரங்கிடுதீயின்வன்மையால்
வெந்ததோவிலங்கையோடரக்கர்வெம்மையும். (௩௯)

மானுடரோவுவார்குரங்குவந்திவ்வூர்
தானெரிமடுப்பதுநிருதர்தானையே
ஆனவரதுகுறித்தழுங்குவாரெனின்
மேனிகழ்வதற்கினிவிளம்பல்வேண்டுமோ. (௪௰)

நின்றுநின்றிவைசிலவிளம்பநேர்கிலன்
நன்றெனினரரொடுகுரங்கைநாமறக்
கொன்றுதின்றல்லதோவெண்ணுங்கூடுமோ
என்றனனிகல்குறித்தெரியுங்கண்ணினன். (௪௧)

திசாதிசைபோதுநாமரசன்செய்வினை
உசாவினனுட்கினனொழிதும்வாழ்வென்றான்
பிசாசனென்றொருபெயர்பெற்றபெய்கழல்
நிசாசரனுருப்புணர்நெருப்புநீர்மையான். (௪௨)

ஆரியன்றன்மையீதாயினுய்வுறு
காரியமீதெனிற்கண்டவாற்றினால்
சீரியர்மனித்தரோசிறியம்யாமெனாச்
சூரியன்பகைஞனென்றொருவன்சொல்லினான். (௪௩)

ஆள்வினைநிலைமையுமரக்கராற்றலும்
தாழ்வினியிதனின்மேற்பகரத்தக்கதோ
சூழ்வினைமனிசராற்றோன்றிற்றுமென்று
வேள்வியின்பகைஞனுமுரைத்துவெள்கினான். (௫௪)

தொகைநிறக்குரங்குடைமனிசர்ச்சொல்லினென்
சிகைநிறச்சூலிதன்றிறத்திற்செல்லினும்
தகைநிறத்தண்ணறன்சமைதனன்றெனாப்
புகைநிறக்கண்ணனும்புகன்றுபொங்கினான். (௫௫)

மற்றவன்பின்னுறமற்றையோர்களும்
இற்றிதுவேநலமெண்ணமற்றிலென்
றுற்றனவுற்றனசொல்லியோங்கினார்
புற்றுறையரவெனப்புழுங்குநெஞ்சினார்.
வேறு. (௫௬)

வெம்பிகலரக்கரைவிலக்கிவினைதேரா
நம்பியிருக்கவெனநாயகனைமுன்னா
வெம்பியெனகிற்கினுரைசெய்வலிதமென்னாக்
கும்பகருணப்பெயரினானிவைகுறித்தான். (௫௭)

நீயயன்முதற்குலமிதற்கொருவனின்றாய்
ஆயிரமறைப்பொருளுணர்ந்தறிவமைந்தாய்
தீவினைநயப்புறுதல்செய்தனைதெரிந்தால்
ஏயினவற்றகைமையித்துணையவேயோ. (௫௮)

ஓவியமமைந்தநகர்தீயுணவுளைந்தாய்
கோவியலழிந்ததெனவேறொருகுலத்தோன்
தேவியைநயந்துசிறைவைத்தசெயனன்றோ
பாவியருறும்பழியிதிற்பழியுமுண்டோ. (௫௯)

நன்னகரழிந்ததெனநாணினைநயத்தால்
உன்னுயிரனைத்தகையதேவியர்களுன்மேல்
இன்னகைதரத்தரவொருத்தன்மனையுற்றாள்
பொன்னடிதொழத்தொழமறுத்தல்புகழ்போலாம். (௬௦)

என்றொருவனில்லுறைதவத்தியையிரங்காய்
வன்றொழிலினய்மறைதுறந்துசிறைவைத்தாய்
அன்றொழிவதாயினுமரக்கர்புகழைய
புன்றொழிலினாலிசைபொறுத்தல்புலமைத்தோ. (௬௧)

ஆசில்பரதாரமவையஞ்சிறையடைப்பேம்
மாசில்புகழ்காதலுறுவேம்வளைவுகூரப்
பேசுவதுமானமிடைப்பேணுவதுகாமம்
கூசுவதுமானுடரைநன்றுநமகொற்றம். (௬௨)

சிட்டர்செயல்செய்திலைகுலச்சிறுமைசெய்தாய்
மட்டவிழ்மலர்க்குழலினாளையினிமன்று
விட்டிடுதுமேலினியமாதுமவர்வெல்லப்
பட்டிடுதுமேலதுவுநன்றுபழியன்றால். (ருங)

மரன்படர்வனத்தொருவனேசிலைவலத்தால்
கரன்படைபடுத்தவனைவென்றுகளைகட்டால்
நிரம்பிடுவதன்றதுவுநின்றதினிநம்பால்
உரம்படுவதேயிதனின்மேலுறுதியுண்டோ. (ருச)

வென்றிடுவர்மானுடவரோனுமவர்தம்மேல்
நின்றிடைவிடாதுநெறிசென்றுறநெருக்கித்
தின்றிடுதல்செய்கிலமெனிற்செறுநரோடும்
ஒன்றிடுவர்தேவருலகேழுமுடனென்றாம். (ருரு)

ஊறுபடையூறுவதன்முன்னமொருநாளே
ஏறுகடலேறிநரர்வானரரையெல்லாம்
வேறுபெயராதவகைவேரொடுமடங்க
நூறுவதுவேகருமமென்பதுநுவன்றான். (ருசு)

நன்றுரைசெய்தாய்குமரநானதுநினைந்தேன்
ஒன்றுமினியாய்தல்பழுதொன்னலரையெல்லாம்
கொன்றுபெயர்வேநமகொடிப்படையையெல்லாம்
இன்றெழுதனன்றெனவிராவணனிசைத்தான். (ருஎ)

என்றவனியம்பியிறுமெல்லையினின்வல்லே
சென்றுபடையோடுசிறுமானுடர்சினப்போர்
வென்றுபெயர்வாயரசநீகொலெனவீரம்
நன்றுபெரிதென்றுமகனக்கிவைநவின்றான். (ருஅ)

ஈசனருள்செய்தனவுமேடவிழ்மலர்ப்பே
ராசனமுவந்தவனளித்தனவுமாயப்
பாசமுதல்வெம்படைசுமந்துபலர்நின்றார்
ஏசவுழல்வேனொருவன்யானுமுளனென்றான். (ருகூ)

முற்றுமுதலாயுலகமூன்றுமெதிர்தோன்றிச்
செற்றமுதலோரொடுசெறுத்ததொர்திறத்தும்
வெற்றியுனதாகவிளையாதொழியினென்னைப்
பெற்றுமிலையானெறிபிறந்துமிலெனென்றான். (சு0)

குரங்குபடமேதினிகுறைத்தலைபடப்போர்
அரங்குபடமானுடரலந்தலைபடப்பே
ரிரங்குபடர்சீதைபடவின்றிருவர்நின்றார்
சிரங்குவடெனக்கொணர்தல்காணுதிசினத்தோய். (சுக)

சொல்லிடைகழிக்கிலைசுருங்கியகுரங்கென்
கல்லிடைகழித்தவுருமிற்கடுமைகாணும்
வில்லிடைகழித்தமிடல்வாளிவெருவித்தம்
பல்லிடைகிழித்திரிவகண்டுபயனுய்ப்பாய். (சுஉ)

யானையிலர்தேர்புரவியாதுமிலரேவும்
தானையிலர்நின்றதவமொன்றுமிலர்தாமோர்
கூனன்முதுகின்சிறுகுரங்குகொடுவெல்வார்
ஆனவருமானுடர்நம்மாண்மையினிதன்றே. (சுங)

நீருநிலனுநெடியகாலுநிமிர்வானும்
பேருமுலகியாவுமொருநாள்புடைபெயர்ந்தே
யாருமொழியாமைநரர்வானரர்களென்பார்
வேருமொழியாதவகைகொன்றலதுமீளேன். (சுச)

என்றடியிறைஞ்சினனெழுந்துவிடையீமோ
வன்றொழிலினாயெனலும்வாளெயிறுவாயில்
தின்றனன்முனிந்துநனிதீவினையையெல்லாம்
வென்றவரினன்றுணரும்வீடணன்விளம்பும். (சுரு)

வேறு.

நூலினுணங்கியவறிவுநோக்கினை
போலுமாலுறுபொருளுணரும்பூட்சியோய்
காலமேல்விளைபொருளுணருங்கற்பிலாப்
பாலனீயிளையனபகரற்பாலையோ. (சுசு)

கருத்திலான்கண்ணிலானொருவன்கைக்கொடு
திருத்துவான்சித்திரமனையசெப்புவாய்
விருத்தமேதகையவர்வினையமந்திரத்
திருத்தியோவிளமையான்முறைமையெண்ணிலாய். (சுஎ)

தூயவர்முறைமையேதொடங்குதொன்மையோர்
ஆயவர்நிற்கமற்றவுணராதியாம்
தீயவரறத்தினாற்றேவராயது
மாயமோவஞ்சமோவன்மையேகொலோ. (சுஅ)

அறந்துறந்தமரரைவென்றவாண்டொழிற்
றிறந்தெரிந்திடினதுதானுஞ்செய்தவம்
நிறந்திறம்பாவகையியற்றுநீர்மையால்
மறந்துறந்தவர்தரும்வரத்தின்வண்மையால். (சுகூ)

மூவரைவென்றுமூன்றுலகுமுற்றுறக்
காவலினின்றுதங்களிப்புக்கைம்மிக
வீவதுமுடிவெனவீந்ததல்லது
தேவரைவென்றவர்யாவர்தீமையோர் (எ0)

வினைகளைவென்றுமேல்வீடுகண்டவர்
எனைவரொன்றியம்புகேனெவ்வந்தீர்க்கையால்
முனைவருமமரருமுன்னும்பின்னரும்
அனையவர்திறத்துளர்யாவராற்றினார். (எக)

பிள்ளைமைவிளம்பினைபேதைநீயென
ஒள்ளியபுதல்வனையுரப்பியென்னுரை
எள்ளலையாமெனினியம்பலாற்றுவென்
தெள்ளியபொருளெனவரசற்செப்பினன். (எ௨)

எந்தைநீயாயுநீயெம்முனீதவம்
வந்தனைத்தெய்வநீமற்றுமுற்றுநீ
இந்திரப்பெரும்பதமிழக்கின்றாயென
நொந்தனெனாகலினுவல்தாயினேன். (எ௩)

கற்றுறுமாட்சியென்கண்ணின்றாயினும்
உற்றுறுபொருடெரிந்துணர்தலோயினும்
சொற்றுறுசூழ்ச்சியின்றுணிவுசோரினும்
முற்றுறக்கேட்டபின்முனிதிமொய்ம்பினோய். (எ௪)

கோநகர்முழுவதுநினதுகொற்றமும்
சானகியெனும்பெயருலகின்றம்மனை
ஆனவள்கற்பினால்வெந்ததல்லதோர்
வானரஞ்சுட்டதென்றுணர்தன்மாட்சியோ. (எ௫)

எண்பொருட்டொன்றநின்றெவருமெண்ணினால்
விண்பொருட்டொன்றியவுயர்வுமீட்சியும்
பெண்பொருட்டன்றியும்பிறிதுண்டாமெனின்
மண்பொருட்டன்றியும்வரவும்வல்லதோ. (எ௬)

மீனுடைநெடுங்கடலிலங்கைவேந்தன்முன்
தானுடைநெடுந்தவந்தளர்ந்துசாய்வதோர்
மானுடமடந்தையாலென்னும்வாய்மொழி
தேனுடையலங்கலாயின்றுதீர்ந்ததோ. (எஎ)

ஏறியநெடுந்தவமிழைத்தவெல்லைநாள்
ஆறியபெருங்குணத்தறிவனாணையால்
கூறியமனிசர்பாற்கொற்றங்கொள்ளலை
வேறினியவர்வயின்வென்றியாவதோ. (எ௮)

எயதுபிறிதுணர்ந்தியம்பவேண்டுமோ
நீயொருதனியுலகேழுநீந்துவாய்
ஆயிரந்தோளவற்காற்றலேற்றனை
மேயலையாமெனின்விளம்பவேண்டுமோ. (எ௯)

மேலுயர்கயிலையைவென்றமேலைநாள்
நாலுதோரணந்திதானவின்றசாபத்தால்
கூலவான்குரங்கினாற்குறுகுங்கோளது
வாலியாற்கண்டனம்வரம்பிலாற்றலாய். (௮௦)

தீயிடைக்குளித்தவத்தெய்வக்கற்பினாள்
வாயிடைமொழிந்தசொன்மறுக்கவல்லமோ
நோயுனக்கியானெனநுவன்றுளாளவள்
ஆயவள்சீதைபண்டமுதிற்றோன்றினாள். (௮௧)

வேறு.

சம்பரப்பெயருடைத்தானவர்க்கிறைவனைத்தனுவலத்தால்
அம்பரத்தும்பர்புக்கமரிடைத்தலைதுமித்தமரருய்ய
உம்பருக்கிறைவனுக்கரசளித்துதவினானொருவனேமி
இம்பரிற்பணிசெயத்தயரதப்பெயரினானிசைவளர்த்தான். (௮௨)

மிடல்படைத்தொருவனையமரர்கோன்விடையதாவெரிநின்மேலாய்
உடல்படைத்தவுணராயினரெலாமடியவாளுருவினானும்
அடல்படைத்தவனியைப்பெருவளந்தருகவென்றருளினானும்
கடல்படைத்தவனெடுங்கங்கைதந்தவன்வழிக்கடவுண்மன்னன். (௮௩)

பொய்யுரைத்துலகினிற்சினவினார்குலமறப்பொருதுதன்வேல்
நெய்யுரைத்துறையிலிட்டறம்வளர்த்தொருவனானெறியினின்றான்
மையுரைத்துலவுகண்மனைவிபால்வரமளித்தவைமறாதே
மெய்யுரைத்துயிர்கொடுத்தமரரும்பெறுகிலாவீடுபெற்றான். (௮௪)

அனையவன்சிறுவனொம்பெருமவுன்பகைஞரானவரையம்மா
இனையொன்றுணர்தியேலிருவரும்மொருவரும்மெதிர்கிலாதார்
முனிவரும்மமரரும்முழுதுணர்ந்தவர்களும்முற்றுமற்றும்
யனைவருந்தகையர்நம்வினையினான்மனிசராயெளிதினின்றார். (௮௫)

கோசிகப்பெயருடைக்குலமுனித்தலைவனக்குளிர்மலர்ப்பே
ராசனத்தவனொடெவ்வுலகமுந்தருவெனென்றமையலுற்றான்
ஈசனிற்பெறுபடைக்கலமிமைப்பளவினெவ்வுலகம்யாவும்
நாசமுற்றிடநடப்பனகொடுத்தவைபிடித்துடையர்நம்பா. (௮௬)

எறுழ்வலிப்பொருவிறாளவுணரோடமரர்பண்டிகல்செய்காலத்
துறுதிறற்கருளன்மீதொருவனின்றமர்செய்தானுடையவில்லும்
தெறுசினத்தவர்கண்முப்புரநெருப்புறவுருத்தெய்தவம்பும்
குறுமுனிப்பெயரினானிறைதவர்க்கிறைதரக்கொண்டுநின்றான். (௮௭)

நாவினாலுலகைநக்கிடுவதிக்களவிடற்குரியநாளும்
மேவுதீவிடமுயிர்ப்பனவெயிற்பொழியெயிற்றனையவீரர்
ஆவமாமரியபுற்றுறைவமுற்றறிவருக்கழிவுசெய்யும்
பாவகாரியருயிர்ப்பதமலாதிரைபெருப்பகழிநாகம். (௮௮)

பெருமோவொருவராலவர்களாலல்லதிஃபெரியவேனும்
நாருமூரியுமருநம்முடைச்சிலைகள்போனலியலாமோ
தாருவோவேணுவோதாணுவாயுலகினைத்தழுவிநிற்கும்
மேருவோமால்வரைக்குலமதோவல்லவோவில்லுமன்னோ. (௮௯)

உரமொருங்கியதுநீர்கடையும்வாலியதுமார்புலகைமூடும்
மரமொருங்கியகராதியர்விராதனதுமால்வரைகண்மானும்
சிரமொருங்கியவினிச்செருவொருங்குளதெனிற்றெவ்வரென்பார்
பரமொருங்குவதலாற்பிறிதொருங்காததோர்பகையுமுண்டோ. (௯௦)

சொல்வரம்பெரியமாமுனிவரென்பவர்கடந்துணையிலாதார்
ஒல்வரம்பெரியதோளிருவரும்மமரோடுலகம்யாவும்
வெல்வரென்பதுதெரிந்தெண்ணினார்நிருதர்வேர்முதலும்வீயக்
கொல்வரென்றுணர்தலாலவரைவந்தமைவதோரியைபுகொண்டார். (௯௧)

துஞ்சுகின்றிலர்களாலிரவுநன்பகலுநிற்சொல்லவொல்கி
நெஞ்சுநின்றயருமிந்நிருதர்பேர்சனகியாநெடியதாய
நஞ்சுதின்றனர்கடாநண்ணுவார்நரகமென்றெண்ணிநம்மை
அஞ்சுகின்றிலர்கணின்னருளலாற்சரணிலாவமரரையா. (௯௨)

புகன்மதித்துணர்கிலாமையினமக்கெளிமைசால்பொறுமைகூர
நகைமதிக்கிலமறுப்பொலியவாளொளியிழந்துய்தனண்ணும்
பகன்மதிக்குவமையாம்விபுதராமிரவுகால்பருவநாளின்
அகன்மதிக்குவமையாயினதபோதனருளார்வதனமம்மா. (௯௩)

சிந்துமுந்துலகினுக்கிறுதிபுக்குருவொளித்துழறல்செய்யார்
இந்துவின்றிருமுகத்திறைவிநம்முறையுளாளென்றலோடும்
அந்தகன்முதலினோரமரரும்முனிவரும்பிறருமஞ்சார்
வந்துதம்முலகமும்வானமுங்கண்டுவந்தகல்வர்மன்னோ. (௯௪)

சொலத்தகாத்துந்நிமித்தங்களெங்கணும்வரத்தொடர்வவொன்னார்
வெலத்தகாவமரரும்மவுணருஞ்செருவில்விட்டனவிடாத
குலத்தகால்வயநெடுங்குதிரையுங்குஞ்சரக்குன்றுமென்றும்
வலத்தகான்முந்துறத்தந்துநம்மனையிடைப்புகுதுமன்னோ. (௯௫)

வாயினும்பல்லினும்புனல்வறந்துரதினார்நிருதர்வைகும்
பேயினும்பெரிதுபேய்நரிகளும்புரிதரும்பிறவுமெண்ணின்
கோயிலுந்நகரமும்மடநலார்குழலுநங்குஞ்சியோடும்
தீயின்வெந்திடுமெலாலொருநிமித்தம்பெறுந்திறனுமுண்டோ. (௯௬)

சிந்தமானுகரைச்சிரமுருக்கியகரன்றிரிசிரத்தோன்
முந்தமானுபினுன்வாலியேமுதலினோர்முடிவுகண்டால்
அந்தமானிடவனோடாழிமாவலவனும்பிறனுமையா
இந்தமானிடவராமிருவரோடெண்ணலாமொருவர்யாரே. (௯௭)

இன்னுமொன்றுரைசெய்வானினிதுகேளெம்பிரானிருவராய
அன்னவன்றன்னொடும்வானரத்தலைவராயணுகினின்றார்
மன்னுநம்பகைஞராம்வானுளோரவரொடும்மாறுகோடல்
கன்னமன்றிநுமக்குறுதியென்றுணர்தலுங்கருமமன்றால். (௯௮)

வேறு.

இசையுஞ்செய்கையுமுயர்குலத்தியற்கையுமெஞ்ச
வசையுங்கீழ்மையுமீக்கொளக்கிளையொடும்டியா
தசைவில்கற்பினவ்வணங்கைவிட்டருளுதியிதன்மேல்
விசையமில்லெனச்சொல்லினனறிஞரின்மிக்கான். (௯௯)

கேட்டவாண்டகைகரத்தொடுகரதலங்கிடைப்பப்
பூட்டிவாய்தொறும்பிறைக்குலம்வெண்ணிலாப்பொழிய
வாட்டடந்தவழாரமும்வயங்கொளிமார்பும்
தோட்டடங்களுங்குலுங்கநக்கிவையிவைசொன்னான். (௧௦௦)

இச்சைநல்லனவுறுதிகளிசைக்குவென்றாய்
பிச்சர்சொல்லுவசொல்லினையென்பெருவிறலைக்
கொச்சைமானுடர்வெல்குவரொன்பதுகுறித்த
தச்சமோவவர்க்கன்பினோயாவதோவையா. (௧௦௧)

ஈங்குமானுடப்பசுக்களுக்கிலைவர்மென்றாய்
தீங்குசொல்லினைதிசைகளையுலகொடுஞ்செருக்கால்
தாங்குமானையைத்தள்ளியத்தழனிறத்தவனை
ஓங்கறன்னொடுமெடுக்கவும்வரங்கொண்டதுளதோ. (௧௦௨)

மனக்கொடன்றியும்வறியனவழங்கினைவானோர்
சினக்கொடும்படைசெருக்களத்தென்னையென்செய்த
எனக்குநிற்கமற்றென்னொடிங்கொருவயிற்றுதித்த
உனக்குமானுடர்வலியராந்தகைமையுமுளதோ. (௧௦௩)

சொல்லுமாற்றங்கடெரிந்திலைபன்முறைதோற்றும்
வெல்லுமாற்றலுமொருமுறைபொறுத்தனன்விண்ணைக்
கல்லுமாற்றலென்கிளையையுமென்னையுங்களத்தில்
கொல்லுமாற்றலருளரோனக்கோடலுங்கொண்டாய். (௧௦௪)

தேவரிற்பெற்றவரத்தினிற்பெருஞ்செருக்கென்னின்
மூவரிற்பெற்றமுடையவன்றன்னொடுமுழுதும்
காவலிற்பெற்றதிகிரியோன்றன்னொடுங்கடந்த
தேவரிற்பெற்றவரத்தினுலியம்புதியிளையோய். (௧௦௫)

நந்திசாபத்தினமையடுங்குரங்கெனினம்பால்
வந்தசாபங்களெனைப்பலவவைசெய்தவலியென்
இந்தியாதியவவித்தவர்தேவர்நம்மிறுதி
சிந்தியாதவர்யாரவைநம்மையென்செய்த. (௧௦௬)

அரங்கினுடுவொற்கன்பூண்டுடைவரமறியேன்
இரங்கியானிற்பவென்வலியவன்வயினெய்த
வரங்கொள்வாலிபாற்றேற்றனென்மற்றும்வேறுள்ள
குரங்கெலாமெனைவெல்லுமென்றெங்ஙனங்கோடி. (௧0எ)

நீலகண்டனுநேமியுநேர்நின்றுநேரின்
ஏலுமன்னவருடைவலியவன்வயினெய்தும்
சாலுநல்வரமினைந்தவனெதிர்செலத்தவிர்ந்து
வாலிதன்னையுமனித்தனுமறைந்துநின்றெய்தான். (௧0அ)

ஊனவில்லிறுத்தோட்டைமாமரத்துளம்போட்டிக்
கூனிசூழ்ச்சியாலரசிழந்துயர்வனங்குறுகி
யானிழைத்திடவில்லிழந்தின்னுயிர்சுமக்கும்
மானுடன்வலிநீயலாதாருளர்மதிப்பார். (௧0௯)

என்றுதன்னுளையிழித்துநீயுணர்விலியென்று
நன்றுபோதுநாமெழுகெனுமரக்கனைநணுகா
ஒன்றுகேளினுமுறுதியென்றன்பினனுழியான்
துன்றுதாரவன்பின்னருமினையனசொல்வான். (௧௧0)

தன்னின்முன்னியபொருளிலாவொருதனித்தலைவன்
அன்னமானுடனாகிவந்தவதரித்தமைந்தான்
சொன்னநம்பொருட்டும்பர்தஞ்சூழ்ச்சியின்றுணிவால்
இன்னமேகுதிபோலுமென்றடிதொழுதிரந்தான். (௧௧௧)

அச்சொற்கேட்டவனுழியானென்றனையாயின்
கொச்சைத்தன்மதியெத்தனைப்போரிடைக்குறைந்தான்
இச்சைக்கேற்றனயான்செய்தவித்துணைக்காலம்
முச்சற்றுன்கொலம்முழுமுதலோனென முனிந்தான். (௧௧௨)

இந்திரன்றனையிருஞ்சிறையிட்டநாளிமையாத்
தந்திகோடிறத்தகர்ந்தநாடன்னையான்முன்னம்
வந்தபோர்தொறுந்துரந்தநாள்வானவருலகைச்
சிந்தவென்றநாள்சிறியன்கொனீசொன்னதேவன். (௧௧௩)

சிவனுநான்முகத்தொருவனுந்தேவர்க்குந்தெரியா
அவனுமற்றுளவமரருமுடனுறைந்தடங்காப்
புவனமூன்றும்யானுண்டுளதாண்டவப்பொருவில்
உவனிலாமையினேவலியொதுங்கியோவுளாயாய். (௧௧௪)

ஆயிரம்பெருந்தோள்களுமத்துணைத்தலையும்
மாயிரும்புவியுள்ளடியடக்குறுவடிவும்
தீயசாலவுஞ்சிலவெனநினைந்துநாந்தின்னும்
ஓயுமானுடவுருவுகொண்டனன்கொலாமொருவன். (௧௧௫)

இன்னுமொன்றுரைசெய்வானினிதுகேளெம்பிரானிருவராய
அன்னவன்றன்னொடும்வானரத்தலைவராயணுகிநின்றார்
மன்னுநம்பகைஞராம்வானுளோரவரொடும்மாறுகோடல்
கன்னமன்றிநுமக்குறுதியென்றுணர்தலுங்கருமமன்றால். (கூஅ)

வேறு.

இசையுஞ்செய்கையுமுயர்குலத்தியற்கையுமெஞ்ச
வசையுங்கீழ்மையுமீக்கொளக்கிளையொடும்மடியா
தசைவில்கற்பினவ்வணங்கைவிட்டருளுதியிதன்மேல்
விசையமில்லெனச்சொல்லினனறிஞரின்மிக்கான். (கூகூ)

கேட்டவாண்டகைகரத்தொடுகரதலங்கிடைப்பப்
பூட்டிவாய்தொறும்பிறைக்குலம்வெண்ணிலாப்பொழிய
வாட்டடந்தவழாரமும்வயங்கொளிமார்பும்
தோட்டடங்களுங்குலுங்கநக்கிவையிவைசொன்னான். (க00)

இச்சைநல்லனவுறுதிகளிசைக்குவென்றாய்
பிச்சர்சொல்லுவசொல்லினையென்பெருவிறலைக்
கொச்சைமானுடர்வெல்குவரொன்பதுகுறித்த
தச்சமோவவர்க்கன்பினோயாவதோவையா. (க0க)

ஈங்குமானுடப்பசுக்களுக்கிலைவரமென்றாய்
தீங்குசொல்லினைதிசைகளையுலகொடுஞ்செருக்கால்
தாங்குமானையைத்தள்ளியத்தழனிறத்தவனை
ஓங்கறன்னொடுமெடுக்கவும்வரங்கொண்டதுளதோ. (க0உ)

மனக்கொடன்றியும்வறியனவழங்கினைவானோர்
சினக்கொடும்படைசெருக்களத்தென்னையென்செய்த
எனக்குநிற்கமற்றென்னொடிங்கொருவயிற்றுதித்த
உனக்குமானுடர்வலியராந்தகைமையுமுளதோ. (க0ங)

சொல்லுமாற்றங்கடெரிந்திலைபன்முறைதோற்றும்
வெல்லுமாற்றலுமொருமுறைபொறுத்தனன்விண்ணைக்
கல்லுமாற்றலென்கிளையையுமென்னையுங்களத்தில்
கொல்லுமாற்றலருளரொனக்கோடலுங்கொண்டாய். (க0ச)

தேவரிற்பெற்றவரத்தினிற்பெருஞ்செருக்கென்னின்
மூவரிற்பெற்றமுடையவன்றன்னொடுமுழுதும்
காவலிற்பெற்றதிகிரியோன்றன்னொடுங்கடந்த
தேவரிற்பெற்றவரத்தினாலியம்புதியிளையோய். (க0ரு)

நந்திசாபத்தினமையடுங்குரங்கெனினம்பால்
வந்தசாபங்களெனைப்பலவவைசெய்தவலியென்
இந்தியாதியவவித்தவர்தேவர்நம்மிறுதி
சிந்தியாதவர்யாரவைநம்மையென்செய்த. (க0சு)

அரங்கிறுவொர்கண்பூண்டுடைவரமறியேன்
இரங்கியானிற்பவென்வலியவன்வயினெய்த
வரங்கொள்வாலிபாற்சேற்றனென்மற்றும்வேறுள்ள
குரங்கெலாமெனைவெல்லுமென்றெங்ஙனங்கோடி. (௧௦௭)

நீலகண்டனுநேமியுநேர்நின்றுநேரின்
ஏலுமன்னவருடைவலியவன்வயினெய்தும்
சாலுநல்வரமினைந்தவனெதிர்செலத்தவிர்ந்து
வாலிதன்னையுமனித்தனுமறைந்துநின்றெய்தான். (௧௦௮)

ஊனவில்லிறுத்தோட்டைமாமரத்துளம்போட்டிக்
கூனிசூழ்ச்சியாலரசிழந்துயர்வனங்குறுகி
யானிழைத்திடவில்லிழந்தின்னுயிர்சுமக்கும்
மானுடன்வலிநீயலாதாருளர்மதிப்பார். (௧௦௯)

என்றுதன்னுரையிழித்துநீயுணர்விலியென்று
நன்றுபோதுநாமெழுகெனுமரக்கனைநணுகா
ஒன்றுகேளினுமுறுதியென்றன்பினனொழியான்
துன்றுதாரவன்பின்னருமினையனசொல்வான். (௧௧௦)

தன்னின்முன்னியபொருளிலாவொருதனித்தலைவன்
அன்னமானுடனாகிவந்தவதரித்தமைந்தான்
சொன்னநம்பொருட்டும்பர்தஞ்சூழ்ச்சியின்றுணிவால்
இன்னமேகுதிபோலுமென்றடிதொழுதிரந்தான். (௧௧௧)

அச்சொற்கேட்டவனொழியானென்றனையாயின்
கொச்சைத்துன்மதியெத்தனைப்போரிடைக்குறைந்தான்
இச்சைக்கேற்றனயான்செய்தவித்துணைக்காலம்
முச்சற்றுன்கொலம்முழுமுதலோனெனமுனிந்தான். (௧௧௨)

இந்திரன்றனையிருஞ்சிறையிட்டநாளிமையாத்
தந்திகோடிறத்தகர்ந்தநாடன்னையான்முன்னம்
வந்தபோர்தொறுந்துரந்தநாள்வானவருலகைச்
சிந்தவென்றநாள்சிறியன்கொனீசொன்னதேவன். (௧௧௩)

சிவனுநான்முகத்தொருவனுந்தேவர்க்குந்தெரியா
அவனுமற்றுளவமரருமுடனுறைந்தடங்காப்
புவனமூன்றும்யானுண்டுளதாண்டவப்பொருவில்
உவனிலாமையிலுேவலியொதுங்கியோவுரையாய். (௧௧௪)

ஆயிரம்பெருந்தோள்களுமத்துணைத்தலையும்
மாயிரும்புவியுள்ளடியடக்குறுவடிவும்
தீயசாலவுஞ்சிலவெனநினைந்துநாந்தின்னும்
ஓயுமானுடவுருவுகொண்டனன்கொலாமொருவன். (௧௧௫)

பித்தனாகியவீசனுமாலுமென்பெயர்கேட்
டெய்த்தசிந்தையரோகுழியேகுழியெல்லாம்
கைத்தவேற்றினுங்கடாவியபுள்ளினுமுதுகில்
தைத்தவாளிகணின்றுளகுன்றின்வீழ்தடித்தின். (௧௧௬)

வெஞ்சினந்தருபோரிலென்னுடனெழவேண்டா
இஞ்சிமாநகரிடமுடைத்தீண்டினிதிருத்தி
அஞ்சலஞ்சலென்றயலிருந்தவர்முகநோக்கி
நஞ்சின்வெய்யவன்கையெறிந்தருமெனநக்கான். (௧௧௭)

பின்னும்வீடணனையநின்றமலபெரியோர்
முன்னைநாளவன்முனிந்திடக்கிளையொடுமுடிந்தார்
இன்னுமுண்டியானியம்புவதிரணியனென்பான்
தன்னையுள்ளவாகேட்டியென்றுரைசெயச்சமைந்தான். (௧௧௮)

மந்திரப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௩௧.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

---

## ௩-வது — இரணியன்வதைப்படலம்.

வேதங்கண்ணியபொருளெலாம்விரிஞ்சனேயீந்தான்
போதங்கண்ணியவரமவன்றரக்கொண்டுபோந்தான்
காதுங்கண்ணுதலோனயன்கடைமுறைகாணப்
பூதங்கண்ணியவலியெலாமொருதனிப்பொறுத்தான். (௧)

எற்றைநாளினுமுளனெனுமிறைவனுமயனும்
கற்றையஞ்சடைக்கடவுளுங்காத்தளித்தழிக்கும்
ஒற்றையண்டத்தினளவினோவிதன்புறத்துலவா
மற்றையண்டமுந்தன்பெயரோசொலவாழ்ந்தான். (௨)

பாழிவன்றடந்திசைசுமந்தோங்கியபணைக்கைப்
பூழிவன்கரியிரண்டிருகைக்கொடுபொருத்தும்
ஆழங்காணுதற்கரியவாயகன்றவோராழி
ஏழுந்தன்னிருதாளளவெனக்கடந்தேறும். (௩)

வண்டற்றெண்டிரையாற்றுநீர்சிலவென்றுமருவான்
கொண்டல்கொண்டநீர்குளிர்ப்பிலவென்றவைகுடையான்
பண்டைத்தெண்டிரைப்பரவைநீருவர்த்தெனப்படியான்
அண்டத்தைப்பொதுத்தப்புறத்தப்பினுலாடும். (௪)

சார்விமானத்திற்சந்திரன்றனிப்பதஞ்சரிக்கும்
தேரின்மேனின்றுமிரவிதன்பெரும்பதஞ்செலுத்தும்
பேர்விலெண்டிசைக்காவலர்கருமமும்பிடிக்கும்
மேருமால்வரையுச்சிமேலரசுவீற்றிருக்கும். (௫)

நீலனுநீரும்வெங்கனலொடுகாலுமாகிமிர்ந்த
தலனுணீடியவவற்றினத்தலைவரைமாற்றி
உலவுங்காற்றெடுகடவுளர்பிறருமாயுலகின்
வலியுஞ்செய்கையும்வருணன்றன்கருமமுமாற்றும். (௬)

தாமரைத்தடங்கண்ணினன்பேரன்வதவிர
நாமந்தன்னதேயுலகங்கள்யாவையுநவிலத்
தூமவெங்கனலந்தணர்முதலினர்சொரிந்த
ஓமவேள்வியினிறையவர்பேறெலாமுண்ணும். (௭)

காவல்காட்டுதறுடைத்தலென்றித்தொழில்கடவ
மூவரும்மவைமுடிக்கிலர்பிடிக்கிலர்முறையின்
ஏவர்மற்றவர்யோகிகளுறுபதமிழந்தார்
தேவரும்மவன்றருளலாதருச்சனைசெய்யார். (௮)

மரபின்மாபெரும்புறக்கடன்மஞ்சனமருவி
அரவினுட்டிடைமகளிரோடின்னமுதருந்திப்
பரவுமிந்திரன்பதியிடைப்பகற்பொழுதகற்றி
இரவினேலக்கநான்முகனுலகத்துளிருக்கும். (௯)

பண்டுவானவர்தானவர்யாவரும்பற்றித்
தெண்டிரைக்கடல்கடைதரவலியதுதேடிக்
கொண்டமத்தினைக்கொற்றத்தன்குவவுத்தோட்கமைந்த
தண்டெனக்கொளலுற்றதுநொய்தெனத்தவிர்ந்தான். (௰)

மண்டலந்தருகதிரவன்வந்துபோய்மறையும்
எண்டலந்தொடற்கரியனதடவரையிரண்டும்
கண்டலம்பசும்பொன்னவன்முன்னவன்காதின்
குண்டலங்கண்மற்றென்னினிப்பெருவிறல்கூறின். (௧௧)

மருக்கொடாமரைநான்முகனைம்முகன்முதலோர்
குருக்களோடுகற்றோதுவதவன்பெருங்கொற்றம்
சுருக்கினன்மறைதொன்றுதொட்டுரைதொறுந்தோன்றா
திருக்குந்தெய்வமுமிரணியனேநமவென்னும். (௧௨)

மயருமன்னெடுஞ்சேவடிமண்ணிடைவைப்பின்
அயரும்வாளெயிற்றுயிரம்பணந்தலையநந்தன்
உயருமேலண்டமுகடுதன்முடியுறவுயரும்
பெயருமேனெடும்பூதங்களைந்தொடும்பெயரும். (௧௩)

பெண்ணிற்பேரொழிலாணினலிபினிற்பிறிதும்
உண்ணிற்கும்முயிருள்ளதினில்லதினுலவான்
கண்ணிற்காண்பனகருதுவயாவினுங்கழியான்
மண்ணிற்சாகிலன்வானினுஞ்சாகிலன்வரத்தால். (௧௪)

தேவராயினரேவருந்திரிதருமியக்கர்
யாவராயினுமெண்ணவுநினைக்கவுமியன்ற
கோவைமாலயன்மானிடன்யாவருங்கொல்ல
ஆவிதீர்கிலனூற்றலுந்தீர்கிலனனையான். (கரு)

நீரிற்சாகிலனெருப்பினிற்சாகிலனிமிர்ந்த
மாருதத்தினுமண்ணின்மற்றெவற்றினுமாளான்
ஓருந்தேவருமுனிவரும்பிறர்களுமுரைப்பச்
சாருஞ்சாபமுமன்னவன்றனைச்சென்றுசாரா. (கசு)

உள்ளிற்சாகிலன்புறத்தினுமுலக்கிலனுலவாக்
கொள்ளைத்தெய்வவான்படைக்கலம்யாவையுங்கொல்லா
நள்ளிற்சாகிலன்பகலிடைச்சாகிலனமனார்
கொள்ளச்சாகிலனரினியவனுயிர்கொள்வார். (கஎ)

பூதமைந்தொடும்பொருந்தியவுணர்வினிற்புணரும்
வேதநான்கினும்விளம்பியபொருள்களால்விளியான்
தாதையேதனைத்தனிக்கொலைசூழினுஞ்சாகான்
ஏதுவன்னிலையெவ்வுலகங்கட்குமிறைவன். (கஅ)

ஆயவன்றனக்கருமகனறிஞரினறிஞன்
தூயனொன்பவர்யாரினுமறையினுந்தூயன்
நாயகன்றனிஞானநல்லறத்துக்குநாதன்
தாயின்மன்னுயிர்க்கன்பினனுளனொருதக்கோன். (கக)

வாழியானவன்றனைக்கண்டுமனமுவந்துருகி
ஆழியையநீயறிதியான்மறையெனவறைந்தான்
ஊழியுங்கடந்துயர்கின்றவாயுளானுலகம்
ஏழுமேழும்வந்தடிதொழவரசுவீற்றிருந்தான். (௨௦)

என்றொரந்தணனெல்லையிலறிஞனையேவி
நன்றுநீயிவற்குதவுதிமறையெனநவின்றான்
சென்றுமற்றவன்றன்னொடுமொருசிறைசேர்ந்தான்
அன்றுநான்மறைமுதலியவோதுவானமைந்தான். (௨க)

ஓதப்புக்கவனுந்தைபேருரையெனலோடும்
போதத்தன்செவித்தொளையிருகைகளாற்பொத்தி
மூதக்கோயிதுநற்றவமன்றெனமொழியா
வேதத்துச்சியின்மெய்ப்பொருட்பெயரினைவிரித்தான். (௨௨)

ஓநமோநராயணயவென்றுரைத்துளமுருகித்
தானமைந்திருதடக்கையுந்தலையின்மேற்றூங்கிப்
பூநிறக்கண்கள்புனலுகமயிர்புறம்பொடிப்ப
ஞானநாயகனிருந்தனனந்தணனடுங்கி. (௨௩)

கெடுத்தொழிந்தனையென்னையுமுன்னையுங்கெடுவாய்
படுத்தொழிந்தனைபரவியத்தேவரும்பகர்தற்
கடுத்ததன்றியேயயலொன்றுபகரநின்னறிவில்
எடுத்ததென்னிதுவென்செய்தவண்ணநீயென்றான். (௨௪)

என்னையுய்வித்தேனெந்தையையுய்வித்தேனினைய
உன்னையுய்வித்திவ்வுலகையுமுய்விப்பானமைந்த
முன்னைவேதத்தின்முதற்பெயர்மொழிவதுமொழிந்தேன்
என்னகுற்றம்யானியம்பியதியம்புதியென்றான். (௨௫)

முந்தைவானவர்யாவர்க்குமுதல்வற்குமுதலோன்
உந்தைமற்றவன்றிருப்பெயருரைசெயற்குரிய
அந்தணாளனேனென்னினுமறிதியோவையா
இந்தவிப்பெயருரைத்தெனைக்கெடுத்திடலென்றான். (௨௬)

வேதபாரகனவ்வுரைசெய்தலும்விமலன்
ஆதிநாயகன்பெயரன்றியான்பிறிதறியேன்
ஓதவேண்டுவதில்லையென்னுணர்வினுக்கொன்றும்
போதியாததுமில்லையென்றிவையிவைபுகலும். (௨௭)

தொல்லைநான்மறையாவையுந்துணிபொருட்கெல்லாம்
எல்லைகொண்டவனகம்புகுந்திடங்கொண்டதென்னுள்
இல்லைவேறினிப்பெரும்பதம்யானறியாத
வல்லையேலினியோதுவிநீதியின்வழாத (௨அ)

ஆரைச்சொல்லுவதந்தணருமறையறிந்தோர்
ஓரச்சொல்லுவதெப்பொருளுபநிடதங்கள்
தீரச்சொல்லுவதேவருமுனிவருஞ்செப்பும்
பேரைச்சொல்லுவதல்லதுபிறிதுமொன்றுளதோ. (௨௯)

வேதத்தானுநல்வேள்வியினானுமெய்யுணர்ந்த
போதத்தானுமப்புறத்துளவெப்பொருளானும்
சாதிப்பார்பெறும்பெரும்பதந்தலைக்கொண்டுசமைந்தேன்
ஓதிக்கேட்குறுபரம்பொருளினுமொன்றுளதோ. (௩௦)

காடுபற்றியுங்கனவரைபற்றியுங்கலைத்தோல்
மூடுபற்றியுமுண்டித்துநீட்டியுமுறையால்
வீடுபெற்றவர்பெற்றதின்விழுமிதென்றுரைக்கும்
மாடுபெற்றனென்மற்றினியென்பெறவருந்தி. பொற்கடவன் மாறுகொளி சோறு (௩௧)

செவிகளாற்பலகேட்கிலராயினுந்தேவர்க்
கவிகொணான்மறையகப்பொருள்புறப்பொருளறிவார்
கவிகளாகுவார்காண்குவார்மெய்ப்பொருள்காலால்
புவிகொணுயகற்கடியவர்க்கடிமையிற்புக்கார். (௩௨)

எனக்குநான்முகத்தொருவற்கும்யாரினுமுயர்ந்த
தனக்கும்வேறுளசராசரமனைத்திற்குந்தலைவன்
மனக்குவந்தனன்வந்தனயாவையுமறையோய்
உனக்குமின்னதினல்லதொன்றில்லெனவுரைத்தான். (௩௩)

மாற்றம்யாதொன்றுமுரைத்திலன்மறையவன்மறுகி
ஏற்றமென்னெனக்கிறுதிவந்தெய்தியதென்று
ஊற்றமில்லவனோடினன்கனகனையுற்றான்
தோற்றவந்ததோர்கனவுகண்டானெனச்சொன்னான். (௩௪)

எந்தைகேளெனக்கிம்மைக்குமறுமைக்குமியம்பச்
சிந்தையாலிறைநினைதற்குமடாதனசெப்பி
முந்தையேநினைந்தென்பொருண்முற்றுமென்றுரைத்தான்
மைந்தனோதிலன்வேதமென்றுரைத்தனன்வணங்கி. (௩௫)

அன்னகேட்டவனந்தணவந்தணர்க்கடாத
முன்னர்யாவருமொழிதருமுறைமையிற்படாத
தன்னதுள்ளுடையுணர்ச்சியாற்புதுவதுதந்த
தென்னசொல்லவனியம்பியதியம்புதியென்றான். (௩௬)

அரசனன்னவையுரைசெயமறையவனஞ்சிச்
சிரதலங்கரஞ்சேர்த்திடச்செவித்தொளைசேர்ந்த
உரகமன்னசொல்யானுனக்குரைசெயினுரவோய்
நரகமெய்துவெனுவும்வெந்துகுமெனநவின்றான். (௩௭)

கொணர்கென்மைந்தனைவல்விரைந்தென்றனன்கொடியோன்
உணர்வினெஞ்சினனேவலாற்கடிதினிலோடிக்
கணனிலெய்தினர்பணியெனத்தாதையைக்கண்டான்
துணையிலான்றனைத்துணையெனவுடையவன்றொழுதான். (௩௮)

தொழுதமைந்தனைச்சுடர்மணிமார்பிடைச்சுண்ணம்
எழுதவன்பினோடிறுகுறத்தழுவிமாடிருத்தி
முழுதுநோக்கிநீவேதியன்கேட்கலின்முனியப்
பழுதுசொன்னசொல்லென்னதுபகருதியென்றான். (௩௯)

சுருதியாதியிற்றொடங்குறுமெல்லையிற்சொன்ன
ஒருவன்யாவர்க்குநாயகன்றிருப்பெயருணரக்
கருதக்கேட்டிடக்கட்டுரைத்திடர்க்கடல்கடக்க
உரியமற்றிதினல்லதொன்றில்லெனவுரைத்தான். (௪௦)

தேவர்செய்கையனங்ஙனமுரைசெயத்தீயோன்
தாவில்வேதியன்றக்கதேயுரையெனத்தகுவன்
ஆவதாருகவன்றெனினறிகுவமென்றே
ஏவதவ்வுரைவிளம்புதிவிளம்புதியென்றான். (௪௧)

காமம்யாவையுந்தருவதுமப்பதங்கடந்தால்
சேமவீடுறச்செய்வதுஞ்செந்தழன்முகந்த
ஓமவேள்வியினுறுபதமுய்ப்பதுமொருவன்
நாமமன்னதுகேணமோநாராயணாய. (சஉ)

மண்ணினின்றுமேன்மலரயனுலகுறவாழும்
எண்ணில்பூதங்கணிற்பனதிரிவனவிவற்றின்
உண்ணிறைந்துறைகரணத்தினூங்குளவுணர்வும்
எண்ணுகின்றதிவ்வெட்டெழுத்தேபிறிதில்லை. (சங)

முக்கட்டேவனுநான்முகத்தொருவனுமுதலா
மக்கட்காறுமிம்மந்திரமறந்தவர்மறந்தார்
புக்குக்காட்டுவதரிதிதுபொதுவுறக்காண்பார்
ஒக்கநோக்குநரல்லவரதனிலையுணரார். (சச)

தோற்றமென்னுமத்தொல்வினைத்தொடுகடற்சுழிநின்
றேற்றுநன்கலனருங்கலன்யாவர்க்குமினிய
மாற்றமங்கலமாதவவேதத்தின்வரம்பின்
தேற்றமெய்ப்பொருடெரிந்தமற்றிதனினில்சிறந்த. (சரு)

உன்னுயிர்க்குமென்னுயிர்க்குமிவ்வுலகத்தினுள்ள
மன்னுயிர்க்குமீதுறுதியென்றுணர்வுறமதித்துச்
சொன்னதிப்பெயரொன்றனனறிஞரிற்றூயான்
மின்னுயிர்க்கும்வேலிரணியன்றழலெழவிழித்தான். (சசு)

அற்றைநான்முதல்யானுள்நாள்வரையப்பேர்
சொற்றவாயையுங்கருதியமனத்தையுஞ்சுடுமென்
ஒற்றையாணைமற்றியாருனக்கிப்பெயருரைத்தார்
கற்றதாரொடுசொல்லுதிவிரைந்தெனக்கென்றான். (சஎ)

முனைவர்வானவர்முதலினர்மூன்றுலகத்தும்
இனையருள்ளவர்யாவருமென்னிருகழலே
நினைவதேத்துவதென்பெயர்நினக்கிதுநேர
அனையரஞ்சுவர்மைந்தநீயாரிடையறிந்தாய். (சஅ)

மறங்கொள்வெஞ்செருமலைகுவான்பன்முறைவந்தான்
கறங்குவெஞ்சிறைக்கலுழன்றன்கடுமையிற்கரந்தான்
பிறங்குதெண்டிரைப்பெருங்கடல்புக்கினம்பெயரா
றுறங்குவான்பெயருறுதியென்றுருனக்குரைத்தார். (சகூ)

பரவைநுண்மணலெண்ணினுமெண்ணரும்பரப்பின்
குரவர்நங்குலத்துள்ளவரவன்கொலக்குறைந்தார்
அரவினுமத்தையெலியிருந்தோதினலதற்கு
விரவுநன்மையென்றுன்மதிவிளம்பெனவெகுண்டான். (ருo)

வயிற்றினுள்ளுலகேழினொடேழையும்வைக்கும்
அயிர்ப்பிலாற்றலென்னநுசனேயெனமொன்ருகி
எயிற்றினலெறிந்தின்னுயிருண்டவனுமம்
பயிற்றவோாதினைப்பயந்ததுநானெனப்பகர்ந்தான். (ருக)

ஒருவென்யவர்க்குமெவற்றிற்குமுலகிற்குமுதல்வன்
தருதல்காத்தவைதவிர்தலென்றிவைசெயத்தக்கேன்
கருமத்தாலன்றிக்காரணத்தாலுள்ளகாட்சி
திருவிலீமற்றிதெம்மறைப்பொருளெனத்தெரிந்தாய். (ருஉ)

ஆதியந்தங்களிதனின்மற்றில்லைபேருணரின்
வேதமெங்ஙனமங்ஙனமவைசொன்னவிதியால்
கோதினல்வினைசெய்தவருயர்குவர்குறித்துத்
தீதுசெய்தவர்தாழ்குவரிதுமெய்ம்மைதெரியின். (ருங)

செய்தமாதவமுடைமையினரியயன்சிவனென்
றெய்தினார்பதமிழந்தனர்யான்றவமியற்றிப்
பொய்யினுயகம்பூண்டலினினியிதுபுரிதல்
நொய்யதாகுமென்ருருமென்காவலினுழைவார். (ருச)

வேள்வியர்கியபுண்ணியந்தவத்தொடும்விலக்கிக்
கேள்வியாவையுந்தவிர்த்தனெனிவைகிளர்பகையைத்
தாழ்வியாதனசெய்யுமென்றனையவர்தம்பால்
வாழ்வியாதயலெவ்வழிப்புறங்கொடுவாழ்வார். (ருரு)

பேதைப்பிள்ளாநீபிழைத்ததுபொறுத்தனென்பெயர்த்தும்
ஏதில்வார்த்தைகளினையனவிளம்பலைமுனிவன்
யாதுசொல்லினனவையவையிதமெனவெண்ணி
ஓதிபோதியென்றுரைத்தனனுலகெலாமுயர்ந்தோன். (ருசு)

வேறு.

உரையுளதுணர்த்துவதுணர்ந்துகோடியேல்
விரையுளவலங்கலாய்வேதவேள்வியின்
கரையுளதியாவருங்கற்குங்கல்வியின்
பிரையுளதென்பதுமைந்தன்பேசினான். (ருஎ)

வித்தின்றிவிளைவதொன்றில்லைவேந்தநின்
பித்தின்றியுணர்தியேலளவைப்பெய்தனன்
உய்த்தொன்றுமொழிவின்றியுணர்தற்பாற்றெனுக்
கைத்தொன்றுநெல்லியின்கனியிற்காண்டியால். (ருஅ)

தன்னுளேயுலகங்களனைவயுந்தந்தவை
தன்னுளேநின்றுதானவற்றுட்டங்குவான்
பின்னிலன்முன்னிலனொருவன்பேர்கிலன்
தொன்னிலையொருவராற்றுணியற்பாலனோ. (ருக)

சித்தெனவருமறைச்சிரத்திற்றேறிய
தத்துவமவன் அதம்மைத்தாமுணர்
வித்தகரறிகுவர்வேறுவேறுணர்
பித்தருமுளர்சிலர்வீடுபெற்றிலார். (௬0)

அளவையானளப்பரிதறிவினப்புறத்
துளவையாயுபநிடதங்களோதுவ
கிளவியாற்பொருள்களாற்கிளக்குறுதவன்
களவையாரறிகுவார்மெய்ம்மைகண்டிலார். (௬க)

மூவகையுலகுமாய்க்குணங்கண்மூன்றுமாய்
யாவையுமெவையுமாயெண்ணில்வேறுபட்
டோவலிலொருநிலையொருவன்செய்வினை
தேவருமுனிவருமுணரத்தேயுமோ. (௬உ)

சாங்கியம்யோகமென்றிரண்டுதன்மைய
வீங்கியபொருளெலாம்வேறுகாண்பன
ஆங்கவையுணர்ந்தவர்க்கன்றியன்னவன்
ஓங்கியமேனிலையுணரற்பாலதோ. (௬௩.)

கருமமுங்கருமத்தின்பயனுங்கண்ணிய
தருமுதற்றலைவனுந்தானுந்தானவன்
அருமையும்பெருமையுமறிவரோலவர்
இருமையென்றுரைசெயுங்கடனின்றேறுவார். (௬௪)

மந்திரமாதவமென்னுமாலைய்
தந்துறுபயனிவைமுறையிற்சாற்றிய
நந்தலிறெய்வமாய்நல்குநான்மறை
அந்தமில்வேள்விமாட்டவிசுமாமவன். (௬௫)

முற்பயப்பயன்றருமுன்னினின்றவர்
பிற்பயப்பயன்றரும்பின்புபோலவன்
தற்பயன்முன்றெரிதருமமில்லையஃ
தற்புதமாயையாலறிகிலார்பலர். (௬௬)

ஒருவினையொருபயனன்றியுய்க்குமோ
இருவினையென்பனவயிற்றியிட்டவை
கருதினகருதினகாட்டுகின்றன
தருபரனருளினிற்சான்றுவேண்டுமோ. (௬௭)

ஒராவுதிகடைமுறைவேள்வியோம்புவோர்
அராவணையமலனுக்களிப்பராலது
சராசரமனைத்தினுஞ்சாருமென்பது
பராவருமறைப்பொருள்பயனுமன்னதால். (௬௮)

பகுதியினுட்பயன்பயந்ததன்னதின்
மிகுதியின்மிகுதிகளெவையுமேலவர்
வகுதியின்வசத்தனவரவுபோக்கது
புகுதியில்லாதவர்புலத்திற்றுகுமோ. (சுக)

எழுத்தியனுளத்தினெண்ணலாவகை
முழுத்தனிநான்முகன்முதலமற்றுயிர்
வழுத்தரும்பொகுட்டதோர்புரையின்வைகுமால்
விழுத்தனிப்பல்விதழ்விரையிலாமுகிழ். (எ0)

கண்ணினுங்கரந்துளன்கண்டுகாட்டுவான்
உண்ணிறைந்திடுமுணர்வாதியுண்மையால்
மண்ணினும்வானினுமற்றைமூன்றினும்
எண்ணினுநெடியவனொருவனெண்ணிலான். (எக)

சிந்தையிற்செய்கையிற்சொல்லிற்சேர்ந்துளன்
இந்தியந்தொறுமுளனுற்றதெண்ணினால்
முந்தையோரெழுத்தெனவந்துமும்முறைச்
சந்தியும்பதமுமாய்த்தழைத்ததன்மையான். (எஉ)

காமமும்வெகுளியுமுதலகண்ணிய
தீமையும்வன்மையுந்தீர்க்குஞ்செய்கையால்
நாமமுமவன்பிறநவிகொடாநெடுஞ்
சேமமும்பிறர்களாற்செப்பற்பாலவோ. (எந)

காலமுங்கருவியுமிடனுமாய்க்கடைப்
பாலமைப்பயனுமாய்ப்பயன்றுய்ப்பானுமாய்ச்
சீலமுமவைதருதிருவுமாயுளன்
ஆலமும்வித்துமொத்தடங்குமாண்மையான். (எச)

உள்ளுறவுணர்வினிதுணர்ந்தவோசையோர்
தெள்விளியாழிடைத்தெரியுஞ்செய்கையான்
உள்ளுளன்புறத்துளனென்றுநண்ணலான்
தள்ளருமறைகளுமருளுந்தன்மையான். (எரு)

ஓமெனுமோரெழுத்ததனினுள்ளுயிர்
ஆமவனறிவினுக்கறிவுமாயினன்
தாமமூவுலகமுந்தழுவிச்சார்தலால்
தூமமுங்கனலும்போற்றொடர்ந்ததோற்றத்தான். (எசு)

காலையினறுமலரொன்றக்கட்டிய
மாலையின்மலர்புரைசமயவாதியர்
சூலையின்றிருக்கலாற்சொல்லுவோர்க்கெலாம்
வேலையுந்திரையும்போல்வேறுபாடிலான். (எஎ)

இன்னதோர்தன்மையனிகழ்வுற்றெய்திய
நன்னெடுஞ்செல்வமுநாளுநாமற
மன்னுயிரிழத்தியென்றிறைஞ்சிவாழ்த்தினேன்
சொன்னவனுமமென்றுணரச்சொல்லினான். (எஅ)

வேறு.

எதிரினின்றவனிவையுரைத்திடுதலுமெவ்வுலகமுமஞ்ச
முதிரும்வெங்கதமொழிகொடுமூண்டதுமுதுகடற்கடுவேய்ப்பக்
கதிரும்வானமுஞ்சூழன்றனநெடுநிலங்கம்பித்தகனகன்கண்
உதிரங்கான்றனதோன்றினபுகைக்கொடியுமிழ்ந்தனகொடுந்தீயே. (எகூ)

வேறுமென்னொடுதரும்பகைபிறிதினிவேண்டலென்வினையத்தால்
ஊறியென்னுளேயுதித்ததுகுறிப்பினியுணர்குவதுளதன்றால்
ஈறிலென்பெரும்பகைஞனுக்கன்புசாலடியென்யானென்கின்றான்
கோறியொன்றனனென்றலும்பற்றினர்கூற்றினுங்கொலைவல்லார். (அ0)

குன்றுபோன்மணிவாயிலின்பெரும்புறத்துய்த்தனர்மழுக்கூர்வாள்
ஒன்றுபோல்வனவாயிரமீதெடுத்தோச்சினருயிரோடும்
தின்றுதீர்க்குதுமென்குநருருமெனத்தெழித்தனர்சினவேழக்
கன்றுபுல்லியகோளரிக்குழுவெனக்கனல்கின்றதறுகண்ணர். (அக)

தாயின்மன்னுயிர்க்கன்பினன்றன்னையத்தவமெனுந்தகவில்லோர்
ஏயெனுந்துணைமாத்திரத்தெய்தனவெறிந்தனவெறிதோறும்
தூயவன்றனைத்துணையெனவுடையவனொருவனைத்துன்னுதார்
வாயின்வைதனவொத்தனவத்துணைமழுவொடுகொலைவாளும். (அஉ)

எறிந்தவெய்தனவெற்றினகுத்தினவீர்த்தனபடையாவும்
முறிந்துநுண்பொடியாயினமுடிந்தனமுனிவிலான்முழுமேனி
சொறிந்ததன்மையுஞ்செய்திலவாயனதூயவன்றுணிவொன்றா
அறிந்தநாயகன்சேவடிமறந்திலனயர்ந்திலனவனுமம். (அங)

உள்ளவான்பெரும்படைக்கலம்யாவையுமுக்கனவுரவோய்நின்
பிள்ளைமேனிக்கோரானிவந்திலதினிச்செயலென்கொல்பிறிதென்னக்
கள்ளவுள்ளத்தன்கட்டினிர்கருவிகள்கதுமெனக்கனல்பொத்தித்
தள்ளுமின்னெனவுரைத்தனன்வயவருமத்தொழிற்றலைநின்றார். (அச)

குழியிலிந்தனமடுக்கினர்குன்றெனக்குடந்தொறுங்கொணரொண்ணெய்
இழுதுநெய்சொரிந்திட்டனர்நெருப்பெழுந்திட்டதுவிசும்பெட்ட
அழுதுநின்றவரயர்வுறவையனைப்பெய்தனரீஇயென்று
தொழுதுநின்றனனாயகன்றாளிடைக்குளிர்ந்ததுசுடுதீயே. (அரு)

காலவெங்கனல்கதுவியகாலையிற்கற்புடையவள்சொற்ற
சீலநல்லுரைசீதமிக்கடுத்தலிற்கிழியொடுநெய்தீற்றி
ஆலமன்னவர்கரங்களானுயங்கெரிமடுத்தலினனுமன்றன்
கூலமாமெனவென்புறக்குளிர்ந்ததக்குருமணித்திருமேனி. (அசு)

சுட்டதில்லைநின்றேன்றலைச்சுடர்க்கனல்சுழிபடரழுவத்துள்
இட்டபோதினுமென்னினிச்செயத்தக்கதென்றனரிகல்வெய்யோர்
கட்டித்தீயையுங்கடுஞ்சிறையிடுமினக்கள்வனைக்கவர்ந்துண்ண
எட்டுப்பாம்பையும்விடுமின்களென்றன்னெறியெழுதறுகண்ணன். (௮௭)

அநந்தனேமுதலாகியநாகங்களருளென்கொலெனவன்றன்
நினைந்தமாத்திரத்தெய்தினநொய்தினினெருப்புகுபகுவாயால்
வனைந்ததாமன்னமேனியினன்றன்மேல்வாளெயிறறவூன்றிச்
சினந்தமீக்கொளக்கடித்தனதுடித்திலன்றிருப்பெயர்மறவாதான். (௮௮)

பக்கநின்றவைபயத்தினிற்புயற்கறைப்பசும்புனல்பகுவாயில்
கக்கவெஞ்சிறைக்கலுழனுநடுக்குறக்கவ்வியகாலத்துள்
செக்கர்மேகத்துச்சிறுபிறைநுழைந்தனசெய்கையவலிசிந்தி
உக்கபற்குலமொழுகினவெயிற்றிரும்புணாதொறுமமுதூறி. (௮௯)

வேறு.

சூழப்பற்றினசுற்றுமெயிற்றின்
போழக்கிற்றிலவென்றுபுகன்றார்
வாழத்திக்கின்மயக்கின்மதந்தாழ்
வேழத்துக்கிடுமின்னெனவிட்டான். (௯0)

பசையிற்றங்கலில்சிந்தையர்பல்லோர்
திசையிற்சென்றனர்செப்பினனென்னும்
இசையிற்றந்தனவிந்திரனென்பான்
மிசையிற்றிண்பணைவெஞ்சினவேழம். (௯௧)

கையிற்கால்களின்மார்புகழுத்தில்
தெய்வப்பாசமுறப்பிணிசெய்தார்
மையற்காய்கரிமுன்னுறவைத்தார்
பொய்யற்றானுமிதொன்றுபுகன்றான். (௯௨)

எந்தாய்பண்டொரிடங்கர்விழுங்க
முந்தாய்நின்றமுதற்பொருளேயென்
றுந்தாய்தந்தையினத்தவனேத
வந்தானென்றன்மனத்தினினின்றான். (௯௩)

என்றான்முன்னமிருங்களிறுந்தன்
பொன்றாரோடைபொருந்தநிலத்தின்
அன்னானைத்தொழுதஞ்சியகன்ற
தொன்றாரத்திறமெய்தியுணாத்தார். (௯௪)

வல்லீரைத்துயில்வானைமதித்தென்
நல்வீரத்தையழித்ததுநண்ணாற்
றொல்வீரொற்றையுரக்கரிதன்னைக்
கொல்வீரென்றனனெஞ்சுகொதிப்பான். (௯௫)

தன்னைக்கொல்லுநர்சாருதலோடும்
பொன்னைக்கொல்லுமொளிப்புகழ்பொய்யா
மன்னைக்கொல்லியவந்ததுவாரா
மின்னைக்கொல்லும்வெயிற்றினெயிற்றால். (கசு)

வீரத்திண்டிறன்மார்பினில்வெண்கோ
டாரக்குத்தியழுத்தியநாகம்
வாரத்தண்குலைவாழைமடற்சூழ்
ஈரத்தண்டெனவிற்றனவெல்லாம். (கஎ)

வெண்கோடிற்றனமெய்யிலர்செய்யும்
கண்கோடற்பொறியிற்கடிதேகி
எண்கோடற்கரிதென்னவெகுண்டான்
திண்கோடைக்கதிரிற்றெறுகண்ணான். (கஅ)

தள்ளத்தக்கில்பெருஞ்சயிலத்தோ
டெள்ளக்கட்டியெடுத்துவிசித்துக்
கள்ளத்திங்கிவனைக்கரைகாணு
வெள்ளத்துய்த்திடுவீரெனவிட்டான். (கக)

ஒட்டிக்கொல்லவுணர்ந்துவெகுண்டான்
விட்டிட்டானலனென்றுவிரைந்தார்
கட்டிக்கல்லொடுகால்விசையிற்போய்
இட்டிட்டார்கடலின்னடுவெந்தாய். (க00)

நடுவொக்குந்தனிநாயகனும்மம்
விடுகிற்கின்றிலனுகலின்வேலை
மடுவொத்தங்கதின்வங்கமுமன்றாய்
குடுபத்தன்மையதாயதுகுன்றம் (க0க)

மோதுற்றார்திரைவேலையின்மூழ்கான்
மீதுற்றார்சிலைமீதுகிடந்தான்
ஆதிப்பண்ணவனுயிரநாமம்
ஓதுற்றான்மறையொல்லையுணர்ந்தான். (க0உ)

தலையிற்கொண்டதடக்கையினான்றன்
நிலையிற்றீர்வின்மனத்தினினைந்தான்
சிலையிற்றிண்புனலிற்சினையாலின்
இலையிற்பிள்ளையெனப்பொலிகின்றான். (க0ங)

வேறு.

அடியாரடியேனெனுமார்வமலால்
ஒடியாவலியானுடையேனுளனோ
கொடியாய்க்குறியாய்க்குணமேதுமிலாய்
நெடியாயடியேனிலைநேர்குதியோ. (க0ச)

கள்ளந்திரிவாரவர்கைதவநீ
உள்ளந்தெரியாதவுனக்குளவோ
துள்ளும்பொறியின்னிலைசோதனைதான்
வெள்ளந்தருமின்னமுதேவிதியோ. (க0ரு)

வருநான்முகனெம்முகன்வானவர்கோன்
திருநான்மறையின்னெறியேதிரிவார்
பெருநாடெரிகின்றிலர்பேதைமையேன்
ஒருநாளுனையெங்ஙனமுள்ளுவனோ. (க0சு)

செய்யாதனவோவிலைதீவினைதாம்
பொய்யாதனவந்துபுணர்ந்திடுமால்
மெய்யேயுயிர்தீர்வதோர்மேல்வினைநீ
அய்யாவொருநாளுமயர்த்தனையோ. (க0எ)

ஆயப்பெறுநன்னெறிதம்மறிவென்
றேயப்பெறுமீசர்களெண்ணிலரால்
நீயப்புறநிற்கநினைக்கிலர்நின்
மாயப்பொறிபுக்குமயங்குவரால். (க0அ)

தாமேதனிநாயகராயெவையும்
போமேபொருளென்றபுராதனர்தாம்
யாமேபரமென்றனரொன்றவர்க்
காமேபிறர்நின்னலதாருளரோ. (க0கூ)

ஆதிப்பரமாமெனினன்றெனலாம்
ஓதப்பெருநூல்களுலப்பிலவால்
பேதிப்பனநீயவைபேர்கிலையால்
வேதப்பொருளேவிளையாடுதியோ. (கக0)

அம்போருகனாரரனாரதியார்
எம்போலியரொண்ணிடினென்பலவாக்
கொம்போடடை பூக்கனிகாயெனினும்
வம்போமரமொன்றெனும்வாசகமே. (ககக)

நின்னிற்பிறிதாய்நிலையிற்றிரியா
தன்னிற்பிறிவாயினதானறமும்
உன்னிற்பிறிதாயினவோவுலகம்
பொன்னிற்பிறிதாகியபொற்கலனே. (ககஉ)

தாய்தந்தையெனுந்தகைவந்தனைதான்
நீதந்தனைநீயுறுநெஞ்சினனுன்
நோய்தந்தவனேநுவதீர்வுமெனா
வாய்தந்தனசொல்லிவணங்கினனால். (ககரு)

அத்தன்மையறிந்தவருந்திறலோன்
உய்த்துய்ம்மினென்முன்னெனவுய்த்தனரால்
பித்துண்டதுபேர்வுறுமாபெறுதும்
கைத்துங்கடுநஞ்சினெனக்கனலா. (ககச)

இட்டார்கடுவல்விடமெண்ணுடையான்
தொட்டானுகரத்தொகைவன்கசையிற்
கட்டார்கடுமத்திகைகண்கொடியோன்
விட்டானவன்மேலவர்வீசினரால். (ககடு)

வெய்யார்முடிவில்லவர்வீசியபோ
தய்யாவென்னும்வேலையினுள்ளுறைவோன்
கையாயிரமல்லகணக்கிலவென்
றெய்யாவுலகியாவையுமெண்ணினனால். (ககசு)

ஊனோடுயிர்வேறுபடாவுபயம்
தானேயுடையான்றனிமாயையினால்
யானேயுயிருண்பலெனக்கனலா
வானேமுநடுங்கிடவந்தனனால். (ககஎ)

வந்தானைவணங்கியென்மன்னுயிர்தான்
எந்தாய்கொளவேண்டினையேலிதுதான்
உந்தாரியதன்றுலகியாவுமுடன்
தந்தார்கொளநின்றதுதானெனலும். (ககஅ)

வேறு.

ஏவரோயுலகந்தந்தாரொன்பெயரோத்திவாழும்
மூவரோயல்லராகின்முனிவரோமுழுதுந்தோற்ற
தேவரோபிறரோயாரோசெப்புதிதெரியவென்றான்
கோவமூண்டெழுந்துங்கொல்லான்காட்டுமேற்காட்சிகொள்வான் (ககக)

உலகுதந்தானும்பல்வேறுயிர்கடந்தானுமுள்ளூற்
றுலைவிலாவுயிர்கடோறுமங்கங்கேயுறைகின்றானும்
மலரினில்வெறியுமெள்ளினெய்யுமாய்வழுத்தலொல்லா
அலகிறெல்புகழும்பற்றிமுற்றியவரிகாணத்தா. (கஉ0)

என்கணோக்கிக்காண்டற்கெங்கணுமுளன்காணெந்தை
உன்கணனன்பிற்சோறலுறுகோளென்றுணரகில்லாய்
நின்கணோக்கிக்காண்டற்கெளியனோநினக்குப்பின்னோன்
பொன்கணுவியுண்டபுண்டரீகக்கணம்மான். (கஉக)

மூன்றவன்குணங்கள்செய்கைமூன்றவனுருவமூன்று
மூன்றுகண்சுடருஞ்சோதிமூன்றுதன்னுலகமூன்று
தோன்றலுமிடையுமீறுந்தொடங்கியபொருள்கட்கெல்லாம்
சான்றவனிதுவேவேதமுடிவதுசரதமென்றான். (கஉஉ)

என்றலுமவுணர்வேந்தன்பிறையெயிறிலங்கநக்கான்
ஒன்றலில்பொருள்கண்முற்றுமொருவன்புக்குறைவனென்றாய்
நன்றதுகண்டுபின்னர்நல்லவாபுரிதுதூணில்
நின்றுளதென்னிற்கள்வநிரப்புதிநிலைமையென்றான். (௧௨௩)

சாணினுமுளனோர்தன்மையணுவினைச்சதக்கூறிட்ட
கோணினுமுளன்மாமேருக்குன்றினுமுளனிந்நின்ற
தூணினுமுளன்முன்சொன்னசொல்லினுமுளனித்தன்மை
காணுதிவிரைவினென்றானன்றெனக்கனகன்சொன்னான். (௧௨௪)

உம்பர்க்குமுனக்குமொத்திவ்வுலகெங்கும்பரந்துளானைக்
கம்பத்தின்வழியேகாணக்காட்டுதிகாட்டிடாயேல்
கும்பத்தின்கரியைக்கொண்மாக்கொன்றெனநின்னைக்கொன்றுன்
செம்பொத்தகுருதிதேக்கியுடலையுந்தின்பெனென்றான். (௧௨௫)

என்னுயிர்நின்னாற்கோறற்கெளியதொன்றன்றியான்முன்
சொன்னவன்றொட்டதொட்டவிடந்தொறுந்தோன்றானாயின்
என்னுயிர்யானேமாய்ப்பல்பின்னும்வாழ்வுகப்பலென்னின்
அன்னவற்கடியேனல்லேனென்றனனறிவின்மிக்கான். (௧௨௬)

நசைதிறந்திலங்கப்பொங்கிநன்றுநன்றென்னநக்கு
விசைபிறந்துருமுவீழ்ந்ததென்னவோர்தூணின்வென்றி
இசைபிறந்தமர்ந்தகையாலெற்றினனெற்றலோடும்
திசைதிறந்தண்டங்கீறிச்சிரித்ததுசெங்கட்சீயம். (௧௨௭)

நாடிநான்றருவெனென்றநல்லறிவாளனாளும்
தேடிநான்முகனுங்காணாச்சேயவன்சிரித்தலோடும்
ஆடினனழுதான்பாடியரற்றினன்சிரத்திற்செங்கை
சூடினன்றொழுதாடினடியுலகெலாந்துகைத்தான்றுள்ளி. (௧௨௮)

ஆரடாசிரித்தாய்சொன்னவரிகொலோவஞ்சிப்புக்க
நீரடாபோதாதென்றுநெடுந்தறிநேடினாயோ
போரடாபொருதியாயிற்புறப்படுபுறப்படென்றான்
பேரடாநின்றதாளோடுலகெலாம்பெயரப்போவான். (௧௨௯)

பிளந்ததுதூணமாங்கேபிறந்ததுசீயம்பின்னை
வளர்ந்ததுதிசைகளெட்டும்பகிரண்டமுதலமற்றும்
அளந்ததப்புறத்துச்செய்கையாரறிந்தறையகிற்பார்
கிளர்ந்ததுககனமுட்டைகிழிந்ததுகீழுமேலும். (௧௩௦)

மன்றலந்துளவமாலைமானுடமடங்கல்வானில்
சென்றதுதெரிதறேற்றுஞ்சேவடிபடியிற்றீண்டி
நின்றதோர்பொழுதினண்டநெடுமுகடிருந்தமுன்றோன்
அன்றவனுந்திவந்தானுமெனத்தோன்றினானால். (௧௩௧)

எத்துணைப்போதுங்கையென்றியம்பினுலெண்ணற்கேற்ற
வித்தகருளரோயந்தத்தானவர்விரிந்தசேனை
பத்துநூறமைந்தகோடிவெள்ளத்தாற்பகுதிசெய்த
அத்தனைக்கடலுமாளத்தனித்தனியள்ளிக்கொண்ட. (௧௩௨)

ஆயிரகோடிவெள்ளத்தயிலெயிற்றவுணர்க்கங்கள்
கேயினவொருவர்க்கோரோர்திருமுகமிரட்டிப்பொற்றோள்
தியென்கண்ணுஞ்செங்கண்சிரந்தொறுமூன்றுதெய்வ
வாயினிற்கடல்களேழுமலைகளுமற்றுமுற்றும். (௧௩௩)

முடங்குவாருளையவண்டமுழுவதுமுடிவினுண்ணும்
கடங்கொள்வெங்காலச்செந்தியதனைவந்துழிக்குங்கால
மடங்கலினுயிர்ப்புமற்றக்காற்றினைமாற்றுமாறுல்
அடங்கலும்பகுவாயாக்கையப்புறத்தகத்ததம்மா. (௧௩௪)

குயிற்றியவண்டங்குஞ்சையிட்டிலாமுட்டைமுட்டப்
பயிற்றியபருவமொத்தகாலத்துளமுதமூறும்
எயிற்றுவன்பகுவாயுட்புக்கிருக்குநவிருக்கையெய்தி
வயிற்றின்வந்தங்நாளிங்நாள்வாழுமன்னுயிர்கண்மன்றே (௧௩௫)

நன்மையிற்றொடர்ந்தார்க்குண்டோகேடுநான்முகத்தோனுதி
தொன்மையிற்றொடர்ந்தவாய்மையறத்தொடுந்தொடர்ந்திலோரை
அன்வயித்தோருந்தீயவவுணரல்லாரையந்நாள்
தன்வயிற்றகத்துவைத்துத்தந்ததச்சியந்தாயின். (௧௩௬)

பேருடையவுணர்தம்மைப்பிறையெயிற்றடக்கும்போரப்
பாரிடைத்தேய்க்குமீளப்பகிரண்டத்தடிக்கும்பற்றி
மேருவிற்புடைக்குமாளவிரல்களிற்பிசையும்வேலை
நீரிடைக்குமிழியூட்டுநெருப்பிடைச்சுரிக்கநீட்டும். (௧௩௭)

வகிர்ப்படுத்துரிக்கும்பற்றிவாய்களைப்பிளக்கும்வன்றோல்
துகிர்ப்படுத்துரிக்குஞ்செந்தீக்கண்களைச்சூலுஞ்சுற்றிப்
பகிர்ப்படக்குடைக்கொய்யும்பசையறப்பிசையும்பல்கால்
உகிர்ப்புரைபுக்கோர்தம்மையுகிர்களாலுறக்குமூன்றி. (௧௩௮)

யானையுந்தேருமாவும்யாவையுமுயிரிராமை
ஊனொடுந்தின்னும்பின்னையொலிதிரைப்பரவையேழும்
மீனொடுங்குடிக்குமேகத்தொடுமொடுவிழுங்கும்விண்ணில்
தானொடுங்காதென்றஞ்சித்தருமமுஞ்சலித்ததம்மா. (௧௩௯)

ஆழிமால்வரையோடெற்றுஞ்சிலவரையண்டகோளச்
சூழிருஞ்சுவரிற்றேய்க்குஞ்சிலவரைத்துளக்கில்குன்றம்
ஏழினொடெற்றிக்கொல்லுஞ்சிலவரையெட்டுத்திக்கும்
தாழிருட்பிழம்பிற்றேய்க்குஞ்சிலவரைத்தடக்கைதாக்கி. (௧௪௦)

மலைகளிற்புரண்டுவிழவள்ளுகிர்நுதியால்வாங்கித்
தலைகளைக்கிள்ளுமள்ளித்தழலெழப்பிசையுந்தக்க
கொலைகளிற்கொல்லும்வாங்கியுயிர்களைக்குடிக்கும்வான
நிலைகளிற்பரக்கவேலைநீர்களைநிரம்பத்தூர்க்கும். (௧௬௧)

முப்புரத்துலகத்துள்ளுமொழிவறமுற்றும்பற்றித்
தப்புதலின்றிக்கொன்றுதையலார்கருவுந்தள்ளி
இப்புறத்தண்டத்தியாருமவுணரில்லாமையெற்றி
அப்புறத்தண்டந்தோறுந்தடவினசிலகையம்மா. (௧௬௨)

கனகனுமவனில்வந்தவானவர்களைகணுய
அநகனுமொழியப்பல்வேறவுணராயோரையெல்லாம்
நினைவதன்முன்னங்கொன்றுநின்றதர்நெடுங்கட்சியம்
வனைகழலவனுமற்றம்மடங்கலின்வரவுநோக்கி. (௧௬௩)

வயிரவாளுறையின்வாங்கிவானகமறைப்பவட்டச்
செயிரறுகிடுகும்பற்றிவானவருள்ளந்தீய
அயிர்படவேலையேழுமலைகளுமஞ்சவார்த்தங்
குயிருடைமேருவென்னவாய்மடித்துருத்துநின்றான். (௧௬௪)

நின்றவன்றன்னைநோக்கிநிலையிதுகண்டுநீயும்
ஒன்றுமுன்னுள்ளத்தியாதுமுணர்ந்திலைபோலுமன்றே
வன்றொழிலாழிவேந்தைவணங்குதிவணங்கவேநின்
புன்றொழில்பொறுக்குமென்றானுலகெலாம்புகழநின்றான். (௧௬௫)

கேளிதுநீயுங்காணக்கிளர்ந்தகோளரியின்கேழில்
தோளொடுதாளுநீக்கிநின்னையுந்துணித்துப்பின்னென்
வாளினைத்தொழுவதல்லால்வணங்குதன்மகளிருடல்
நாளினுமுளதோவென்னவண்டங்கணடுங்கநக்கான். (௧௬௬)

நகைசெயாவாயுங்கையும்வாளொடுநடந்ததாளும்
புகைசெயாநெடுந்தீப்பொங்கவுருத்தெதிர்பொருந்தப்புக்கான்
தொகைசெய்வார்க்கரியதோளாற்றுள்களாற்சுற்றிச்சூழ்ந்தான்
மிகைசெய்வார்வினைகட்கெல்லாமேற்செயும்வினையம்வல்லான். (௧௬௭)

இருவரும்பொருந்தப்பற்றியெவ்வுலகுக்குமேலாய்
ஒருவருங்காணுவண்ணமுயர்ந்ததற்குவமைவேண்டின்
வெருவருதோற்றத்தஞ்சாவெஞ்சினவவுணன்மேரு
அருவனையொத்தானண்ணலல்லவையெல்லாமொத்தான், (௧௬௮)

ஆர்ப்பொலிமுழக்கின்வெவ்வாய்வள்ளுகிர்ப்பாரமான்ற
ஏற்றருங்கரத்திற்பல்வேறெறிதிரைப்பரப்பினுற்ற
பாற்கடல்பரந்துபொங்கிப்பங்கயத்தொருவனூட்டின்
மேற்சென்றதொத்தான்மாயன்கனகனுமேருவொத்தான். (௧௬௯)

வாளொடுதோளுங்கையுமகுடமுமலரோன்வைத்த
நீளிருங்ககனமுட்டைநெடுஞ்சுவரேய்ப்பநேமி
கோளொடுந்திரிவதென்னக்குலமணிக்கொடும்பூண்மின்னத்
தாளிணையிரண்டும்பற்றிச்சுழற்றினன்றடக்கையொன்றால். (சஞ௦)

சுழற்றியகாலத்திற்றநுங்குகுண்டலங்கணீங்கிக்
கிழக்கொடுமேற்கிளூடுவீழ்ந்தனகிடந்தவின்றும்
அழற்றருகதிரோன்றோன்றுமுதயத்தோடத்தமான
கிழற்றருந்தாலைமாலைநெடுமணிச்சுடரினீத்தம். (சஞக)

போன்றன்வினையதன்மைபொருவியதினையதென்று
தான்றனியொருவன்றன்னையுரைசெயுந்தரத்தேன்யானோ
வான்றருவள்ளல்வெள்ளைவள்ளுகிர்வயிரமார்பின்
ஊன்றனுமுதிரவெள்ளம்பரந்துளதுலகமெங்கும். (சஞஉ)

ஆயவன்றன்னைமாயனந்தியினவன்பொற்கோயில்
வாயலின்மணிக்கவான்மேல்வயிரவாளுகிரின்வாயுள்
மீயெழுகுருதிபொங்கவெயில்விரிவயிரமார்பு
தீயெழப்பிளந்துநீக்கித்தேவர்களிடுக்கண்டீர்த்தான். (சஞ௩)

முக்கணனெண்கணனுமுளரியாயிரக்கணனும்
திக்கணுந்தேவரோடுமுனிவரும்பிறருந்தேடிப்
புக்கநாடறிகுறுமற்றிரிகின்றார்புகுந்துமொய்த்தார்
எக்கணுற்காண்டுமெந்தையுருவமென்றிரங்கிநின்றார். (சஞச)

நோக்கினார்நோக்கினார்முனோக்குறுமுகமுங்கையும்
யாக்கையுந்தாளுமாகியெங்கணுந்தானேயாகி
வாக்கினன்மனத்தினன்மற்றறிவினலளக்கவாரா
மேக்குயர்சீயந்தன்னைக்கண்டனர்வெருவுகின்றார். (சஞரு)

பல்லொடுபல்லுக்கெல்லையாயிரகாதப்பத்தி
சொல்லியவதனங்கோடிகோடிமேல்விளங்கித்தோன்ற
எல்லையிலுருவிற்றாகியிருந்ததையெதிரநோக்கி
அல்லியங்கமலத்தண்ணலவன்புகழ்விரிப்பதானான். (சஞசா)

வேறு.

தன்னைப்படைத்தனுவுந்தானேயெனுந்தன்மை
பின்னைப்படைத்ததுவேகாட்டும்பெரும்பெருமை
உன்னைப்படைத்தாய்நீயென்றுலுயிர்படைப்பான்
என்னைப்படைத்தாய்நீயெனுமிதுவுமெற்றுமோ. (சஞஎ)

பல்லாயிரகோடியண்டம்பனிக்கடலுள்
இல்லாதமொக்குளெனத்தோன்றுமானின்னுழையே
எல்லாவுருவமுமாய்நின்றக்காலிவ்வுருவம்
வல்லேபடைத்தால்வரம்பின்மைவாராதோ. (சஞஅ)

பேராயொருபொருட்கேபல்வகையாற்பேர்த்தெண்ணும்
தாராநிலையைதமியைபிறரில்லை
ஆரைப்படைக்கின்றதாரையளிக்கின்ற
தாரைத்துடைக்கின்றதையாவறியேமால். (கருகூ)

நின்னுளேயென்னைநிருமித்தாய்நீயல்லா
தென்னுளேயெப்பொருளும்யாவரையும்யானீன்றேன்
பின்னிலேன்முன்னிலேனெந்தைபெருமானே
பொன்னுளேதோன்றியதோர்பொற்கலனேபோல்கின்றேன். (கசு0)

என்றுங்கியம்பியிமையாதமுக்கணனும்
வன்றுளிமையோருந்தானும்வணங்கினன்
நின்றுநிருமருங்குநேமிப்பெருமானும்
ஒன்றுதசிற்றத்தையுள்ளேயொடுக்கினன். (கசுக)

எஞ்சுமுலகனைத்துமிப்பொழுதேயென்றென்று
நெஞ்சுநடுங்குநெடுந்தேவரைநோக்கி
அஞ்சன்மினென்றவருள்சுரந்தநோக்கினல்
கஞ்சமலர்பழிக்குங்கையபயங்காட்டினன். (கசுஉ)

பூவிற்றிருவையழகின்புனைகலத்தை
யாவர்க்குஞ்செல்வத்தைவீடென்னுமின்பத்தை
ஆவித்துணையையமுதிற்பிறந்தாளைத்
தேவர்க்குந்தம்மோயையேவினார்பாற்செல்ல. (கசுங)

செந்தாமரைப்பொகுட்டிற்செம்மாந்துவீற்றிருக்கும்
நந்தாவிளக்கைநறுந்தாழிளங்கொழுந்தை
முந்தாவுலகுமுயிருமுறைமுறையே
தந்தாளைநோக்கினன்றன்னொப்பொன்றில்லாதான். (கசுச)

தீதிலாவாகவுலகீன்றதெய்வத்தைக்
காதலானோக்கினன்கண்டமுனிக்கணங்கள்
ஓதினார்சீர்த்தியுயர்ந்தபரஞ்சுடரும்
நோதலாங்கில்லாதவன்பனையேநோக்கினன். (கசுரு)

உந்தையுன்முன்னேகொன்றுடலைப்பிளந்தளையச்
சிந்தைதளராதறம்பிழையாச்செய்கையாய்
அந்தமிலாவன்பெம்மேல்வைத்தாயளியத்தாய்
எந்தையினியிதற்குக்கைம்மாறியாதென்றான். (கசுசு)

அயிராவிமைப்பினையோராயிரங்கூறிட்ட
செயிரினொருபொழுதினுந்தையையாஞ்சீறி
உயிர்நேடுவேம்போலுடலைப்பிளக்கண்டும்
செயிர்சேராவுள்ளத்தாய்க்கென்னினியாஞ்செய்கேம். (கசுஎ)

கொல்லேமினியுன்குலத்தோரைக்குற்றங்கள்
எல்லையிலாதனசெய்தாரோயென்றாலும்
நல்லேமுனக்கெம்மைநாணுமனுஞ்செய்வ
தொல்லையுளவேலியம்புதியாலென்றுரைத்தான். (௬௮)

முன்புபெறப்பெற்றபேறேமுடிவில்லை
பின்புபெறும்பேறுமுண்டோபெறுகுவெனேல்
என்புபெறுதவிழிபிறவியெய்திடினும்
அன்புபெறுகையரும்பேறெனக்கென்றான். (௬௯)

அன்னானைநோக்கியருள்சுரந்தநெஞ்சினனாய்
என்னானைவல்லேனெனமகிழ்ந்தபேரீசன்
முன்னானபூதங்கள்யாவையுமுற்றிடினும்
எந்நாளுமுலவாய்நீயெம்போலுளையென்றான். (௭௦)

மின்னைத்தொழுவளைத்ததன்னமிளிரொளியாய்
முன்னைத்தொழும்புனக்கேயாமன்றேமூவுலகும்
என்னைத்தொழுதேத்தியெய்தும்பயனெய்தி
உன்னைத்தொழுதேத்தியுய்கவுயிரெல்லாம். (௭௧)

ஏனவர்க்குவேண்டினெளிதன்றேவெற்கன்பர்
ஆனவர்களெல்லாநினக்கன்பராயினார்
தானவர்க்குவேந்தனீயென்னுந்தரத்தாயோ
வானவர்க்குநீயேயிறைதொன்மறைவல்லோய். (௭௨)

நல்லறமுமெய்ம்மையுநான்மறையுநல்லருளும்
எல்லையின்ஞானமுமீறிலாவெப்பொருளும்
தொல்லைசாலெண்குணனுநின்சொற்றொழில்செய்க
வல்லவுருவொளியாய்நாளுவளர்கநீ. (௭௩)

என்றுவரமருளியெவ்வுலகுங்கைகூப்ப
முன்றின்முரசந்துவைப்பமுடிகவித்து
நின்றவமரரொல்லீருநேர்ந்திவனுக்
கொன்றுபெருமையுரிமைபுரிகென்றான். (௭௪)

தேமனுரிமைபுரியத்திசைமுகத்தோன்
ஓமமியற்றவுடையான்முடிசூட்டக்
கோமன்னவனுகிமூவுலகுங்கைக்கொண்டான்
நாமமறையோதாதோதிநனியுயர்ந்தான். (௭௫)

ஈதாகுமுன்னிகழ்ந்ததெம்பெருமாவென்மாற்றம்
யாதானுமாகநினையாதிகழ்தியேல்
தீதாய்விளைதிண்ணமெனச்செப்பினான்
மேதாவியர்க்கெல்லாமேலாயமேன்மையான். (௭௬)

இரணியன்வதைப்படலம்-முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௩௦௭.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

கேட்டனனிருந்துமக்கேள்விதேர்கலர்க்
கோட்டியசிந்தையனுறுதிகொண்டிலன்
மூட்டியதீயெனமுடுகிப்பொங்கினான்
ஊட்டரக்கூட்டியவனையவொண்கணான். (௧)

இரணியனென்பவனெம்மனோரினும்
மூரணியனவன்றனைமுருக்கிமுற்றினான்
அரணியனென்றவற்கன்புபூண்டனை
மரணமென்றொருபொருண்மாற்றும்வன்மையோய். (௨)

ஆயவன்வளர்த்ததன்றுணையாகத்தை
மாயவன்கல்லியமகிழ்ந்தமைந்தனும்
ஏயுநம்பகைஞனுக்கினியநண்புசெய்
நீயுமேநிகர்பிறர்நிகர்க்கநேர்வரோ. (௩)

பாழிசாலிரணியன்புதல்வன்பண்பெனச்
சூழ்வினைமுற்றியானவற்குத்தோற்றபின்
ஏழைநீயென்பெருஞ்செல்வமெய்திப்பின்
வாழவோகருத்ததுவரவற்றாகுமோ. (௪)

முன்புறவனையர்பானண்புமுற்றினை
வன்பகைமனிசரின்வைத்தவன்பினை
என்புறவுருகுதியழுதியேத்துதி
உன்புகலவர்பிறிதுரைக்கவேண்டுமோ. (௫)

நண்ணினமனிசரைநண்புபூண்டனை
எண்ணினைசெய்வினையென்னைவெல்லுமா
றுன்னினையரசின்மேலாசையூன்றினை
திண்ணிதுன்செயல்பிறர்செறுநர்வேண்டுமோ. (௬)

வேறு.

அன்றுவானரம்வந்துநஞ்சோலையையழிப்பக்
கொன்றுதின்னுழினின்றெனத்தூதனைக்கோறல்
வென்றியன்றெனவிலக்கினைமேல்விளைவெண்ணித்
துன்றுதாரவற்றுணையெனக்கோடலேதுணிந்தாய். (௭)

வேறு.

அஞ்சினையாதலினமர்க்குமாளலை
தஞ்செனமனிசர்பால்வைத்தசார்பினை
வஞ்சனைமனத்தினைபிறப்புமாற்றினை
நஞ்சினையுடன்கொடுவாழ்தனன்றரோ. (௮)

பழியினையுணர்ந்தியான்படுக்கிலேனுனை
ஒழிசிலபுகலுதலொல்லைநீங்குதி
விழியெதிர்நிற்றியேல்விளிதியென்றனன்
அழிவினையெய்துவானறிவுநீங்கினான். (௯)

என்றலுமிளவலுமெழுந்துவானிடைச்
சென்றனன்றுணைவருந்தானுஞ்சிந்தியா
நின்றனன்பின்னருநீதிகான்றன
ஒன்றலபலபலவுறுதியோதினன். (க0)

வாழியாய்கேட்டியால்வாழ்வுகைம்மிக
வூழிகாண்குறுநினதுயிரையோர்கிலை
கீழ்மையோர்சொற்கொடுகெடுதனேர்தியோ
வாழ்மைதானறம்பிழைத்தவர்க்குமாகுமோ. (கக)

புத்திரர்குருக்கணின்பொருவில்கேண்மையர்
மித்திரரடைந்துளோர்மெலியவன்மையார்
இத்தனையோரையுமிராமன்வெஞ்சரம்
சித்திரவதஞ்செயக்கண்டுதீர்தியோ. (கஉ)

எத்துணைவகையினுமுறுதியெய்தின
ஒத்தனவுணர்த்தினேனுணரகிற்றிலை
அத்தவென்பிழைபொறுத்தருடியாலெனா
உத்தமனந்நகரொழியப்போயினன். (கங)

அனலனுமனிலனுமரன்சம்பாதியும்
வினையவர்நால்வரும்விரைவின்வந்தனர்
கனைகழற்காலினர்கருமச்சூழ்ச்சியர்
இனைவரும்வீடணனோடுமேயினர். (கச)

அரக்கனுமாங்கணோரமைச்சர்நால்வரும்
குரக்கினத்தவரொடுமெனிசர்கொள்ளைநீர்க்
கரைக்கண்வந்திறுத்தனரொன்றகாலையில்
பொருக்கெனவெழுதுமென்றெண்ணிப்போயினர். (கரு)

அளக்கரைக்கடந்துமேலதிர்தநம்பியும்
விளக்கொளிபரத்தலிற்பாலின்வெண்கடல்
வளத்தடந்தாமரைமலர்ந்ததாமெனக்
களப்பெருந்தானையைக்கண்ணினோக்கினன். (கசா)

ஊனுடையுடம்பினவுயிர்கள்யாவையும்
ஏனையவொருதலைநிறுத்தியெண்ணினல்
வானரம்பெரிதெனமறுவில்சிந்தையான்
தூநிறச்சுடுபடைத்துணைவர்ச்சொல்லினன். (கள)

அறந்தலைநின்றவற்கன்புபூண்டனேன்
மறந்துதன்புகழலால்வாழ்வுவேண்டிலேன்
பிறந்தவென்னுறுதிநீபிடிக்கலாயெனாத்
துறந்தனெனினிச்செயல்சொல்லுவீரென்றான். (கஅ)

மாட்சியினமைந்ததுவேறுமற்றிலை
தாழ்ச்சியில்பொருடருந்தருமமூர்த்தியைக்
காட்சியேயினிக்கடனென்றுகல்விசால்
சூழ்ச்சியின்கிழவருந்துணிந்துசொல்லினார். (௧௯)

நல்லதுசொல்லினிர்நாமும்வேறினி
அல்லதுசெய்துமேலரக்கராதுமால்
எல்லையில்பெருங்குணத்திராமன்றாளிணை
புல்லுதும்புல்லியிப்பிறவிபோக்குதும். (௨0)

முன்புறக்கண்டிலேன்கேண்மைமுன்பிலேன்
அன்புறக்காரணமறியகிற்றிலேன்
என்புறக்குளிருநெஞ்சுருகுமேனவன்
புன்புலப்பிறவியின்பகைஞன்போலுமால் (௨௧)

ஆதியம்பரமனுக்கன்புநல்லறம்
நீதியின்வழாமையுமுயிர்க்குநேயமும்
வேதியரருளுநான்விரும்பிப்பெற்றனென்
போதறுகிழவனைத்தவமுன்பூண்டநாள். (௨௨)

ஆயதுபயப்பதோரமைதியாயது
தூயதுநினைந்ததுதொல்லையாவர்க்கும்
நாயகன்மலர்க்கழனணுகிநம்மனத்
தேயதுமுடித்துமென்றினிதுமேயினான். (௨௩)

இருளுறவெய்துவதியல்பன்றாமெனப்
பொருளுறவுணர்ந்தவப்பொலன்கொள்புந்தியார்
மருளுறுசூழலின்மறைந்துவைகினார்
அருளுறுதேரவனுதயமெய்தினான். (௨௪)

அப்புறத்திராமனவ்வலங்குவேலையைக்
குப்புறக்கருதுவான்குவளைநோக்கிதன்
துப்புறச்சிவந்தவாய்நினைந்துசோர்குவான்
இப்புறத்திருங்கரைமருங்கினெய்தினான். (௨௫)

கானலுங்கழிகளுமணலுங்கண்டலும்
பானலுங்குவளையும்பரந்தபுன்னையும்
மேனிறையன்னமும்பிறவும்வேட்கைகூர்
பூநிறைசூழலும்புரிந்துநோக்கினான். (௨௬)

தரளமும்பவளமுந்தரங்கமீட்டிய
திரண்மணிக்குப்பையுங்கனகதீரமும்
மருளுமென்பொதும்பருமணலின்குன்றமும்
புரணெடுந்திரைகளும்புரிந்துநோக்கினான். (௨௭)

மின்னருமணிவிரதேயவீழ்கணீர்
துன்னரும்பெருஞ்சுழியழிப்பச்சோர்விறே
டின்னகைநுளைச்சியரிழைக்குமாழிசால்
புன்னையம்பொதும்பரும்புக்குநோக்கினன். (உஅ)

கூதிர்நுண்குறும்பனித்திவலைக்கோவைசால்
மோதிவெண்டிரைவர்முடவெண்டாழைமேல்
பாதியஞ்சிறையிடைப்பெடையைப்பாட்ணைத்
தோதிமந்துயில்வகண்டுயிர்ப்புவீங்கினன். (உகூ)

அருந்துதற்கினியமீன்கொணரவன்பினல்
பெருந்தடங்கொம்பிடைப்பிரிந்தசேவலை
வருந்திசைநோக்கியோர்மழலைவெண்குரு
கிருந்ததுகண்டுகின்றிரங்கலெய்தினன். (௩0)

ஒருதனிப்பேடைமேலுள்ளமோடலால்
பெருவலிவயக்குருகிரண்டுபேர்கில
திருகுவெஞ்சினத்தனதெறுகட்டிபன
பொருவனகண்டுதன்புருவங்கோட்டினன். (௩க)

உண்ணிறையூடலிற்றேற்றவோதிமம்
கண்ணுறுகலவியால்வெல்லக்கண்டவன்
தண்ணிறப்பவளவாயிதழைத்தற்பொதி
வெண்ணிறமுத்திலைதுக்கிவிம்மினன். (௩உ)

இத்திறமெய்தியகாலையெய்துறும்
வித்தகர்கிளவியான்மெலிவுநீங்கினன்
ஒத்தனனிராமனுமுணர்வுதோன்றிய
பித்தரினுருவகைபெயர்ந்துபோயினன். (௩௩)

உறைவிடமெய்தினுனொருங்குகேள்வியின்
துறையறிதுணைவரோடிருந்தசூழல்வாய்
முறைபடுதானையின்மருங்குமுற்றினன்
அறைகழல்வீடணனயிர்ப்பில்சிந்தையான். (௩௪)

மற்றொருபொருளிலதென்னின்மாறிலாக்
கொற்றவசரணெனக்கூயதோருரை
உற்றதுசெவித்தலத்தையனுெல்லென
நற்றுணைவாமுகநயந்துநோக்குறு. (௩௫)

எந்தையேயிராகவசரணமென்றசொல்
தந்தவனைவரோசாற்றுமின்னென
மந்தணமுற்றுழிஇவயவெஞ்சேனைமுன்
முந்தினற்குற்றதைமொழிகுவாமரோ. (௩௬)

முற்றியகுரிசிலைமுழங்குதானையின்
உற்றனர்நிருதர்வந்தென்னவொன்றினார்
எற்றுதிர்பற்றுதிரெறிதிரென்றிடைச்
சுற்றினருருமெனத்தெழிக்குஞ்சொல்லினார். (௩௭)

தந்ததுதருமமேகொணர்ந்ததானிவன்
வெந்தொழிற்றீவினைபயந்தமென்மையான்
வந்தனனிலங்கையர்மன்னனுக்குநம்
சிந்தனைமுடித்தனமென்னுஞ்செய்கையார் (௩௮)

இருபதுகரந்தலையீரைந்தென்னுமத்
திருவிலிக்கன்னவைசிதைந்தவோவென்பார்
பொருதொழிலெம்மொடுபொருதிபோவென்பார்
ஒருவரினொருவர்சென்றுறுக்கியூன்றுவார். (௩௯)

பற்றுதுஞ்சிறையிடைவைத்துப்பாருடைக்
கொற்றவற்குணர்த்துதுமென்றுகூறுவார்
எற்றுவதன்றியேயிவனைக்கண்டிறை
நிற்றலென்பிறிதெனநெருக்கிநேர்குவார். (௪௰)

இமைப்பதன்முன்விசும்பெழுந்துபோயபின்
அமைப்பதென்பிறிதிவரரக்கரல்லரோ
சமைப்பதுகொலையலாற்றக்கதியாவதோ
குமைப்பதுநல்லெனமுடுகிக்கூறினார். (௪௧)

இயைந்தனவியைந்தனவினையகூறலும்
மயிந்தனுந்துமிந்தனுமென்னுமாண்பினார்
அயிந்திரநிறைந்தவனாணையேவலால்
நயந்தெரிகாவலரிருவர்நண்ணினார். (௪௨)

விலக்கினர்படைஞரைவேதநீதிநூல்
இலக்கணநோக்கியவியல்பரெய்தினார்
சலக்குறியிலரெனவருகுசார்ந்தனர்
புலக்குரியறநெறிபொருந்தநோக்கினார். (௪௩)

யாரிவணெய்தியகருமம்யாவது
போரதுபுரிதிரோபுறத்தொரெண்ணமோ
சார்புறநின்றநீர்சமைந்தவாறெலாம்
சோர்விலிர்மெய்ம்முறைசொல்லுவீரென்றான். (௪௪)

பகலவன்வழிமுதற்பாரினாயகன்
புகலவன்கழலடைந்துய்யப்போந்தனன்
தகவுறுசிந்தையன்றருமநீதியன்
மகன்மகன்மைந்தனான்முகற்குவாய்மையான். (௪௫)

அறநிலைவழாண்மையுமாதிமூர்த்திபால்
நிறைவருநேயமுநின்றவாய்மையும்
மறையவர்க்கன்புமென்றினையமாமலர்
இறையவன்றரநெடுந்தவத்தினேயினான். (௪௬)

சுடுதியைத்துகிலிடைப்பொதிந்ததுன்மதி
இடுதியேசிறையிடையிறைவன்றேவியை
விடுதியேலுய்குதிவிடாதுவேட்டியேல்
படுதியென்றுறுதிகள்பலவும்பன்னினான். (௪௭)

மறந்தருசிந்தையன்மதியினீங்கினான்
பிறந்தனைபின்பதிற்பிழைத்திபோகுதி
இறந்தனைநிற்றியேலென்னவின்னவன்
துறந்தனனெனவிரித்தனலன்சொல்லினான். (௪௮)

மயிந்தனுமவ்வுரைமனத்துவைத்துநீ
இயைந்ததுநாயகற்கியம்புவேனெனாப்
பெயர்ந்தனன்றம்பியும்பெயர்வில்சேனையும்
அயர்ந்திலிர்காமினென்றமைவதாக்கியே. (௪௯)

தருமமுஞானமுந்தவமும்வேலியாய்
மருவரும்பெருமையும்பொறையும்வாயிலாக்
கருணையங்கோயிலுளிருந்தகண்ணனைப்
அருநெறியெய்திச்சென்றடிவணங்கினான். (௫௦)

உண்டுகொலுணர்த்துவதுழியாயெனப்
புண்டரிகத்தடம்புரையும்பூட்சியான்
மண்டிலச்சடைமுடிதுளக்கிவாய்மையாய்
கண்டதுங்கேட்டதுங்கழறுவாயென்றான். (௫௧)

விளைவினையறிந்திலம்வீடணப்பெயர்
நளிர்மலர்க்கையினனல்வரோடுடன்
களவியல்வஞ்சனையிலங்கைகாவலற்
கிளவனஞ்சேனையினடுவணெய்தினான். (௫௨)

கொல்லுமின்பற்றுமினென்னுங்கொள்கையால்
பல்பெருஞ்சேனைசென்றடர்க்கப்பார்த்தியாம்
நில்லுமினென்றுநீயாரைநின்னிலை
சொல்லுதியென்னவோர்துணைவன்சொல்லினான். (௫௩)

முரண்புகுதீவினைமுடித்தமுன்னவன்
கரன்புகுழலேசூழக்காண்பதோர்
அரண்பிறிதில்லெனவருளின்வேலையைச்
சரண்புகுந்தனனெனமுன்னஞ்சாற்றினான். (௫௪)

ஆயவன்றருமமுமாதிமூர்த்திபால்
மேயதோர்சிந்தையுமெய்யும்வேதியர்
நாயகன்றரநெடுந்தவத்துநண்ணினன்
தூயவனென்பதோர்பொருளுஞ்சொல்லினான். (௫௫)

கற்புடைத்தேவியைவிடாதுகாத்தியேல்
எற்புடைக்குன்றமாமிலங்கையேழைநின்
பொற்புடைமுடித்தலைபுரளுமென்றொரு
நற்பொருளுணர்த்தினனென்றுநாட்டினான். (௫௬)

ஏந்தொழிலிராவணனினையசொன்னநீ
சாந்தொழிற்குரியையென்சார்புநிற்றியேல்
ஆந்தினைப்பொழுதினிலகறியாமெனப்
போந்தனனென்றனன்புகுந்ததீதென்றான். (௫௭)

அப்பொழுதிராமனுமருகினண்பரை
இப்பொருள்கேட்டநீரியம்புவீரிவன்
கைப்புகுபாலனோகழியற்பாலனோ
ஒப்புறநோக்கிநும்முணர்வினாலென்றான். (௫௮)

தடமலர்க்கண்ணனைத்தடக்கைகூப்பிநின்
றிடனிதுகாலமீதென்னவெண்ணுவான்
கடனறிகாவலன்கழறினானரோ
சுடர்நெடுமணிமுடிச்சுக்கிரீவனே. (௫௯)

நனிமுதல்வேதங்கணாலுநாமநூல்
மனுமுதல்யாவையும்வரம்புகண்டநீ
இனையனகேட்கவோவெம்மனோர்களை
வினவியகாரணம்விதிக்குமேலுளாய். (௬0)

ஆயினும்விளம்புவெனருளினாழியாய்
ஏயினதாகலினறிவிற்கேற்றன
தூயவென்றெண்ணினுந்துணிவன்றென்னினும்
மேயதுகேட்டியால்விளைவுநோக்குவாய். (௬௧)

வெம்முனைவிளைதலினன்றுவேறொரு
சும்மையானுயிர்கொளத்துணிதலாலன்று
தம்முனைத்துறந்ததுதருமநீதியோ
செம்மையிலரக்கரில்யாவர்சீரியோர். (௬௨)

தகையுறுதம்முனைத்தாயைத்தந்தையை
மிகையுறுகுரவனாயுலகின்வேந்தனைப்
பகையுறவருதலுந்துறந்தபண்பிது
நகையுறலன்றியுநயக்கற்பாலதோ. (௬௩)

வேண்டுழியினையன விளம்பிவெம்முனை
பூண்டுழியஞ்சிவெஞ்செருவிற்புக்குடன்
மாண்டுழியன்றிநம்மருங்குவந்தவன்
ஆண்டொழிலுலகினுக்காணியாமன்றே. (௬௪)

மிகைப்புலந்தருமமேவேட்டபோதவர்
தகைப்புலந்துறந்துபோய்ச்சாதலன்றியே
நகைப்புலம்பொதுவுறநடந்தநாயகன்
பகைப்புலஞ்சார்தலோபழியினீங்குமோ. (௬௫)

வார்க்குறுவனைகழற்றம்முன்வாழ்ந்தநாள்
சேர்க்குறவாயிடைச்செறுநர்சீறிய
போர்க்குறவன்றியேபுகுந்தபோதிவன்
ஆர்க்குறவாகுவனருளினூழியாய். (௬௬)

ஒட்டியகனகமானுருவமாகிய
சிட்டனன்மருமகனிழைத்ததீவினை
கிட்டியபோதினிற்றவமுங்கேள்வியும்
விட்டதுகண்டுநாம்விடாதுவேட்குமோ. (௬௭)

கூற்றுவன்றன்னொடிவ்வுலகங்கூடிவந்
தேற்றனவென்னினும்வெல்லவேற்றுள
மாற்றவன்றம்பிநம்மருங்குவந்திவண்
தோற்றுமோவன்னவன்றுணைவனாகுமோ. (௬௮)

அரக்கரையாசறக்கொன்றுநல்லறம்
புரக்கவந்தனமெனும்பெருமைபூண்டநாம்
இரக்கமிலவரையேதுணைக்கொடேறலால்
சுருக்கமுண்டவர்வலிக்கென்றுதோன்றுமால். (௬௯)

விண்டுழியொருநிலைநிற்பர்மெய்ம்முகம்
கண்டுழியொருநிலைநிற்பர்கைப்பொருள்
கொண்டுழியொருநிலைநிற்பர்கூழுடன்
உண்டுழியொருநிலைநிற்பருற்றவர். (௭0)

வஞ்சனையியற்றிடவந்தவாறலால்
தஞ்செனநம்வயிற்சார்ந்துளானலன்
நஞ்செனக்கொடியனைநயந்துகோடியோ
அஞ்சனவண்ணவென்றறியக்கூறினான். (௭௧)

அன்னவன்பின்னுறவலகில்கேள்வியால்
தன்னிகர்பிறிதிலாத்தகையசாம்பனை
என்னையுன்கருத்தெனவிறைவினாயினான்
சொன்முறைநெறிதெரிந்தவனுஞ்சொல்லுவான். (௭௨)

அறிஞரோயாயினுமரியதெவ்வரைச்
செறிஞரோயாவரோற்கெடுதறிண்ணமாம்
நெறிதனைநோக்கினுநிருதர்நிற்பதோர்
குறிநனியுளதெனவுலகங்கொள்ளுமோ. (எங)

வெற்றியுந்தருகுவர்வினையம்வேண்டுவர்
முற்றுவருறுகுறைமுடிப்பர்முன்பினால்
உற்றுறுநெடும்பகையுடையரல்லதூஉம்
சிற்றினத்தவரொடுஞ்செறிதல்சீரிதோ (எச)

வேதமும்வேள்வியுமயக்கிவேதியர்க்
கேதமுமிமையவர்க்கிடருமீட்டிய
பாதகர்நம்வயிற்படர்வராமெனின்
தீதிலராய்நமக்கன்புசெய்வரோ. (எரு)

கைப்புகுந்துறுசரணருளிக்காத்துமேல்
பொய்க்கொடுவஞ்சனைபுணர்த்தபோதினும்
மெய்க்கொளவிளியினும்விடுதுமென்னினும்
திக்குறுநெடும்பழியறனுஞ்சீறுமால். (எசு)

மேனனிவிளைவதுவிளம்பல்வேண்டுமோ
கானகத்திறைவியோடுறையுங்காலையின்
மானெனவந்தவன்வரவைமாறுமிவ்
வேனையன்வரவுமென்றினையகூறினான். (எஎ)

பால்வருபனுவலின்றுணிவுபற்றிய
சால்பெருங்கேள்வியன்றனைநாயகன்
நீலனைநின்கருத்தியம்புநீயென
மேலவன்விளம்பலும்விளம்பன்மேயினான். (எஅ)

பகைவரைத்துணையெனப்பற்றற்பாலவாம்
வகையுளவன்னவைவரம்பில்கேள்வியாய்
தொகையுறக்கூறுவென்குரங்கின்சொல்லென
நகையுறத்தக்கனநயந்துகோடியால். (எகூ)

தங்குலக்கிளைஞரைத்தருக்கும்போரிடைப்
பெரங்குநர்க்கொன்றவர்க்கெளியர்போந்தவர்
மங்கையர்திறத்தினின்வயிர்த்தசிந்தையர்
சிங்கலில்பெரும்பொருளிழந்துசீறினோர். (அ0)

பேரபிமானங்களுற்றபெற்றியோர்
போரிடைப்புறங்கொடுத்தஞ்சிப்போந்தவர்
நேர்வருதாயத்துநிற்பினோர்பிறர்
சீரியகிளைஞராமடியச்செற்றுளோர். (அக)

அடுத்தநாட்டரசியல்புடையவாணையாற்
படுத்தவர்பட்டவர்பகைஞரோடொரு
மடக்கொடிபயந்தவர்மைந்தராயினும்
உடற்கொளத்தகையர்நம்முழைவந்தொன்றினால். (௮௨)

தாமவர்க்கெளிவருந்தகைமையாரலர்
நாமுறவல்லவர்நம்மைநண்ணினார்
தோமுறநீங்குதலுணிவராதலின்
யாமிவன்வரவிவற்றென்னென்றுன்னுவாம். (௮௩)

காலமேநோக்கினுங்கற்றநூல்களின்
மூலமேநோக்கினுமுனிந்துபோந்தவன்
சீலமேநோக்கியாந்தெரிந்துதேறுதற்
கேலுமேயென்றெடுத்தினையகூறினான். (௮௪)

மற்றுளமந்திரிக்கிழவர்வாய்மையால்
குற்றமில்கேள்வியரன்புகூர்ந்தவர்
பற்றுதல்பழுதெனப்பழுதுறுவொரு
பெற்றியினுணர்வினார்முடியப்பேசினார். (௮௫)

உறுபொருள்யாவருமொன்றக்கூறினார்
செறிபெருங்கேள்வியாய்கருத்தென்செப்பென
நெறிதருமாருதியென்னுநேரிலா
அறிவனைநோக்கினனறிவின்மேலுளான். (௮௬)

இணங்கினரறிவிலரெனினுமெண்ணுங்கால்
கணங்கொள்கைநும்மனோர்கடன்மைகாணென
வணங்கியசென்னியன்மறைத்தவாயினன்
நுணங்கியகேள்வியானுவல்வதாயினான். (௮௭)

எத்தனையுளர்தெரிந்தெண்ணவேய்ந்தவர்
அத்தனைவருமொருபொருளையன்றென
உத்தமரதுதெரிந்துணரவோதினார்
வித்தகவினிச்சிலவிளம்பவேண்டுமோ. (௮௮)

தூயவர்துணிதிறனன்றுதூயதே
ஆயினுமொருபொருளுரைப்பெனுழியாய்
தீயனென்றிவனையானயிர்த்தல்செய்கிலேன்
மேயினசிலபொருள்விளம்பவேண்டுமால். (௮௯)

வண்டுளரலங்கலாய்வஞ்சர்வாண்முகம்
கண்டதோர்பொழுதினிற்றெரியுங்கைதவம்
உண்டெனினஃதவர்க்கொளிக்கவொண்ணுமோ
விண்டவர்பல்பகன்மருவிவீழ்வரோ. (௯0)

உள்ளத்தினுள்ளதையுணாயின் முந்துற
மெள்ளத்தம்முகங்களேவிளம்புமாகலால்
கள்ளத்தின் விளைவெலாங்கருத்திலாவிருட்
பள்ளத்தினன்றியேபுறத்திற்பல்குமோ. (௧௧)

வாலிவிண்பெறவரசிளையவன்பெறக்
கோலியவரிசிலைவலியுங்கொற்றமும்
சீலமுமுணர்ந்துமிற்சேர்ந்துதெள்ளிதின்
மேலரசெய்துவான்விரும்பிமேயினான். (௧௨)

செறிகழலரக்கர்தம்மரசுசீரியோர்
நெறியலதாகலினிலைக்கலாமையும்
எறிகடலுலகெலாமிளவற்கீந்ததோர்
பிறிவருங்கருணையுமெய்யும்பேணினான். (௧௩)

காலமன்றிவன்வருகாலமென்பரேல்
வாலிதன்னுறுபகைவலியதேறிய
தாலினியங்கிவற்கிறுதியாவதால்
மூலமென்றுணவரைப்பிரிவுமுற்றினான். (௧௪)

தீத்தொழிலரக்கர்தம்மாயச்செய்வினை
வாய்த்துளரன்னவையுணருமாண்பினால்
காத்தவரவர்களேகையுற்றார்நமக்
கேற்றதோருறுதியுமெளிதினெய்துமால். (௧௫)

தெளிவுறலரிதிவர்மனத்திற்றீமையாம்
விளிவதுசெய்குவரென்னவேண்டுதல்
ஒளியுறவுயர்ந்தவரொப்பவெண்ணலார்
எளியவர்திறத்திறேவெண்ணலேயுமோ. (௧௬)

கொல்லுமினிவனையென்றரக்கன்கூறிய
எல்லையிற்றூதரையெதிதலென்பது
புல்லிதுபழியொடும்புணரும்போர்த்தொழில்
வெல்லலம்பின்னரொன்றிடைவிலக்கினான். (௧௭)

மாதரைக்கோறலுமறத்துநீங்கிய
ஆதரைக்கோறலுமழிவுசெய்யினும்
தூதரைக்கோறலுந்தூய்தன்றாமெனு
ஏதுவிற்சிறந்தனவெடுத்துக்காட்டினான். (௧௮)

எல்லியில்யானிவனிரணமாளிகை
செல்லியபோதினுந்திரிந்தபோதினும்
நல்லனநிமித்தங்கணனிநிகழ்ந்தன
அல்லதுமுண்டொானறிந்ததாழியாய். (௧௯)

நிந்தனைந்றவமுநெறியிலுன்களும்
தந்தனகண்டிலென்றருமந்தானமே
வந்தனீதியும்பிறவுமாண்பமை
அந்தணர்மனையெனப்பொலிந்ததாழியாய். (௧௦௦)

மன்னவன்றனிமகண்மலரின்மேலயன்
சொன்னதோர்சாபமுண்டுன்னைத்துன்மதி
நன்னுதறீண்டுமேனண்ணுங்கூற்றென
என்னுடையிறைவிக்குமினிதுகூறினாள். (௧௦௧)

வேறு.

பெற்றுடையபெருவரமும்பிறந்துடையவஞ்சனையும்பிறவுமுன்கை
விற்றொடையின்விடுகணையால்வென்றொழியுமெனக்கருதிமேற்சொல்லோடும்
உற்றுடையபெருவரமுமுகந்துடையதண்ணளியுமுணர்வுநோக்கின்
மற்றுடையர்தாமுளரோவாளரக்கனன்றியேதவத்தின்வாய்த்தார். (௧௦௨)

தேவர்க்குந்தானவர்க்குந்திசைமுகனேமுதலாயதேவதேவர்
மூவர்க்குமுடிப்பரியகாரியத்தைமுற்றுவிப்பான்மூண்டுநின்றே
ஆவத்தின்வந்தபயமென்றானையயிர்த்தகலவிடுதியாயின்
கூவத்தின்சிறுபுனற்குக்கடலயிர்த்ததொவ்வாதோகொற்றவேந்தே. (௧௦௩)

பகைப்புலத்தோர்துணையல்லவொன்றிவனைப்பற்றேமேலறிஞர்பார்க்கின்
நகைப்புலத்ததாமன்றேநற்றாயமுளதாயபற்றான்மிக்க
தகைப்புலத்ததந்தையர்கடம்பியர்கடநயரிவர்தாமேயன்றோ
மிகைப்புலத்தின்விளைகின்றதொருபொருளைக்காதலிக்கின்விளிஞராவர்.

ஆதலானிவன்வரவுநல்வரவேயென்றுணர்ந்தேனடியனேனுன்
வேதநூலெனத்தகையதிருமனத்தின்குறிப்பறியேனென்றுவிட்டான்
காதநான்முகனாலுங்கணிப்பரியகலையனைத்துங்கதிரோன்முன்சென்
றோதினானேதநீர்கடந்துபகைகடிந்தலகையுய்யக்கொண்டான். (௧௦௫)

வேறு.

மாருதிவினையவார்த்தைசெவிமடுத்தமுதின்மாந்திப்
பேரறிவாளநன்றுநன்றெனப்பிறரைநோக்கிச்
சீரிதுமேலிம்மாற்றந்தெளிவுறத்தேர்மினென்ன
ஆரியனுரைப்பதானனைவருமதனைக்கேட்டார். (௧௦௬)

கருத்துறநோக்கிப்போந்தகாலமுநன்றுகாதல்
அருத்தியுமரசின்மேற்றேயறிவினுக்கவதியில்லை
பெருத்துயர்தவத்தினானும்பிழைப்பிலனென்னும்பெற்றி
திருத்தியதாகுமன்றேநம்மையேசேர்ந்தசெய்கை. (௧௦௭)

மற்றினியுரைப்பதில்லைமாருதிவடித்துச்சொன்ன
பெற்றியேபெற்றியன்னதன்றெனிற்பிறிதொன்றானும்
வெற்றியேபெறுகதோற்கவீகவீயாதுவாழ்க
பற்றுதலன்றியுண்டோபுகலெமைப்பகர்கின்றானை. (௧௦௮)

இன்றுவந்தானென்றுண்டோவெந்தையையாயைமுன்னைக்
கொன்றுவந்தானென்றுண்டோபுகலதுகூறுகின்றான்
தொன்றுவந்தன்புபேணுந்துணைவனுமவனேபின்னைப்
பின்றுமென்றாலுநம்பாற்புகழன்றிப்பிறிதுண்டாமோ. (௧0௯)

பிறந்தநாட்டொடங்கியாருந்துலைபுக்கபெரியோன்பெற்றி
மறந்தநாளுண்டேயென்னைச்சரணென்றுவாழ்கின்றானைத்
துறந்தநாட்கின்றுவந்துதுன்னினான்சூழ்ச்சியாலே
இறந்தநாளன்றேயென்றுமிருந்தநாளாவதென்றான். (௧௧0)

இடைந்தவர்க்கபயம்யாமென்றிருந்திரையெழினீர்வேலை
கடைந்தவர்க்காகியாலமுண்டவற்கண்டிலீரோ
உடைந்தவர்க்குதவானாயினுள்ளதொன்றீயானாயின்
அடைந்தவர்க்கருளானாயினறமென்னாமாண்மையென்னாம். (௧௧௧)

பேடையைப்பிடித்துத்தன்னைப்பிடிக்கவந்தடைந்தபேதை
வேடனுக்குதவிசெய்வான்விறகிடைவெந்தீமூட்டிப்
பாடுறுபசியைநோக்கித்தன்னுடல்கொடுத்தபைம்புள்
வீடுபெற்றுயர்ந்தவார்த்தைவேதத்தின்விழுமிதன்றே. (௧௧௨)

போதகமொன்றுகன்றியிடங்கர்மாப்பொருதபோரில்
ஆதியம்பரமேயானுன்புகலெனவழைத்தஞான்று
வேதமுமுடிவுகாணுமெய்ப்பொருள்வெளிவந்தெய்தி
மாதுயர்துடைத்தவார்த்தைமறப்பரோமறப்பிலாதார். (௧௧௩)

மன்னுயிரெல்லாந்தானேவருவித்துவளர்க்குமாயன்
தன்னனவுலகமெல்லாந்தருமமுமவையுந்தானே
என்னினுமடைந்தோர்தம்மையேமுறவினிதினோம்பிப்
பின்னும்வீடளிக்குமென்றாற்பிறிதொருசான்றுமுண்டே. (௧௧௪)

நஞ்சினைமிடற்றுள்வைத்தநகைமழுவாளனாலும்
தஞ்செனமுன்னுந்தானேதாதைபாற்கொடுத்துச்சாதல்
அஞ்சினேனபயமென்றவந்தணற்காகியந்நாள்
வெஞ்சினக்கூற்றைமாற்றுமேன்மையின்மேன்மையுண்டோ. (௧௧௫)

சரணெனக்கியார்கொலென்றுசானகியழுதுசாம்ப
அரணுனக்காவனஞ்சலஞ்சலென்றருளினெய்தி
முரணுடைக்கொடியோன்கொல்லமொய்யமர்முடிந்தவெந்தை
மரணமப்பெரியோன்பெற்றதென்வயின்வழக்கன்றாமோ. (௧௧௬)

உய்யலுற்றபயமென்றானுயிரைத்தன்னுயிரினோம்பாக்
கையனுமொருவன்செய்தவுதவியிற்கருத்திலானும்
ஐயறுமுறையினோக்கியருமறைவழக்கினின்ற
மெய்யினைப்பொய்யென்றானுமீள்கிலாநரகின்வீழ்வார். (௧௧௭)

சீதையைக்குறித்ததேயோதேவரைத்தீமைசெய்த
பேதையைக்கொல்வெனென்றுபேணியவிரதப்பெற்றி
வேதியர்சரணீயென்றார்க்கன்றுநான்விரித்துச்சொன்ன
காதையைக்குறித்துநின்றவவ்வுரைகடக்கலாமோ. (௧௮)

காரியமாகவன்றேயாருகக்கருணையோர்க்குச்
சீரியதன்மைநோக்கினிதனின்மேற்சிறந்ததுண்டோ
பூரியரேயுந்தம்மைப்புகல்புகுந்தார்க்குப்பொன்றா
ஆருயிர்கொடுத்துக்காத்தற்கெண்ணிலாவரசர்க்கென்னும். (௧௯)

ஆதலானபயமென்றபொழுதத்தேயபயதானம்
ஈதலேகடப்பாடென்பவியம்பினீரென்பால்வைத்த
காதலானினிவேறெண்ணக்கடவதென்கதிரோன்மைந்த
கோதிலாதானைநீயேயென்வயிற்கொணர்தியென்றான். (௧௨0)

ஐயுறவெல்லாந்தீருமளவையாயமைந்ததன்றே
தெய்வநாயகனதுள்ளந்தேறியவடைவேதேறிக்
கைபுகற்கமைவதானான்கடிதினிற்கொணர்வலென்று
மெய்யினுக்குறையுளானவொருவன்பால்விரைவிற்சென்றான். (௧௨௧)

வருகின்றகவியின்வேந்தைமயிந்தனுக்கிளையவள்ளல்
தருகென்றானண்ணனின்னையெதிர்கொளற்கருக்கன்றந்த
இருகுன்றமனையதோளானெய்தினனென்னலோடும்
திரிகின்றவுள்ளத்தானுமகமலர்ந்தவன்முன்சென்றான், (௧௨௨)

தொல்லருங்காலமெல்லாம்பழகினுந்தூயரல்லார்
புல்லலருள்ளந்தூயார்பொருந்துவதெதிர்ந்தஞான்றே
ஒல்லைவந்துணர்வுமொன்றாயிருவருமொருநாளுற்ற
எல்லியும்பகலும்போலத்தழுவினரெழுவுத்தோளார். (௧௨௩)

தழுவியநின்றகாலைத்தாமரைக்கண்ணன்றங்கள்
முழுமுதற்குலத்துக்கேற்றமுறைமையாலுவகைமூள
வழுவலிலபயமுன்பால்வழங்கினன்மலர்ப்பொற்பாதம்
தொழுதியால்விரைவினென்றுகதிரவன்சிறுவன்சொன்னான். (௧௨௪)

சிங்கவேறனையான்சொன்னவாசகஞ்செவிபுகாமுன்
கங்குலினிறத்தினன்றன்கண்மழைத்தாரைகான்ற
அங்கமுமனமதென்னக்குளிர்ந்ததவ்வகத்தைமிக்குப்
பொங்கியதுவ்வைகயென்னப்பொடித்தனவுரோமப்புள்ளி, (௧௨௫)

பஞ்செனச்சிவக்குமென்காற்றேவியைப்பிரித்தபாவி
வஞ்சனுக்கிளையவென்னைவருகவென்றருள்செய்தானோ
தஞ்செனக்கருதினானோதாழ்சடைக்கடவுளுண்ட
நஞ்செனச்சிறந்தேனன்றோநாயகனருளினாயேன். (௧௨௬)

மருளுறுமனத்தாலென்றன்வாய்மொழிமறுத்தான்வானத்
தருளுறுதேரினனுமிலங்கைமீதோடுமென்றே
தெருளுறுசிந்தைவந்ததேற்றமீதாயிற்செய்யும்
அருளிதுவாயிற்கேட்டேன்பிழைப்பரோவரக்கராயோர். (கஉஎ)

தீர்வருமன்னதீமைசெய்யினுஞ்செய்யசிந்தைப்
பேரறிவாளர்தத்தம்பெருமையிற்பிழைப்பதுண்டோ
கார்வரைநிறுவித்தன்னைக்கனலெழக்கலக்கக்கண்டும்
ஆர்கலியமரருய்யவமுதுபண்டுதவிற்றன்றே. (கஉஅ)

அறவியினுறவுபூண்டதூயவர்துணைவனென்னை
உறவுவந்தருளிமீளாவடைக்கலமுதவினனே
அறவினையிறையுமில்லாவறிவிலியரக்கனென்னும்
பிறவியைத்துறந்தேன்பின்னுநரகினிற்பிழைப்பதானேன். (கஉகூ)

திருத்தியவுணர்வுமிக்கசெங்கதிர்ச்செல்வன்செம்மல்
ஒருத்தனாநலனுந்தீங்குந்தெரினுமுயிரினேம்பும்
கருத்தினனன்றேதன்னைக்கழலடைந்தோரைக்காணும்
அருத்தியனமலன்றாழாதேகுதியறிஞவென்றான். (கஙo)

மொய்தவழ்கிரிகண்மற்றும்பலவுடன்முடுகிச்செல்ல
மைதவழ்கிரியுமேருக்குன்றமும்வருவதென்னச்
செய்தவம்பயந்தவீரர்திரண்மரமேழுந்தீய
எய்தவனிருந்தசூழலிருவருமெய்தச்சென்றார். (கஙக)

மாற்கடஞ்சூழ்ந்தவைப்பினங்கதன்மருங்குகாப்ப
நாற்கடலுடுத்தபாரினாயகன்புதல்வனுமப்
பாற்கடல்சுற்றவிற்கைவடவரைபாங்குநிற்பக்
கார்க்கடல்கமலம்பூத்ததெனப்பொலிவானைக்கண்டான். (கஙஉ)

அள்ளிமீதுலகைவீசுமரிகுலச்சேனைநாப்பண்
தள்ளருந்திரையிற்றுகிப்பிறிதொருதிறனுஞ்சாரா
வெள்ளிவெண்கடலின்மேனாள்விண்ணவர்தொழுதுவேண்டப்
பள்ளிதீர்ந்திருந்தானென்னப்பொலிதருபண்பினானை. (கஙங)

கோணுதற்கமைந்தகோலப்புருவம்போற்றிரையுங்கூடப்
பூணுதற்கரியமுத்திற்பொலிமணற்கானல்வைப்பின்
காணுதற்கரியநீளவெண்மையிற்கருமைகாட்ட
வாணுதற்சீதைகண்ணின்மணியெனவயங்குவானை. (கஙச)

படர்மழைசுமந்தகாலைப்பகர்வருமமரர்கோமான்
அடர்சிலைதுறந்ததென்னவாரந்தீர்மார்பினானைக்
கடர்கடைமத்துப்பாம்புகழற்றியதென்னக்காசின்
சுடரொளிவலயந்தீர்ந்தசுந்தரத்தோளினானை. (கஙரு)

கற்றைவெண்ணிலவுநீக்கிக்கருணையாலமுதங்காலும்
முற்றுறுகலையிற்றூயமுழுமதிமுகத்தினானைப்
பெற்றவன்பணித்தமோலியிளையவன்பெறத்தான்பெற்ற
சிற்றவைபணித்தமோலிபொலிகின்றசென்னியானை. (௧௩௬)

வீரனைநோக்கியங்கமென்மயிர்சிலிர்ப்பக்கண்ணீர்
வாரநெஞ்சுருகிச்செங்கணஞ்சனமலையன்றாகில்
கார்முகில்கமலம்பூத்ததன்றிவன்கண்ணன்கொல்லாம்
ஆரருள்சுரக்குநீதியறநிறங்கரிதோவென்றான். (௧௩௭)

மின்மினியொளியின்மாயும்பிறவியைவேரின்வாங்கச்
செம்மணிமகுடநீக்கித்திருவடிபுனைந்தசெல்வன்
தன்முனார்கமலத்தண்ணறாதையார்சரணந்தாழ
என்முனானெனக்குச்செய்தவுதவியென்றேம்பலுற்றான், (௧௩௮)

பெருந்தவமியற்றினார்க்கும்பேர்வரும்பிறவிநோய்க்கு
மருந்தெனநின்றான்றானேவடிக்கணைதொடுத்துக்கொல்வான்
இருந்தனனின்றதென்னாமியம்புவதில்லைதீர்ந்த
அருந்தவமுடையரம்மாவரக்கரென்றகத்துட்கொண்டான். (௧௩௯)

கரங்கண்மீச்சுமந்துசெல்லுங்கதிர்மணிமுடியன்கல்லும்
மரங்களுமுருகநோக்குங்காதலான்கருணைவள்ளல்
இரங்கினோனுக்குந்தோறுமிருநிலத்திறைஞ்சுகின்றான்
வரங்களின்வாரியன்னதாளிணைவந்துவீழ்ந்தான். (௧௪0)

அழிந்ததுபிறவியென்னுமகத்தியன்முகத்திற்காட்ட
வழிந்தகண்ணீரின்மண்ணின்மார்புறவணங்கினானைப்
பொழிந்ததோர்கருணைதன்னாற்புல்லினானென்றுதோன்ற
எழுந்தினிதிருத்தியென்னாமலர்க்கையாலிருக்கையீந்தான். (௧௪௧)

ஆழியானவனைநோக்கியருள்சுரந்தவகைகூர
ஏழினோடேழாய்நின்றவுலகுமென்பெயருமெந்நாள்
வாழுநாளன்றுகாறும்வாளெயிற்றரக்கர்வைகும்
தாழ்கடலிலங்கைச்செல்வநின்னதேதந்தேனென்றான். (௧௪௨)

தீர்த்தனதருளைநோக்கிச்செய்ததோசிறப்புப்பெற்றான்
கூர்த்தநல்லறத்தைநோக்கிக்குறித்ததோயாதுகொல்லோ
வார்த்தையதுரைத்தலோடுந்தனித்தனிவாழ்ந்தேமென்னா
ஆர்த்தனவுலகினுள்ளசராசரமனைத்துமம்மா. (௧௪௩)

உய்ஞ்சனேனடியனேனென்றாழ்முறைவணங்கிநின்ற
அஞ்சனமேனியானையழகனுமருளினோக்கித்
தஞ்சநற்றுணைவனானதவலிலாப்புகழான்றன்னை
அஞ்சலினயனத்தையசூட்டுதிமகுடமென்றான். (௧௪௪)

விளைவினையறியும்வென்றிவீடணனென்றும்வியா
அளவறுபெருமைச்செல்வமளித்தனையாயினைய
வளவியலரக்கன்பின்னேதோன்றியகடன்மைதீர
இளையவற்கவித்தமோலியென்னையுங்கவித்தியென்றான். (கசரு)

குகனொடுமைவரானோமுன்புபின்குன்றுசூழ்வான்
மகனொடுமறுவரானோமெம்முழையன்பின்வந்த
அகனமர்காதலையநின்னொடுமெழுவரானோம்
புகலருங்கானந்தந்துபுதல்வரிற்பொலிந்தானுந்தை. (கசசு)

நடுவினிப்பகர்வதென்னேநாயகனடியனேனை
உடனுதித்தவர்களேழோடொருவனென்றுரையாநின்றான்
அடிமையிற்சிறந்தேனென்னாவுயிர்ப்பொடுமெச்சநீங்கித்
தொடுகழற்செம்பொன்மௌலிசென்னியிற்சூட்டிக்கொண்டான் (கசஎ)

திருவடிமுடியிற்சூட்டிச்செங்கதிருச்சிசேர்ந்த
அருவரையென்னநின்றவரக்கர்தமரசைநோக்கி
இருவருமுவகைகூர்ந்தார்யாவருமின்பமுற்றார்
பொருவருமமரர்வாழ்த்திப்பூமழைபொழிவதானார். (கசஅ)

ஆர்த்தனபரவையேழுமேகமுமமரர்நாடும்
வார்த்தொழில்புணருந்தெய்வமங்கலமுரசுஞ்சங்கும்
தூர்த்தனகனகமாரிசொரிந்தனநறுமென்சுண்ணம்
போர்த்ததுவானத்தன்றங்கெழுந்ததோர்துழனிப்பொம்மல். (கசகூ)

மொழிந்தசொல்லமுதமன்னூடிறத்திறன்முறைமைநீங்கி
இழிந்தவென்மரபின்றேயுயர்ந்ததென்றேம்பலுற்றான்
செழுந்தனிமலரோனல்குயிராவணன்றீமைச்செல்வம்
அழிந்ததென்றறனுந்தன்வாயாவலங்கொட்டிற்றன்றே. (கரு0)

இன்னதோர்செவ்வித்தாகவிராமனுமிலங்கைவேந்தன்
தன்னெடுஞ்செல்வந்தானேபெற்றமைபலருங்கேட்பப்
பன்னெடுந்தானைசூழப்பகலவன்சேயுநீயும்
மன்னெடுங்குமரபாடிவீட்டினைவலஞ்செய்கென்றான். (கருக)

அந்தமில்குணத்தினானையடியிணைமுடியினோடும்
சந்தனவிமானமேற்றிவானரத்தலைவர்தாங்க
இந்திரற்குரியசெல்வம்பெற்றனனிவனென்றேத்தி
மந்தரத்தடந்தோள்வீரர்வலஞ்செய்தார்தானைவைப்பை. (கருஉ)

தேடுவார்தேடநின்றதிருவடிதானுந்தேடி
நாடுவானன்றுகண்டநான்முகன்கழீஇயநன்னீர்
ஆடுவார்பாவமைந்துநீக்கிமேலமரராவார்
சூடுவாரெய்துந்தன்மைசொல்லுவார்யாவர்கண்டீர். (கருங)

இற்றைநாளளவும்யாருமிருடியரிமையோர்ஞான
முற்றினாரன்புபூண்டார்வேள்விகண்முடித்துநின்றார்
மற்றுமாதவருமெல்லாம்வாளெயிற்றரக்கர்வேந்தன்
பெற்றதார்பெற்றாரொன்றுவியந்தனர்பெரியரெல்லாம். (௧௫௪)

வீடணனடைக்கலப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௯௧.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௫-வது — இலங்கைகேள்விப்படலம்.

வந்தடிவணங்கியநிருதர்மன்னவற்
கந்தமிலாததோருறையுளவ்வழித்
தந்தனன்விடுத்தபின்னிரவிதன்கதிர்
சிந்தனைவெய்யவென்றெண்ணித்தீர்ந்தனன். (௧)

சந்திவந்தனைத்தொழின்முடித்துத்தனனெடும்
புந்திநொந்திராமனுமுயிர்ப்பப்பூங்கணை
சிந்திவந்திறுத்தனன்மதனன்றீநிறத்
தந்திவந்திறுத்ததுகறுத்ததண்டமே. (௨)

மாத்தடந்திசைதொறும்வளைந்தவல்லிருள்
கோத்ததுகருங்கடல்கொள்ளைகொண்டென
நீத்தநீர்ப்பொய்கையினிறைந்தநாண்மலர்
பூத்தபோன்மீன்களாற்பொலிந்ததண்டமே. (௩)

சில்லியற்கோதையைநினைந்துதேம்பிய
வில்லியைத்திருமனம்வெதுப்பும்வெம்மையால்
அல்லியைக்காண்டலுமலர்ந்தவீட்டினால்
மல்லிகைக்கானமும்வானமொத்ததே. (௪)

ஒன்றுமுட்காய்வினையொடொளியின்வாளுரீஇத்
தன்றனிமுகத்தினாலென்னைத்தாழ்ந்தற
வென்றவடுணைவனையின்றுவெல்குவேன்
என்றதுபோலவந்தெழுந்ததிந்துவே. (௫)

கண்ணிணையப்புறங்கரந்துபோகினும்
பெண்ணிறமுண்டெனிற்பிடிப்பலீண்டென
உண்ணிறைநெடுங்கடலுலகமெங்கணும்
வெண்ணிறநிலவெனும்வலையைவீசினான். (௬)

படைக்கைவன்றிறையெடுத்தார்க்கும்போர்க்கடல்
உடைக்கருந்தன்னிறமொளித்துக்கொண்டவன்
அடைக்கவந்தானெனவரியின்றானையால்
இடைக்கவந்தானெனக்கிளர்ந்ததொத்ததே. (௭)

மேலுகத்தொகுதியான்முதிர்ந்தமெய்யெலாம்
தோலுகுத்தாலெனவரவத்தொல்கடல்
வாலுகத்தாலிடைபரந்தவைப்பெலாம்
பாலுகுத்தாலெனநிலவுபாய்ந்ததே. (அ)

மன்றல்வாய்மல்லிகையெயிற்றின்வண்டுணக்
கன்றியநீர்த்ததுநிலவின்கண்ணது
குன்றின்வாழ்முழைமயினிற்குலாயகோட்பது
தென்றலென்றொருபுலியுயிர்த்துச்சென்றதால். (கூ)

கரத்தொடும்பாழிமாக்கடல்கடைந்துளான்
உரத்தொடுங்காளுடுமுயரவோங்கிய
மரத்தொடுந்தொளைத்தவன்மார்பின்மன்மதன்
சரத்தொடும்பட்டனநிலவின்றாரைவாள். (க0)

உடலினைநோக்குமின்னுயிரைநோக்குமால்
இடரினைநோக்குமற்றியாதுநோக்கலன்
கடலினைநோக்குமக்கள்வன்வைகுறும்
திடரினைநோக்குந்தன்சிலையைநோக்குமால். (கக)

பணிபழுத்தமைந்தபூணல்குல்பண்பினல்
பிணிபழுத்தமைந்ததோர்பித்தினுள்ளத்தான்
அணிபழுத்தமைந்தமுத்தரும்புசெம்மணி
மணிபழுத்தமைந்தவாய்மறக்கவல்லனோ. (கஉ)

ஆயதோரளவையினருக்கன்மைந்தனீ
தேய்வதென்காரியமுடிக்குஞ்சிந்தையை
மேயவன்றன்றொடுமெண்ணிமேலினித்
தூயதுநினைக்கிலையென்னச்சொல்லினான். (கங)

அவ்வழியுணர்வுவந்தயர்வுநீங்கினான்
செவ்வழியறிஞனைக்கொணர்மின்சென்றென
இவ்வழிவருதியென்றியம்பவெய்தினான்
வெவ்வழிவிலங்கியநெறியைமேவினான். (கச)

ஆர்கலியிலங்கையினாணுமவ்வழி
வார்கெழுவனைகழலரக்கர்வன்மையும்
தார்கெழுதானையினளவுந்தன்மையும்
நீர்கெழுதன்மையாய்நிகழ்த்துவாயென்றான். (கரு)

எழுதலுமிருத்தியென்றிராமனேயினான்
முழுதுணர்புலவர்முன்முளரிக்கண்ணினான்
பழுதறவினவியபொருளைப்பண்பினல்
தொழுதுயர்கையினான்றெரியச்சொல்லினான். (கசு)

நிலையுடைவடவரைகுலையநேர்ந்ததன்
தலையெனவிளங்கியதமனியப்பெரு
மலையினைமும்முடிவாங்கியோங்குநீர்
அலைகடலிட்டனனநுமன்றாதையே. (கஎ)

ஏழுநூறியோசனையகலமிட்டகீழ்
ஆழநூறியோசனையாழிமால்வரை
வாழியாயுலகினைவளைந்தவண்ணமோ
சூழமாமதிலதுசுடர்க்குமேலதால். (கஅ)

மருங்குடைவினையமும்பொறியின்மாட்சியும்
இருங்கடியரணமும்பிறவுமெண்ணினால்
சுருங்கவென்பலசொலிற்சூழச்சுற்றிய
கருங்கடலகழதுநீருங்காண்டிரால். (கசு)

வடதிசைவயங்கொளிவாயில்வைகுவார்
இடையிலவொண்ணிருகோடியென்பரால்
கடையுகமுடிவினிற்காலனென்பதென்
விடைவருபாகனைப்பொருவுவெம்மையார். (உ0)

மேற்றிசைவாயிலின்வைகும்வெய்யவர்
ஏற்றமுமுளரவர்க்கிரண்டுகோடிமேல்
கூற்றையுங்கட்பொறிகுறுகக்காண்பரேல்
ஊற்றுறுகுருதியோடுயிருமுண்பரால். (உக)

தென்றிசைவாயிலின்வைகுந்தீயவர்
என்றவொண்ணிருகோடியென்பரால்
குன்றுறழ்நெடியவர்கொடுமைகூறியென்
வன்றிறல்யமனையுமரசுமாற்றுவார் (உஉ)

கீட்டிசைவாயிலின்வைகுங்கீழவர்
ஈட்டமுமெண்ணிருகோடியென்பரால்
கோட்டிருந்திசைநிலைக்கொம்புக்குன்றையும்
தாட்டுணைபிடித்துத்தாந்தரையினெற்றுவார். (உங)

விண்ணிடைவிழித்தனர்நிற்கும்வெய்யவர்
எண்ணிருகோடியினிரட்டியென்பரால்
மண்ணிடைவானவர்வருவரென்றவர்
கண்ணிலர்கனையிலர்கரந்துபோயினார். (உச)

பிறங்கியநெடுமதிற்பின்னுமுன்னரும்
உறங்கலருண்பதுமுலவையாமெனக்
கறங்கெனத்திரிபவர்கணக்குவேண்டுமேல்
அறைந்துளதையிருநூறுகோடியால். (உரு)

இப்படிமதிலொருமூன்றுவேறினி
ஒப்பரும்பெருமையையுரைக்கவேண்டுமோ
மெய்ப்பெருந்திருநகர்காக்கும்வெய்யவர்
முப்பதுகோடியின்மும்மைமுற்றினர். (உசு)

சிறப்பவன்செய்திடச்செல்வமுற்றினோர்
அறப்பெரும்பகைஞர்களளவிலாற்றலர்
உறத்தகும்பகைவரினுதவுமுண்மையர்
இறப்பிலரெண்ணவர்க்கேழுவெள்ளமால். (உஎ)

விடமலவிழியெனும்வெருளிக்கண்ணினர்
கடனலவிமைத்தலுமென்னுங்காவலர்
வடமலைபுரைவனகோயில்வாயிலின்
இடம்வலம்வருபவரெண்ணெண்கோடியால். (உஅ)

பேயனேனென்பலபிதற்றிப்பேர்த்தவண்
மாயிருஞாலத்துவைத்தமாப்படை
தேயினுநாளெலாந்தெரிக்கவேண்டுவ
தாயிரவெள்ளமென்றறிந்ததாழியாய். (உகூ)

அன்றியுமவன்மகன்கோயிலாய்மணி
முன்றினின்மாறினர்முறையின்வைகுவார்
ஒன்றிடினுலகையுமொடுக்குமூற்றத்தார்
குன்றினுநெடியவர்கோடிகோடியே. (௩0)

தேர்பதினாயிரபதுமஞ்செம்முகக்
கார்வரையவற்றினுக்கிரட்டிகால்வயத்
தார்பரியவற்றினுக்கிரட்டியொட்டகம்
ஏர்வருபுரவியினிரட்டியேயுமால். (௩க)

இலங்கையினரணிதுபடையினெண்ணிது
வலங்கையின்வாள்சிவன்கொடுக்கவாங்கிய
அலங்கலந்தோளவன்றுணைவரந்தமில்
வலங்களும்வரங்களுந்தவத்தின்வாய்த்தவர். (௩உ)

வேறு.

தும்பியீட்டமும்புரவியுமிரதமுந்தொடர்ந்த
அம்பொன்வாட்படையையிருகோடிகொண்டமைந்தான்
செம்பொனாட்டுளசித்தரைச்சிறையிடைவைத்தான்
கும்பனென்றுளனூழிவெங்காற்றினுங்கொடியான். (௩௩)

உகம்பல்காலமுந்தவஞ்செய்தபெருவரமுடையான்
சுகம்பல்போரலால்வேறிலன்பெரும்படைத்தொகையான்
நகம்பலென்றிவையில்லதோர்நரசிங்கமனையான்
அகம்பனென்றுளனலைகடல்பருகவுமமைவான். (௩௪)

பொருப்பைமீதிடும்பூட்கையும்புரவியுந்தேரும்
உருப்பவிற்படையொன்பதுகோடியுமுடையான்
செருப்பெய்வானிடைச்சினக்கடாய்கடாய்வந்துசெறுத்த
நெருப்பைவென்றவனிகும்பனென்றுளனொருநெடியோன். (௩௫)

பேயையாளியையானையைக்கழுதையைப்பிணித்த
ஆயதேர்ப்படையையிருகோடிகொண்டமைந்தான்
தாயையாயினுஞ்சலித்திடுவஞ்சனைதவிரா
மாயையானுளன்மகோதரனெனவொருமறவோன். (௩௬)

குன்றில்வாழ்பவர்கோடிநாலைந்தினுக்கிறைவன்
நின்றுளார்தமைநாளையிலாரெனவெயிற்றால்
தின்றுளானெடுந்தேவரைப்பன்முறைசெருவில்
வென்றுளானுளன்வேள்வியின்பகைஞனோர்வெய்யோன். (௩௭)

மண்ணுளாரையும்வானுளார்தம்மையும்வருத்தால்
உண்ணுநாளொருநாளினினொளிர்படைத்தானை
எண்ணினாலிருகோடியான்வெகுளியாலெரியும்
கண்ணுளானுளன்சூரியன்பகையென்றோர்கழலான். (௩௮)

தேவருந்தக்கமுனிவருந்திசைமுகன்முதலா
மூவரும்பக்கநோக்கியேமொழிதரமுனிவான்
தாவரும்பக்கமெண்ணிருகோடியின்றலைவன்
மாவரும்பக்கனென்றுளன்குன்றினும்வலியான். (௩௯)

உச்சிரத்தநுகதிரெனவுருத்தெரிமுகத்தான்
நச்சிரப்படைநாலிருகோடிக்குநாதன்
முச்சிரத்தயிற்றலைவற்கும்விலக்கருமொய்ம்பன்
வச்சிரத்தெயிற்றவனென்றோர்வன்மையனுளனால். (௪0)

அசஞ்சலப்படையையிருகோடியனமரில்
வசஞ்செயாதவன்றானன்றிப்பிறனிலாவலியோன்
இசைந்தவெஞ்சமத்தியக்கரைவேரொடுமுன்னாள்
பிசைந்துமோந்தவன்பிசாசனென்றுளனொருபித்தன். (௪௧)

சில்லிமாப்பெருந்தேரொடுகரிபரிசெறிந்த
வில்லிமாப்படையேழிருகோடிக்குவேந்தன்
கல்லின்மாப்படிகலக்குவன்கட்டெனக்காந்திச்
சொல்லுமாற்றலன்றுன்முகனென்றறந்துறந்தான். (௪௨)

இலங்கைநாட்டன்னவெறிகடற்றீவிடையுறையும்
அலங்கல்வேற்படையையிருகோடிக்குமரசன்
வலங்கொள்வாட்டொழில்விஞ்சையர்பெரும்புகழ்மறைத்தான்
விலங்குநாட்டவனென்றுளன்வெயிலுகவிழிப்பான். (௪௩)

நாமனுட்டியசவமெலாநாளென்றமொருவர்
ஈமநாட்டிடையிடாமற்றன்னெயிற்றிடையிடுவான்
தாமநாட்டியகொடிப்படைப்பதுமத்தின்றலைவன்
தூமநாட்டவனென்றுளன்றேவரைத்துரந்தான். (௪௪)

போரின்மத்தனும்பொருவருமத்தனுமுலவா
நீரின்மத்தனும்பெருமையார்நெடுங்கடற்படையார்
ஆருமத்தனைவலியுடையாரிலையவரால்
பேருமத்தனையெத்தனையுலகமும்பெரியோய். (௪௫)

இன்னதன்மையொத்தனையாயிரரொன்கேன்
அன்னவன்பெருந்துணைவராயமர்த்தொழிற்கமைந்தார்
சொன்னசொன்னவாபடைத்துணையிரட்டியின்றொகையான்
பின்னையெண்ணுவான்பிரகத்தனென்றொருபித்தன். (௪௬)

சேனைகாவலனிந்திரன்சிந்துரச்சென்னி
யானைகால்குலைந்தாழியோரோழும்விட்டசல
ஏனைவானவரிருக்கைவிட்டிரியலுற்றலையச்
சோனைமாரியிற்சுடுகணைபலமுறைதுரந்தான். (௪௭)

தம்பிமுப்பகற்சந்திரர்நால்வரிற்றயங்கும்
கும்பமாக்கரிகோடிருகைக்களால்வாங்கிச்
செம்பொன்மால்வரைமதம்பட்டதாமெனத்திரிந்தான்
கும்பகன்னனென்றுளன்பண்டுதேவரைக்குமைத்தான். (௪௮)

கோளிரண்டையுங்கொடுஞ்சிறைவைத்தவக்குமரன்
மூளும்வெஞ்சினத்திந்திரசித்தெனமொழிவான்
நாளுமிந்திரற்கன்னவன்பிணித்ததற்பின்னைத்
தாளுமார்பினுந்தோளினுமுளவினுந்தழும்பு. (௪௯)

தன்னையுந்தெறுந்தருமமென்றிறைமனந்தாழான்
முன்னவன்றரப்பெற்றதோர்முழுவலிச்சிலையன்
அன்னவன்றனக்கிளையவனப்பெயரொழித்தான்
பின்னொரிந்திரனிலாமையிற்பேரதிகாயன். (௫௰)

தேவராந்தகனராந்தகன்றிரிசிராவென்னும்
மூவராந்தகைமுதல்வராந்தலைவருமுனையில்
போவராந்தகையழிவராமெனத்தனிப்பொருவார்
ஆவராந்தகையிராவணற்கரும்பெறற்புதல்வர். (௫௧)

இனையதன்மையர்வலியஃதிராவணனென்னும்
அனையவன்றிறம்யானறியளவெலாமறைவென்
தனையனான்முகன்மகன்மகன்சிறுவனற்றவத்தால்
முனைவர்கோனவன்முக்கணான்வரத்தொடுமுயர்ந்தான். (௫௨)

எள்ளிலைப்பெரும்பூதமும்யாவையுஞ்சூழப்
புள்ளிமானுரியாடையனுமையொடுபுணர்ந்த
வெள்ளியம்பெருந்தடங்கிரிவேரொடும்வாங்கி
அள்ளிவிண்டொடவெடுத்தனனுலகெலாமனுங்க. (௫௩)

ஆன்றவெண்டிசையுலகெலாஞ்சுமக்கின்றவானை
ஊன்றுகோடிறத்திரள்புயத்தழுத்தியவொண்மை
தோன்றுமென்னவேதுணுக்கமுற்றிரிவரத்தொகுதி
மூன்றுகோடியின்மேலொருமுப்பத்துமூவர். (௫௪)

குலங்களோடுதங்குலமணிமுடியொடுங்குறைய
அலங்கல்வாள்கொடுகாலகேயரைக்கொன்றதற்பின்
இலங்கைவேந்தனென்றுரைத்தலுமிடியுண்டவரவின்
கலங்குமாலினுர்தானவர்தேவியர்கருப்பம். (௫௫)

குரண்டமாடுநீரளகையினொளித்துறைகுபேரன்
இரண்டுமாடுந்தனதிருவொடுநிதியமுமிழந்து
புரண்டுமான்றிரள்புலிகண்டதாமெனப்போனான்
இரண்டுமானமுமிலங்கைமாநகரமுமிழந்து. (௫௬)

புண்ணுஞ்செய்ததமுதுகெனப்புறங்கொடுத்தோடி
உண்ணுஞ்செய்கையிற்றசமுகக்கூற்றந்தன்னுயிர்மேல்
நண்ணுஞ்செய்கையதெனக்கொடுநாடொறுந்தன்னுள்
எண்ணுஞ்செய்கையனந்தகன்றன்பதமிழந்தான். (௫௭)

இருணன்காசறவெழுகதிரவனிற்கவென்றும்
அருணன்கண்களுங்கண்டிலாவிலங்கைபண்டமரில்
பருணன்றன்பெரும்பாசமும்பறிப்புண்டுபயத்தால்
வருணனுய்ந்தனன்மகரநீர்வெள்ளத்துமறைந்து. (௫௮)

என்றுலப்புறச்சொல்லுகேனிராவணனென்னும்
குன்றுலப்பினுமுலப்பிலாத்தோளினான்கொற்றம்
இன்றுலப்பினுநாளையேயுலப்பினுஞ்சிலநாள்
சென்றுலப்பினுமினக்கன்றிப்பிறர்க்கென்றுந்தீரான். (௫௯)

ஈடுபட்டவரெண்ணிலர்தோரணத்தெழுவால்
பாடுபட்டவர்படுகடன்மணலினும்பலரால்
சூடுப்பட்டதுகொடிநகரடுபுலிதுரந்த
ஆடுபட்டதேபட்டனராருமனலரக்கர். (௬௦)

எங்குலத்தவரெண்பதினாயிரரிறைவர்
கிங்கரப்பெயர்கிரியனதோற்றத்தர்கிளர்ந்தார்
வெங்கரத்தினுங்காலினும்வாலினும்வீக்கிச்
சங்கரற்கழிதிரிபுரத்தவரெனச்சமைந்தார். (௬௧)

வெம்புமாகடற்சேனைகொண்டெதிர்பொரவெகுண்டான்
அம்புமாயிரமாயிரமிவன்புயத்தழுத்தி
உம்பர்வானகத்தொருதனிநமனைச்சென்றுற்றான்
சம்புமாலியும்வில்லினற்சுருக்குண்டுதலைவ (௬௨)

சேனைக்காவலரோரைவருளர்பண்டுதேவர்
வானைக்காவலுமானமுமாற்றியமறவர்
தானைக்காற்கருங்கடலொடுந்தமரொடுந்தாமும்
ஆனைக்காற்பட்டசெல்லெனவொல்லெனவவிந்தார். (௬௩)

காய்த்தவக்கணத்தரக்கர்தமுடலுகுகறைத்தோல்
நீத்தசெக்கரினிறைந்துளகருங்கடனெருப்பின
வாய்த்தவக்கணைவரிசிலைமலையொடும்வாங்கித்
தேய்த்தவக்குழம்புலர்ந்திலவிலங்கையிற்றெருவில். (௬௪)

சொன்னமாமதிலிலங்கையின்பரப்பிதுதுகைத்துச்
சின்னமாயவர்கணக்கிலர்நீர்களேதெரிதிர்
இன்னம்யாருளர்வீரர்மற்றிவன்சுடவெரிந்த
அன்னமாநகரவிந்ததக்குருதியாலன்று. (௬௫)

விலங்கல்வெந்தவாவேறினிவிளம்புவதெவனோ
அலங்கலுறுசெஞ்சாந்தமுமன்றுதானணிந்த
கலங்களோடுமச்சார்த்தியதுகிலொடுங்கதிர்வாள்
இலங்கைவேந்தனுமேழுநாள்விசும்பிடையிருந்தான். (௬௬)

காந்துமானையிற்கரன்முதல்வீரருங்கவியின்
வேந்துமென்றிவர்விளிந்தவாகேட்டன்றுவிலங்கல்
தீந்தவாகண்டுமரக்கரைச்செருவிடைமுருக்கிப்
போந்தவாகண்டுநானிங்குப்புகுந்ததுபுகழோய் (௬௭)

நொதுமற்றிண்டிறலரக்கனதிலங்கையுறுவன்றேன்
அதுமற்றவ்வழியரணமும்பெருமையுமறைந்தேன்
இதுமற்றவ்வழியெய்தியதிராவணனேவப்
பதுமத்தண்ணலேபண்டுபோலந்நகர்படைத்தான். (௬௮)

கேள்கொண்மேன்மையான்கிளந்தவப்பொருளெலாங்கேட்டான்
வாள்கொளுக்கியைப்பாக்கியம்பழுத்தநன்மயிலை
நாள்கள்சாலவுநீங்கலினலங்கெடமெலிந்த
தோள்கள்வீங்கித்தன்றூதனைப்பார்த்திவைசொன்னான். (௬௯)

கூட்டினார்படைபாகத்தின்மேற்படக்கொன்றாய்
ஊட்டினாயெரியூர்முற்றுமினியக்கொன்றுளதோ
கேட்டவாற்றினக்கிளிமொழிச்சீதையைக்கிடைத்தும்
மீட்டிலாததென்விற்றொழில்காட்டக்கொல்வீர. (௭0)

நின்செய்தோள்வலிநிரம்பியவிலங்கையைநேர்ந்து
பின்செய்தேஞ்சிலவவையினிப்பீடின்றுபெறுமோ
பொன்செய்தோளிஞய்போர்ப்பெரும்படையொடும்புக்கேம்
என்செய்தமென்றுபெரும்புகழெய்துவாமிருந்தேம். (எக)

என்னதாக்கியவலியொடவ்விராவணன்வலியும்
உன்னதாக்கினைபாக்கியமுருக்கொண்டதொப்பாய்
முன்னதாக்கியமூவுலகாக்கியமுதலோன்
பின்னதாக்கியபதநினக்காக்கினேன்பெற்ருய். (எஉ)

என்றபோதினினெழுந்திருநிலனுறவிறைஞ்சி
ஒன்றும்பேசிலனுணர்ஞல்வணங்கியவுரவோன்
நின்றவானரத்தலைவருமாசுமங்கெடியோன்
வென்றிகேட்டன்றுவீடுபெற்றனரொனவியந்தார். (எங)

இலங்கைகேள்விப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௫௩௪.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

---

## ௬-வது-வருணனைவேண்டுகோட்படலம்.

தொடக்குமென்னினிவ்வுலகொருமூன்றையுந்தோளால்
அடக்கும்வண்ணமுமழித்தலுமொருபொருளன்ருல்
கிடக்கும்வண்ணவெங்கடலினைக்கிளர்பெருஞ்சேனை
கடக்கும்வண்ணமுமெண்ணுதியெண்ணுநூல்கற்ருேய். (க)

கரந்துநின்றநின்றன்மையையதுசெலக்கருதும்
பரந்ததுன்திருக்குலமுதற்றலைவராற்பரிவாய்
வரந்தரும்மிந்தமாக்கடல்படைசெலவ்ழிவே
திரந்துவேண்டுதியெறிதிரைப்பரவையையென்ருன். (உ)

நன்றிலங்கையர்நாயகன்மொழியெனநயந்தான்
ஒன்றுதன்பெருந்துணைவரும்புடைசெலவுரவோன்
சென்றுவேலையைச்சேர்தலும்விசும்பிடைச்சிவந்த
குன்றின்மேனின்றுகுதித்தனபகலவன்குதிரை. (ங)

கொழுங்கதிர்ப்பகைக்கோளிருணீங்கியகொள்கை
செழுஞ்சுடர்ப்பனிக்கலையெலாநிரம்பியதிங்கள்
புழுங்குவெஞ்சினத்தஞ்சனப்பொறிவரியரவம்
விழுங்கிநீங்கியதொத்ததுவேலைசூழ்ஞாலம். (ச)

தருணமங்கையைமீட்பதோர்நெறிதருகென்னும்
பொருணயந்துநன்னூனெறியடுக்கியபுல்லில்
கருணையங்கடறுயின்றனன்கருங்கடனோக்கி
வருணமந்திரம்விதிமுறையெண்ணினன்வணங்கி. (௫)

பூழிசென்றுதன்றிருவுருப்பொருந்தவும்பொறைதீர்
வாழிவெங்கதிர்மணிமுகம்வருடவும்வளர்ந்தான்
ஊழிசென்றனவொப்பதவ்வொருபகலவையோர்
ஏழுசென்றனவந்திலனெறிகடற்கிறைவன். (௬)

ஊற்றமீக்கொண்டவேலையானுண்டிலையென்னும்
மாற்றமீக்கவும்பெற்றிலம்யாமெனமனத்தால்
ஏற்றமீக்கொண்டபுனலிடையெரிமுளைத்தென்னச்
சீற்றமீக்கொண்டுசிவந்தனதாமரைச்செங்கண் (௭)

மாண்டவில்லிழந்தயருநாள்வழிதனைவணங்கி
வேண்டவில்லையென்றருளித்ததுபோன்மெனவெதும்பி
நீண்டவில்லுடைநெடுங்கடலுயிர்ப்பொடுநெடுநாண்
பூண்டவில்லெனக்குனித்தனன்கொழுங்கடைப்புருவம். (௮)

ஒன்றுவேண்டலராயினுமொருவர்பாலொருவர்
சென்றுவேண்டுவரேலவர்சிறுமையிற்றீரார்
இன்றுவேண்டியதெறிகடனெறிதனைமறுத்தால்
நன்றுநன்றெனநகையொடும்புகையுகநக்கான். (௯)

பாரநீங்கியசிலையினனிராவணன்பதிப்பத்
தாரநீங்கியதன்மையனுதலிற்றகைசால்
வீரநீங்கியமனிசனென்றிகழ்ச்சிமேல்விளைய
ஈரநீங்கியதெறிகடலாமெனவிசைத்தான் (௧௦)

புரந்துகோடலும்புகழொடுகோடலும்பொருது
துரந்துகோடலுமென்றிவைதொன்மையிற்றொடர்ந்த
இரந்துகோடலுளியற்கையுந்தருமமுமெஞ்சக்
கரந்துகோடலேநன்றினிநின்றதென்கழறி. (௧௧)

கானிடைப்புகுந்திருங்கனிகாயொடுநுகர்ந்த
ஊனுடைப்பொறையுடம்பினனென்றுகொண்டுணர்ந்த
மீனுடைக்கடற்பெருமையும்வில்லொடுநின்ற
மானுடச்சிறுதன்மையுங்காண்பரால்வானோர். (௧௨)

ஏதமஞ்சினானிரந்ததேயெண்மையென்றிகழ்ந்த
ஓதமஞ்சினேடிரண்டும்வெந்தொருபொடியாகப்
பூதமஞ்சும்வந்தஞ்சலித்துயிர்கொண்டுபொருமப்
பாதமஞ்சலர்செஞ்செவேபடர்வரொன்படைஞர். (௧௩)

மறுமைகண்டமெய்ஞ்ஞானியர்ஞாலத்துவரினும்
வெறுமைகண்டபின்யாவரும்யாரொனவிரும்பார்
குறுமைகண்டவர்கொழுங்கனலென்னினுங்கூசார்
சிறுமைகண்டவர்பெருமைகண்டல்லதுதேரார். (௧௪)

இருதியென்பதோன்றிழிதரவூழியிற்சினவும்
பரிதிமணடிலமெனப்பொலிமுகத்தினன்பலகால்
தருதிவில்லெனுமளவையிற்றம்பியும்வெம்பிக்
குருதிவெங்கனலுமிழ்கின்றகண்ணினன்கொடுத்தான். (௧௫)

வாங்கிவெஞ்சிலைவாளியின்மற்றொருவேலை
வீங்குதோள்வலம்வீக்கினன்கோதையைவிரலால்
தாங்கிநாணினைத்தாக்கினன்றுங்கியதமரம்
ஓங்குமுக்கணன்றேவியைத்தீர்த்துளதுடல். (௧௬)

மாரியின்பெருந்துளியினும்வரம்பிலவடித்த
சீரியென்றவையெவற்றினுஞ்சீரியதெரிந்து
பாரியங்கிரும்புனலெலாமுடிவினிற்பருகும்
சூரியன்கதிரனையனசுடுசரந்துரந்தான். (௧௭)

பெரியமால்வரையேழினும்பெருவலிபெற்று
வரிகொள்வெஞ்சிலைவளர்பிறையாமெனவாங்கித்
திரிவநிற்பனயாவையுமுடிவினிற்றீக்கும்
எரியின்மும்மடிகொடியனசுடுசரமெய்தான் (௧௮)

மீனுநாகமும்விண்டொடுமலைகளும்விறகாய்
ஏனைநிற்பனயாவையுமேலெரியெய்தப்
பேனநீர்நெடுநெய்யெனப்பெய்கணைநெருப்பால்
கூனையங்கியின்குண்டமொத்ததுகடற்குட்டம். (௧௯)

பாழிவன்னெடுங்கொடுஞ்சிலைவழங்கியபகழி
ஏழுவேலையுமெரியொடுபுகைமடுத்தேகி
ஊழிவெங்கனற்கொழுந்துகளுருத்தெழுந்தோடி
ஆழிமால்வரைக்கப்புறத்திருளையுமவித்த. (௨௦)

மருமதாரையினெரியுண்டமகரங்கண்மயங்கிச்
செருமவானிடைக்கற்பகமரங்களுந்தீய
நிருமியாவிட்டநெடுங்கணைபாய்தலினெருப்போ
டுருமுவீழ்ந்தெனச்சென்றனகடற்றுளியும்பர். (௨௧)

கூடும்வெம்பொறிக்கொடுங்கனறொடர்ந்தனகொளுந்த
ஓடுமேகங்கள்பொரிந்திடையுதிர்ந்தனவும்பர்
ஆடுமங்கையர்கருங்குழல்விளர்த்தனவளக்கர்
கோடுதீந்தெழக்கொடும்புகைப்பிழம்புமீக்கொள்ள (௨௨)

நிமிர்ந்தசெஞ்சரநிறந்தொறும்படுதலுநெய்த்தோர்
உமிழ்ந்துலந்தனமகரங்களுலப்பிலவுருவத்
துமிந்ததுண்டமும்பலபடத்துரந்தனதொடர்ந்து
திமிங்கிலங்களுந்திமிங்கிலகிலங்களுஞ்சிதறி. (௨௩)

நீறுமீச்செலநெருப்பெழப்பொருப்பெலாமெரிய
நூறுமாயிரகோடியுங்கடுங்கணைநுழைய
ஆறுகீழ்ப்படவளறுபட்டழுந்தியவளக்கர்
சேறுதீந்தெழக்காந்தினசேடன்றன்சிரங்கள். (௨௪)

மொய்த்தமீன்குலமுதலறமுருக்கினமொழியில்
பொய்த்தசான்றவன்குலமெனப்பொருகணையெரிய
உய்த்தகூம்புடைநெடுங்கலமோடுவகடுப்பத்
தைத்தவம்பொடுந்திரிந்தனசாலமீன்சாலம். (௨௫)

சிந்தியோடியகுருதிவெங்கனல்களேசெறிய
அந்திவானகங்கடுத்ததவ்வளப்பருமளக்கர்
பந்திபந்தியவாய்நெடுங்கடுங்கணைபடர
வெந்துதீந்தனகரிந்தனபொரிந்தனசிலமீன். (௨௬)

வையநாயகன்வடிக்கணைகுடித்திடவற்றி
ஐயநீருடைத்தாய்மருங்கருங்கனன்மண்டக்
கைகலந்தெரிகருங்கடல்காரகல்கடுப்ப
வெய்யநெய்யிடைவேவனவொத்தனசிலமீன். (௨௭)

குணிப்பருங்கொடும்பகழிகள்குருதிவாய்மடுப்பக்
கணிப்பரும்புனல்கடையுறக்குடித்தலிற்கார்ந்து
மணிப்பருந்தடங்குப்பைகண்மறிகடல்வெந்து
தணிப்பருந்தழல்சொரிந்தனபோன்றனதயங்கி. (௨௮)

எங்கும்வெள்ளிடைபடுத்தலினிழுதுடையினமீன்
சங்கமுங்கறிக்கிழங்கெனவிடையிடைத்தழுவி
அங்கம்வெந்துபேரளத்திடையடுக்கியகிடந்த
பொங்குநன்னெடும்புனலறப்பொரித்தனபோன்ற. (௨௯)

அதிரும்வெங்கணையொன்றையொன்றடர்ந்தெரியுய்ப்ப
வெதிரின்வன்னெடுங்கானெனவெந்தனமீனம்
பொதுவின்மன்னுயிர்க்குலங்களுந்துணிந்தனபொழிந்த
உதிரமுங்கடற்றிரைகளும்பொருவனவொருபால். (௩௦)

அண்ணல்வெங்கணையறுத்திடத்தெறித்தெழுந்தளக்கர்
பண்ணைவெம்புனல்படப்படநெருப்பொடும்பற்றி
மண்ணில்வேருறப்பற்றியநெடுமரமற்றும்
எண்ணெய்தோய்ந்தெனவெரிந்தனகிரிக்குலமெல்லாம். (௩௧)

தெய்வநாயகன்றெரிகணைதிசைமுகத்தொருவன்
வையினுமெனப்பிழைப்பிலமனத்தினுங்கடுக
வெய்யவந்நெருப்பிடையிடைப்பொறித்தெழவெறிநீர்ப்
பொய்கைதாமரைபூத்தெனப்பொலிந்தனபுணரி. (௩௨)

செப்பின்மேலவர்சிதினுமதுசிறப்பாதல்
தப்புமேயதுகண்டனமுவரியிற்றணியா
உப்புவேலையென்றுலகுறுபெரும்பழிநீங்கி
அப்புவேலையாய்நிறைந்ததுகுறைந்ததோவளக்கர். (௩௩)

தாரையுண்டபேரண்டங்களடங்கலுந்தானே
வாரியுண்டருள்செய்தவற்கிதுவொருவலியோ
பாரையுண்பதுபடர்புனலப்பெரும்பரவை
நீரையுண்பதுநெருப்பெனுமப்பொருணிறுத்தான். (௩௪)

வேறு.

மங்கலம்பொருந்தியதவத்துமாதவர்
கங்குலும்பகலுமக்கடலுள்வைகுவார்
அங்கம்வெந்திலரவனடிகளெண்ணலால்
பொங்குவெங்கனலெனும்புனலிற்போயினார். (௩௫)

தென்றிசைகுடதிசைமுதலதிக்கெல்லாம்
துன்றியபெரும்புகைப்படலஞ்சுற்றலால்
கன்றியநிறத்தனகதிரவன்பரி
நின்றனசென்றிலநெறியினீங்கின. (௩௬)

பிறிந்தவர்க்குறுபொருளுணரும்பெற்றியோர்
அறிந்திருந்தறிந்திலரனையராமெனச்
செறிந்ததம்பெடைகளைத்தேடித்தீக்கொள
மறிந்தனகரிந்தனவானப்புள்ளெலாம். (௩௭)

கமையறுகருங்கடல்கனலிகைபரந்
தமைவனவொத்தபோதறையவேண்டுமோ
சுமையுறுபெரும்புகைப்படலஞ்சுற்றலால்
இமையவரிமைத்தனர்வியர்ப்புமெய்தினார். (௩௮)

பூச்செலாதவணடைபோல்கிலாமையால்
ஏச்செலாமெய்தியவன்னம்யாவையும்
தீச்செலாநெறிபிறிதின்மையாற்றிசை
மீச்செலாப்புனலவன்புகழின்வீழ்ந்தால். (௩௯)

பம்புறுநெடுங்கடற்பறவையாவையும்
உம்பரிற்செல்லலுற்றுருகிவீழ்ந்தன
அம்பரமம்பரத்தேகலாற்றல
இம்பரினுதிர்ந்தனவெரியுமெய்யன. (௪௦)

பட்டனபடப்படப்படாதபுட்குலம்
சுட்டுவந்தெரிக்குலப்படலஞ்சுற்றலால்
இட்டுழியறிகிலவிரியல்போவன
முட்டையென்றெடுத்தனகடுத்தமுத்தெலாம். (௪௧)

வள்ளலைப்பாவிகாண்மனிசனென்றுகொண்
டெள்ளலுற்றறைந்தனமெண்ணிலாமெனா
வெள்ளிவெண்பற்களைக்கிழித்துவிண்ணுறத்
துள்ளலுற்றிரிந்தனகுரங்குசூழ்நதில. (௪௨)

தாநெடுந்தீமைகளுடையதன்மையார்
மாநெடுங்கடலிடைமறைந்துவைகுவார்
தூநெடுங்குருதிவேலவுணர்துஞ்சினார்
மீநெடுங்கிரியெனமிதந்துவீங்கினார். (௪௩)

தசும்பிடைவிரிந்தனவெண்ணுந்தாரைய
பசும்பொனின்விமாநங்களுருகிப்பாய்ந்தன
அசும்பறவறந்தனவானவாறெலாம்
விசும்பிடைவிளங்கியமீனும்வெந்தவால். (௪௪)

செறிவுறுசெம்மையதீயையோம்புவ
நெறியுறுசெலவினதவத்தினீண்டன
உறுசினமுறப்பலவுருவுகொண்டன
குறுமுனியெனக்கடல்குடித்தகூர்ங்கணை. (௪௫)

மோதலங்கனைகடன்முழங்கத்தீயினால்
பூதலங்காவொடுமெரிந்தபொன்மதில்
வேதலுமிலங்கையுமீளப்போயின
ஆதன்வந்தானெனத்துணுக்கங்கொண்டதால். (௪௬)

அருக்கனிலொளிவிடுமாடகக்கிரி
உருக்கெனவுருகியவுதிரந்தோய்ந்தன
முருக்கெனச்சிவந்தனமுரியவெந்தன
கரிக்குவைநிகர்த்தனபவளக்காடெலாம். (௪௭)

பேருடைக்கிரியெனப்பெருத்தமீன்களும்
ஓரிடத்துயிர்தரித்தொதுங்ககிற்றில
நீரிடைப்புகுஞ்சிலநெருப்புநன்றெனாப்
பாரிடைக்குதித்தனபதைக்குமெய்யன. (௪௮)

சுருள்கடற்றிரைகளைத்தொலையவுண்டனல்
பருகிடப்புனலிலபகழிபாரிடம்
மருள்கொளப்படர்நெடுநாகர்வைப்பையும்
இருள்கெடச்சென்றனவிரவிபோல்வன. (௪௯)

கரும்புறக்கடல்களோடுலகங்காய்ச்சிய
இரும்புறச்செல்வனவிழிவகீழுற
அரும்புறத்தண்டத்தையுருவியப்புறம்
பெரும்புறக்கடலையுந்தொடர்ந்துபின்செல்வ. (௫0)

திடறிறந்தருமணித்திரள்கள்சேணிலம்
உடறிறந்துதிரம்வந்துகுவபோன்றன
கடறிறந்தெங்கணும்வற்றவக்கடல்
குடறிறந்தனவெனக்கிடந்தகோளரா. (ருக)

ஆழியிற்புனலறமணிகளட்டிய
பேழையிற்பொலிந்தனபரவைபேறுறப்
பூழையிற்பொருகணையுருவப்புக்கன
மூழையிற்பொலிந்தனமுரலும்வெள்வளை. (ருஉ)

நின்றுநூறாயிரம்பகழிநீட்டலால்
குன்றுநூறாயிரங்கோடியாயின
சென்றுதேய்வுறுவரோபுலவர்சிறினும்
ஒன்றுநூறாயினவுவரிமுத்தெலாம். (ருரு)

சுடுபெற்றையனேதொலைக்குமன்னுயிர்
வீடுபெற்றனவிடைமிடைந்தவேணுவின்
காடுபற்றியபெருங்கனலிகைபரந்
தோடியுற்றதுநெருப்புவரிநீரெலாம். (ருச)

காலவான்கடுங்கணைசுற்றுங்கவ்வலால்
நீலவான்றுகிலினைநீக்கிப்பூநிறக்
கோலவான்களிநெடுங்கூறைசுற்றினாள்
போலமாநிலமகள்பொலிந்துதோன்றினாள். (ருரு)

கற்றவர்கற்றவருணர்வுகாண்கிலாக்
கொற்றவன்படைக்கலங்குடித்தவேலைவிட்
டுற்றுயிர்படைத்தெழுந்தோடவுற்றதால்
மற்றொருகடல்புகவடவைத்தீயரோ. (ருசா)

வாழியருலகினைவளைத்துவானுறச்
சூழிரும்பெருஞ்சுடர்ப்பிழம்புதோன்றலால்
ஊழியினுலகெலாமுண்ணவோங்கிய
ஆழியிற்பொலிந்ததவ்வாழியன்னநாள். (ருஎ)

ஏனையவொன்னவேறுலகினீண்டினார்
ஆனவர்செய்தனவறையல்வேண்டுமோ
மேனிமிர்ந்தெழுகனல்வெதுப்பமீதுபோய்
வானவர்மலரயனுலகின்வைகினார். (ருஅ)

இடுக்கினியியம்புவதென்னையிவ்வழி
முடுக்குவென்வருணனையென்னமூண்டெழு
தடுக்கரும்வெகுளியான்சதுமுகன்படை
தொடுத்தனனமரருந்துணுக்கமெய்தினார். (ருகூ)

மழைக்குலங்கதறினவருணன்வாய்புலர்ந்
தழைத்தனனுலகமுமடைத்தவாறெலாம்
இழைத்தனநெடுந்திசையாதும்யாரினிப்
பிழைப்பிலவென்பதோர்பெரும்பயத்தினால். (கூ0)

வேறு.

அண்டமூலத்துக்கப்பாலாழியுங்கொதித்ததேழு
தெண்டிரைக்கடலின்செய்கைசெப்பியென்றேவன்சென்னிப்
பண்டைநாளிருந்தகங்கைநங்கையும்பதைத்தாள்பார்ப்பான்
குண்டிகையிருந்தநீருங்கொளகொளகொதித்ததன்றே. (கூக)

இரக்கம்வந்தெதிர்ந்தகாலத்துலகெலாமீன்றுமீளக்
கரக்குநாயகனைத்தானுமுணர்ந்திலன்சீற்றங்கண்டும்
வரக்கருதாதுதாழ்த்தவருணனின்மாறுகொண்டார்
அரக்கரோயல்லவொன்றுவறிஞருமலக்கணுற்றார். (கூ௨)

உற்றொருதனியேதானேதன்கணேயுலகமெல்லாம்
பெற்றவன்முனியப்புக்கானடுவினிப்பிழைப்பதெங்ஙன்
குற்றமொன்றிலாதோர்மேலுங்கோள்வரக்குறுகுமென்று
மற்றையபூதமெல்லாம்வருணனைவைதமாதோ. (கூ௩)

எழுசுடர்ப்படலையோடுமிரும்புகைநிரம்பியெங்கும்
வழிதெரிவறிவிலாதநோக்கினன்வருணனென்பான்
அழுதழிகண்ணினன்பாலுருகியநெஞ்சினஞ்சித்
தொழுதெழுகையனுய்திற்றேற்றினன்வழுத்துஞ்சொல்லான். (கூ௪)

நீயெனைநினைந்ததன்மைநெடுங்கடன்முடிவினின்றேன்
ஆயினேனறிந்திலேனென்றண்ணலுக்கயிர்ப்புநீங்கக்
காயெரிப்படலைசூழ்ந்தகருங்கடற்றரங்கத்தூடே
தீயிடைநடப்பான்போலச்செறிபுனற்கிறைவன்சென்றான். (கூ௫)

வந்தனனென்பமன்னோமறிகடற்கிறைவன்வாயில்
சிந்தியமொழியன்றீந்தசென்னியன்றிகைத்தநெஞ்சன்
வெந்தழிந்துருகுமெய்யன்விழும்புகைப்படலம்விம்ம
அந்தரினலம்வந்தஞ்சித்துயருழந்தலக்கணுற்றான். (கூகூ)

நவையறுமுலகிற்கெல்லாநாயகநீயேசீறின்
கவையநின்சரணமல்லாற்பிறிதொன்றுகண்டதுண்டோ
இவையுனக்கரியவோதானெனக்கெனவலிவேறுண்டோ
அவையநின்னவையமென்றுவடுத்தடுத்தரற்றலுற்றான். (கூஎ)

ஆழிநீயனலுநீயேயல்லவையெல்லாநீயே
ஊழிநீயுலகுநீயேயவற்றுறையுயிருநீயே
வாழியாயடியேனின்னைமறப்பனோவயங்குசெந்தீச்
சூழுறவுலைந்துபோனேன்காத்தருள்சுருதிமூர்த்தி. (கூஅ)

காட்டுவாயுலகங்காட்டிக்காத்தவைகடையிற்செந்தீ
ஊட்டுவாயுண்பாய்நீயேயுனக்குமொண்ணுததுண்டோ
தீட்டுவான்பகழியொன்ருலுலகங்களனைத்துந்தீய
வீட்டுவானிவனையினுயேற்கித்தனைவேண்டுமோதான். (சுக)

சண்டவான்கிரணவாளாற்றயங்கிருட்காடுசாய்க்கும்
மண்டிலத்துறையுஞ்சோதிவள்ளலேமறையின்வாழ்வே
பண்டைநான்முகனேயாதிசராசரத்துள்ளப்பள்ளப்
புண்டரிகத்துவைகும்புராதனுபோற்றிபோற்றி. (எ0)

கள்ளமாயுலகங்கொள்ளுங்கருணையான்மறையிற்கூறும்
எள்ளலாகாதமூலத்தியாதுக்குமுதலாயுள்ள
வள்ளலேகாத்தியென்றமாகரிவருத்தந்தீரப்
புள்ளின்மேல்வந்துதோன்றும்புராதனுபோற்றிபோற்றி. (எக)

அன்னைநீயத்தனீயேயல்லவையெல்லாநீயே
பின்னுநீமுன்னுநீயேபேறுநீயிகழ்வுநீயே
என்னைநீயிகழ்ந்ததென்றதெங்ஙனேயீசனுய
உன்னைநீயுணராய்நாயேனெங்ஙனமுணர்வேனுன்னை. (எஉ)

பாயிருள்சீக்குந்தெய்வப்பரிதியைப்பழிக்குமாலை
மாயிருங்கரத்தான்மண்மேலடியுறையாகவைத்துத்
தீயனசிறியோர்செய்தாற்பொறுப்பதுபெரியோர்மேற்றே
ஆயிரநாமத்தையாசரணமென்றடியின்வீழ்ந்தான். (எங)

பருப்பதம்வேவதென்னப்படரொளிபடரநின்ற
உருப்பெறக்காட்டிநின்றினுனக்கவயமென்ன
அருப்பறப்பிறந்தகோபமாறினுனுருவாற்ற
னெருப்புறப்பொங்குவெம்பானீருற்றதன்னநீரான். (எச)

ஆறினுமஞ்சலுன்பாலளித்தனமவயமன்பால்
ஈறிலாவணக்கஞ்செய்தியாமிரந்திடவெய்தாதே
சீறுமாகண்டுவந்ததிறத்தினைத்தெரிவதாகக்
கூறுநீயறியவென்முன்வருணனுந்தொழுதுகூறும். (எரு)

பார்த்தனிற்பொறையின்மிக்கபத்தினிக்குற்றபண்பு
வார்த்தையினறிந்ததல்லாற்றெவ்வர்பால்வந்திலேனுல்
தீர்த்தநின்னுணையேழாஞ்செறிதிரைக்கடலின்மீனின்
போர்த்தொழில்விலக்குவான்சென்றறிந்திலன்புகுந்ததொன்றும். (எசு)

என்றலுமிரங்கியையனித்திறநிற்கவிந்தப்
பொன்றவில்பகழிக்கிப்பாலிலக்கமென்புகறியென்ன
நன்றெனவருணன்யானுமுலகமுநலிவுதீர்ந்தாம்
குன்றெனவுயர்ந்ததோளாய்கூறுவலென்றுகூறும். (எஎ)

மன்னவமருகாந்தாரமென்பதோர்தீவின்வாழ்வார்,
அன்னவர்சதகோடிக்குமேலுளாரவுணராயோர்
தின்னவேயுலகமெல்லாந்தீர்ந்தனவெனக்குந்தீயார்
மின்னுமிழ்கணையைவெய்யோர்மேற்செலவிடுதியென்றான். (எஅ)

நேடிநூறெறிந்துளோர்க்குமுணர்விற்குநிமிரநின்றோன்
கோடிநூறாயதீயவவுணரைக்குலங்களோடும்
ஓடிநூறென்றுவிட்டானோரிமையொடுங்காமுன்னர்ப்
பாடிநூறாகநூறிமீண்டதப்பகழித்தெய்வம். (எகூ)

ஆய்வினையுடையராகியறம்பிழையாதார்க்கெல்லாம்
நோய்வனநலனேயன்றியிறுதிவந்தடைவதுண்டோ
மாய்வினையியற்றிமுற்றும்வருணன்மேல்வந்தசீற்றம்
தீவினையுடையார்மாட்டேதீங்கினைச்செய்ததன்றே. (அ0)

பாவமேயியற்றினாரைப்பன்னெடுங்காதமோடித்
தூவமேபெருகும்வண்ணமெரியெழச்சுட்டதன்றே
தேவமேயனையஞானத்திருமறைமுனிவர்செப்பும்
சாவமேயொத்ததம்புதருமமேவலியதம்மா. (அக)

மொழியுனக்கவயமென்றாயாதலான்முனிவுதீர்ந்தேம்
பழியெமக்காகுமென்றுபாதகர்பரவையென்னும்
குழியினைக்கருதிச்செய்தகுமண்டையைக்குறித்துநீங்க
வழியினைத்தருதியென்றான்வருணனைநோக்கிவள்ளல். (அஉ)

ஆழமுமகலந்தானுமளப்பரிதெனக்குமைய
ஏழெனவடுக்கிநின்றவுலகுக்குமெல்லையில்லை
வாழியாய்வற்றிநீங்கின்வரம்பிலகாலமெல்லாம்
தாழுநின்சேனையுள்ளந்தளர்வுறுந்தவத்தின்மேலோய். (அங)

கல்லெனவலித்துநிற்பிற்கணக்கிலவுயிர்களெல்லாம்
ஒல்லையினுலந்துவீயுமிட்டதொன்றொழுகாவண்ணம்
எல்லையில்காலமெல்லாமேந்துவெனெளிதினெந்தாய்
செல்லுதிசேதுவென்றான்றீத்தியேன்சிரத்தின்மேலாய். (அச)

நன்றிதுபுரிதுமன்றேநளிர்கடற்பெருமைநம்பால்
இன்றிதுதீருமென்னினெளிவரும்பூதமெல்லாம்
குன்றுகொண்டடுக்கிச்சேதுகுயிற்றுதியொன்றுகூறிச்
சென்றனனிருக்கைநோக்கிவருணனுமருளிற்சென்றான். (அரு)

வருணனைவேண்டுகோட்படலம்முற்றிற்று. ஆ-திருவிருத்தம்-கூகக.



கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௬-வது. சேதுபந்தனப்படலம்.

அளவருமறிஞரோடரக்கர்கோமகற்
கிளவலுமினிதுடனிருக்கவெண்ணினான்
விளைவனசெய்வனமுடிக்கவேண்டுவான்
நளன்வருகென்றனன்கவிக்குநாயகன். (௧)

வந்தனன்வானரத்தச்சன்மன்னநின்
சிந்தனையென்னெனச்செறிதிரைக்கடல்
பந்தனைசெய்குதல்பணிநமக்கென
நிந்தனையிலாதவன்செய்யநேர்ந்தனன். (௨)

காரியங்கடறனையடைத்துக்கட்டலே
சூரியன்காதலேசொல்லியென்பல
மேருவுமணுவுமோர்வேறுருவகை
ஏர்வுறவியற்றுவென்கொணர்தியென்றனன். (௩)

இளவலுமிறைவனுமிலங்கைவேந்தனும்
அளவறுநங்குலத்தரசுமல்லவர்
வளைதருகருங்கடலணைக்கவம்மெனத்
தளமலிசேனையைச்சாம்பன்சாற்றினான். (௪)

கருவரைகாதங்கள்கணக்கிலாதன
இருகையிற்றோள்களிற்சென்னியேந்தின
ஒருகடலடைக்கமற்றெழுந்தவேலைகள்
வருவனவாமெனவந்தவானரம். (௫)

பேர்த்தனமலைசிலபேர்க்கப்பேர்க்கநின்
றீர்த்தனசிலசிலசென்னியேந்தின
தூர்த்தனசிலசிலதூர்க்கத்தூர்க்கநின்
றார்த்தனசிலசிலவாடிப்பாடின. (௬)

காலிடையொருமலையுருட்டிக்கைகளின்
மேலுடைமலையினைவாங்கிவிண்டொடும்
சூலிடைமழைமுகில்சூழ்ந்துசுற்றிய
வாலிடையொருமலையீர்த்துவந்தவால். (௭)

முடிக்கினன்றருகெனமூன்றுகோடியர்
எடுக்கினுமம்மலையொருகையேந்தியிட்
டடுக்கினன்றன்வலிகாட்டியாழியை
நடுக்கினனளனெனுநவையினீங்கினான். (௮)

மஞ்சினிற்றிகழ்தருமலையைமாக்குரங்
கெஞ்சுறக்கடிதெடுத்தெறியவேநளன்
விஞ்சையிற்றாங்கினன்சடையன்வெண்ணெயில்
தஞ்சமென்றோர்களைத்தாங்குந்தன்மைபோல். (௯)

சயக்கவிப்பெரும்படைத்தலைவர்தாள்களால்
முயற்கறைமதிதவழ்முன்றிற்குன்றுகள்
அயக்கலின்முகிற்கணமலறியோடின
இயக்கருமகளிருமிரியல்போயினர். (கo)

வேருடைநெடுங்கிரிதலைவர்வீசுவ
ஓரிடத்தொன்றின்மேலொன்றுசென்றுக
நீரிடைமிமிர்பொறிபிறக்கநீண்டவீ
தாருடைநெருப்பெனவருணனஞ்சுவான். (கக)

ஆநிறக்கண்ணனென்றொருவனங்கையால்
கானிறமலைகொணர்ந்தெறியக்கார்க்கடல்
தூநிறமுத்தினந்துவலையோடுபோய்
வானிறைமீனொடுமாறுகொண்டவே. (கஉ)

சிந்துரத்தடவரையெறியச்சேணிடை
முந்துறத்தெறித்தெழுமுத்தநதோற்றலால்
அந்தரத்தெழுமுகிலாடையாவகன்
பந்தரொத்ததுநெடும்பரிதிவானமே. (கங)

வேணுவினெடுவரைவீசமீமிசை
சேணுறுதிவலையானனைந்தசெந்துகில்
பூணுறுமல்குலிற்பொருந்திப்போகலால்
நாணினர்வானவர்நாட்டுநங்கைமார். (கச)

தேனிவர்தடவரைதிரைக்கருங்கடல்
தானிமிர்தரவிடைகுவியத்தள்ளுநீர்
மேனிமிர்திவலைமீச்சென்றுமீடலால்
வானவர்நாட்டினுமழைபொழிந்தவால். (கரு)

(வேறு.)

மையுறுமலைகளோடுமறிகடல்வந்துவீழ்ந்த
வெய்யவாய்மகரம்பற்றவெருவினவிளைப்பமேனாள்
பொய்கையினிடங்கர்கவ்வப்புராதனபோற்றியென்று
கையெடுத்தழைத்தயானைபோன்றனகளிநல்யானை. (கசு)

அசும்புபாய்தேனும்பூவுமாரமுமகிலுமற்றும்
விசும்பெலாமுலவுநதெய்வவெறியினமிடைந்துவிம்மத்
தசும்பெலாம்வாசமூட்டிச்சார்த்தியதண்ணீரென்னப்
பசும்புலாறுறும்வேலைபரிமளங்கமழ்ந்ததன்றே. (கஎ)

தேமுதற்கனியுங்காயுந்தேனிறேனுந்தெய்வப்
பூமுதலாயவெல்லாமீன்கொளப்பொலிந்தவன்றே
மாமுதற்றருவொடொக்கும்வானுயர்மானக்குன்றம்
தாமுதலோடுங்கெட்டாலொழிவரோவண்மைதக்கோர். (கஅ)

மண்ணுறச்சேற்றுட்புக்குச்சுரிகின்றமாலைக்குன்றம்
கண்ணிறைபோதுங்காயுங்கனிகளும்பிறவுங்கவ்வி
வெண்ணிறமீன்களெல்லாம்வறியவனொன்னமேன்மேல்
உண்ணிறைசெல்வங்காவொளிக்கின்றவுலோபரொத்த. (கக)

கறங்கெனத்திரியும்வேகக்கவிக்குலங்கதுவவாங்கிப்
பிறங்கிருங்கடலிற்பெய்தபோழ்தத்தும்பெரியபாந்தள்
மறங்கிளர்மானயானைவயிற்றினவாகவாய்சோர்ந்
துறங்கினகேட்டற்றுமுணர்வரோவுணர்விலாதார். (உ0)

இழையெனத்தகையமின்னினெயிற்றினமுழக்கமெய்தப்
புழையுடைத்தடக்கையொன்றோடொன்றிடைபொருந்தச்சுற்றி
கழையுடைக்குன்றின்முன்றிலுருமொடுகலந்தகால
மழையெனப்பொருதவேழமகரமுமத்தமாவும். (உக)

பொன்றினசிறியவாயபுண்ணியம்புரிந்தோர்போலக்
குன்றுகள்சூரக்குவீரர்குவித்தனர்நெருப்புக்கோப்ப
ஒன்றின்மேலொன்றுவீழவுகைத்தெழுந்தும்பர்நாடு
சென்றுமேலிடம்பெறாதுதிரிந்தனசிகரச்சில்லி. (உஉ)

கூருடையெயிற்றுக்கோண்மாச்சுறவினமெறிந்துகொல்லப்
போருடையரியும்வெய்யபுலிகளும்யாளிப்போத்தும்
நீரிடைத்தோற்றவன்றேதந்நிலைநீங்கிற்றென்றால்
ஆரிடைத்தோலார்மேலோரறிவிடைநோக்கினம்மா. (உ௩)

ஒள்ளியவுணர்வுகூடவுதவலொன்றினுமொன்றே
வள்ளியராயோர்செல்வமன்னுயிர்க்குதவுமன்றே
தள்ளினகுதித்தமானத்தும்பர்தங்குவட்டிற்றூங்கும்
கள்ளினைநிறையமாந்திக்கவியெனக்களித்தமீன்கள். (உ௪)

மூசெரிபிறக்கமீக்கொண்டிறக்கியமுடுக்கர்தன்னால்
கோசொரிநறவமென்னத்தண்புனலுகுக்குங்குன்றின்
வேசொரிமுத்துக்கம்மாவிருந்துசெய்திருந்தவிண்ட
வாய்சொரிபிப்பியோடுவலம்புரியுமிழ்ந்தமுத்தம். (உ௫)

(வேறு.)

விண்டலந்தொடுமால்வரைவேரொடும்
கொண்டலங்கொளவீரர்குவித்தலால்
திண்டலங்கடலானதுநீர்செல
மண்டலங்கடலாகிமலிந்ததே. (உ௬)

அய்யன்வேண்டினதுவிதுவாமன்றே
வெய்யசீயமும்யாளியும்வேங்கையும்
மொய்கொள்குன்றின்முதலினமொய்த்தலால்
நெய்தல்வேலிகுறிஞ்சிநிகர்த்ததால். (உ௭)

யானுணூதனவீங்கிவையென்னவே
தீனுணூதனவென்னிதுசெய்யுமே
மானுணூததிரைக்கடல்வாழ்தரு
மீனுணூதனவில்லையிலங்கரோ. (௨௮)

வவ்விலங்குவளர்த்தவர்மாட்டருள்
செவ்விலங்கலில்சிந்தையர்தீர்வரோ
இவ்விலங்கல்விடேமினியென்பபோல்
எவ்விலங்கும்வந்தெய்தினவேலையே. (௨௯)

கனிதருந்நெடுங்காய்தருநாடொறும்
இனிதருந்துவநொய்தினியற்றலால்
பனிதருங்கிரிதம்மனம்பற்றுறு
முனிவரும்முனியார்முடிவுன்னுவார். (௩0)

புலையின்வாழ்க்கையரக்கர்பொருப்புளார்
தலையின்மேல்வைத்தகையினர்சாற்றுவார்
மலையிலேமற்றுமாறினிவாழ்வதோர்
நிலையிலேமென்றிலங்கைநெருக்குவார். (௩௧)

முழுக்கநீரிற்புகாமுழுகிச்செலாக்
குழுக்களோடணைகோளரியாளிகள்
இழுக்கில்பேரணையின்னிருபக்கமும்
ஒழுக்கின்மாலைவகுத்தனவொத்தவால். (௩௨)

பளிக்கின்மால்வரைமூழ்ந்துபடுத்தன
ஒளிக்குமாழிகிடந்தனவோர்கிலர்
வெளிக்குமால்வரைவேண்டுமெனக்கொணர்ந்
தளிக்கும்வானரவீரரநேகரால். (௩௩)

பாரினுண்மூதகுந்நெடும்பாழ்பட
மூரிவானரம்வாங்கியமொய்ம்மலை
வேரினுமெனவெம்முழையின்னுழை
சோருநாகநிலத்துறத்தூங்குமால். (௩௪)

அருணச்செம்மணிக்குன்றயலேசில
இருணற்குன்றமடுக்கினவேய்ந்தன
கருணைக்கொண்டல்வறியன்கழுத்தென
வருணற்கீந்தவருணசரத்தையே. (௩௫)

ஏய்ந்ததம்முடம்பிட்டவுயிர்க்கிடம்
ஆய்ந்துகொள்ளுமறிஞரினாழ்கடல்
பாய்ந்தபண்டுறையும்மலைப்பாந்தள்கள்
போந்தமாமலையின்னுழைபுக்கவே. (௩௬)

சேதுவின்பெருமைக்கணிசெப்பவோர்
ஏதுவேண்டுமென்றெண்ணுவதென்கொலோ
ஆதனிட்டமலையின்றுவலையால்
மீதுவிட்டுலகுற்றனமீன்களும். (௩௭)

நீலனிட்டநெடுவரைநீணில
மூலமுட்டலின்மொய்புனல்கைம்மிகக்
கூலமிட்டியவரர்கலிகோத்ததால்
ஓலமிட்டெழுந்தோடியுலகெலாம். (௩௮)

மயிந்தனிட்டநெடுவரைவானுற
உயர்ந்துமுட்டிவிழவெழுந்தோதநீர்
தியந்தமுட்டத்திசைநிலையானையும்
பெயர்ந்துவிட்டவைதாமும்பிளிறுவ. (௩௯)

இலக்குவன்சரமாயினுமேன்றெதிர்
விலக்கினும்விலங்காதவிலங்கலால்
அலக்கணெய்தியமூதெழவாழியைக்
கலக்கினான்மகன்மீளக்கலக்கினான். (௪0)

மருத்தின்மைந்தன்மணிநெடுந்தோளெனப்
பெருத்தகுன்றங்கரடிப்பெரும்படை
விருத்தனிட்டவிசையினின்வீசிய
திருத்தம்வானவர்சென்னியிற்சென்றதால். (௪௧)

குமுதனிட்டகுலவரைகூத்தரின்
திமிதமிட்டுத்திரையுந்திரைக்கடற்
றுமிதமூர்புகவானவர்துள்ளினார்
அமுதமின்னுமெழுமெனுமாசையால். (௪௨)

கனசினத்துருமிற்கடுங்கார்வரை
பனசனிட்டனயாவும்பரிக்கிலன்
மனசினத்தவநந்தனவ்வாழ்விகந்
தனசினத்தொழின்மேற்கொள்வதாயினான். (௪௩)

எண்ணிலெண்கினமிட்டகிரிக்குலம்
உண்ணவுண்ணச்சென்றான்றினொடொன்றுறச்
சுண்ணநுண்பொடியாகித்தொலைந்தன
புண்ணியம்பொருந்தாதமுயற்சிபோல். (௪௪)

ஆரவாயிரயோசனையாழமும்
தீரநீண்டுபரந்ததிமிங்கிலம்
பாரமால்வரையேறப்பதைத்துடல்
பேரவேகுன்றும்வேலையும்பேர்ந்தவால். (௪௫)

குலைகொளாக்குறிநோக்கியகொள்கையான்
சிலைகளொக்கமுறித்துச்செறித்தநேர்
மலைகளொக்கவடுக்கிமணற்படத்
தலைகளொக்கத்தடவுந்தடக்கையால். (௪௬)

தழுவியாயிரகோடியதாங்கிய
குழுவின்வானரந்தந்தகிரிக்குலம்
எழுவினீள்கரத்தெற்றிடவிற்றிடை
வழுவிவீழ்வனகால்களின்வாங்குவான். (௪௭)

மலைசுமந்துவருவனவானரம்
நிலையினின்றனசெல்லநிலம்பெறா
அலைநெடுங்கடலன்றியுமாண்டுத்தந்
தலையின்மேலொருசேதுதருவபோன்ம். (௪௮)

பருத்தமால்வரையேந்தியபல்படை
நிரைத்தலிற்சிலசெல்லநிலம்பெறா
கரத்தினேந்தியகார்வரைகண்ணகன்
சிரத்தின்மேற்கொடுநீந்தினசென்றவால். (௪௯)

ஆய்ந்துநீளவரிதுசுமந்தன
ஓய்ந்தகாலபசியினுலந்தன
ஏந்துமால்வரைவைத்தவற்றீண்டுதேன்
மாந்திமாந்திமறந்துதுயின்றவால். (௫௦)

போதல்செய்குநரும்புகுவார்களும்
மாதிரந்தொறும்வானரவீரர்கள்
சேதுவெத்துணைசென்றதென்பார்சிலர்
பாதிசென்றதெனப்பகர்வார்சிலர். (௫௧)

குறைவில்குங்குமமுங்குகைத்தேன்களும்
நிறைமலர்க்குலமுந்நிறைந்தெங்கணும்
துறைதொறுங்கிரிதூங்கினதோய்தலால்
நறைநெடுங்கடலொத்ததுநாமநீர். (௫௨)

நெடும்பன்மால்வரைதூர்த்துநெருக்கவும்
தொடும்பல்வேலைதுளங்கியதில்லையால்
இடும்பையெத்தனையும்படுத்தெய்தினும்
குடும்பந்தாங்குங்குடிப்பிறந்தாரினே. (௫௩)

தொக்கடங்கலவோடுந்துவலைகள்
மிக்கடங்கலும்போவனமீன்குலம்
அக்கருங்கடறூரவயற்கடல்
புக்கடங்கிடப்போவனபோன்றவே. (௫௪)

கொழுந்துடைப்பவளக்கொடியின்குலம்
அழுந்தவுய்த்தவடுக்கல்கரந்தயல்
விழுந்தபன்மணியின்றொளிமீமிசை
எழுந்தவெங்கணுமிந்திரவில்லினே. (௫௫)

பழுமரம்பறிக்கப்பறவைக்குலம்
தழுவினின்றொருவன்றனித்தாங்குவான்
விழுதலும்புகல்வேற்றிடமின்மையால்
அழுதரற்றுங்கிளையெனவாயவால். (௫௬)

தாவலோவலமென்றதுதாங்கிய
மாவெலாங்கடல்வீழ்தலும்வண்டெலாம்
காவலாளர்விழக்கலைகண்ணிலா
ஏவலாளரினெங்குந்திரிந்தவால். (௫௭)

மூசுவண்டினமும்மதமாவின்பின்
ஆசைகொண்டனபோற்றொடர்ந்தாடின
ஓசையொண்கடல்குன்றொடவைபுக
வேலைமங்கையராமெனமீண்டவே. (௫௮)

நிலமரங்கியவேரொடுநேர்பறித்
தலமருந்துயரெய்தியவாயினும்
வலமரங்களைவிட்டிலமாசிலாக்
குலமடந்தையரொன்னக்கொடிகளே. (௫௯)

இப்புறக்கடறூயதுவலையால்
அப்புறக்கடலுஞ்சுவையற்றன
எப்புறத்துருமேறுங்குளிர்ந்தன
உப்புறைத்தனமேகமுகுத்தநீர். (௬௦)

முதிர்நெடுங்கிரிவீழமுழங்குநீர்
எதிரொழுந்துவிரந்தரமெய்தலால்
மதியவனகதிரிற்குளிரவாய்ந்தன
கதிரவன்கனல்வெங்கதிர்க்கற்றையே. (௬௧)

நன்கொடித்துநறுங்கிரிசிந்திய
பொன்கொடித்துவலைப்பொதிந்தோடுவ
வன்கொடிப்பவளங்கள்வயங்கலால்
மின்பொடித்ததுபோன்றதுவிண்ணெலாம். (௬௨)

ஓடுமோட்டருமொன்றின்முன்னொன்றுபோய்க்
காடுநாடுமரங்களுங்கற்களும்
நாடுநாட்டுநளிர்கடலூட்டிலோர்
பூடுமாட்டலிலாயபொருப்பரோ. (௬௩)

வரைப்பரப்பும்வனப்பரப்பும்மூவர்த்
தரைப்பரப்புவதென்னத்தனித்தனி
உரைப்பரப்புமூறுகிரியொரண்கவிக்
கரைப்பரப்புக்கடற்பரப்பன்னதால். (௬௪)

உற்றதாலணையோங்கலிலங்கையை
முற்றுமூன்றுபகலிடைமுற்றவும்
பெற்றவார்ப்புவிசும்புபிளந்தகால்
மற்றிவானம்பிறிதொருவான்கொலோ. (௬௫)

நாடுகின்றதென்வேறொருநாயகன்
தோடுசேர்குழலாடுயர்நீக்குவான்
ஓடுமென்முதுகிட்டென்வோங்கிய
சேடனென்னப்பொலிந்ததுசேதுவே. (௬௬)

மெய்யினீட்டத்திலங்கையின்மேன்மகள்
பொய்யினீட்டியதிமைபொறுக்கலா
தையனீட்டியசேனைகண்டன்பினால்
கையைநீட்டியதன்மையுங்காட்டுமால். (௬௭)

கானயாறுபரந்தகருங்கடல்
ஞானநாயகன்சேனைநடத்தலால்
ஏனையாறினியானலதாரென
வானயாறிம்பர்வந்ததுமானுமால். (௬௮)

கற்கிடந்தொளிர்காசினங்காந்தலால்
மற்கடங்கள்வகுத்தவயங்கணை
எற்கிடந்தவிருளிடையிந்திரன்
விற்கிடந்தனவென்னவிளங்குமால். (௬௯)

ஆனபேரணையன்பினமைத்தனர்
ஞானவாழ்க்கைக்கவிக்குலநாதனும்
மானவேலையிலங்கையின்மன்னனும்
ஏனையோருமிராமனையெய்தினார். (௭0)

எய்தயோசனையீண்டொருநூறிவை
ஐயிரண்டினகலமமைந்திடச்
செய்ததாலணையென்றதுசெப்பினார்
வையநாதன்சரணம்வணங்கியே. (௭௧)

சேதுபந்தனப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம் ௬௧0.

---

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## அ-வது. ஒற்றுக்கேள்விப்படலம்.

ஆண்டகையுமன்பினொடுகாதலமுதூற
நீண்டகையினானவனைநெஞ்சினொடுபுல்லி
ஈண்டவெழுகின்றனனிழைத்தபடியெல்லாம்
காண்டலதன்மேனெடியகாதன்முதிர்கின்றான். (க)

பண்டையுறையுட்கெதிர்படைக்கடலின்வைகும்
கொண்டலெனவந்தவனையக்குறுகிநின்றான்
அண்டமுதல்வன்னொருவனாவியனையாளைக்
கண்டனனெனப்பெரியகாதன்முதிர்கின்றான். (உ)

நின்றுநெடிதுன்னியநிறைக்கடனிரம்பக்
குன்றுகொடடைத்தணைகுயிற்றியதொர்கொள்கை
அன்றுலகுதந்தமுதலந்தணனமைத்தான்
என்றபொழுதின்கணுமிதென்றியலுமென்றான். (ங)

ஊழிமுதனாயகன்வியப்பினொடுவந்தான்
ஆழமுணாசெய்யுமளவேயினியதொன்றோ
ஆழியிலிலங்கைபெரிதத்திசையதாமேல்
ஏழுகடலுங்கடிதடைப்பனிவனென்றான். (ச)

என்றுநளனைக்கருணையிற்றழுவியன்பால்
அன்றுவருணன்னுதவுமாரமுமளித்துத்
துன்றுகதிர்பொற்கலனுமற்றுளதொகுத்தே
வென்றியினியென்றுபடையோடுடன்விரைந்தான். (ரு)

நெற்றியிலரக்கர்பதிசெல்லநிறைநன்னூல்
கற்றுணருமாருதிகடைக்குழைவரத்தன்
வெற்றிபுணர்தம்பியொருபின்புசெலவீரப்
பொற்றிரள்புயக்கருநிறக்களிறுபோனான். (சு)

இருங்கவிகள்சேனைமணியாரமிடறத்தன்
மருங்குவளர்தண்டலைவயங்குதிரைமான
ஒருங்குநனிபோயினவுயர்ந்தகரையூடே
கருங்கடல்புகப்பெருகுகாவிரிகடுப்ப (எ)

ஓதியகுறிஞ்சிமுதலாயநிலமுள்ள
கோதிலவருந்துவன்கொள்ளையின்முகந்துற்
றியாதுமொழியாவகைசுமந்துகடலெய்தப்
போதலினுமன்னபடைபொன்னியெனலாய. (அ)

ஆயதுநெருங்கவடியிட்டடியிடாமல்
தேயுநெறிமாடுதிரையூடுவிசைசெல்லப்
போயசிலபொங்குதொறுபொங்குதொறுபூசற்
பாய்புரவியிற்படர்வபோலினிதுபாய்வ. (க)

மெய்யிடைநெருங்கவடியிட்டடியிடாமல்
பொய்யிடமிலாதபுனலிற்புகலிலாத
உய்விடமளிக்குமருளாளர்முறையுய்த்தார்
கையினிடைசென்றுகரைகண்டகரையில்லை. (௧௦)

இழைத்தனையவெங்கதிரின்வெஞ்சுடரிராமன்
மழைத்தமுகிலன்னமணிமேனிவருடாமல்
தழைத்தநிழலுற்றகுளிர்சந்தனமுயர்ந்த
அழைத்தவையெடுத்தருகுசென்றனரநேகர். (௧௧)

ஓமநெறிவாணர்மறைவாய்மையொருதாமே
ஆமரசர்மைந்தர்திருமேனியலசாமே
பூமானிருத்தவைபொருத்துவபொருத்திச்
சாமரையின்வீசினர்படைத்தலைவர்தாமே. (௧௨)

மருங்கடவளர்ந்தமுலைமங்கைமணமுன்னு
வருங்கடகமங்கையினில்வள்ளனினைகின்றான்
ஒருங்கடலுயர்ந்தபடர்தானையொடுமோதத்
திருங்கடல்கடந்துகரையேறினனிராமன். (௧௩)

பெருந்தவமுயன்றமரர்பேணியதவத்தால்
மருந்தனையதம்பியொடும்வன்றுணைவரோடும்
அருந்ததியும்வந்தனைசெயஞ்சொலிளவஞ்சி
இருந்தநகரின்புறனொர்குன்றிடையிருத்தான். (௧௪)

வேறு.

நீலனைநெடிதுநோக்கிநேமியோன்விரையநீநம்
பால்வருசேனைக்கெல்லாமிழைத்தியாற்பாடியென்னாக்
கால்வரைவணங்கிப்போனான்கல்லினாற்கடலைக்கட்டி
நூலுரைவழிசெய்தானுக்கந்நிலைநொய்திற்சொன்னான். (௧௫)

பொன்னினுமணியினானுநான்முகன்புனைந்தபொற்பின்
நன்னலமாகவாங்கிநான்முகச்சதுரநாட்டி
இன்னொன்னாதவண்ணமிறைவர்க்கும்பிறர்க்குமெல்லாம்
நன்னகர்நொய்திற்செய்தான்றதையுநாளுட்கொண்டான். (௧௬)

வில்லினார்க்கிருக்கைசெய்யும்விருப்பினாற்பொருப்பின்வீங்கும்.
கல்லினாற்கல்லையொப்பக்கடாயினான்கழைகளாய
நெல்லினால்லக்குங்காலுநிரப்பினான்றருப்பையென்னும்
புல்லினாற்றொடுத்துவாசப்பூவினால்வேய்ந்துபோனான். (௧௭)

வாயினுமனத்தினானும்வாழ்த்திமன்னுயிர்கட்கெல்லாம்
தாயினுமன்பினானைத்தாளுறவணங்கித்தத்தம்
ஏயினவிருக்கைநோக்கியெண்டிசைமருங்கும்யாரும்
போயினர்பன்னசாலையிராமனுநொய்திற்புக்கான். (௧௮)

யப்புநீராயவீரர்பருவரைகடலிற்பாய்ச்சத்
துப்புநீராயதூயசுடர்களுங்கறுக்கவந்திட்
டுப்புநீரகத்துட்டோய்ந்தவொளிநிறம்விளங்கவப்பால்
அப்புநீராடிவான்போலருக்கனுமத்தஞ்சேர்ந்தான். (௧௯)

மாலுறுகுடகவானின்வயங்கியவந்துதோன்றும்
பாலுறுபசுவெண்டிங்கள்பங்கயநயனத்தண்ணல்
மேலுறுபகழிவாங்கிவெகுண்டன்னவிரைவின்வந்த
காலுறவளைத்தகாமன்வில்லெனக்காட்டிற்றன்றே. (௨௦)

நூற்றிதழ்க்கமலந்தந்தநுண்ணிருஞ்சுண்ணமுண்ணத்
தீற்றிமென்பனிநீர்தோய்ந்தசீகரத்தென்றலென்னும்
காற்றினுமாலையானகனலினுங்காமவாளிக்
கூற்றினும்வெம்மைகாட்டிக்கொதித்ததக்குளிர்வெண்டிங்கள். (௨௧)

செயிர்ப்பினுமழகுசெய்யுந்திருமுகத்தணங்கைத்தீர்ந்து
துயிற்சுவைமறந்தான்றோளிற்றுநிலாத்தவழுந்தோற்றம்
மயிற்குலம்பிரிந்ததென்னமரகதமலைமேன்மெல்ல
உயிர்ப்புடைவெள்ளைப்பிள்ளைவாளராவூர்வபோன்ற. (௨௨)

மன்னெடுநகரமாடேவருதலால்வயிரச்செங்கைப்
பொன்னெடுந்திரடோளையன்மெய்யுறப்புழுங்கிநைந்தான்
பன்னெடுங்காதத்தேயுஞ்சுடவல்லபவளச்செவ்வாய்
அந்நெடுங்கருங்கட்டையையணுகினாற்றணிவதுண்டோ. (௨௩)

இற்றதுகாலமாகவிலங்கையர்வேந்தனேவ
ஒற்றர்வந்தளவுநோக்கிக்குரங்கெனவுழல்கின்றானைப்
பற்றினனென்பமன்னோபண்டுதான்பலநாட்செய்த
நற்றவப்பயன்றந்துய்ப்பமுந்துறப்போந்தநம்பி. (௨௪)

பேர்வுறுகவியின்சேனைப்பெருங்கடல்வெள்ளந்தன்னுள்
ஓர்வுறுமனத்தனாகியொற்றனையுணர்ந்துகொண்டான்
சேர்வுறுபாலின்வேலைசிறுதுளிதெறித்தவேனும்
நீரினைவேறுசெய்யுமன்னத்தினீரனானான். (௨௫)

பெருமையுஞ்சிறுமைதானுமுற்றுறுபெற்றியாற்ற
அருமையினகன்றுநீண்டவிஞ்சையுளடங்கித்தாமும்
உருவமுந்தெரியாவண்ணமொளித்தனருறையுமாயத்
திருவனையொருங்குகாணும்யோகியுமென்னலானான். (௨௬)

கூட்டியவிரற்றிண்கையாற்குரங்குகளிரங்கக்குத்தி
மீட்டொருவினைசெய்யாமன்மாணையின்கொடியால்வீக்கிப்
பூட்டியகையர்வாயாற்குருதியேபொழிகின்றானைக்
காட்டினன்கள்வனொன்றுக்கருணையங்கடலுங்கண்டான். (௨௭)

பாம்பிழைபள்ளிவள்ளல்பகைஞனொன்றுணரான்பல்லோர்
நோம்பிழைசெய்தகொல்லோகுரங்கெனவிரங்கிநோக்கித்
தாம்பிழைசெய்தாரேனுந்தஞ்சமென்றடைந்தோர்தம்மை
நாம்பிழைசெய்யலாமோநலிந்திடல்விடுதியென்றான். (௨௮)

அகனுறப்போந்தவள்ளல்கருணையாலமுதகண்ணன்
நகனிறைகானின்வைகுநம்மினத்தவருமல்லர்
தகவிறைவில்லாவுள்ளத்திராவணன்றந்தவொற்றர்
சுகனிவனவனுஞ்சாரனென்பதுந்தெரியச்சொன்னான். (௨௯)

கல்விக்கண்மிக்கோன்சொல்லக்கருமனநிருதக்கள்வர்
வல்விற்கைவீரமற்றிவ்வானரர்வலியைநோக்கி
வெல்விக்கையரிதென்றெண்ணிவினையத்தாலெம்மையெல்லாம்
கொல்விக்கவந்தான்மெய்ம்மைகுரங்குநாங்கொள்கவென்றார். (௩0)

கள்ளரோகாண்டியென்னுமந்திரங்கருத்துட்கொண்டான்
தெள்ளியதெரிக்குந்தெவ்வர்தீர்வினைசேர்தலோடும்
துள்ளியினிரதந்தோய்ந்துதொன்னிறங்கரந்துவேறாய்
வெள்ளியோடிருந்தசெம்புமாமெனவேறுபட்டார். (௩௧)

மின்குலாமெயிற்றராகிவெருவந்துவெற்பினின்ற
வன்கணார்தம்மைநோக்கிமணிநகைமுறுவறோன்றப்
புன்கணார்புன்மைநீக்கும்புரவலன்போந்ததன்மை
என்கொலாந்தெரியவெல்லாமியம்புதிரஞ்சலென்றான். (௩௨)

தாய்தெரிந்துலகுகாத்ததவத்தியைத்தன்னைக்கொல்லும்
நோய்தெரிந்துணரான்றேடிக்கொண்டனனுவலவென்று
வாய்தெரிந்துணராவண்ணங்கழறுவார்வணங்கிமாய
வேய்தெரிந்துரைக்கவந்தேம்வினையினால்வீரவென்றார். (௩௩)

எல்லையிலிலங்கைச்செல்வமிளையவற்கீந்ததன்மை
சொல்லுதிர்மகரவேலைகவிக்குலவீரர்தூர்த்த
கல்லினாற்கிடந்தவாறுங்கழறுதிர்காலந்தாழ்த்த
வில்லினர்வந்தாரொன்றும்விளம்புதிர்விளம்பலாதிர். (௩௪)

கொத்துறுதலையான்வைகுங்குறும்புடையிருக்கைக்குன்றம்
தத்துறுதடநீர்வேலைதனியொருசிறையிற்றாதல்
ஒத்துறவுணர்ந்திலாமையுயிரொடுமுறவினோடும்
இத்துணையிருந்ததென்னுந்தன்மையுமியம்புவீரால். (௩௫)

சண்டங்கொள்வேகமாகத்தனிவிடையுவணந்தாங்கும்
துண்டங்கொள்பிறையான்மோலித்துளவினானோடுந்தொல்லை
அண்டங்களவையுந்தாக்கிக்காப்பினுமறமிலாதான்
கண்டங்கள்பலவுங்காணக்காண்பதுங்கழறுவீரால். (௩௬)

தீட்டுறுமழுவாள்வீரன்றாதையைச்செற்றோன்சுற்றம்
மாட்டியவண்ணமென்னவருக்கமுமற்றுமுற்றும்
வீட்டியென்றாதைக்காகமெய்ப்பலிவிசும்புளோருக்
கூட்டுவெனுயிர்கொண்டென்னுமாற்றமுமுணர்த்துவீரால். (௩௭)

தாழ்விலாத்தவத்தோர்தையறனியொருசிறையிற்றாகச்
சூழ்விலாவஞ்சஞ்சூழ்ந்ததன்னைத்தன்சுற்றத்தோடும்
வாழ்வெலாந்தம்பிகொள்ளவயங்கெரிநரகமென்னும்
வீழ்விலாச்சிறையின்வைப்பெனென்பதும்விளம்புவீரால். (௩௮)

நோக்கினிர்தானையெங்குநுழைந்தனிரினிவேறொன்றும்
ஆக்குவதில்லையாயினஞ்சலென்றஃதுண்டன்றே
வாக்கினின்மனத்திற்கையின்மற்றினிவலியாவண்ணம்
போக்குமின்விரைவினென்றானுய்ந்தனமென்றுபோனார். (௩௯)

வேறு.

அரவமாக்கடலஞ்சியவச்சமும்
உரவுநல்லணையோட்டியவூற்றமும்
வரவுநோக்கியிலங்கையர்மன்னவன்
இரவினெண்ணிடவேறிருந்தானரோ. (௪0)

வார்குலாமுலைமாதருமைந்தரும்
ஆருநீங்கவறிஞரோடேகினான்
சேர்கவென்னினல்லாலன்றுதென்றலும்
சார்கிலாநெடுமந்திரசாலையே. (௪௧)

உணர்வினெஞ்சினருமருளைப்பொருள்
புணருங்கேள்வியரல்லர்பொறியிலர்
கொணருங்கூனர்குறளர்கொழுஞ்சுடர்
துணருநல்விளக்கேந்தினர்சுற்றினார். (௪௨)

நணியர்வந்துமனிசர்நமக்கினித்
துணியுங்காரியம்யாதெனச்சொல்லினான்
பணியுந்தானவராதியர்பன்முடி
மணியினான்விளங்கும்மணித்தாளினான். (௪௩)

காலவெங்கனல்போலுங்கணைகளால்
வேலைவெந்துநடுங்கிவெயில்புரை
மாலைகொண்டுவணங்கியவாறெலாம்
சூலமென்னவென்னெஞ்சைத்தொளைக்குமால். (௪௪)

கிழிபடக்கடல்கீண்டதுமாண்டது
மொழிபடைத்தவலியெனமூண்டதோர்
பழிபடைத்தபெரும்பயத்தன்னவன்
வழிகொடுத்ததென்னுள்ளம்வருத்துமால். (௪௫)

படைத்தமால்வரையாவும்பறித்துவேர்
துடைத்துவானரவீரர்தந்தோள்களைப்
புடைத்தவாறும்புணரியைப்போக்கற
அடைத்தவாறுமென்னுள்ளத்தடைத்ததால். (சசு)

காந்துவெஞ்சினவீரர்கணக்கிலார்
தாந்தமாற்றலுக்கேற்றதரத்தர
வேந்தவெற்பையொருவன்விரல்களால்
ஏந்தியிட்டதென்னுள்ளத்தினிட்டதால். (சஎ)

சுட்டவாகண்டுந்தொன்னகர்வேலையைத்
தட்டவாகண்டுந்தாவற்றசெவ்வனைக்
கட்டவாகண்டுங்கண்ணெதிரேவந்து
விட்டவாகண்டுமேவெண்ணம்வேண்டுமோ. (சஅ)

என்றுதாயைப்பயந்தோனியம்பலும்
தின்றுவாயைவிழிவழித்தியுக
நன்றுநன்றுநம்மந்திரநன்றெனு
என்றம்வாழ்தியிளவலோடேகென்றான். (சகூ)

ஏனமேகொலிதமெனவெண்ணுரு
மோனமாகியிருந்தனன்மூற்றினான்
ஆனகாலையடியினிறைஞ்சிய
சேனைநாதனினையனசெப்பினான். (ருo)

கண்மையின்னகர்கேட்டந்தவத
திண்மையொன்றும்லாற்றிசைகாவலர்
எண்மரும்மிவற்கேவல்செய்கின்றவவ்
வுண்மையொன்றுமுணர்ந்திலபோலென்றான். (ருக)

கூசிவானரங்குன்றுகொடிக்கடல்
வீசினாெனும்வீரம்விளம்புவாய்
ஊசிவேரொடுமோங்கலையோங்கிய
ஈசனோடுமெடுத்ததுமில்லையோ. (ருஉ)

அதுகொடென்சிலவாரமர்மேலினி
மதிகெடுந்தகையோர்வந்துநாமுறை
பதிபுகுந்தனர்தம்மைப்படுப்பதோர்
விதிகொடுந்தவினைந்ததுதானென்றான். (ருங)

மூற்றுமூடியகஞ்சுகன்மூட்டிய
வெற்றனற்பொறிக்கண்ணினன்வேத்திரம்
பற்றுமங்கையினன்படிசாரமின்
ஒற்றர்வந்தனரென்னவுணர்த்தினான். (ருச)

மனைக்கண்வந்தவன்பாதம்வணங்கினார்
பனைக்கைவன்குரங்கின்படர்சேனையை
நினைக்குந்தோறுமுலமருநெஞ்சினர்
கணைக்குந்தோறுமுதிரங்கள்கக்குவார். (ருரு)

வெள்ளவாரிவிரிவொடவ்வீடணன்
தள்ளவாரிநிலைமையுந்தாபதன்
உள்ளவாறுமுரைமினென்றானுயிர்
கொள்ளவாய்வெருவுங்கொடுங்கூற்றனான். (ருசு)

அடியமர்நெடுஞ்சேனையையாசையால்
முடியநோக்கலுற்றேமுதுவேலையின்
படியைநோக்கியபாரம்படர்குற்ற
கடியவேகக்கனுழனிற்கண்டிலம். (ருஎ)

நுவலயாம்வரவேண்டியநோக்கதோ
கவலவேலையெனுங்கரைகாண்கிலா
தவலமெய்தியடைத்துழியார்த்தெழும்
துவலையேவந்துசொலலியதில்லையோ. (ருஅ)

எல்லைநோக்கவுமெய்தில்தாமெனும்
சொல்லைநோக்கியமானுடன்றோளெனும்
கல்லைநோக்கிக்கணைகளைநோக்கித்தன்
வில்லைநோக்கவும்வெந்ததுவேலையே. (ருகூ)

சாருலாமணிமார்பநின்றம்பியே
தேருலாவுகதிருந்திரிந்துதன்
பேருலாவுமளவினும்பெற்றனன்
நீருலாவுமிலங்கைநெடுந்திரு. (சுo)

சேதுபந்தனஞ்செய்தனனென்றதிப்
போதுவந்தபுதுவலியோவொரு
தூதுவந்தவன்றோள்வலிசொல்லிய
ஏதுவந்தமிலாதவிருக்கவே. (சுக)

மருந்துதேவருந்தியமாலைவாய்
இருந்ததானவர்தம்மையியைந்துமுன்
பெருந்திண்மாயக்குணர்த்தியபெற்றியின்
தெரிந்துகாட்டினனும்பிசினத்தினான். (சுஉ)

பற்றிவானரவீரர்பணைக்கையால்
எற்றிநங்களையேநெடுநதோளுறச்
சுற்றியீர்த்தலைத்துச்சுடர்போலொளிர்
வெற்றிவீரனிற்காட்டிவிளம்பினான். (சுங)

சரங்களிங்கிவற்றிற்பண்டுதானுடை
வரங்கள்சிந்துவெனென்றனன்மற்றெமைக்
குரங்கலாமைதெரிந்துமக்கொற்றவன்
இரங்கவுய்ந்தனமீதெங்களொற்றென்றார். (சுச)

மற்றும்யாவையும்வாய்மையவானவன்
சொற்றயாவையுஞ்சோர்வின்றிச்சொல்லினார்
குற்றம்யாவையுங்கோளொடுநீங்குக
இற்றைநாண்முதலாயுவுண்டாகென்றார். (சுரு)

ஒற்றுக்கேள்விப்படலம் முற்றிற்று ஆ திருவிருத்தம், எாடுரு.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## கூ-வது· இலங்கைகாண்படலம்.

வைதெனக்கொல்லும்விற்கைமானுடர்மகரநீரை
நொய்தினினடைத்துமானத்தானையானுவன்றநும்மூர்
எய்தினனென்றபோதின்வேறினியெண்ணவேண்டும்
செய்திறனுண்டோவென்னுச்சேனைகாவாளன்செப்பும். (க)

விட்டனமாதையென்றபோதினும்வெருவிவேந்தன்
பட்டதென்றிகழ்வர்விண்ணோர்பற்றியும்பகையைத்தீர
ஒட்டலாம்போரிலொன்னொொட்டினுமும்பியொட்டான்
கிட்டியபோதுசெய்வதென்னினிக்கிளக்கல்வேண்டும். (உ)

ஆண்டுச்சென்றரிகளோடுமனிசனாயமரிற்கொன்று
மீண்டுநம்மிருக்கைசேர்துமென்பதுமேற்கொண்டேமேல்
ஈண்டுவந்திறுத்தாரொன்னுமீதலாதுறுதியுண்டோ
வேண்டியதெய்தப்பெற்றால்வெற்றியின்விழுமிதன்றே. (ந)

ஆயிரவெள்ளமானவரக்கர்தந்தானையைய
தேயினுமூழிநூறுவேண்டுமாற்சிறுமையென்னோ
நாயினஞ்சீயங்கண்டதாமெனநடப்பதல்லால்
நீயுருத்தெழுந்தபோதுகுரங்கெதிர்நிற்பதுண்டோ. (ச)

வந்தவர்தானையோடுமறிந்துமாக்கடலில்வீழ்ந்து
சிந்தினரிரிந்துபோகச்சேனையும்யானுஞ்சென்று
வெந்தொழில்புரியுமாறுகாணுதிவிடையீகென்று
இந்திரன்முதுகுகண்டவிராவணற்கேயச்சொன்னான். (ரு)

மதிநெறியறிவுசான்றமாலியவானவ்வாய்மை
பொதுநெறியிலையதாகப்புணர்த்துதல்புலமையென்னு
விதிநெறியிலையதாகவிளம்புகின்றோருமீண்டுச்
செதுநெறியிலையினாரோயென்பதுந்தெரியச்சொல்லும். (சு)

பூசற்குமுயன்றுநம்பாற்பொருதிரைப்புணரிவேலைத்
தேசத்துக்கிறைவனான தயரதன்சிறுவன்றன்னை
மாசற்றசோதிவெள்ளத்துச்சியின்வரம்பிற்றோன்றும்
ஈசற்குமீசன்வந்தானென்பதோர்வார்த்தையிட்டார். (எ)

அன்னவற்கிளவறன்னையருமறைபரமென்றோதும்
நன்னிலைநின்றுதீர்ந்துநவையிலாவுயிர்கடோறும்
தொன்னிலைபிரிந்தானென்னப்பலவகைநின்றதூயோன்
இன்னனையெவருங்கேட்கவியம்புவாேதியரதோ. (அ)

அவ்வமர்க்கமைந்தவில்லுங்குலவரையவற்றினன்ற
வெவ்வலிவேறுவாங்கிவிரிஞ்சனேவிதித்தமேனாள்
செவ்வழிநாணுஞ்சேடன்றெரிகணையாகச்சேர்த்திக்
கவ்வையில்காலநேமிக்கணக்கையுங்கடந்ததென்பார். (கூ)

வாலிமாமகன்வந்தானைவானவர்க்கிறைவனென்றார்
நீலனையுலகமுண்ணுநெருப்பினுக்கரசனென்றார்
காலனையொக்குந்தூதன்காலுங்கண்ணுதலுமென்றார்
மேலுமொன்றுரைத்தாரன்னான்விரிஞ்சனுமினிமேலென்றார். (க0)

அப்பதமவனுக்கீந்தானரக்கர்வேரறுப்பதாக்
இப்பதியெய்தினனவ்விராமனென்றெவருஞ்சொன்னார்
ஒப்பினுலுரைக்கின்றோவுண்மையேயுணர்த்தினோ
செப்பியென்குரங்காய்வந்தார்தனித்தனித்தேவரென்றார். (கக)

ஆயதுதெரிந்தோர்தங்களச்சமோவறிவோயார்க்கும்
சேயவளெளியளென்னச்சிந்தையிலிகழலம்மா
தூயவளமுதினேடுந்தோன்றினளென்றுந்தோன்றாத்
தாயவளுலகுக்கெல்லாமென்பதுஞ்சாற்றுகின்றார். (கஉ)

கானிடைவந்ததேயும்வானவர்கடாவவேயால்
மீனுடையகழிவேலைவிலங்கன்மேலிலங்கைவேந்தன்
தானுடைவரத்தையெண்ணித்தனித்தனித்தலைவர்தாமே
மானுடவடிவங்கொண்டாரென்பதோர்வார்த்தையிட்டார். (கங)

ஆயிரமுற்பாதங்களிங்குளவடுத்தவென்றார்
தாயினுமுயிர்க்குநல்லாளிருந்துழியறியத்தக்கோன்
ஏயினதூதனெற்றப்பற்றுவிட்டிலங்கைத்தெய்வம்
போயினதென்றுசொன்னார்புகுந்ததுபோருமென்றான். (கச)

அம்பினுக்கிலக்கமாவரரசொடுமரக்கரென்றார்
நப்பரத்தடங்குமென்னநாவினிற்பொய்யிலாதான்
உம்பர்மந்திரிக்குமேலாவொருமுழமுயர்ந்தஞானத்
தம்பியேசாற்றிப்போனனென்பதுஞ்சமையச்சொன்னான். (கரு)

ஈதெலாமுணர்ந்தேனுயுமென்குலமிறுதியுற்ற
தாதியிலவனுலென்றுமுன்றன்மேலன்பினுலும்
வேதனைநெஞ்சிலெய்தவெம்பியான்விளைவசொன்னேன்
சீதையைவிடுதியாயிற்றீருமித்தீமையென்முன். (கசு)

மற்றெலாநிற்கவந்தமனிசர்வானரங்கள்வானில்
இற்றைநாளளவுநின்முரிமையவவொன்னுந்தன்மை
சொற்றவாறன்றியேயுந்தோற்றிநீயென்றுஞ்சொன்னுய்
கற்றவாநன்றுபோவென்றினையனகழறலுற்முன். (கஎ)

பேதைமானுடவரோடுகுரங்கலபிறவேயாக
பூதலவரைப்பினுகர்புரத்தினப்புறத்ததாக
காதுவெஞ்செருவேட்டென்னைக்காந்தினர்கலந்தபோது
சீதைதன்றிறத்தின்முயினமர்த்தொழிறிறம்புவேனே. (சஅ)

ஒன்றலபகழியென்கைக்குரியனவுலகமெல்லாம்
வென்றனவொருவன்செய்தவினையினும்வலியவெம்போர்
முன்றருகென்றதேவர்முதுகுபுக்கமரின்முன்னம்
சென்றனவின்றுவந்தகுரங்கின்மேற்செல்கலாவோ. (கக)

சூலமேய்தடக்கையண்ணமுனுமோர்குரங்காய்த்தோன்றின்
ஏலுமேயிடைவதல்லாலென்செய்வனென்னைக்கால
வேலையேகடைந்தமேனுளுலகெலாம்வெருவவந்த
ஆலமோவிழுங்கவென்கையயின்முகப்பகழியம்மா (உ0)

அறிகிலைபோலுமையவமரொனக்கஞ்சிப்போன
எறிசுடர்நேமியான்வந்தெதிர்ப்பினுமென்கைவாளிப்
பொறிபடச்சுடர்கடியப்போவனபோக்கிலாத
மறிகடல்கடையவந்தமணிகொலாம்பூணமார்பில். (உக)

கொற்றவனிமையோர்கோமான்குரக்கினதுருக்கொண்டானேல்
அற்றைநாளவன்முன்விட்டவயிற்படையறுத்துமாற்ற
இற்றவான்சிறையவாகிவிழுந்துபோயெழுந்துவீங்காப்
பொற்றைமால்வரைகளோவென்புயநெடும்பொருப்புமம்மா. (உஉ)

உள்ளமேஊதுசெல்லவுயிரன்றுருறையுண்டும்
கள்ளமாமகளிர்சோரநேமிப்புள்கவற்சிநீங்கக்
கொள்ளைபூண்டமரர்வைகுங்குன்றையுங்கோட்டிற்கொண்ட
வெள்ளநீர்வடிநததென்னவீங்கிருள்விடிந்ததன்றே. (உங)

இன்னதோர்தன்மைத்தாமென்றெட்டியும்பார்ப்பவஞ்சிப்
பொன்மதிட்புறத்துநாளும்போகின்முன்போர்மேற்கொண்டு
மன்னவர்க்கரசன்வந்தான்வலியமாலென்றுதானும்
தொன்னகர்காண்பான்போலக்கதிரவன்முேற்றஞ்செய்தான். (உச)

அருந்ததியனையநங்கையவ்வழியிருந்தாளென்று
பொருந்தியகாதறூண்டப்பொன்னகர்காண்பூான்போலப்
பெருந்துணைவீரர்சுற்றத்தம்பியும்பின்புசெல்ல
இருந்தமான்மலையினுச்சியேறினனிராமனிப்பால். (உ௫)

செருமலிவீரரெல்லாஞ்சேர்ந்தனர்மருங்குசெல்ல
இருதிறல்வேந்தர்தாங்குமிணைநெடுங்கமலக்கையான்
பொருவலிவயவெஞ்சீயம்யானையும்புலியுஞ்சுற்ற
அருவரையிவர்வதாங்கோரரியரசனையனுனன். (உ௬)

கதமிகுத்திரைத்துப்பொங்குங்கனைகடலுலகமெல்லாம்
புதையச்செய்யிருளிற்பொங்குமரக்கர்தம்புரமும்பொற்பும்
சிதையச்செய்குறியைக்காட்டிவடதிசைச்சிகரக்குன்றின்
உதயத்தையொழியத்தோன்றுமொருகருஞாயிறெுத்தான். (உ௭)

துமிலத்திண்செருவின்வாளிப்பெருமழைசொரியத்தோன்றும்
விமலத்திண்சிலையினுண்டோர்வெற்பினைமேயவீரன்
அமலத்திண்கரமுங்காலும்வதனமுங்கண்ணுமான
கமலத்திண்காடுபூத்தகாளமாமேகமொத்தான். (உ௮)

மற்குவடனையதிண்டோண்மானவன்மானமில்லாக்
கற்குவடடுக்கிவாரிக்கடலினைக்கடந்தகாட்சி
நற்குவடனையவீரரீட்டத்தினடுவினின்முன்
பொற்குவட்டிடையேதோன்றுமரகதக்குன்றம்போன்முன். (உ௯)

அணைநெடுங்கடலிற்றேன்றவாற்றியசீற்றத்தையன்
பிணைநெடுங்கண்ணியென்னுமின்னுயிர்துறந்தபின்னைத்
துணைபிரிந்தயருமன்றிற்சேவலிற்றுளங்குகின்முன்
இணைநெடுங்கமலக்கண்ணுலிலங்கையையெய்தக்கண்டான். (௩0)

நந்திருநகரோயாதிவேறுளநகர்கட்கெல்லாம்
வந்தபேருவமைகூறிவழுத்துவானமைந்தகாலை
இந்திரனிருக்கையென்பரிலங்கையையெடுத்துக்காட்டார்
அந்தரமுணர்தறேற்றுரருங்கவிப்புலவரம்மா. (௩௧)

பழுதறவிளக்குஞ்செம்பொற்றலத்திடைப்பரிதிநாண
முழுதெரிமணியிற்செய்துமுடிந்தனமுனைவராலும்
எழுதருவகையவாயவியைவனவியையச்செய்த
தொழிறெரிகிலவாற்றங்கட்சுடர்மணிக்கற்றைசுற்றி. (௩௨)

விரிகின்றகதிரவாகிமிளிர்கின்றமணிகள்வீசச்
சொரிகின்றசுடரின்சும்மைவிசும்புறத்தொடருந்தோற்றம்
அரியென்றவெற்றியாற்றன்மாருதியமைத்ததீயால்
எரிகின்றதாமேகாணிக்கொடிநகரிருந்ததின்னும். (௩௩)

மாசடைபரந்தமானமரகதத்தலத்துவைத்த
காசடைசமைந்தமாடங்கதிர்த்தழைக்கற்றைசுற்ற
ஆசடைகுன்றவெள்ளியகன்மனையன்னமாகப்
பாசடைப்பொய்கைபூத்தபங்கயநிகர்ப்பபாராய். (௩௪)

தீச்சிகைசிவணுஞ்சோதிச்செம்மணிச்செய்ததூணில்
தூச்சுடர்மாடமீண்டித்துறுதலாற்கருமைதோன்று
மீச்செலுமேகமெல்லாம்விரிசுடரிலங்கைவேறு
காய்ச்சியவிரும்புமானச்சேர்ந்தவையொளிர்வகாணாய். (௩௫)

விற்படிதிரடோள்வீரநோக்குதிவெங்கண்யானை
அற்படிநிறத்தவேனுமாடகத்தலத்தையர்க்கக்
கற்படிவயிரத்திண்கானகங்களிற்கல்லிக்கையால்
பொற்பொடியென்னவீசிப்பொன்மலையென்னப்போவ. (௩௬)

பூசல்விற்குமரநோக்காய்புகரறவிளங்கும்பொற்பின்
காசுடைக்கவரிக்கற்றைக்கால்களாற்கதுவுகின்ற
வீசுபொற்கொடிகளெல்லாம்விசும்பினிருந்தமேக
மாசறத்துடைத்தவ்வானம்விளக்குவபோலுமாதோ. (௩௭)

நூல்படத்தொடர்ந்தபைம்பொற்சித்திரநுனித்தபத்திக்
கோல்படுமணிகளாயகுலமணியெவையுங்கூட்டிச்
சால்படுத்தரக்கன்மாடத்தனிமணிநடுவட்சார்த்தி
மால்கடற்கிறைவன்பூண்டமாலைபோன்றுளதிம்மூதூர். (௩௮)

நன்னெறியறிஞநோக்காய்நளிநெடுந்தெருவினுப்பண்
பன்மணிமாடப்பத்திநிழல்படப்படர்வபண்பால்
தந்நிறந்தெரிகிலாதவொருநிறஞ்சார்கிலாத
இன்னதோர்குலத்தவென்றுபுலப்படாபுரவியெல்லாம். (௩௯)

வீரநீபாராய்மெல்லென்பளிங்கிநுல்விளங்குகின்ற
மாரனுமருளச்செய்தமாளிகைமற்றோர்சோதி
சேர்தலுந்தெரிவவன்றேற்றோர்கிலாதெரிந்தகாட்சி
நீரினுலியன்றவென்னநிழலெழுகின்றநீர்மை. (௪௰)

கோனிறக்குனிவிற்செங்கைக்குமரனேகொழுவெண்டிங்கட்
கானிறக்கதிர்வெண்டிங்கடெற்றியவாயகாட்சி
வானிறத்தவளப்பந்தர்மரகதநவெண்வைத்த
பானிறப்பரவைவைகும்பரமனைநிகர்ப்பபாராய். (௪௧)

கோளவாவரியேறன்னகுரிசிலேகொள்ளநோக்காய்
நாளவாமின்றோய்மாடத்தும்பரோர்நாகர்பாவை
கோளவாவுறையின்வாங்குங்கண்ணடிவிசும்பிற்கவ்வி
வாளராவிழுங்கிக்காலுமதியினைநிகர்ப்பபாராய். (௪௨)

கொற்றவான்சிலைக்கைவீரகொடியுடைமாடக்குன்றை
உற்றவான்கழுத்தவாயவொட்டகம்வைத்தநம்பல்
செற்றியமணிகளின்றசுடர்களைச்சேதாரத்தின்
கற்றையந்தளிர்களென்னக்கவ்வியமிமிர்வகாணாய். (௪௩)

வாகைவெஞ்சிலைக்கைவீரமலர்க்குழல்வடிக்குமாலைத்
தோகையரிட்டதூமத்தகிற்புகைமுழுதுஞ்சுற்ற
வேகவெங்களிற்றின்வன்றோன்மெய்யுறப்போர்த்ததையல்
பாகனிற்பொலிந்துதோன்றும்பவளமாளிகையைப்பாராய். (௪௪)

காவலன்பயந்தவீரக்கார்முகக்களிறேகற்ற
தேவர்தந்தச்சனீலக்காசினுற்றிருந்தச்செய்த
ஈவதுதெரியாவுள்ளத்திராக்கதரீட்டிவைத்த
பாவபண்டாரமன்னசெய்குன்றம்பலவும்பாராய். (௪௫)

பிணைமதர்த்தனையநோக்கம்பாழ்படப்பிடியுண்டன்பிற்
றுணைவனைப்பிரிந்துபோந்துமருங்கெனத்துவளுமுள்ளம்
பணைமயிர்ப்பெய்துமல்குற்பாவையர்பருவநோக்கும்
கணமயிற்குழுவினம்மைக்காண்கின்றார்தம்மைக்காணாய். (௪௬)

நாண்மலர்த்தெரியல்வீரநம்படைகாணவானத்
தியாழ்மொழித்தெரிவைமாருமைந்தருமேறுகின்றார்
வாழ்வினிச்சமைந்ததன்றேயென்றுமாநகரையெல்லாம்
பாழ்படுத்திரியல்போவாரொக்கின்றபரிசுபாராய். (௪௭)

இன்னவாறிலங்கைதன்னையிளையவற்கிராமன்காட்டிச்
சொன்னவாசொல்லாவண்ணமதிசயந்தோன்றுங்காலை
அன்னமாநகரின்வேந்தனரிகுலப்பெருமைகாண்பான்
சென்னிவான்றடவுஞ்செம்பொற்கோபுரத்தும்பர்சேர்ந்தான். (௪௮)

இலங்கைகாணபடலம்முற்றிற்று. ஆக திருவிருத்தம், ௫௦௩.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௧௦-வது. இராவணன்தானைகாண்படலம்

கவடுகப்பொருதகாய்களிறன்னான்
அவடுயச்கின்மலரம்புறவெம்பும்
சுவடுடைப்பொருவிறேள்கொடநேகம்
குவடுடைத்தனியொர்குன்றெனநின்றான். (௧)

பொலிந்ததாகுமிதுபோரெனலோடும்
மலிந்தநங்கையெழிலால்வலிநாளும்
மெலிந்ததோள்கள்வடமேருவின்மேலும்
வலிந்துசெல்லமிசைசெல்லுமனத்தான். (௨)

செம்பொன்மௌலிசிகரங்கடயங்க
அம்பொன்மேருவரைகோபுரமாக
வெம்புகாலினைவிழுங்கிடமேனுள்
உமர்பர்மீதுமிமிர்வாசுகியொத்தான். (ங)

தொக்கபூதமவையைந்தொடுதன்னிட்
டொக்கநின்றதிசையொன்பதொடொன்றும்
பக்கமுங்நிழல்பரப்பிவியப்பால்
மிக்கநின்றகுடைமீதுவிளங்க. (ச)

கைத்தருங்கவரிவீசியகாலால்
நெய்த்திருண்டுயருநீள்வரைமீதில்
தத்திவீழருவியின்றிரள்சால
உத்தரீகநெடுமார்பினுலாவ. (ரு)

வானகத்தினினுருப்பசிவாசத்
தேனகத்தருதிலோத்தமைசெவ்வாய்
மேனகைக்குலவரம்பையர்யாரும்
சானகிக்கழகுதந்தயல்சார. (சு)

வீழியின்கனியிதழ்ப்பணைமென்றோள்
ஆழிவந்தவரமங்கையரைஞ்ஞூற்
றேழிரண்டினிரண்டுபயினரோர்
சூழிரண்டுபுடையும்முறைசுற்ற. (எ)

முழைபடிந்தபிறைமுன்னெயிற்றோள்வாள்
இழைபடிந்தவிளவெண்ணிலவீனக்
குழைபடிந்ததொருகுன்றின்முழங்கா
மழைபடிந்தனையதொங்கல்வயங்க. (அ)

ஓதுநூல்கள்செவியின்வழியுள்ளும்
சீதைசீதையெனுமாருயிர்தேய
நாதவீணையிசைநாரதர்பாட
வேதகீதவமுதள்ளிவிழுங்க (கூ)

வெங்கரத்தரயில்வாளினர்வில்லோர்
சங்கரற்கும்வலிசாய்வில்வலத்தோர்
அங்கரக்கர்சதகோடியமைந்தோர்
பொங்கரத்தவிழியோர்புடைசூழ. (க0)

கல்விலங்கையுலகங்கவர்கிற்போர்
நல்விலங்கைமுதலோர்நவையில்லோர்
சொல்விலங்குசதகோடிதொடர்ந்தோர்
வில்விலங்குபடையோர்புடைவிம்ம. (கக)

பாரியங்குநர்விசும்புபரந்தோர்
வாரியெங்குமழையின்குரன்மானும்
பேரியங்கண்முருடாகுளிபெட்கும்
தூரியங்கடலினின்றுதுவைப்ப. (௧௨)

நஞ்சமஞ்சுவிழிநாகியர்நாண
வஞ்சியஞ்சுமிடைமங்கையர்வானத்
தஞ்சொலின்சொலினரம்பையரோடும்
பஞ்சமஞ்சிவணுமின்னிசைபாட. (௧௩)

நஞ்சுகக்கியெரிகண்ணினர்நாமக்
கஞ்சுகத்தர்கதைபற்றியகையர்
மஞ்சுகக்குமுறுசொல்லினர்வல்வாய்ச்
சிஞ்சுகத்தின்விசையோர்திசைசெல்ல. (௧௪)

கூயுரைப்பகுலமால்வரையேனும்
சாயுரைப்புரியவாயதடந்தோள்
வாயுரைத்தகலவைக்களிவாசம்
வேயுரைப்பதெனவந்துவிளம்ப. (௧௫)

வேத்திரத்தரெரிவீசிவிழிக்கும்
நேத்திரத்தரிறைநின்றுழிநில்லாக்
காத்திரத்தர்மனைகாவல்விரும்பும்
சூத்திரத்தர்பதினாயிரர்சுற்ற. (௧௬)

தோரணத்தின்மணிவாயின்மிசைச்சூல்
நீரணைத்தமுகிலாமெனநின்றான்
ஆரணத்தையரியைம்மறைநேடும்
காரணத்தைநிமிர்கண்கொடுகண்டான். (௧௭)

மடித்தவாயினன்வயங்கெரிவந்து
பொடித்திழிந்தவிழியன்னதுபோழ்தின்
இடித்தவன்றிசையெரிந்ததுநெஞ்சம்
துடித்தகண்ணினொடிடத்திரடோள்கள். (௧௮)

ஆகராகவனையவ்வழிகண்டான்
மாகராகரிறைவாளொளியோனை
ஏகராசியினிலெய்தவெதிர்க்கும்
வேகராகுவெனவெம்பிவெகுண்டான். (௧௯)

ஏனையோனிவனிராமனெனத்தன்
மேனியேயுரைசெய்கின்றதுவென்றிச்
சேனைவீரர்படையைத்தெரியென்று
தான்வினவவெதிர்சாரன்விளம்பும். (௨0)

இங்கிவன்படையிலங்கையர்மன்னன்
தங்கையென்னனுமுதிர்ந்தசலத்தால்
அங்கைவாள்கொடவளாகம்விளங்கும்
கொங்கைநாசிசெவிகொய்துகுறைத்தான். (௨௧)

அறக்கணென்பதொருகண்ணிலனாகி
நிறக்கருங்கடலுனேமியினின்று
துறக்கமெய்தியவருந்துறவாத
உறக்கமென்பதனையோடமுனிந்தான். (௨௨)

கையவன்றொடவமைந்தகரத்தான்
நையவாலியொடிவண்டநடுங்கச்
செய்தவன்செருவினிற்றிகழ்கின்றான்
வெய்யவன்புதல்வன்யாரினும்வெய்யோன். (௨௩)

தந்தைமற்றையவன்சார்வில்வலத்தோர்
அந்தரத்தரமுதார்கலிகாண
மந்தரத்தினொடும்வாசுகியோடும்
சுந்தரப்பெரியதோள்கடிரித்தான். (௨௪)

நடந்துநின்றவனருங்கதிர்முன்பு
தொடர்ந்தவனுலகுசுற்றுமெயிற்றின்
இடந்தெழுந்தவனையொத்தவன்வேலை
கடந்தவன்சரிதைகண்டனையன்றே. (௨௫)

நீலனின்றவனெருப்பின்மகன்றன்
சூலமுங்கயிறுமின்மைதொடர்ந்தோன்
ஆலமொன்றுநிறமென்றயலோனைக்
காலனென்பரிவனைக்கருதாதார். (௨௬)

வேறு.

வேறுகநின்றானளனென்னும்விலங்கலன்னான்
ஏறுவருணன்வழிதந்திலனென்றிராமன்
சீறுதவுள்ளத்தெழுசீற்றமிகுந்தசோதி
ஆறுதமுன்னமகன்வேலையையாறுசெய்தான். (௨௭)

முக்காலமுமொய்ம்மதியான்முறையினுணர்வான்
புக்காலமெழப்புணரிப்புலவோர்கலக்கும்
அக்காலமுள்ளான்கரடிக்கரசாகின்றான்
இக்காலநின்றுமுலகேழுமெடுக்கவல்லான். (௨௮)

சேனாபதிதன்னயலேயிருள்செய்தகுன்றின்
ஆனாமருங்கேயிரண்டாடகக்குன்றினின்றார்
ஏனோரிலிராமனிலக்குவனென்னுமீட்டார்
வானோர்தமருத்துவன்மைந்தர்வலிக்கண்மிக்கார். (௨௯)

உவன்காண்குமுதன்குமுதாக்கனுமுங்கவன்காண்
இவன்காண்கவயன்கவயாக்கனுமீங்கிவன்காண்
சிவன்காணயன்காணெனுந்தூதனைப்பெற்றசெல்வன்
அவன்காணெனுங்கேசரியென்பவனாற்றன்மிக்கான். (௩0)

முரபன்னகுதோளவன்மூரிமடங்கலென்னக்
கூரபன்னகமன்னவைமின்னுகக்காந்துகின்றான்
வரபன்னகந்தன்னையும்வேரொடும்வேண்டினவாங்கும்
சரபன்னிவனிவன்சுதவலியாயதக்கோன். (௩௧)

வேறு.

மூன்றுகண்ணிலனாயினுமூவெயிலெரித்தோன்
போன்றுநின்றவன்பனசனிப்போர்க்கெலாந்தானே
ஏன்றுநின்றவனிடபன்மற்றிவன்றனக்கெதிரோ
தோன்றுகின்றவன்சுசேடனென்றறிவொடுதொடர்ந்தோன். (௩௨)

வெதிர்கொள்குன்றெலாம்வேரொடும்வாங்கிமேதினியை
முதுகுநொய்தெனச்செய்தவன்கனலையுமுனிவோன்
கதிரவன்மகற்கிடமருங்கேநின்றகாளை
ததிமுகன்னவன்சங்கனென்றுரைக்கின்றசிங்கம். (௩௩)

அண்ணல்கேளிதற்கவதியுமளவுமொன்றுளதோ
விண்ணின்மீனினைக்குணிப்பினும்வேலையின்மீனை
எண்ணினோக்கினுமக்கடன்மணலினையெல்லாம்
கண்ணினாடினுங்கணக்கிலதென்றனன்காட்டி. (௩௪)

சினங்கொடிண்டிறலரக்கனுஞ்சிறுநகைசெய்தான்
புனங்கொள்புனறலைக்குரங்கினைப்புகழுதிபோலாம்
வனங்களும்படர்வரைதொறுந்திரிதருமானின்
இனங்களும்பலவெண்செயுமரியினையென்றான். (௩௫)

என்னும்வேலையிலிராவணற்கிளவலையிராமன்
கன்னிமாமதிணகர்நின்றுநம்பலங்காண்பான்
முன்னிவானினுமூடிநின்றார்களைமுறையால்
இன்னநாமத்தரினையவொன்றியம்புதியென்றான். (௩௬)

நாறுதன்குலக்கிளையெலாநரகத்துணடுவான்
சேறுசெய்துவைத்தானும்பர்திலோத்தமைமுதலாக்
கூறுமங்கையர்குழாத்திடைக்கோபுரக்குன்றத்
தேறிநின்றவன்புன்றொழிலிராவணனென்றான். (௩௭)

சுருதிமற்றொன்றுகழறுதன்முன்விழிக்கனல்கள்
பொருதுபுக்கனன்முந்துறச்சூரியன்புதல்வன்
சுருதியன்னவள்சிவந்தநன்கனியென்றுசொல்லப்
பரிதிமேற்பண்டுபாய்ந்தவனுமெனப்பாய்ந்தான். (௩௮)

சுதையத்தோங்கியசுவேலத்தினுச்சியைத்துறந்து
சிதையத்திண்டிறலிராவணக்குன்றிடைச்சென்றான்
ததையச்செங்கரம்பரப்பியதன்பெருந்தாதை
உதையக்குன்றினின்றுகுன்றிற்பாய்ந்தவனொத்தான். (ரு௯)

பள்ளம்போய்ப்புகுங்கரியெனப்படியிடைப்படிந்து
தள்ளும்போற்கிரிசலிப்புறக்கோபுரஞ்சார்ந்தான்
வெள்ளம்போற்கணணியமுதலுமிராவணன்மேற்றன்
உள்ளம்போற்செலுங்கலுழனுக்கரசனுமொத்தான். (சo)

கரியகொண்டலைக்கருணையங்கடலினைக்காணப்
பெரியகண்கள்பெற்றுவக்கின்றவரம்பையர்பிறரும்
உரியகுன்றிடையுருமிடிவீழ்தலுமுலைவுற்
றிரியல்போயினமயிற்பெருங்குலமெனவிரிந்தார். (சக)

இராவணன்தானைகாண்படலம்முற்றிற்று.ஆ_திருவிருத்தம்-அசச.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## கக-வது-மகுடபங்கப்படலம்.

காலவிருள்சிந்துகதிரோன்மதலைகண்ணுற்
றேலவெதிர்சென்றடலிராவணனையெய்தி
சீலமலைமுன்கயிலைநின்றதெனநின்றான்
ஆலவிடமன்றுவரநின்றசிவனன்னான். (க)

இத்திசையின்வந்தபொருளென்னெனவியம்பத்
தத்தியெதிர்சென்றுதிசைவென்றுயர்தடந்தோள்
பத்தினொடுபத்துடையவனுடல்பதைப்பக்
குத்தினனுரத்தினிமிர்கைத்துணைகுளிப்ப. (உ)

திருகியசினத்தொடுசெறுத்தெதிர்விழித்தான்
ஒருபதுதிசைக்கணுமொலித்தவொலியொப்பத்
தருவனமெனப்புடைதழைத்துயர்தடக்கை
இருபதுமெடுத்துருமிடித்தெனவடித்தான். (௩)

அடித்தவிரல்பட்டவுடலத்துழியரத்தம்
பொடித்தெழவுறுக்கியெதிர்புக்குடல்பொருத்திக்
கடுத்தவிசையிற்கடிதெழுந்துகதிர்வேலோன்
முடித்தலைகள்பத்தினுமுகத்தினுமுதைத்தான். (ச)

உதைத்தவனடித்துணைபிடித்தொருகணத்தில்
பதைத்தலைவுறப்பலதிறத்திகல்பரப்பி
மதக்கரியையுற்றரிநெரித்தெனமயக்கிச்
சுதைத்தலனிடைக்கடிதடிக்கொடுதுகைத்தான். (௫)

துகைத்தவனுடற்பொறைசுறுக்கொளவிறுக்கித்
தகைப்பெருவலத்தொடுதலத்திடையமுக்கி
வகைப்பிறைநிறத்தெயிறுடைப்பொறிவழக்கிக்
குகைப்பொழிபுதக்குருதிகைக்கொடுகுடித்தான். (சு)

கைக்கொடுகுடித்தவனுடற்கனகவெற்பைப்
பைக்கொடுமிடற்றரவெனப்பலகைபற்றி
மைக்கொடுநிறத்தவன்மறத்தொடுபுறத்தில்
திக்கொடுபொருப்புறநெருப்பொடுதிரித்தான். (எ)

திரித்தவனூரத்தினுயிர்செற்றும்வகைகுத்திப்
பெருத்துயர்தடக்கையொடடித்திடைபிடித்துக்
கருத்தழியவுற்றெதிர்நெரித்தெயில்கணத்தன்
றெரித்தவனையொத்தவனெடுத்தகழியிட்டான். (அ)

இட்டவனையிட்டவகழிற்கடிதினிட்டான்
தட்டவுயரத்தினிமிருந்தசமுகத்தோன்
ஒட்டவுடனேயவனும்வந்தவனையுற்றான்
விட்டிலர்புரண்டிருவரோரகழின்வீழ்ந்தார். (கூ)

விழுந்தனர்சுழன்றனர்வெகுண்டனர்திரிந்தார்
அழுந்தினரழுந்திலரகன்றிலரகன்றார்
எழுந்தனரெழுந்திலரெதிர்ந்தனர்முதிர்ந்தார்
ஒழிந்தனரொழிந்திலருணர்ந்திலர்களொன்றும். (க0)

அந்தரவருக்கன்மகனுழியகழாகச்
சுந்தரமுடைக்கரம்வலிப்பதொர்சுழிப்பட்
டெந்திரமெனத்திரியிரக்கமிலரக்கன்
மந்தரமெனக்கடையும்வாலியையுமொத்தான். (கக)

ஊறுபடுசெம்புனலுடைந்தகழையுற்ற
ஆறுபடுகின்றனவெனப்படரவன்றூர்
பாறுபொருகின்றனபருந்திவையெனப்போய்
ஏறினர்விசும்பிடையிரிந்தவுலகெல்லாம். (கஉ)

ஆரநெடுவானின்மலையுஞ்சுடரவன்சேய்
காரினெடுமேருநிகர்காய்சினவரக்கன்
தாருடையதோள்கள்பலவுந்தழுவநின்றான்
ஊரினெடுகோள்கதுவுதாதையையுமொத்தான். (கங)

பொங்கமர்விசும்பிடையுடன்றுபொருபோழ்தில்
செங்கதிரவன்சிறுவனைத்திரள்புயத்தால்
மங்கல்வயங்கொளிமறைத்தவலரக்கன்
வெங்கதிர்கரந்ததொருமேகமெனலானான். (கச)

நூபுரமடந்தையர்கிடந்தலறநோனுர்
மாபுரமடங்கலுமிரிந்தயரவன்ருள்
மேபுரமடங்கலெனவெங்கதிரவன்சேய்
கோபுரமடங்கவிடியத்தனிகுதித்தான். (கரு)

ஒன்றுறவிழுந்தவுருமைத்தொடரவோடா
மின்றெரியெயிற்றினொருமேகம்விழலென்னத்
தின்றிடுவெனென்றெழுசினத்திறலரக்கன்
பின்ருெடரவந்திருகரத்துணேபிடித்தான். (கசு)

வந்தவனேநின்றவன்வலிந்தெதிர்மலேந்தான்
அந்தகனுமஞ்சிடநிலத்திடையறைத்தான்
எந்திரமெனக்கடிதெடுத்தவனெறிந்தான்
கந்துகமெனக்கடிதெழுந்தெதிர்கலந்தான். (கஎ)

படிந்தனமரந்தரைபகிர்ந்தனபரப்பும்
கொடுஞ்சினமுதிர்ந்தனருரத்தின்மிசைகுத்த
நெடுஞ்சுவர்பிளந்தனநெரிந்தமிமிர்குன்றம்
இடிந்தனதகர்ந்தனவிலங்கைமதிலெங்கும். (கஅ)

செறிந்துயர்கறங்கனேயமேனிநிலேதோரார்
பிறிந்தனர்பொருந்தினரொனத்தெரிதல்பேணுர்
எறிந்திலர்களெய்திலர்களின்னரொனமுன்னின்
றறிந்திலரரக்கருமமர்த்தொழிலயர்த்தார். (கசு)

வேறு.

இன்னதோர்தன்மையெய்துமளவையினெழிலிவண்ணன்
மன்னுயிரனேயகாதற்றுணேவனேவரவுகாணுன்
உன்னியகருமமெல்லாமூன்னெடுமுடிந்ததென்னத்
தன்னுணர்வழிந்துசிந்தையலம்வந்துதளர்ந்துசாய்ந்தான். (உ0)

ஒன்றியவுணர்வேயாயவோருயிர்த்துணேவவுன்னே
இன்றியானுளனுய்நின்றெுன்றியற்றுவதியைவதன்ருல்
அன்றியுந்துயரத்திட்டாயமரரையரக்கர்க்கெல்லாம்
வென்றியுங்கொடுத்தாயென்னேக்கெடுத்தன்வெகுளியென்ருன். (உக)

தெய்வவெம்படையுந்திராமாயையும்வல்லதீயோன்
கையிடைப்புக்காய்நீவேறெவ்வண்ணங்கடத்திகாவல்
வையமோரேழும்பெற்ருல்வாழ்வெனேவாராயாகின்
உய்வெனேதமியனேனுக்குயிர்தந்தவுதவியோனே. (உஉ)

ஒன்ருகநினேபவொன்ருய்விளேந்ததென்கருமமந்தோ
என்ருலும்யானேவாழேனீயிலேயெனவுங்கேளேன்
இன்ருயபழியுநிற்கநெடுஞ்செருக்களத்திெனன்னேக்
கொன்ருய்நீயன்ருேநின்னேக்கொல்லுமேற்குணங்கூடியோன். (உ௩)

இறந்தனையென்றபோதுமிருந்தியானரக்கனென்பார்
திறந்தனையுலகினீக்கிப்பின்னுயிர்தீர்வெனேனும்
புறந்தருபண்பினுயவுயிரொடும்பொருந்தினானை
மறந்தனன்வலியனென்பாராதலாலதுவுமாட்டேன். (உச)

அழிவனசெய்தாயையவன்பினாலளியற்றேனுக்
கொழிவருமுதவிசெய்தவுன்னையானொழியவாழ்தல்
எழுபதுவெள்ளந்தன்னிலொருவருமெஞ்சாதேகிச்
செழுநகரடையினன்றேவித்துயர்தீர்வதென்றான். (உரு)

என்றவனிரங்குங்காலத்திருவருமொருவர்தம்மில்
வென்றிலர்தோலாராகிவெஞ்சமம்விளைக்கும்வேலை
வன்றிறலரக்கன்மௌலித்தனிமணிவாயில்வாங்கிப்
பொன்றினனாகினன்றென்றவன்வெட்கவிவனும்போந்தான். (உசு)

கொழுமணிமுடிகடோறுங்கொண்டனகுழுவின்கூட்டம்
அழுதயருறுகின்றான்றனடித்தலமதனிற்சூட்டித்
தொழுதவனணிகின்றான்றாயவரிருவரோடும்
எழுபதுவெள்ளயாக்கைக்கோருயிரொய்திற்றன்றே. (உஎ)

என்புறக்கிழிந்தபுண்ணினிழிபெருங்குருதியோடு
புன்புலத்தரக்கன்றன்னைத்தீண்டியதீமைபோக
அன்பனையமரப்புல்விமஞ்சனமாட்டிவிட்டான்
தன்பெருநயனமென்னுந்தாமரைசொரியுநீரால். (உஅ)

ஈர்கின்றதன்றேயென்றனுள்ளத்தையிங்குமங்கும்
போகின்றதாவியாக்கைபெயர்கின்றதில்லைப்பின்னைத்
தேர்கின்றசிந்தையொன்றேதிகைத்தனையென்றுதெண்ணீர்
சோர்கின்றவருவிக்கண்ணான்றுணைவனைநோக்கிச்சொல்லும். (உக)

கல்லினும்வலியதோளாய்நின்னையக்கருணையில்லோன்
கொல்லுதல்செய்தானேற்றீக்கொடுமையாற்குற்றம்பேணிப்
பல்பெரும்பகழிமாரிவேறொடும்பறியநூறி
வெல்லினுந்தோற்றேன்யானேயல்லெனோவிளிந்திலாதேன். (௩0)

பெருமையும்வண்மைதானும்பேரெழிலாண்மைதானும்
ஒருமையினுணரநோக்கிற்பொறையினதாற்றமன்றே
அருமையுமடர்த்துநின்றபழியையுமடர்த்தாய்போல
இருமையுங்கெடுக்கலுற்றாயென்னினைந்தென்செய்தாய்நீ. (௩க)

இந்நிலைவிளைவினெய்தாதித்துணைதாழ்த்தியர்யின்
நன்னுதற்சீதையாலென்ஞாலத்தாற்பயனென்னம்பி
உன்னையான்றொடர்வெனென்னைத்தொடருமிவ்வுலகமென்றால்
பின்னையேனிதனைநோக்கிவிளையாடிப்பிழைப்பசெய்தாய். (௩உ)

என்றனனென்றலோடுமிணையடியிறைஞ்சியாங்குக்
குன்றுறழ்குவவுத்திண்டோட்கொற்றவல்வீரக்காணத்
தன்றனியுள்ளநாணுற்றழல்விழிக்கொலைவெஞ்சீயம்
நின்றெனவெருத்தங்கோட்டிநிலனுறநோக்கிக்கூறும். (௩௩)

காட்டிலேகழுகின்வேந்தன்செய்தனகாட்டகில்லேன்
நாட்டிலேகுகனுர்செய்தநன்மையைநயக்கமாட்டேன்
கேட்டிலேனின்றுகண்டுங்கிளிமொழிமாதராளை
மீட்டிலேன்றலைகள்பத்துங்கொணர்ந்திலேன்வெறுங்கைவந்தேன். (௩௪)

வன்பகைநிற்கநங்கள்வானரத்தொழிலுக்கேற்ற
புன்பகைகாட்டும்யானேபுகழ்ப்பகைக்கொருவன்போலாம்
என்பகைதீர்த்தென்னுவியரசொடுமெனக்குத்தந்த
உன்பகையுனக்கேதந்தேனுயிர்சுமந்துழலாநின்றேன். (௩௫)

செம்பொக்குஞ்சிவந்தசெங்கட்டிசைசிலைக்களிற்றின்சீற்றக்
கொம்புக்குங்குறைந்ததுண்டேயென்னுடைக்குரக்குப்புன்றோள்
அம்புக்குமுன்புசென்றுன்னரும்பகைமுடிப்பலென்று
வெம்புற்றமனமும்யானுந்தீதின்றிமீளவந்தேன். (௩௬)

நூல்வலிகாட்டுஞ்சிந்தைநுன்பெருந்தூதன்வெம்போர்
வேல்வலிகாட்டுவோர்க்கும்வில்வலிகாட்டுவோர்க்கும்
வால்வலிகாட்டிப்போந்தவளநகர்புக்குமற்றென்
கால்வலிகாட்டிப்போந்தேன்கைவலிக்கவதியுண்டோ. (௩எ)

இன்னனபலவும்பன்னியிறைஞ்சியமுடியனாகி
மன்னவர்மன்னன்முன்புவானரமன்னனிற்ப
அன்னவன்றன்னைநோக்கியழகனைநோக்கியாழி
மின்னெனவிளங்கும்பைம்பூண்வீடணன்விளம்பலுற்றான். (௩அ)

வாங்கினமணிகளன்றன்றலைமிசைமௌலிமேலே
ஓங்கியவல்லவோமற்றினியப்பாலுயர்ந்ததுண்டோ
தீங்கிவன்சிரத்தின்மேலுமுயிரினுஞ்சீரியம்மா
வீங்கியபுகழையெல்லாம்வேரொடும்வாங்கிவிட்டாய். (௩௯)

பாரகஞ்சுமந்தபாம்பின்பணாமணிபறிக்கவேண்டின்
வார்கழற்காலினாலேகல்லவல்லவனைமன்ன
தார்கெழுமௌலிபற்றித்தனிமணிவலிதிற்றந்த
வீரதைவிடைவலோற்குமுடியுமோவேறுமுண்டோ. (௪௦)

கருமணிக்கண்டத்தான்றன்சென்னியிற்கறைவெண்டிங்கள்
பருமணிவண்ணன்மார்பிற்செம்மணிபறித்திட்டாலும்
தருமணியிமைக்குந்தோளாய்தசமுகன்முடியிற்றைத்த
திருமணிபறித்துத்தந்தவென்றியேசீரிதன்றே. (௪௧)

தொடிமணியிமைக்குந்தோளாய்சொல்லினிவேறுமுண்டோ
வடிமணிவயிரத்தொள்வாள்சிவன்வயின்வாங்கிக்கொண்டான்
முடிமணிபறித்திட்டாயோவவனினமுடிக்குமென்றிக்
கடிமணையிட்டாயன்றேயரிகுலத்தரசவென்றான். (௪௨)

வென்றியென்றென்றுமன்றுவீரற்குவிளம்பத்தக்க
நன்றியென்றென்றுமன்றுநானிலமெயிற்றிற்கொண்ட
பன்றியன்றாகினீதாரியற்றுவார்பரிவினென்னு
இன்றிவைவென்றியென்றென்றிராமனுமிரங்கிச்சொன்னான். (௪௩)

தன்றனிப்புதல்வன்வென்றித்தசமுகன்முடியிற்றைத்த
மின்றளிர்த்தனையபன்மாமணியினைவெளியிற்கண்டான்
ஒன்றொழித்தொன்றுமென்றவ்வரக்கனுக்கொளிப்பான்போல
வன்றனிக்குன்றுக்கப்பாலிரவியுமறையப்போனான். (௪௪)

கங்குல்வந்திறுத்தகாலைக்கைவிளக்கெடுப்பக்காவல்
வெங்கழலரக்கன்மௌலிவிளக்கமேவிளக்கஞ்செய்யச்
செங்கதிர்ச்செல்வன்செய்தவென்றியைநிறையத்தேக்கிப்
பொங்கியதோளினானுமிழிந்துபோயிருக்கைபுக்கான். (௪௫)

என்றானுமினையதன்மையெய்தாதவிலங்கைவேந்தன்
நின்றார்கடேவர்கண்டாரென்பதோர்நாணநீள
அன்றாயமகளிர்நோக்கமாடவர்நோக்கமாகப்
பொன்றாதுபொன்றினான்றன்புகழெனவிழிந்துபோனான். (௪௬)

மகுடபங்கப்படலம் முற்றிற்று ஆ திருவிருத்தம், ௩௱௯௦.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௧௨-வது·அணிவகுப்புப்படலம்.

மானத்தாலூன்றப்பட்டமருமத்தன்வதனமெல்லாம்
கூனற்றுமனையிற்றேன்றவானநெடுங்கோயில்புக்கான்
பானத்தானல்லன்றெய்வப்பாடலானல்லனுடற்.
றூனத்தானல்லன்மெல்லென்சயனத்தானுமாயுந்தாரான் (௧)

வையம்விற்றானேராமணியிழந்தனனேயானும்
பையணைத்துயிர்க்கும்வெவ்வாய்ப்பஃறலைப்பாம்பிற்பாலின்
மெய்யணைத்திரையும்வேலைமென்மலர்ப்பள்ளியான
ஐயனைப்பிரிந்துவைகுமநந்தனேயரக்கர்வேந்தன். (௨)

தாயினும்பழகினுருந்தன்னிலைதெரிக்கலாகா
மாயைவல்லுருவத்தான்முன்வருதலும்வாயில்காப்பான்
சேயவர்சேனைநண்ணிச்செய்திறந்தெரித்திநீயென்
றேயவனெய்தினனென்றரசனையிறைஞ்சிச்சொன்னான். (௩)

அழையெனவெய்திப்பாதம்வணங்கியவறிஞன்றன்னைப்
பிழையறவறிந்தவெல்லாமுரைத்தியென்றரக்கன்பேச
முழையுறசீயமன்னான்முகத்தினுலகத்தைநோக்கிக்
குழையுறுமெய்யன்பையவரன்முறைகூறலுற்றான். (௪)

வீரியவிதியினெய்திப்பதினெழுவெள்ளத்தோடும்
மாருதிமேலைவாயிலுழிஞைமேல்வருவதானான்
ஆரியன்மைந்தவெள்ளமத்தனையோடுநெற்றிச்
சூரியன்மைந்தன்றன்னைப்பிரியலனிற்கச்சொன்னான். (௫)

அன்றியும்பதினேழ்வெள்ளத்தரியொடுமரசன்மைந்தன்
தென்றிசைவாயில்செய்யுஞ்செருவெலாஞ்செய்வதானான்
ஒன்றுபத்தாறுவெள்ளத்தரியொடுந்துணைவரோடும்
நின்றனனீலனென்பான்குணதிசைவாயினெற்றி. (௬)

இம்பரினியைந்தகாயுங்கனியுங்கொண்டிரண்டுவெள்ளம்
வெம்புவெஞ்சேனைக்கெல்லாமுணவுதந்துழலவிட்டான்
உம்பியைவாயிற்றோறுநிலைதெரிந்துணரச்சொன்னான்
தம்பியுந்தானுநிற்பதாயினான்சமைவீதென்றான். (௭)

சார்த்தூலனிதனைச்சொல்லத்தழல்சொரிதறுகணானும்
பார்த்துளிவாடைபொங்கப்படுவதுபடுமாபார்த்தி
போர்த்துளிதுடைப்பெனானையவருடற்பொறையினின்றும்
தேர்த்தூறுகுருதிதன்னாலென்றனனெயிறுதின்னா. (௮)

மாவணைநீலக்குன்றத்திளவெயில்வளர்ந்ததென்னத்
தூவணைகுருதிச்செக்கர்ச்சுவடுறப்பொலிந்ததோளான்
ஏவணைவரிவிற்காமன்கணைபடவெரியாநின்ற
பூவணையாற்றவேறோர்புனைமணியிருக்கைபுக்கான் (௯)

செய்வனமுறையினெண்ணித்திறத்திறமுறையிற்றேறும்
மையறுமரபின்வந்தவமைச்சரைவருகவென்றான்
பொய்யெனப்பளிங்கினாயவிருக்கையின்புறத்தைச்சுற்றி
ஐயிரண்டாயகோடிபேய்க்கணங்காப்பவாக்கி. (௧௦)

அளந்தறிவரியராயவமைச்சரையடங்கநோக்கி
வளைந்ததுகுரங்கின்சேனைவாயில்கடோறும்வந்து
விளைந்ததுபெரும்போரொன்றுவிட்டதுவிடாதநம்மை
உளைந்தனவென்னவெண்ணியென்செயற்குரியவென்றான். (௧௧)

எழுபதுவெள்ளத்துற்றகுரங்கினமெயிலைமுற்றும்
தழுவினவென்றுசெய்யத்தக்கதுசமைதிபோலாம்
அழுவநீர்வேலையன்னதாயிரவெள்ளமன்றே
உழிஞையைத்தொடக்கநோக்கினுச்சிகைக்கொண்டுன்னார். (௧௨)

எழுமழுத்தண்டுவேல்வாளிலைநெடுஞ்சூலம்வென்றி
மழுமுதற்படைகளேந்தியிராககதர்முனைந்தபோது
தொழுதுதம்படைகண்முன்னிட்டோடுவார்சுரர்களென்னின்
விழுமிதுகுரங்குவந்துவெறுங்கையாற்கொள்ளும்வெற்றி. (௧௩)

ஈதிவர்நிகழ்ச்சியென்றுவெரிவிழித்திடியினக்குப்
பூதலத்தடித்தகையனிகும்பனென்றொருவன்பொங்கி
வேதனைக்காமமர்தோவேறொடுங்கெடுத்ததென்ன
மாதுலத்தலைவன்பின்னுமன்பினோர்மாற்றஞ்சொன்னான். (௧௪)

புக்கெரிமடுத்திவ்வூரைப்பொடிசெய்துபோயினாற்குச்
சக்கரமுண்டோகையிற்றசமுகன்றலைகளான
இக்கிரிபத்தின்மௌலியினமணியிடந்துகொண்ட
சுக்கிரிவற்குமுண்டோசூலமும்வாளும்வேலும். (௧௫)

தொடைக்கலந்திராமன்வாளிதோன்றுதன்முன்னந்தோன்ற
இடைக்கலமருதல்செய்யுமுலையினுடன்னையீந்து
படைக்கலமுடையநாமப்படையிலாப்படையையீண்ட
அடைக்கலம்புகுவதல்லாலினிப்புகுமரணுமுண்டோ. (௧௬)

என்புழிமாலிதன்னையெரியெழநோக்கியென்பால்
வன்பழிதருதிபோலாம்வரன்முறையறியாவார்த்தை
அன்பழிசிந்தைதன்னாலடாதனவறையலென்றான்
பின்பழியெய்தநின்றானவன்பின்னைப்பேச்சுவிட்டான். (௧௭)

காட்டியகாலகேயர்கொழுநிணக்கற்றைகாலத்
தீட்டியபடைக்கைவீரச்சேனையின்றலைவதெள்ளி
ஈட்டியபடைஞரோடுமிருநூறுவெள்ளங்கொண்டு
கீட்டிசைவாயினிற்றிநின்பெருங்கிளையினோடும். (௧௮)

காலன்றன்களிப்புத்தீர்த்தமகோதரகாலையேபோய்
மாலொன்றுமனத்துவீரமாபெரும்பக்கனோடும்
கூலங்கொள்குரங்கையெல்லாங்கொல்லுதிவெள்ளமான்
நாலைம்பதோடுஞ்சென்றுநமன்றிசைவாயினிற்றி. (௧௯)

ஏற்றமென்சொல்லினென்பாலிந்திரன்பகைஞவந்நாள்
காற்றினுக்கரசன்மைந்தன்கடுமைநீகண்டதன்றே
நூற்றிரண்டாயவெள்ளநும்பெருங்கிளைஞர்சுற்ற
மேற்றிசைவாயில்சேர்திவிடிவதன்முன்னம்வீர. (௨௦)

இந்நெடுங்காலமெல்லாமிமையவர்க்கிறுதிகண்டாய்
புன்னெடுங்குரங்கிற்சேறல்புல்லிதுபுகழுமன்றால்
அந்நெடுமூலத்தானையதனொடுமமைச்சரோடும்
தொன்னெடுநகரிகாக்கவிருபாக்கவென்னச்சொன்னான். (௨௧)

கடகரிபுரவியாடேர்கமலத்தோனுலகுக்கிப்பால்
புடையுளபொருதுகொண்டுபோர்பொரப்பொங்குகின்ற
இடையிடையிடைந்தசேனையிருநூறுவெள்ளங்கொண்டு
வடதிசைவாயில்காப்பேன்யானெனவகுத்துவிட்டான். (உஉ)

கலங்கியகங்குலாகிநீங்கியகற்பங்காணும்
நலங்கிளர்தேவர்க்கேயோநான்மறைமுனிவர்க்கேயோ
பொலங்கெழுசீதைக்கேயோபொருவலியிராமற்கேயோ
இலங்கையர்வேந்தற்கேயோவெல்லார்க்குஞ்செய்ததின்பம். (உ௩)

அளித்தகையில்லாவாற்றலமைந்தவன்கொடுமையஞ்சி
வெளிப்படவரிதென்றுன்னிவேதனையுழக்கும்வேலை
களித்தவர்களிப்புநீங்கக்காப்பவர்தம்மைக்கண்ணுற்
றொளித்தவர்வெளிப்பட்டென்னக்கதிரவனுதயஞ்செய்தான். (உ௪)

உளைப்புறுமோதவேலையோங்கலையொடுங்கத்தூர்ப்ப
அளப்பருந்தூளிச்சுண்ணமாசைகளலைப்பப்பூசல்
இளைப்பருந்தலைவர்முன்னமேவலினெயிலைமுற்றும்
வளைத்தனர்விடியத்தத்தம்வாயில்கடோறும்வந்து. (உ௫)

தந்திரமிலங்கைமூதூர்மதிலினைத்தழுவித்தாவி
அந்தரக்குலமீன்சிந்தவண்டமுங்கிழியவார்ப்பச்
செந்தனிச்சுடரோன்சேயுந்தம்பியுமுன்புசெல்ல
இந்திரன்றொழுதுவாழ்த்தவிராமனுமெழுந்துசென்றான். (உ௬)

நூற்கடற்புலவராலுநுனிப்பரும்வலத்ததாய
வேற்கடற்றானையானவிரிகடல்விழுங்கிற்றேனும்
கார்க்கடல்புறத்ததாகக்கவிக்கடல்வளைந்தகாட்சி
பாற்கடலமுவத்துள்ளதொத்ததப்பதகன்மூதூர். (உ௭)

அலகிலாவரக்கன்சேனையுகப்படவரியின்றானை
வலைகொலாமென்னச்சுற்றிவளைத்ததற்குவமைகூறின்
அலைகுலாம்பரவையேழுங்கால்கிளர்ந்தெழுந்தகாலத்
தலதெலாமொருங்குகூடியொதுங்கினவேயுமொத்த. (உ௮)

அணிவகுப்புப்படலம் முற்றிற்று ஆ திருவிருத்தம் ௬௬௮.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்,

## ௩௬-வது. அங்கதன் தூதுப்படலம்.

வள்ளலும்வினைவினெய்திவடதிசைவாயின்முற்றி
வெள்ளமோரேழுபத்துக்கணித்தவெஞ்சேனையோடும்
கள்ளனைவரவுநோக்கிநின்றனன் காண்கிலாதான்
ஒள்ளியதுணர்ந்தோனென்னவீடணற்குரைப்பதானான். (௧)

ஆதவனொருவன்றன்னையிவ்வழிவிரைவிற்றூண்டி
மாதினை விடுதியோவென்றுணர்த்தவேமறுக்குமாகின்
காதுதல்கடனென்றுள்ளங்கருதியதறனுமஃதே
நீதியுமஃதேயென்றான் கருணையினிலயமன்னான். (உ)

அரக்கர்கோனதனைக்கேட்டானழகிற்றேயாகுமென்றான்
குரக்கினத்தலைவனின்றான்கொற்றவர்க்குற்றதென்றான்
இரக்கமதிழுக்கமென்றானிளையவனினிநாமம்பு
துரக்குவதல்லால்வேறுசொல்லுண்டோவென்னச்சொன்னான். (௩)

தேசியைச்சிறையில்வைத்தான்றேவரையிடுக்கண்செய்தான்
பூசுரர்க்கலக்கணீந்தான்மன்னுயிர்புடைத்துத்தின்றான்
ஆசையினளவுமெல்லாவுலகமுந்தானேயாள்வான்
வாசவன்றிருவுங்கொண்டான்வழியலாவழிமேற்செல்வான். (சு)

வாழியாய்நின்னையன்றுவரம்பேறுதுயரின்வைகச்
சூழ்விலாமாயஞ்செய்துன்றேவியைப்பிரிவுசூழ்ந்தான்
ஏழைபாலிரக்கநோக்கியொருதனியிகன்மேற்சென்ற
ஊழிகாண்கிற்கும்வாணாளுந்தையையுயிர்பண்டுண்டான். (ரு)

அன்னவன்றனக்குமாதைவிடினுயிரருளுவாயேல்
என்னுடைநாமமிற்குமளவெலாமிலங்கைமூதூர்
மன்னவனீயேயென்றுவந்தடைந்தவற்குவாயால்
சொன்னசொலென்னுமுன்னஞ்சூளுறவென்னாதோன்றல். (சு)

அறந்தருதவத்தையாயுமறிவினாலவற்றைமுற்றும்
மறந்தனையெனினுமற்றையிலங்கையின்வளமைநோக்கி
இறந்ததுபோதநீதென்றிரங்கினையெனினுமெண்ணின்
சிறந்ததுபோரோயென்றான்சேவகன்முறுவல்செய்தான். (எ)

அயர்த்திலென்முடிவுமஃதேயாயினுமறிஞராய்ந்த
நயத்துறைநூலினீதிநாந்துறந்தமைதனன்றே
புயத்துறைவலியாரோனும்பொறையொடும்பொருந்திவாழ்தல்
சயத்துறையறனுமஃதேயென்றிவைசமையச்சொன்னான். (அ)

மாருதியின்னுஞ்செல்லின்மற்றிவனன்றிவந்து
சாருதல்வலியாரில்லையென்பதுசாலுமன்றே
யாரினியேகத்தக்காரங்கதனமையுமொன்னார்
வீரமேவிளைப்பரோனுந்தீதின்றிமீடல்வல்லான். (கூ)

நன்றெனவவன்றனைக்கூய்நம்பிநீநண்ணலார்பால்
சென்றிரண்டினாயினொன்றைச்செப்பினைதிரிதியென்றான்
அன்றவனருளப்பெற்றவாண்டகையலங்கற்பொற்றோள்
குன்றினுமுயர்ந்ததென்றான்மனநிலைகூறலாமே. (க0)

என்னவற்குரைப்பதென்னவேந்திழையாளைவிட்டுத்
தன்னுயிர்பெறுதனன்றேவன்றெனிற்றலைகள்பத்தும்
சின்னபின்னங்கள்செய்யச்செருக்களஞ்சேர்தனன்றே
சொன்னவையிரண்டினொன்றைத்துணியெனச்சொல்லிடென்றான். (௧௧)

அறத்துறையன்றுவீரர்க்கழகுமன்றாண்மையன்று
மறத்துறையன்றுசேமமறைந்துறைந்தொதுங்கிவாழ்தல்
நிறத்துறவாளிகோத்துநேர்வந்துநிற்குமாகின்
புறத்துறவெதிரோவந்துபோர்தரப்புகறியென்றான். (௧௨)

பார்மிசைவணங்கிச்சேயம்விண்மிசைப்படர்வதேபோல்
வீரன்வெஞ்சிலையிற்கோத்தவம்பெனவிரைவிற்போனான்
மாருதியல்லனாகினீயெனுமாற்றம்பெற்றேன்
ஆரினியென்னொடொப்பாரென்பதோரின்பமுற்றான். (௧௩)

அயில்கடந்தெரியநோக்குமரக்கரைக்கடக்கவாழித்
துயில்கடந்தயோத்திவந்தான்சொற்கடவாதனூதன்
வெயில்கடந்திலாதகாவன்மேருவின்மேலுநீண்ட
எயில்கடந்திலங்கையெய்தியரக்கனதிருக்கைபுக்கான். (௧௪)

அழுகின்றகண்ணராகியநுமன்கொலென்னவஞ்சித்
தொழுகின்றசுற்றஞ்சுற்றச்சொல்லியதுறைகடோறும்
மொழிகின்றவீரர்வார்த்தைமுகந்தொறுஞ்செவியின்மூழ்க
எழுகின்றசேனைநோக்கிவியந்திருந்தானைக்கண்டான். (௧௫)

கல்லுண்டுமரமுண்டேழைக்கடலொன்றுகடந்தேமென்னும்
சொல்லுண்டேயிவனைவெல்லத்தோற்றக்கூற்றமுண்டோ
எல்லுண்டபடைகைக்கொண்டாலெதிருண்டோவிராமன்கையில்
வில்லுண்டேயுண்டென்றெண்ணியாற்றவும்வியந்துநின்றான். (௧௬)

இன்றிவன்றன்னையெய்தநோக்கிநோக்கெதிர்ந்தபோரில்
வென்றவெனருதைமார்பின்வில்லின்மேற்கணையொன்றேவிக்
கொன்றவன்றானேவந்தாலென்றுடன்குறிப்பினல்லால்
ஒன்றிவன்றன்னைவெல்லவல்லரோவுயிர்க்குநல்லார் (௧௭)

அணிப்றித்தழகுசெய்யுமணங்கின்மேல்வைத்தவாசைப்
பிணிபறித்தவனையாவர்முடிப்பரிப்படிக்கட்பேராப்
பணிபறித்தெழுந்தமானக்கலுழனேயென்னப்பற்றி
மணிபறித்தெழுந்தவெந்தையாரினும்வலியனென்றான். (௧௮)

நெடுந்தகைவிடுத்ததூதனிவையிவைநிரம்பவெண்ணிக்
கடுங்கனல்விடமுங்கூற்றுங்கலந்துகால்கரமுங்காட்டி
விடுஞ்சுடர்மகுடமின்னவிரிகடலிருந்ததென்னக்
கொடுந்தொழின்மடங்கலன்னானெதிர்சென்றுகுறுகிநின்றான். (௧௯)

நின்றவன்றன்னையன்னானெருப்பெழநிமிரப்பார்த்திங்
கின்றிவண்வந்தநீயாரெய்தியகருமமென்னை
கொன்றிவர்தின்னுமுன்னங்கூறுதிதெரியவென்றான்
வன்றிறல்வாலிசேயும்வாளெயிறிலங்கநக்கான் (௨௰)

பூதநாயகனீர்சூழ்ந்தபுவிக்குநாயகனப்பூமேல்
சீதைநாயகன்வேறுள்ளதெய்வநாயகனீசெப்பும்
வேதநாயகன்மேனின்றவிதிக்குநாயகன்றான்விட்ட
தூதன்யான்பணித்தமாற்றஞ்சொல்லியவந்தேனென்றான் (௨௧)

அரன்கொலாமரிகொலாமற்றயன்கொலாமென்பாரன்றிக்
குரங்கெலாங்கூட்டிவேலைக்குட்டத்தைச்சேதுகட்டி
இரங்குவானாகினின்னமறிதியென்றன்னையேவும்
நரன்கொலாமுலகுநாதனென்றுகொண்டரக்கனக்கான் (௨௨)

கங்கையும்பிறையுஞ்சூடுங்கண்ணுதல்கரத்துநேமி
சங்கமுந்தரித்தானுற்றதறிந்துவந்தூரைச்சாரார்
அங்கவர்தன்மைநிற்கவாரோனுமாகவஞ்சா
திங்குவந்திதனைச்சொற்றதூதனீயாவனென்றான். (௨௩)

இந்திரன்செம்மல்பண்டோரிராவணனென்பான்றன்னைச்
சுந்தரபுயங்களோடும்வாலிடைத்தூங்கச்சுற்றிச்
சிந்துரகிரிகடாவித்திரிந்தனன்றேவர்க்குண்ணா
மந்தரகிரியால்வேலைகலக்கினான்மைந்தனென்றான். (௨௪)

உந்தையென்றுணைவனன்றேயோங்கறஞ்சான்றுமுண்டால்
சிந்தனையிதன்மேலுண்டோநீயவன்றூதனாதல்
தந்தனெனினக்கியானேவானரத்தலைமைதாழா
வந்தனைநன்றிசெய்தாயென்னுடைமைந்தவென்றான். (௨௫)

தாதையைக்கொன்றான்பின்னேதலைசுமந்திருகைநாற்றிப்
பேதையனென்னவாழ்ந்தாயென்பதோபிழையுந்தீர்ந்தாய்
சீதையைப்பெற்றேனுன்னைச்சிறுவனுமாகப்பெற்றேன்
ஏதெனக்கரியதென்றானிறுதிநாற்கெல்லைகண்டான். (௨௬)

அந்நரரின்றுநாளையழிவதற்கையமில்லை
உன்னரசுனக்கேதந்தேனாளுதியூழிகாலம்
பொன்னரிசுமந்தபீடத்திமையவர்போற்றிசெய்ய
மன்னவனாகயானேசூட்டுவென்மகுடமென்றான். (௨௭)

அங்கதனதனைக்கேளாவங்கையோடங்கைதாக்கித்
துங்கவன்றோளுமார்புமிலங்கையுந்துளங்கநக்கான்
இங்குநின்றார்கட்கெல்லாமிறுதியேயென்பதுன்னி
நுங்கள்பானின்றுமெம்பாற்போந்தனனும்பியென்றான். (௨௮)

வாய்தரத்தக்கசொல்லியென்னையுன்வயஞ்செய்வாயேல்
ஆய்தரத்தக்கதன்றோதூதுவந்தரசதாள்கை
நீதரக்கொள்வேன்யானேயிதற்கினிநிகர்வேறுண்டோ
நாய்தரக்கொள்ளுஞ்சீயநல்லரசென்றுநக்கான். (உகூ)

அடுவெனேயென்னப்பொங்கியோங்கியவரக்கனந்தோ
தொடுவெனேகுரங்கைச்சீறிச்சுடர்ப்படையென்றுதோன்று
நடுவனேசெய்யத்தக்கநாளுலந்தாற்குத்தூத
படுவதேதுணிந்தாயாயின்வந்ததுபகர்தியென்றான். (௩0)

கூவியின்றென்னைநீபோய்த்தன்குலமுழுதுங்கொல்லும்
பாவியையெய்தியஞ்சியரண்புக்குப்பதுங்கினானென்
தேவியைவிடுகவன்றேற்செருக்களத்தெதிர்ந்துதன்கண்
ஆவியைவிடுகவென்றானருளினம்விடுகிலாதான். (௩க)

பருந்துணப்பாட்டியாக்கைபடுத்தநாள்படைஞரோடும்
மருந்தினுமினியமாமன்மடிந்தநாள்வனத்துள்வைகி
இருந்துழிவந்தநங்கையிருஞ்செவிமுலையுமூக்கும்
அரிந்தநாள்வந்திலாதானினிச்செயுமாண்மையுண்டோ. (௩உ)

கிளையொடும்படைஞரோடுங்கேடிலாவுயிர்கட்கெல்லாம்
களையனதம்பிமாரைவேரொடுங்களையக்கண்டும்
இளையவன்பிரியமாயமியற்றியேகொண்டுபோய
வளையெயிற்றரக்கன்வெம்போர்க்கினியிவண்வருவதுண்டோ. (௩௩)

ஏந்திழைதன்னைக்கண்ணுற்றெதிர்ந்தவர்தம்மையெற்றிச்
சாந்தெனப்புதல்வன்றன்னைத்தரையிடைத்தேய்த்துத்தன்னூர்
காந்தெரிமடுத்துத்தானுங்காணவேகடலைத்தாவிப்
போந்தபின்வந்திலாதானினிப்பொரும்போருமுண்டோ. (௩௪)

உடைக்குலத்தொற்றர்தம்பாலுயிர்கொடுத்துள்ளக்கள்ளம்
துடைத்துழிவருணன்வந்துதொழுதுழிதொழாதகொற்றக்
குடைத்தொழிலின்கொள்ளக்கொடுத்துழிவேலைகோலி
அடைத்துழிவந்திலாதானினிவரவையமுண்டோ. (௩௫)

மறிப்புண்டதேவர்காணமணிவரைத்தோளின்வைகும்
நெறிப்புண்டரீகமன்னமுகத்தியர்முன்னேநென்னல்
பொறிப்புண்டரீகம்போலுமொருவனாற்புனைந்தமோலி
பறிப்புண்டும்வந்திலாதானினிப்பொரும்பான்மையுண்டோ. (௩௬)

என்றிவையியம்புவாவென்றேவினனென்னையெண்ணி
ஒன்றுனக்குறுவதுன்னித்துணிந்துரையுறுதிபார்க்கின்
துன்றிருங்குழலைவிட்டுத்தொழுதுவாழ்சுற்றத்தோடும்
பொன்றுதியாயினென்பின்வாயிலிற்புறப்படென்றான். (௩௭)

நீரிலேபட்டசூழ்ந்தநெருப்பிலேபட்டநீண்ட
பாரிலேபட்டவானப்பரப்பிலேபட்டவெல்லாம்
போரிலேபட்டவீழப்பொருகநீயொளித்துப்புக்குன்
னூரிலேபட்டவென்றூற்பழியெனவுளேயச்சொன்னான். (௩அ)

வேறு.

சொற்றவார்த்தையைக்கேட்டலுந்தொல்லுயிர்
முற்றுமுண்பதுபோலுமுனிவினான்
பற்றுமின்கடிதின்னெடும்பார்மிசை
எற்றுமின்னெனநால்வரையேவினான். (௩௯)

ஏவினான்பிடித்தாரையெடுத்தெழத்
தாவினானவர்தந்தலேபோயறக்
கூவினானவன்கோபுரவாயிலில்
தூவினான்றுகைத்தானிவைசொல்லினான். (௪௦)

ஏமஞ்சாரவெளியவர்யாவிரும்
தூமங்கால்வனவீரன்சுடுசரம்
வேமின்போல்வனவீழ்வதன்முன்னமே
போமின்போமின்புறத்தென்றுபோயினான். (௪௧)

அந்தரத்திடையார்த்தெழுந்தானவன்
சிந்துரத்தந்துதைந்தெழுஞ்செச்சையான்
இந்துவிண்ணின்றிழிந்துளதாமென
வந்துவீரனடியின்வணங்கினான். (௪௨)

உற்றபோதவனுள்ளக்கருத்தெலாம்
கொற்றவீரனுணர்த்தென்றுகூறலும்
முற்றவோதியென்மூர்க்கன்முடித்தலே
அற்றபோதன்றியாசையறுனென்றான். (௪௩)

அங்கதன்தூதுப்படலம் முற்றிற்று ஆ திருவிருத்தம்–௧௬௪.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௧௪-வது-முதற்போர்ப்படலம்.

பூசலேபிறிதில்லேயெனப்புறத்
தாசைதோறுமுரசமறைந்தெனப்
பாசறைப்பறையின்னிடம்பற்றிய
வாசரோறுமுறையின்வருத்திரால். (௧)

மற்றுநின்றமலேயுமரங்களும்
பற்றிவீரர்பரவையின்மும்முறை
கற்றகைகளினுற்கடிமாநகர்
சுற்றுநின்றவகழியைத்தூர்த்திரால். (௨)

இடுமின்பன்மரமெங்குமியங்கறத்
தடுமின்போர்க்குவருகெனச்சாற்றுமின்
கடுமினிப்பொழுதேகதிர்மீச்செலாக்
கொடிமதிற்குடுமித்தலைகொள்கென்றான் (௩)

தடங்கொள்குன்றுமரங்களுந்தாங்கிய
மடங்கலன்னவவ்வானரமாப்படை
இடங்கர்மாவிரியப்புனலேறிடத்
தொடங்கிவேலையகழியைத்தூர்த்ததால். (௪)

ஏயவெள்ளமெழுபதமெண்கடல்
ஆயவெள்ளத்தகழியைத்தூர்த்தலும்
தூயவெள்ளந்துணைசெய்வதாமெனா
வாயிலூடுபுக்கூனவளர்ந்ததே. (௫)

விளையும்வென்றியிராவணன்மெய்ப்புகழ்
முளையினோடுங்களைந்தமுடிப்பபோல்
தளையவிழ்ந்தகொழுந்தடந்தாமரை
வளையவன்கையின்வாங்கினவானரம். (௬)

ஈளிதாரமியம்பியவண்டுகள்
பாளைதாதுகுநீர்நெடும்பண்ணைய
தாளதாமரையன்னங்கடாவிட
வாளைதாவினவானரந்தாவவே. (௭)

இகழுந்தன்மையனுயவிராவணன்
புகழுமேன்மையும்போயினவாமெனா
நிகழுங்கண்ணெடுநீலமுகிழ்த்தவால்
அகழிதானுமழுவனபோன்றவே. (௮)

தண்டிருந்தபைந்தாமரைதாளறப்
பண்டிரிந்துசிந்தயப்படர்சிறை
வண்டிரிந்தனவாய்தொறுமுட்டையைக்
கொண்டிரிந்தனவன்னக்குழாமெலாம். (௯)

ஆறுமாமரமும்மலையுந்தொடர்
நீறுநீர்மிசைசென்றுநெருக்கலான்
ஏறுபேரகழின்னின்றினப்பல
ஆறுசென்றனவார்கலிமேலரோ. (௧௰)

இழுகுமாக்கலிடுந்தொறிடுந்தொறும்
சுழிகடோன்றுஞ்சுரித்திடைதோன்றுதேன்
ஒழுகுதாமரையொத்தனவோங்குநீர்
முழுகிமீதெழுமாதர்முகத்தையே. (௧௧)

தன்மைக்குந்தலையாயதசமுகன்
தொன்மைப்பேரகழ்வானரந்தூர்த்தலால்
இன்மைக்கும்மொன்றுடைமைக்கும்யாவர்க்கும்
வன்மைக்கும்மோர்வரம்புமுண்டாங்கொலோ. (௧௨)

தூர்த்தவானரஞ்சுள்ளிபறித்திடை
சேர்த்தபேரணைதன்னையுஞ்சிந்தின
வார்த்ததன்னமதிலின்வரம்புகொண்
டார்த்தவார்கலிகாரொடுமஞ்சவே. (௧௩)

வட்டமேருவிதுவெனவான்முக
டெட்டநீண்டமதிண்மிசையேறிவிண்
தொட்டவானரந்தோன்றினமீத்தொக
விட்டவெண்கொடிவீங்கினவென்னவே. (௧௪)

இறுக்கவேண்டுவதில்லையெண்டீர்மணி
வெறுக்கையோங்கியமேருவிழுக்கலால்
நிறுக்கநேர்வருவீரர்நெருக்கலால்
பொறுக்கலாதுமதிறரைபுக்கதால். (௧௫)

அறைந்தமாமுரசானைப்பதாகையால்
மறைந்தவானெடுவானகமாதிரம்
குறைந்ததூளிகுழுமிவிண்ணூடுபுக்
குறைந்ததாங்கவர்போர்க்கெழுமோதையே. (௧௬)

கோடலம்பினகோதையலம்பின
ஆடலம்பரித்தாருமலம்பின
மாடலம்பினமாமணித்தேர்மணி
பாடலம்பினபாய்மதயானையே. (௧௭)

அரக்கர்தொல்குலமாசறவல்லவர்
வருக்கம்யாவையும்வாழ்வுறவந்ததோர்
கருக்கொள்காலம்விதிகொடுகாட்டிடத்
தருக்கியுற்றெதிர்தாக்கினதானையே. (௧௮)

பற்கொடுங்நெடும்பாதவம்பற்றியும்
கற்கொடுஞ்சென்றதக்கவியின்கடல்
விற்கொடுங்நெடுவேல்கொடும்வேறுள
எற்கொடும்படையுங்கொண்டதிக்கடல். (௧௯)

அம்புகற்களையள்ளினவம்பெலாம்
கொம்புடைப்பணைகூறுறநூறின
வம்புடைத்தடமாமரமாண்டன
செம்புகச்சுடர்வேற்கணஞ்செல்லவே. (௨௦)

மாக்கைவானரவீரர்மலைந்தகல்
தாக்கவஞ்சர்தலைகடகர்த்தலால்
நாக்கினூடுஞ்செவியினூநாகம்வாழ்
மூக்கினூடுஞ்சொரிந்தனமூளையே. (உக)

அற்களோடுநிறத்தவரக்கர்தம்
விற்களோடுஞ்சரம்படவெம்புணீர்
பற்களோடுஞ்சொரிதரப்பற்றிய
கற்களோடுமுருண்டகவிகளே. (உஉ)

நின்றுமேருநெடுமதினெற்றியின்
வென்றிவானரவீரர்விசைத்தகல்
சென்றுதீயவராருயிர்சிந்தினர்
குன்றின்வீழுமுருமின்குழுயினே. (உ௩)

எதிர்த்தவானரம்யாக்கையொடிற்றன
மதிற்புறங்கண்டுமண்ணின்மறைந்தன
கதிர்க்கொடுங்கணரக்கர்கரங்களால்
விதிர்த்தெறிந்தவிலங்கிலைவேலினே. (உச)

கடித்தகுத்தினகையிற்கழுத்தறப்
பிடித்தவள்ளுகிராற்பிளவாக்கின
இடித்தவெற்றினவெண்ணிலரக்கரை
முடித்தவானரம்வெஞ்சினமுற்றின. (உரு)

எறிந்துமெய்துமெழுமுளைத்தண்டுகொண்
டறைந்தும்வெவ்வயிலாகத்தழுத்தியும்
நிறைந்தவெங்கணரக்கர்நெருக்கலால்
குறைந்தவானரவீரர்குழுக்களே. (உசா)

செப்பிற்செம்புனரேய்ந்தசெம்பொன்மதில்
துப்பிற்செய்ததுபோன்றதுசூழ்வரை
குப்பிற்றீர்பிணக்குன்றுசுமந்துகொண்
டுப்பிற்சென்றவுதிரத்தொழுக்கமே. (உஎ)

வந்திைத்தபறவைமயங்கின
அந்தரத்தினெருங்கலினங்கொரு
பந்தர்பெற்றதுபோன்றதுபற்றுதல்
இந்திரற்குழரியவிலங்கையே. (உஅ)

தங்குவெங்கனலோடுதயங்கிய
பொங்குவெங்குருதிப்புனற்செக்கர்பூங்
கங்குலன்னகவந்தமுங்கையெடுத்
தங்குமிங்குநின்ருடியவாமரோ. (உகூ)

கொன்னிறக்குருதிக்குடைபுட்களின்
தொன்னிறச்சிறையிற்றுளிதூவலால்
பன்னிறத்தபதாகைப்பரப்பெலாம்
செந்நிறத்தனவாய்நிறந்தீர்ந்தவே. (௩௦)

பொழிந்தசோரிப்புதுப்புனல்பொங்கிமீ
வழிந்தமாமதிள்கைவிட்டுவானரம்
ஒழிந்தமேருவினும்பர்விட்டிம்பரின்
இழிந்தமாகடலென்னவிழிந்ததே. (௩௧)

பதனமும்மதிலும்படைநாஞ்சிலும்
கதனவாயிலுங்கட்டிமட்டாலையும்
முதலயாவையும்புக்குற்றுமுற்றின
இதனில்வெங்கணிராக்கதர்வெள்ளமே. (௩௨)

பரியந்தசோரிப்பரவையிற்பற்பல
நீந்தியேகுநெருக்கினிற்சிற்சில
சாய்ந்துசாய்ந்துசரம்படத்தள்ளலுற்
றோய்ந்துவீழ்ந்தசிலசிலவோடின. (௩௩)

தழியவானரமாக்கடல்சாய்தலும்
பொழியவெம்படைபோர்க்கடலார்த்ததால்
ஒழியுங்காலத்துலகொருமூன்றுமொத்
தழியுமாக்கடலார்ப்புடைத்தாயரோ. (௩௪)

முரசுமாமுருடும்முரட்சங்கமும்
உரைசெய்காளமுமாகுளியோசையும்
விரசுபல்லியவில்லரவத்தொடும்
திரைசெய்வேலைக்கொராகுலஞ்செய்ததே. (௩௫)

ஆயகாலையணைத்துலகுந்தரு
நாயகன்முகநாலுநடந்தென
மேயசேனைவிரிகடல்விண்குலாம்
வாயிலூடுபுறப்பட்டுவந்ததே. (௩௬)

நெடியகாவதம்விட்டுநிரம்பிய
படியவாயில்பருப்பதம்பாய்ந்தெனக்
கொடியொடுங்கொடிசுற்றக்கொடுத்ததண்
டொடியவூன்றினமும்மதவோங்கலே. (௩௭)

சூழியானைமதம்படுதொய்யலின்
ஊழிநாணெடுங்காலெனவோடுவ
பாழியாம்வயிரப்படிபன்முறை
பூழியாக்கினபொன்னெடுந்தேர்களோ. (௩௮)

பிடித்தவானரம்பேரொழிற்றோள்களால்
இடித்தமாமதிளாடையிலங்கையாள்
மடித்தமாக்கடல்வாவுந்திரையெலாம்
குடித்துக்கால்வனபோன்றகுதிரையே. (௩௯)

கேளின்ஞாலங்கிளர்த்தியதொன்முறை
நாளுநாளுநடந்தனநள்ளிரா
நீளமெய்தியொருசிறைநின்றன
மீளுமாலையும்போன்றனர்வீரரே. (௪௦)

பத்திவன்றலைப்பாம்பின்பரங்கெட
முத்திநாட்டின்முகட்டினைமுற்றுறப்
பித்திபிற்படவன்றிசைபேர்வுறத்
தொத்திமீண்டிலவாரனெடுந்தூளியே. (௪௧)

நெருக்கிவந்துநிருதர்நெருங்கலால்
குரக்கினப்பெருந்தானைகுலைந்துபோய்
அருக்கன்மாமகனாரமராசையால்
செருக்கிநின்றவனின்றுழிச்சென்றவால். (௪௨)

சாய்ந்ததானைத்தளர்வுஞ்சலித்தெதிர்
பாய்ந்ததானைப்பெருமையும்பார்த்துறக்
காய்ந்தநெஞ்சன்கனல்சொரிகண்ணினன்
ஏய்ந்ததங்கொர்மராமரமேந்தினன். (௪௩)

வாரணத்தெதிர்வாசியினேர்வயத்
தேர்முகத்தினிற்சேவகர்மேற்செறுத்
தோரொருத்தர்க்கொருவரினுற்றுயர்
தோரணத்தொருவன்னெனத்தோன்றினன். (௪௪)

களிறுமாவுநிருதருங்காலற
ஒளிறுமாமணித்தேருமுருட்டிவெங்
குளிறுசோரியொழுகக்கொதித்திடை
வெளிறிலாமரமேகொண்டுவீசினன். (௪௫)

அன்னகாலையரிகுலவீரரும்
மன்னன்முன்புகவன்கணரக்கரும்
முன்னுழந்தமுழங்குபெருஞ்செருந்
தன்னில்வந்துதலைமயக்குற்றனர். (௪௬)

கற்றுரந்தகளம்படவஞ்சகர்
இற்றுலந்துமுடிந்தவரெண்ணிலர்
விற்றுரந்தனவெங்கணையாலுடல்
அற்றுலந்தகுரங்குமனந்தமே. (௪௭)

கற்கடந்துமிர்ந்தகடுஞ்செரு
மற்கடங்கள்வலிந்துமலைந்திடத்
தற்கடங்கியுலந்தவர்தம்முயிர்
தெற்கடங்கிநிறைந்துசெறிந்தவால். (சஅ)

பாடுகின்றனபேய்க்கணம்பல்விதத்
தாடுகின்றவறுகுறையாழ்கடற்
கோடுகின்றவுதிரம்புகுந்துடல்
நாடுகின்றனர்கற்புடைநங்கைமார். (சகூ)

யானைபட்டவழிபுனல்யாறெலாம்
பானல்பட்டனபல்கணைமாரியின்
சோனைபட்டதுசொல்லரும்வானரச்
சேனைபட்டதுபட்டதுசெம்புனீர். (ருo)

காய்ந்தவானரவீரர்கரத்தினால்
தேய்ந்தவாயுளரானவர்செம்புனீர்
பாய்ந்ததானைப்படுகளம்பாழ்படச்
சாய்ந்ததானிருதக்கடற்றுனையே. (ருக)

தங்கண்மாப்படைசாய்தலுந்தீயெழ
வெங்கண்வாளரக்கன்விரைதேரினைக்
கங்கசாலந்தொடரக்கடல்செலும்
வங்கமாமெனவந்தெதிர்தாக்கினான். (ருஉ)

வந்துதாக்கிவடிக்கணைமாமழை
சிந்திவானரச்சேனைசிதைத்தலும்
இந்திராதியருந்திகைத்தேங்கினர்
நொந்துசூரியன்கான்முளைநோக்கினான். (ருஙு)

நோக்கிவஞ்சநெறிவயமாப்பரி
வீக்குதேரினின்மீதெழப்பாய்ந்துதோள்
தூக்குதூணியும்வில்லுந்தொலைத்தவன்
யாக்கையுஞ்சிதைத்திட்டெழுந்தேகினான். (ருச)

மலைகுலைந்தெனவச்சிரமுட்டிதன்
நிலைகுலைந்துவிழுதலினின்றுளார்
குலைகுலைந்துகொடிநகர்நோக்கினார்
அலைகிளர்ந்தெனவானரமார்த்தவே. (ருரு)

வீழிவெங்கணிராக்கதர்வெம்படை
ஊழியாழிகிளர்ந்தெனவோங்கின
கேழைவாயிலிற்கிட்டலுமுட்டினர்
சூழும்வானரவீரர்துவன்றியே. (ருகூ)

சூலம்வாளயில்சக்கரந்தோமரம்
வாலம்வாளிமழையின்வழங்கியே
ஆலமன்னவரக்கரடர்த்தலும்
கா்லும்வாலுந்துமிந்தகவிக்குலம். (ருள)

வென்றிவானரவீரர்விசைத்தெறி
குன்றுமாமரனுங்கொடுகாலனிற்
சென்றுவீசநிருதர்கள்சிந்தினர்
பொன்றிவீழ்ந்தபுரவிவெம்பூட்கைதேர். (ருஅ)

தண்டுவாளயில்சக்கரஞ்சாயகம்
கொண்டுசீதநிருதர்கொதித்தெழப்
புண்டிறந்துகுருதிபொழிந்துக
மண்டியோடினர்வானரவீரரே. (ருக)

எரியின்மைந்தனிருநிலங்கீழுற
விரியநின்றமராமரம்வேரொடும்
திரியவாங்கிநிருதர்வெஞ்சேனைபோய்
நெரியவூழிநெருப்பெனவீசினன். (சூ0)

தேரும்பாகரும்வாசியுஞ்செம்முகக்
காரும்யாளியுஞ்சீயமுங்காண்டகு
பாரின்வீழப்புடைப்பபசும்புணின்
நீரும்வாரியமுவநிறைத்ததே. (சூக)

அரக்கர்சேனையடுகளம்பாழ்பட
வெருக்கொண்டோடிடவெம்படைக்காவலன்
நெருக்கிநேர்ந்துகும்பானுநெடுஞ்சரம்
துரக்கவானரச்சேனை துணிந்ததே. (சூஉ)

கண்டுநின்றகரடியின்காவலன்
எண்டிசாமுகமேங்கவிடும்பனோர்
சண்டமாருதமென்னத்தடவரை
கொண்டுசீறியவனெதிர்குப்புறு. (சூரு)

தொடுத்தவாளிகள்வீழுமுன்சூழ்ந்தெதிர்
எடுத்தகுன்றையிடும்பனெறிதலும்
ஒடித்தவில்லுமிரதமுமொல்லெனப்
படுத்தவாசிபதாகையும்பாழ்பட. (சூச)

தேரழிந்துசிலையுமழிந்துகக்
காரிழிந்தவுருமெனக்காய்ந்தெதிர்
பார்கிழிந்துகப்பாய்ந்தனன்வானவர்
போர்கிழிந்துபுறந்தரப்போர்செய்தான். (சூரு)

தத்திமார்பின்வயிரத்தடக்கையால்
குத்திநின்றகும்பானுவைத்தானெதிர்
மொத்திநின்றுமுடித்தலைகவ்வுறப்
பற்றிவன்றடந்தோளுறப்பற்றுவான். (௬௬)

கடித்தலத்திருகாலுறக்கைகளால்
பிடித்துத்தோளைப்பிறங்கலின்கோடுநேர்
முடித்தலத்தினைக்கவ்வுறமூளைகள்
வெடித்துவீழ்தரவீழ்த்தினனுமரோ. (௬௭)

தன்படைத்தலைவன்படத்தன்னெதிர்
துன்படைத்தமனத்தன்சுமாலிசேய்
முன்படைத்தமுகிலன்னகாட்சியன்
வன்படைத்தவரிசிலைவாங்கினன். (௬௮)

வாங்கிவார்சிலைவானரமாப்படை
ஏங்கநாணெறிந்திட்டிடையீடின்றித்
தூங்குமாரியெனச்சுடர்வாளிகள்
வீங்குதோளினன்விட்டனனுமரோ. (௬௯)

நூறுமாயிரமுங்கணைநொய்தினின்
வேறுவேறுபடுதலின்வெம்பியே
ஈறில்வானரமாப்படையெங்கணும்
பாறவீரன்வெகுண்டெதிர்பார்ப்புறு. (௭0)

குன்றநின்றதெடுத்தெதிர்கூற்றெனச்
சென்றெறிந்தவன்சேனைசிதைத்தலும்
வென்றிவில்லின்விடுகணைமாரியால்
ஒன்றுநூறுதிருற்றதக்குன்றமே. (௭௧)

மீட்டுமங்கொர்மராமரம்வேரொடும்
ஈட்டிவானத்திடியெனவெற்றலும்
கோட்டும்வில்லுங்கொடியும்வயப்பரி
பூட்டுந்தேரும்பொடித்துகளாயவே. (௭௨)

தேரிழந்துசிலையுமழிந்திடக்
காரிழந்தவுருமெனக்காந்துவான்
பாரிழிந்துபருவலித்தண்டொடும்
ஊரிழிந்தகதிரொனவோடினன். (௭௩)

வாய்மடித்தழல்கண்டொறும்வந்துகப்
போயடுத்தலுநீலன்புகைந்தெதிர்
தாயடுத்தவன்றன்கையிற்றண்டொடும்
மீயெடுத்துவிசும்புறவீசினன். (௭௪)

அம்பரத்தெறிந்தார்ப்பவரக்கனும்
இம்பருற்றெரியின்திருமைந்தன்மேல்
செம்புனற்பொழியக்கதைசேர்த்தினன்
உம்பர்தத்தமதுள்ளநடுங்கவே. (எரு)

அடித்தலோடுமெதற்கிளையாதவன்
எடுத்ததண்டம்பறித்தெறியாவிகல்
முடித்துமென்றெருகைகொடுமோதினன்
குடித்துமிழ்ந்தெனக்கக்கக்குருதியே. (எசு)

குருதிவாய்நின்றெழுகவுங்கூசலன்
நிருதனீலனெடுவரைமார்பினில்
கருதலாதமுன்குத்தலுங்கைத்தவர்
பொருதபூசல்புகலவொண்ணுதகே. (எஎ)

மற்றுநீலனரக்கனைமாடுறச்
சுற்றிவால்கொடுதோளினுமார்பினும்
நெற்றிமேலுநெடுங்கரனீட்டலும்
இற்றுமால்வரையென்னவிழுந்தனன். (எஅ)

இறந்துவீழ்ந்தனனேபிரகத்தனென்
றறிந்துவானவராவலங்கொட்டினர்
வெறிந்தசெம்மயிர்வெள்ளெயிற்றுடவர்
முறிந்துதத்தமுதுநகரெய்தினர். (எகூ)

தெற்குவாயிலிற்சென்றங்கிசாசரர்
மற்குலாவுவயப்புயத்தங்கதன்
நிற்கவேயெதிர்நின்றிலரோடினர்
பொற்குலாவுசுபாரிசன்பொன்றினன். (அ0)

நூற்றிரண்டெனும்வெள்ளமுநோன்கழல்
ஆற்றல்சான்றமுகனுமங்கார்த்தெழ
மேற்றிண்வாயிலின்மேவினர்வீடினர்
காற்றின்மாமகன்கையெனுங்காலனால். (அக)

அன்னகாலையயிந்திரவாய்முதல்
துன்னுபோர்கண்டதூதுவர்தோன்றினர்
மன்னகேளெனவந்துவணங்கினர்
சென்னிதாழ்க்கச்செவியிடைச்செப்பினர். (அஉ)

கீழைவாயில்கிளர்நிருதப்படை
ஊழிநாளினும்வெற்றிகொண்டுற்றநின்
ஆழியன்னவனீகத்தலைமகன்
பூழியானுயிர்புக்கதுவிண்ணென்றார். (அஙூ)

வென்றிவேற்கைநிருதர்வெருண்டெழத்
தென்றிசைப்பெருவாயிலிற்சேர்ந்துழிப்
பொன்றினனச்சுபாரிசன்போயினன்
நின்றுபோனவிடமறியேமென்றார். (௮௪)

வடக்குவாயிலின்வச்சிரத்தாடவர்
குடக்குவாயிற்குன்றனதோளினர்
அடர்க்கரும்வலத்தைம்பதுவெள்ளமும்
படச்சிதைந்ததுநம்படையென்றனர். (௮௫)

என்றவார்த்தையெரிபுகுநெய்யெனச்
சென்றுசிந்தைபுகுதலுஞ்சீற்றத்தீக்
கன்றுகண்ணின்வழிச்சுடர்கான்றிட
நின்றுநின்றுநெடிதுயிர்த்தானரோ. (௮௬)

மறித்துமற்றவனாருயிர்வவ்வினான்
இறுத்துக்கூறுகென்றானிசையெங்கணும்
நிறுத்துநீலனெடும்பெருஞ்சேனையை
ஒறுத்துமற்றவனோடும்வந்துற்றனன். (௮௭)

உற்றபோதுமிருவருமொன்றல
கற்றபோர்களெல்லாஞ்செய்தகாலையில்
நெற்றிமேன்மற்றந்நீலனெடுங்கையால்
எற்றிவீந்தனனென்னவியம்பினார். (௮௮)

அன்னவனொடும்போனவரக்கரில்
நன்னகர்க்குவந்தேமையநாங்களே
என்னவென்னவெயிறிகல்வாயினைத்
தின்னத்தின்னவெரிந்தனதிக்கெலாம். (௮௯)

மாடுநின்றநிருதரைவன்கணான்
ஓடநோக்கியுயர்படையான்மற்றக்
கோடுகொண்டுபொருமக்குரங்கினால்
வீடினானெனமீட்டும்விளம்பினான். (௯0)

கட்டவிந்திரன்வாழ்வைக்கடைமுறை
பட்டதிங்கொர்குரங்குபடுக்கவென்
திட்டவெஞ்சொலெரிபுகுநெய்யெனச்
சுட்டதென்றனிநெஞ்சினைச்சுட்டதால். (௯௧)

கருப்பைப்போற்குரங்கெற்றக்கதிர்சுழல்
பொருப்பையொப்பவர்தாமின்றுபொன்றினார்
அருப்பமென்றுபகையையுமாரழ
னெருப்பையும்மிகழ்ந்தாலதுநீதியோ. (௯௨)

நிற்கவன்னதுநீர்நிறைகண்ணினன்
வர்க்கமாயினமாப்படையோடுசென்
ெற்கம்வந்துதவாமலுறுகென
விற்கொள்வெம்படைவீரரையேவினன். (கூ௩)

மண்டுகின்றசெருவின்வழக்கெலாம்
கண்டுநின்றகயிலையிடந்தவன்
புண்டிறந்தனகண்ணினன்பொங்கினன்
திண்டிறன்னெடுந்தேர்தெரிந்தேறினன். (கூ௪)

ஆயிரம்பரிபூண்டததிர்குரல்
மாயிருங்கடல்போல்வதுவானவர்
தேயமெங்குந்திரிந்ததுதிண்டிறல்
சாயவிந்திரனேபண்டுதந்தது. (கூ௫)

ஏற்றியெண்ணியிறைஞ்சியிடக்கையால்
ஆற்றினன்றனடுசிலையன்னதின்
மாற்றமென்னெடுநாணொலிவைத்தலும்
கூற்றினாயுமாருயிர்கொள்வதே. (கூ௬)

மற்றும்வான்படைவானவர்மார்பிடை
இற்றிலாதனவெண்ணுமிலாதன
பற்றினன்கவசம்பட்டர்மார்பிடைச்
சுற்றினனெடுந்தும்பையுஞ்சூடினன். (கூ௭)

பேருங்கற்றைக்கவரிபெருங்கட
னீருநீர்நுரையும்மெனநின்றவன்
ஊரும்வெண்மையுவாமதிக்கீழுயர்
காருமொத்தனன்முத்தின்கவிகையான். (கூ௮)

போர்த்தசங்கபடகம்புடைத்திடச்
சேர்த்தசங்கக்கடலுகத்தேவர்கள்
வேர்த்தசங்கிடவண்டம்வெடிபட
ஆர்த்தசங்கமறைந்தமுரசமே. (கூகூ)

தேருமாவும்படைஞருந்தெற்றிட
மூரிவன்னெடுந்தானையின்முற்றினன்
நீரொரேழுமுடிவினெருக்குநாள்
மேருமால்வரையென்னவிளங்கினன். (க00)

வேறு.

ஏழிசைக்கருவிவீற்றிருந்தவென்னினும்
சூழிருந்திசைகளைத்தொடருந்தொல்கொடி
வாழியவுலகெலாம்வளைந்துவாயிடும்
ஊழியினந்தகனுவிறேங்கவே. (க0க)

வேணுயர்நெடுவரையரக்கர்வேலைக்கோர்
தோணிபெற்றனரெனக்கடக்குந்தொல்செருந்
காணியவந்தவர்கலக்கங்கைம்மிகச்
சேணுயர்விசும்பிடையமரர்சிந்தவே, (௧௦௨)

கண்ணுறுகடும்பொறிகதுவக்கார்நிறத்
தண்ணல்வாளரக்கர்தமரத்தப்பங்கிகள்
ஒண்ணிறங்கோடலினுருவின்வேற்றுமை
நண்ணினர்நோக்கவுமயிர்ப்புநல்கவே. (௧௦௩)

காநெடுந்தேருயர்கதலியுங்கரத்
தேனையரேந்தியபதாகையீட்டமும்
ஆனையின்கொடிகளுமளவித்தோய்தலால்
வானயாறொருடுமழையொற்றிவற்றவே. (௧௦௪)

ஆயிரங்கோடிபேயலகையாயுதம்
தூயனசுமந்துபின்றொடரச்சுற்றொளிர்
சேயிருமணிநெடுஞ்சேமத்தேர்தெரிந்
தேயினவாயிரத்திரட்டியெய்தவே. (௧௦௫)

ஊன்றியபெரும்படையுலையவுற்றுடன்
றூன்றபோரரக்கர்கணெருங்கியார்த்தெழத்
தோன்றினனுலகெலாந்தொடர்ந்துநின்றன
மூன்றையுங்கடந்தொருவெற்றிமுற்றினன் (௧௦௬)

ஓதுறுகருங்கடற்குயர்ந்ததானையான்
தீதுறுசிறுதொழிலரக்கன்சீற்றத்தான்
போதுறுபெருங்களம்புகுந்துளானெனத்
தூதுவர்நாயகற்கறியச்சொல்லினர் (௧௦௭)

ஆங்கவனமர்த்தொழிற்கணுகினனென
வாங்கினென்சீதையையென்னும்வன்மையால்
தீங்குறுபிரிவினுற்றேய்ந்ததேய்வற
வீங்கினனிராகவன்மீளித்தோள்களே. (௧௦௮)

தொடையுறுவற்கலையாடைசுற்றிமேல்
புடையுறுவயிரவாள்பொலியவீக்கினன்
இடையுறுகருமத்தினெல்லைகண்டவர்
கடையுறநோக்கினிற்காணுங்காட்சியான். (௧௦௯)

ஒத்திருசிறுகுறட்பாதமுய்த்தநாள்
வித்தகவருமறையுலகைமிக்குமேல்
பத்துளவிரல்புடைபரந்தபண்பெனச்
சித்திரச்சேவடிக்கழலுஞ்சேர்த்தினன். (௧௧௦)

பூவுயர்மீனெலாம்பூத்தவானிகர்
மேவருகவசமிட்டிறுகவீக்கினான்
தேவியைத்திருமறுமார்பிற்றீர்ந்தனன்
ஓவிலனென்பதுநோக்கினான்கொலோ. (௧௧௧)

நற்புறக்கோதைதன்னளினச்செங்கையில்
நிற்புறச்சுற்றியகாட்சிநேமிசால்
கற்பகக்கொம்பிணைக்கரியமாசுணம்
பொற்புறத்தழுவியதன்மைபோன்றவால். (௧௧௨)

புதையிருட்பொழுதினுமலரும்பொங்கொளி
சிதைவருநாள்வரச்சிவந்ததாமரை
இதழ்தொறும்வண்டுவீற்றிருந்தவாமெனத்
ததைவுறுநிறைவிரற்புட்டிலார்ந்கினான். (௧௧௩)

பல்லியலுலகுறுபாடைபாடமைந்
தெல்லையினாற்கடலேறநோக்கிய
நல்லியனவையறுகவிஞர்நாவரும்
சொல்லெனத்தொலைவிலாத்தூணிதூக்கினான். (௧௧௪)

கிளர்மழைக்குழுவிடைக்கிளர்ந்தமின்னென
வளர்பிறைநெற்றியிற்பட்டமார்த்தனன்
இளவரிக்கவட்டிலையாரொடேர்பெறத்
துளவியறும்பையுஞ்சுழியச்சூடினான். (௧௧௫)

ஓங்கியவுலகமுமுயிருமுட்புறம்
தாங்கியபொருள்களுந்தானுந்தானெனின்
நீங்கியதியாவதுநினைக்கிலேமவன்
வாங்கியவரிசிலைமற்றென்றேகொலாம். (௧௧௬)

நாற்கடலுலகமும்விசும்புநாண்மலர்
தார்க்கவெஞ்சேனையுந்தானுந்தோன்றினான்
மாற்கடல்வண்ணன்றன்வளருமாவிரும்
பாற்கடலோடுவந்தெதிரும்பான்மையான். (௧௧௭)

ஊழியினுருத்திரனுருவுகொண்டுதான்
ஏழுயருலகமும்வீக்கின்றானென
வாழியவரிசிலைத்தம்பிமாப்படைக்
கூழையினெற்றிநின்றானைக்கூடினான். (௧௧௮)

என்புழிநிருதராமேழுவேலையும்
மின்புடையெயிறுடைக்கவியின்வெள்ளமும்
தென்புலக்கிழவனுஞ்செய்கைதெட்டிடப்
புன்புலக்களத்திடைப்பொருதபோலுமால். (௧௧௯

தெற்கிவைவடக்கிவையென்னுந்திக்கெலாம்
பற்றுவைபரந்தனகுரக்குப்பல்பிணம்
பொற்குவைநிகர்த்தனநிருதர்பொய்ச்சவம்
கற்குவைநிகர்த்தனமழையுங்காட்டின. (௧௨0)

துமிந்தனதலைகுடர்சொரிந்ததேர்க்குலம்
அவிந்தனபுரவியுமாளுமற்றன
குவிந்தனபிணக்குவைசுமந்துகோணிலம்
நிமிர்ந்ததுபரந்ததுகுருதிநீத்தமே. (௧௨௧)

கடுங்குரங்கிருகையாலெற்றக்கால்வயக்
கொடுங்குரந்துணிந்தனபுரவிகுத்தினுல்
ஒடுங்குரந்துணிந்தனர்நிருதரோடின
நெடுங்குரம்பெனநிறைகுருதிநீத்தமே. (௧௨௨)

அவ்வழியிராவணனமரரஞ்சத்தன்
வெவ்விழிநெருப்புகவில்லினுணிவேச்
செவ்வழிக்கோதையிற்றெறிப்பச்சிந்தின
எவ்வழிமருங்கினுமிரிந்தவானரம். (௧௨௩)

உருமிடித்துழியுலைந்தொளிக்குநாகமொத்
திரியலுற்றனசிலவிறந்தவாற்சில
வெருவலுற்றனசிலவிம்மலுற்றன
பொருகளத்துயிரொடும்புரண்டுபோஞ்சில. (௧௨௪)

பொரக்கருநிறநெடுவிசும்புபுண்பட
இரக்கமிலிராவணனெறிந்தநாணினுல்
குரக்கினமுற்றதென்கூறிற்றன்குலத்
தரக்கருமனையதோரச்சமெய்தினுர். (௧௨௫)

வீடணனொருவனுமிளையவீரனும்
கோடணைகுரங்கினுக்கரசுங்கொள்கையான்
நாடினர்நின்றனர்நாலுதிக்கினும்
ஓடினரல்லவரொளித்ததும்பரே. (௧௨௬)

வேறு.

எடுக்கினுனிலத்தையேந்துமிராவணனெறிந்தநாணின்
நடுக்கினுலகையென்பார்நல்கினுனென்னற்பாற்றே
மிடுக்கினன்மிக்கவானோர்மேக்குயர்வெள்ளமேனுள்
கெடுக்குநாளுருமினுர்ப்புக்கேட்டனவென்னக்கேட்டார். (௧௨௭)

ஏந்தியசிகரமொன்றங்கிந்திரன்குலிசமென்னக்
காந்தியதுருமின்விட்டான்கவிக்குலத்தரசனக்கல்
தீந்தருநெருப்புச்சிந்திநிமிர்தலுநிருதர்க்கெல்லாம்
வேந்தனும்பகழியொன்றால்வெண்டுகளாக்கிவீழ்த்தான். (௧௨௮)

அண்ணல்வாளரக்கன்விட்டவம்பினலழிந்துசிந்தித்
திண்ணெடுஞ்சிகரநீருய்த்திசைத்திசைசிந்தலோடும்
கண்ணெடுங்கடுந்தீக்காலக்கவிக்குலத்தரசன்கையால்
மண்மகள்வயிறுகீறமரமொன்றுவாங்கிக்கொண்டான். (கஉகூ)

கொண்டமாமரத்தையம்பின்கூட்டத்தாற்காட்டத்தக்க
கண்டமாயிரத்தின்மேலுமுளவெனக்கண்டங்கண்டான்
விண்டவாளரக்கன்மீதுவிசும்பெரிபரக்கவிட்டான்
பண்டைமால்வரையின்மிக்கதொருகிரிபரிதிமைந்தன். (கந௦)

அக்கிரியினையுமாங்கோரம்பினலறுத்துமாற்றித்
திக்கிரிதரப்போர்வென்றசிலையினையுளையவாங்கிச்
சுக்கிரிவன்றன்மார்பிற்புங்கமுந்தோன்றுவண்ணம்
உக்கிரவயிரவாளியொன்றுபுக்கொளிப்பவெய்தான். (கநக)

சுடுகணைபடுதலோடுந்துளங்கினன்றுளங்காமுன்னம்
குடதிசைவாயினின்றமாருதிபுகுந்தகொள்கை
உடனுறைந்தறிந்தானென்னவோரிமையொடுங்காமுன்னர்
வடதிசைவாயில்வந்துமன்னவன்முன்னரானன். (கநஉ)

பரிதிசேய்தேருமுன்னம்பருவலியரக்கபல்போர்
புரிதியோவென்னேடென்னுப்புகையெழவிழித்துப்பொங்கி
வருதியேவாவென்பான்மேன்மலையொன்றுநிலையின்வாங்கிச்
சுருதியேயனையதோளால்வீசினன்காலின்றேன்றல். (கநந)

மீயெழுமேகமெல்லாம்வெந்துவெங்கரியிற்சிந்தித்
தீயெழவிசும்பினூடுசெல்கின்றசெயலைநோக்கிக்
காய்கணையைந்துமைந்துங்கடுப்புறத்தொடுத்துக்கண்டித்
தாயிரங்கூறுசெய்தானமரரையலக்கண்செய்தான். (கநச)

மீட்டொருசிகரம்வாங்கிவீங்குதோள்விசையின்வீசி
ஓட்டினனேட்டவானத்துருமினுங்கடுகவோடிக்
கோட்டுவெஞ்சிலையின்வாளிமுன்சென்றுகொற்றப்பொற்றேள்
பூட்டியவலயத்தோடும்பூழியாய்ப்போயிற்றன்றே. (கநரு)

மெய்யெரியழன்றுபொங்கிவெங்கணன்விசிமீட்டோர்
மைவரைவாங்குவானைவரிசிலையுளையவாங்கிக்
கையினுந்தோளின்மேலுமார்பினுங்கரக்கவாளி
ஐயிரண்டழுந்தவெய்தானவனவையாற்றிநின்றன் (கநசா)

யாரிதுசெய்யகிற்பாரென்றுகொண்டிமையோரேதத
மாருதிபின்னுமாங்கோர்மராமரங்கையின்வாங்கி
வேரொடுஞ்சுழற்றிவிட்டான்விடுதலுமிலங்கைவேந்தன்
சாரதிதலையைத்தள்ளிச்சென்றதுநிருதர்சாய. (கநஎ)

மாறியோர்பாகனேறமறிதிரைப்பரவைபின்னும்
சீறியதனையனுங்கோர்செறிகழலரக்கன்றெய்வ
நூறுகோனெய்தினெய்தானவையுடனுழையலோடும்
ஆறுபோற்சோரிசோரவநுமனுமலக்கணுற்றான். (௧௩௮)

கற்கொண்டுமரங்கள்கொண்டுங்கைகொண்டுங்களித்துநும்வாய்ச்
சொற்கொண்டுமயிரின்புன்றோற்றோள்கொண்டுஞ்சுள்ளிவெள்ளிப்
பற்கொண்டுமலேகின்றீரிற்பழிகொண்டுபயந்ததியானோர்
விற்கொண்டுநின்றபோதுவிறல்கொண்டுமிகுதியோலாம். (௧௩௯)

என்றுரைத்தெயிற்றுப்பேழ்வாயெரியுகநகைசெய்தியாணர்ப்
பொன்றொடர்வடிம்பின்வாளிகடையுகத்துருமுப்போல
ஒன்றினொன்றதிகமாகவாயிரகோடியுய்த்தான்
சென்றதுகுரக்குச்சேனைகாலெறிகடலிற்சிந்தி. (௧௪0)

கலக்கியவரக்கன்வில்லின்கல்வியுங்கவிகளுற்ற
அலக்கணுந்தலைவர்செய்ததன்மையுமமையக்கண்டான்
இலக்குவனென்கைவாளிக்கிலக்கிவனிவனேயின்று
விலக்குவெனென்னவந்தான்வில்லுடைமேருவென்ன. (௧௪௧)

தேயத்தின்றலைவன்மைந்தன்சிலையைநாணெறிந்தான்றீய
மாயத்தின்வினையைவல்லார்நிலையென்னைமுடிவின்மாரி
ஆயத்தினிடியீதென்றேயஞ்சினவுலகமானை
ஓயத்தின்முழக்கங்கேட்டபோன்றனர்செறுநரெல்லாம். (௧௪௨)

ஆற்றல்சாலரக்கன்றானுமயனின்றவயவர்நெஞ்சம்
வீற்றுவீற்றாகியுற்றதன்மையும்வீரன்றம்பி
கூற்றின்வெம்புருவமன்னசிலைநெடுங்குரலுங்கேளா
ஏற்றினன்மகுடமென்னேயிவனொருமனிசனென்னா. (௧௪௩)

கட்டமைதேரின்மேலுங்களிநெடுங்களிற்றின்மேலும்
விட்டெழுபுரவிமேலும்வெள்ளெயிற்றரக்கர்மேலும்
முட்டியமழையின்றுள்ளிமுறைமுறைமொய்க்குமாபோல்
பட்டனபகழியெங்கும்பரந்தனகுருதிப்பௌவம். (௧௪௪)

நகங்களிற்பெரியவேழநறைமதவருவிநாலும்
முகங்களிற்புக்கவாள்யபரத்தைமுற்றிமொய்ம்பர்
அகங்களைக்கழன்றுதேரினச்சினையுருவியப்பால்
உகங்களிற்கடைசென்றாலுமோய்வில்லவோடலுற்ற. (௧௪௫)

நூக்கியகளிறுந்தேரும்புரவியுநூழில்செய்ய
ஆக்கியவரக்கர்தானையையிருகோடிகையொத்
தூக்கியபடைகள்வீசியுடற்றியவுலகஞ்செய்த
பாக்கியமனையவீரன்றம்பியைச்சுற்றும்பற்றி. (௧௪௬)

உறுபகைமனிசனின்றெம்மிறைவனையுடல்கிற்பானேல்
வெறுவிதுரந்தம்வீரமென்றொருமேன்மைதோன்ற
எதிபடையரக்கரோற்றாரோற்றகைம்மாற்றானென்ன
வறியவரொருவன்வண்மைபூண்டவன்மேற்சென்றென்ன. (௧௪௭)

அறுத்தனனரக்கரொய்தவெறிந்தனவறுத்தறாத
பொறுத்தனன்பகழிமாரிபொழிந்தனனுயிரின்போகம்
வெறுத்தனனமனும்வேலையுதிரத்தின்வெள்ளமீள
மரிததனமறிந்தவெங்கும்பிணங்களம்மலைகண்மான. (௧௪௮)

தலையெலாமற்றமற்றதாளெலாமற்றதோளாம்
மலையெலாமற்றபொற்றார்மார்பெலாமற்றசூலத்
திலையெலாமற்றவீரரொயிறெலாமற்றகொற்றச்
சிலையெலாமற்றகற்றசெருவெலாமற்றசிந்தி. (௧௪௯)

தேரொலாந்துமிந்தமாவின்றிறனெலாந்துமிந்தசெங்கட்
காரொலாந்துமிந்தவீரர்கழலெலாந்துமிந்தகண்டத்
தாரொலாந்துமிந்தநின்றதருவெலாந்துமிந்ததத்தம்
போரொலாந்துமிந்தகொண்டபுகழெலாந்துமிந்துபோய. (௧௫௦)

அரவியற்றறுகண்வன்றாளாள்விழவாள்மேல்வீழப்
புரவிமேற்பூட்கைவீழப்பூட்கைமேற்பொலந்தேர்வீழ
நிரவியதேரின்மேன்மேனெடுந்தலைகிடந்தநெய்த்தோர்
விரவியகளத்துளெங்கும்வெள்ளிடையரிதுவீழ (௧௫௧)

கடிப்பின்கணமரரோயுங்கார்முகத்தம்புகையால்
தொடுக்கின்றான்றுரக்கின்றானென்றுணர்ந்திலர்துரந்தவாளி
இடுக்கொன்றுங்காணார்காண்பவெய்தகோனொய்தினெய்திப்
படுக்கின்றபிணத்தின்பம்மற்குப்பையின்பரப்பேபல்கால். (௧௫௨)

குன்றனையானைமானக்குரகதக்கொடுந்தேர்கோப
வன்றிறலாளிசீயமற்றையபிறவுமுற்றும்
சென்றனவெல்லையில்லைத்திரிந்தனசிறிதுபோதும்
நின்றனவில்லையெல்லாங்கிடந்தனநெளிந்தபார்மேல். (௧௫௩)

கொற்றவாள்குலைவேல்சூலங்கொடுஞ்சிலைமுதலகோலி
வெற்றிவெம்படைகள்யாவும்வெந்தொழிலரக்கர்மேற்கொண்
டுற்றனகூற்றுமஞ்சவொளிர்வனவொன்றுநூறா
அற்றனவன்றியாவுமறாதனவில்லையன்றே. (௧௫௪)

சாய்ந்ததுநிருதர்தானைதமர்தலையிடறித்தள்ளூற்
றோய்ந்ததுவொழிந்ததோடியுலந்ததுமாகவன்றே
வேய்ந்ததுவாகைவீரற்கிளையவன்வரிவில்வெம்பிக்
காய்ந்ததவ்விலங்கைவேந்தன்மனமெனுங்காலச்செந்தீ. (௧௫௫)

காற்றுறழ்கலினமான்றேர்கடிதினிற்கடாவிக்கண்ணுற்
றேற்றனனிலங்கைவேந்தனெரிவிழித்திராமன்றம்பி
கூற்றுமால்கொண்டதென்னக்கொல்கின்றான்குறுகச்சென்றான்
சீற்றமுந்தானுநின்றான்பெயர்ந்திலன்சிறிதும்பாதம். (௧௫௬)

வேறு.

காக்கின்றவென்னுறுகாவலின்வலிநீக்கியகள்வ
போக்கின்றனக்கரிதாலெனப்புகன்றான்புகையுயிர்ப்பான்
கோக்கின்றனதொடுக்கின்றனகொலையம்புகடலையோ
டொக்கொன்றியகனலொப்பனவெய்தானிகல்செய்தான். (௧௫௭)

எய்தான்சரமெய்தாவகையிற்றீர்கெனவிடையே
வைதாலெனவைதாவினவடிவாளியினறுத்தான்
ஐதாகலினறுத்தாயினியறுப்பாயெனவழிகார்
பெய்தாலெனச்சரமாரிகள்சொரிந்தான்றுயில்பிரிந்தான். (௧௫௮)

ஆங்குஞ்சரமனையான்விடுமயில்வாளிகளவைதாம்
வீங்குஞ்சரற்பருவத்திழிமழைபோல்வனவிலக்காத்
தாங்குஞ்சரநெடும்புட்டிலிற்சுடர்வேலவற்கிளையான்
வாங்குஞ்சரம்வாங்காவகையறுத்தானறமறுத்தான். (௧௫௯)

அப்போழ்தினியர்வாறியவறுமானமுல்விழியாப்
பொய்ப்போர்சிலபுரியேனெனவவன்றேரொதிர்புகுந்தான்
கைப்போதகமெனமுந்தவன்கடுந்தேரொதிர்நடந்தான்
இப்போரொழிபிறபோருளவகைகேளெனவிசைத்தான். (௧௬௦)

வென்றாயுலகொருமூன்றையுமெலியாநெடுவலியால்
தின்றாய்செறிகழலிந்திரனிசையைத்திசைதிரிந்தாய்
என்றாலுமின்றழிவுன்வயினெய்தும்மெனவிசையா
னின்றானவனெதிரேயுலகளந்தானெனநிமிர்ந்தான். (௧௬௧)

எடுத்தான்வலத்தடக்கையினையதுபோயுலகெல்லாம்
அடுத்தாங்குறவளர்ந்தான்றிருவடியின்வரவன்றன்
மடுத்தாங்குறவளர்ந்தானெனவளர்கின்றவனுருவம்
கடுத்தானெனக்கடியாற்கெதிர்காண்பாயெனக்காட்டா. (௧௬௨)

வில்லாயுதமுதலாயனவயவெம்படைமிடலோ
டெல்லாமிடைபயின்றாய்புயநாலைந்தினொடியைந்தாய்
வல்லாய்செருவலியாய்திறன்மறவோயிதனெதிரோ
நில்லாயெனநிகழ்த்தாநெடுநெருப்பாமெனவுயிர்ப்பான். (௧௬௩)

நீளாண்மையினுடனேயெதிர்நின்றாயிஃதொன்றோ
வாளாண்மையுமுலகேழினொடுடனேயுடைவலியும்
தாளாண்மையுநிகராருமிறனியாண்மையுமினிநின்
தோளாண்மையுமிசையோடுடன்றுடைப்பேனொருபுடைப்பால். (௧௬௪)

பரக்கப்பலவுரைத்தென்படர்கயிலைப்பெருவரைக்கும்
அரக்குற்றெறிபொறிக்கட்டிசைக்கரிக்குஞ்சிறிதனுங்கா
உரக்குப்பையினுயர்தோள்பலவுடையாயுரனுடையாய்
குரக்குத்தனிக்கரத்திற்புடைபொறையாற்றுவைகொல்லாம். (௧௬௫)

என்றேள்வலியதனலெடுத்தியானெற்றவுமிறவா
நின்றயெனினீபின்னெனைநின்கைத்தலநினையால்
குன்றேபுரைதோளாய்மிடல்கொடுகுத்துதிகுத்தப்
பொன்றேனெனினின்றேடெதிர்பொருகின்றிலெனென்றான். (௧௬௬)

காரிற்கரியவன்மாருதிகழறக்கடிதுகவா
வீரற்குரியதுசொற்றனைவிறலோயொருதனியேன்
நேர்நிற்பவருளரோபிறர்நீயல்லவரினிநின்
பேருக்குலகளவேயினியுளவோபிறவென்றான். (௧௬௭)

ஒன்றயுதமுடையாயலையொருநீயெனதுறவும்
கொன்றயுயர்தேர்மேனிமிர்கொடுவெஞ்சிலைகோலி
வன்றனையினுடன்வுந்தவெனெதிர்வந்துநின்வலியால்
நின்றயொடுநின்றரினிநிகரோவுரைநெடியோய். (௧௬௮)

முத்தேவர்கண்முதலாயினர்முழுமூன்றுலகிடையும்
எத்தேவர்களெத்தானவரொவ்வீரர்களென்னோர்
பித்தேறினரல்லாரிடைபேராதெதிர்மார்பில்
குத்தேயெனநின்றரிதுகூறுந்தரமன்றால். (௧௬௯)

பொருகைத்தலமிருபத்துளபுகழுஞ்சிறிதுளதால்
வருகைத்தலமதவெங்கரிவலிகெட்டனவருவாய்
இருகைத்தலமுடையாயெதிரிடைசொற்றனையினிமேல்
தருகைக்குரியதொர்கொற்றமென்னமர்தக்கதுமன்றால். (௧௭௦)

திசையத்தனையையும்வென்றதுசிதையப்புகழ்தெறுமவ்
வசைமற்றினியுளவேயெனதுயிர்போல்வருமகனை
அசையத்தரையினவித்தனையழிசெம்புனலதுவோ
பசையற்றிலதொருநீயெனதெதிர்நின்றிவைபகர்வாய். (௧௭௧)

பூணித்திவையுரைசெய்தனையதனுயிர்பொதுவே
பாணித்ததுபிறிதென்சிலபகர்கின்றதுபழியால்
நாணித்தலையிடுகின்றிலெனனிவர்துலகெவையும்
காணக்கடிதெதிர்குத்துதியென்றான்வினைகடியான். (௧௭௨)

வீரத்திறமிதுநன்றெனவியவாமிகவிளியாத்
தேரிற்கடிதிவராமுழுவிழியிற்பொறிசிதற
ஆரத்தொடுகவசத்துடல்பொடிபட்டுகவவன்மா
மார்பிற்கடிதெதிர்குத்தினன்வயிரக்கரமதனால். (௧௭௩)

அயிருக்கனநெடுமால்வரையனலுக்கனவிழிகள்
தயிருக்கெனமுண்டமூளைகடலையுக்கனதரியா
உயிருக்கனநிருதக்குலமுயர்வானரமெவையும்
மயிருக்கனவெயிறுக்கன்மழையுக்கனவானம். (கஎச)

விற்சிந்தினநெடுநாணிமிர்கணைசிந்தினவிரிநீர்
கற்சிந்தினகுலமால்வரைகதிர்சிந்தினசுடரும்
பற்சிந்தினமதயானைகள்படைசிந்தினவெவரும்
எற்சிந்தினவெரிசிந்தினவிகலோன்மணியகலம். (கஎரு)

கைக்குத்ததுபடலுங்கழனிருதர்க்கிறைகறைநீர்
மைக்குப்பையினெழில்கொண்டொளிர்வயிரத்தடமார்பில்
திக்கிற்சினமதயானைகள்வயவெம்பணைசெருவில்
புக்கிற்றனபோகாதனபுறமுக்கனபுகழின். (கஎசு)

அள்ளாடியகவசத்தவிர்மணியற்றனதிசைபோய்
விள்ளாநெடுமுழுமீனெனவிழிவெம்பொறியெழநின்
றுள்ளாடியநெடுங்கால்பொரவொடுங்காவுலகுலையத்
தள்ளாடியவடமேருவிற்சலித்தானறம்வலித்தான். (கஎஎ)

ஆர்த்தார்விசும்புறைவோர்நெடிதநுமான்மிசையதிகம்
தூர்த்தார்கொழுநறுமென்மலரிசையர்சிகள்சொன்னார்
வேர்த்தார்நிருதர்கள்வானவர்வியந்தாரவன்விசயம்
தீர்த்தானெனவுவந்தாடினர்முழுமெய்ம்மயிர்சிலிர்த்தார். (கஎஅ)

கற்றங்கியநெடுவாயுவினிலைகண்டவர்கதியால்
மற்றங்கொருவடிவுற்றதுமாருடுறுகாலைப்
பற்றங்கொருமையினல்லதுபயில்கின்றதொர்செயலால்
உற்றங்கதுபுறம்போயுடல்புகுந்தாலெனவுணர்ந்தான். (கஎக)

உணராநெடிதுயிராவுணாயுதவாவெரியுமிழா
இணையாருமிலவனோர்வரவெய்தாவலிசெய்தாய்
அணையாயினியெனதூழெனவடராவெளிபடராப்
பணையார்புயமுடையானிடைசிலவிம்மொழிபகர்ந்தான். (கஅ0)

வலியென்பதுமுளதேயதுநின்பாலதுமறவோய்
அலியென்பனபுறநின்றனவுலகேழினுமடைத்தாய்
சலியென்றெதிர்மலரோனுரைதந்தாலிறைசலியேன்
மெலிவென்பதுமுணர்ந்தேனெனைவென்றாயினிவிறலோய். (கஅக)

ஒன்றுண்டினியுரைநேர்குவதுன்மார்பிலென்னொருகைக்
குன்றின்மிசைகடைநாள்விழுமுருமேறெனக்குளித்தால்
நின்றுன்னிலைதருவாயெனினீயல்லவருளரோ
இன்றும்முளையென்றும்முளையிலையோர்பகையென்றான். (கஅ௨)

என்றுனெதிர்சென்றுனிகலடுமாருதியெனை நீ
வென்றுயலையோவுன்னுயிர்வீடாதுரைசெய்தாய்
நன்றுகநின்னிலைநன்றெனநல்காவெதிர்நடவாக்
குன்றுகியதிரடோளவன்கடன்கொள்கெனக்கொடுத்தான். (௧௮௩)

உறுக்கித்தனியெதிர்நின்றவனுரத்திற்றனதொளிர்பல்
இறுக்கிப்பலநெடுவாய்மடித்தெரிகண்டொறுமிழிய
முறுக்கிப்பொறிகிமிர்பல்விரலெரியத்திசைமுரியக்
குறுக்கிக்கரநெடுந்தோள்புறநிமிரக்கொடுகுத்த. (௧௮௪)

பள்ளக்கடல்கொள்ளப்படர்படிபேரினும்பதையா
வள்ளற்பெருவெள்ளத்தெறுழ்வலியாரினும்வலியான்
கள்ளக்கறையுள்ளத்ததிர்கழல்வெய்யவன்கரத்தால்
தள்ளத்தளர்வெள்ளிப்பெருங்கிரியாமெனச்சலித்தான். (௧௮௫)

வேறு.

சலித்தகாலையிலிமையவருலகெலாஞ்சலித்த
சலித்ததாலறஞ்சலித்தது மெய்ம்மொழிதகவும்
சலித்ததன்றியும்புகழொடுசுருதியுஞ்சலித்த
சலித்தநீதியுஞ்சலித்தனகருணையுந்தவமும். (௧௮௬)

அனையகாலையினரிகுலத்தலைவர்வ்வழியோர்
எனைவரன்னவர்யாவருமோர்குவடேந்தி
நினைவின்முன்னெடுவிசும்பொருவெளியின்றிநெருங்க
வினையிதென்றறிந்திராவணன்மேற்செலவிட்டார். (௧௮௭)

ஒத்தகையினருழியினிறுதியினுலகை
மொத்தமீதெழுமேகத்தின்விசும்பெலாமொய்ப்பப்
பத்துநூறுகோடிக்குமேற்பணிபடுசிகரம்
எற்றமேற்செலவெறிந்தனர்பிறிந்தனரிமையோர். (௧௮௮)

தருக்கிவீசிடவிசும்பிடமின்மையிற்றம்மின்
நெருக்குகின்றனநின்றனசென்றிலநிறைந்த
அருக்கனும்மறைந்தாரிருள்விழுங்கியதண்டம்
சுருக்கமுற்றனரரக்கரொன்றிமையவர்சூழ்ந்தார். (௧௮௯)

ஒன்றையொன்றுபட்டொடிவனவிடித்துருமதிரச்
சென்றவன்பொறிமின்பலசெறிந்திடத்தெய்வ
வென்றிவில்லெனவிருநிலம்வீழ்ந்திடமேன்மேல்
கன்றியோடிடக்கன்மழைநிகர்த்தனகற்கள். (௧௯0)

இரிந்துநீங்கியவிராக்கதப்பெரும்பலமெங்கும்
விரிந்துசிந்தினவானத்துமீனெடுவிமானம்
சொரிந்தவெம்பொறிபடக்கடல்சுவறினதோற்றம்
கரிந்தகண்டகர்கண்மணியென்பலகழறி. (௧௯௧)

இறுத்தநின்றுலகென்பதோர்திமிலம்வந்தெய்தக்
கறுத்தசிந்தையனிராவணனனையதுகண்டான்
ஒறுத்துவானவர்புகழுண்டபாரவில்லுலைய
அறுத்துநீக்கினனாயிரகோடிமேலம்பால். (௧௯௨)

காம்பெலாங்கடுந்துகள்படக்களிறெலாந்துணியப்
பாம்பெலாம்படயாளியுமுழுவையும்பாறக்
கூம்பர்மாமரமெறிந்துகக்குறுந்துகணொருங்கச்
சாம்பராயினதடவரைசுடுகணைதடிய. (௧௯௩)

உற்றவாறென்றுமொன்றுநூறாயிரமுருவா
இற்றவாறென்றுமிடிப்புண்டுபொடிப்பொடியாகி
அற்றவாறென்றுமக்கணையடுசிலைகொடியோன்
கற்றவாறென்றும்வானவர்கைத்தலங்குலைத்தார். (௧௯௪)

அடறுடைத்துமென்றரிகுலவீரரன்றெறிந்த
திடறுடைத்தனதசமுகன்சரமவைதிசைசூழ்
கடறுடைத்தனகளத்தினின்றுயர்தரும்பூழி
உடறுடைத்தனவுதிரமுந்துடைத்தவொண்புடவி. (௧௯௫)

கொல்வலிக்குறியேமற்றிவ்வானரக்குழுவை
வெல்வன்மானுடரிருவரையெனச்சினம்வீங்கப்
பல்வன்கூன்சிலைபத்துடனிடக்கையின்வாங்கித்
தொல்வன்மாரியிற்றொடர்வனசுடுசரந்துரந்தான். (௧௯௬)

ஐயிரண்டுகார்முகத்தினுமாயிரம்பகழி
கைகளீரைந்தினும்வெங்கடுப்பினிற்றொடுத்துற்
றெய்யவெஞ்சினவானமுமிருநிலவரைப்பும்
மொய்கொள்வேலையுந்திசைகளுஞ்சரங்களாய்முடிந்த. (௧௯௭)

அந்திவானகமொத்ததவ்வமர்க்களமுதிரம்
சிந்திவேலையுந்திசைகளுநிறைந்தனசரத்தால்
பந்திபந்தியாய்மடிந்ததவ்வானரப்பகுதி
வந்துகார்முகில்படிந்தனபிணப்பெருமலைமேல். (௧௯௮)

நீலனம்பொர்டுசென்றிலனின்றிலனிலத்தான்
காலனார்வயத்தடைந்திலனேவுண்டகவயன்
ஆலமன்னதோர்சரத்தொடுமங்கதனயர்ந்தான்
சூலமன்னதோர்வாளியாற்சோம்பினன்சாம்பன். (௧௯௯)

மற்றும்வீரர்தமருமத்தினையிலம்புமடுப்பக்
கொற்றவீரமுமாண்டொழிற்செய்கையுங்குறைந்தார்
சுற்றும்வானரப்பெருங்கடறொலைந்ததுதொலையா
துற்றுநின்றவரோடினரிலக்குவனுருத்தான். (௨௦௦)

நூறுகோடியநூறுநூறுயிரகோடி
வேறுவேறெய்தசரமெலாஞ்சரங்களால்விலக்கி
ஏறுசேவகன்றம்பியவ்விராவணனெடுத்த
ஆறுநாலுவெஞ்சிலையையுங்கணைகளாலறுத்தான். (௨0௧)

ஆர்த்துவானவராவலங்கொட்டினரரக்கர்
வேர்த்துநெஞ்சமும்வெதும்பினர்வினையறுமுனிவர்
தூர்த்துநாண்மலர்சொரிந்தனரிராவணன்றுளைப்
பார்த்துவந்ததுகுனித்ததுநல்லறம்பாடி. (௨0௨)

நன்றுபோர்வலிநன்றுபோராற்றலும்வீரம்
நன்றுநோக்கமுநன்றுகைக்கடுமையுநன்று
நன்றுகல்வியுநன்றுநின்திண்மையுநலனும்
என்றுகைம்மறித்திராவணனொருவனீயென்றான். (௨0௩)

கானினன்றிகல்கரன்படைபடுத்தவக்கரியோன்
றானுமிந்திரன்றன்னையோர்தனுவலந்தன்னால்
வானின்வென்றவென்மதலையும்வரிசிலைபிடித்த
யானுமல்லவர்யாருனக்கெதிரொன்றுமிசைத்தான். (௨0௪)

வில்லினாலிவன்வெலப்படானெனச்சினம்வீங்கக்
கொல்லுநாளுமின்றிதுவெனச்சிந்தையிற்கொண்டான்
பல்லினாலிதழதுக்கினன்பருவலிக்கரத்தால்
எல்லினான்முகன்கொடுத்ததோர்வேலெடுத்தெறிந்தான். (௨0௫)

எறிந்தகாலவேலெய்தவம்பியாவையுமெரித்துப்
பொறிந்துபோயுகத்தியுகவிசையினிற்பொங்கிச்
செறிந்ததாரவன்மார்பிடைச்சென்றதுசிந்தை
அறிந்தமைந்தனுமமர்நெடுங்களத்திடையயர்ந்தான். (௨0௬)

இரியலுற்றதுவானரப்பெரும்படையிமையோர்
பரியலுற்றனர்குலைந்தனர்முனிவரும்பதைத்தார்
விரிதிரைக்கடற்கிரட்டிகொண்டார்த்தனர்விரவார்
திரிகையொத்துமண்டலங்கதிரொளிதிரிந்த. (௨0௭)

அஞ்சினானலனயன்றந்தவேலினுமாவி
துஞ்சினானலன்றுளங்கினானென்பதுதுணியா
எஞ்சில்யாக்கையையெடுத்துக்கொண்டகல்வெனென்றெண்ணி
நஞ்சினாற்செய்தமனத்தினான்பாரின்மேனடந்தான். (௨0௮)

உள்ளிவெம்பிணத்துதிரநீர்வெள்ளத்தினோடி
அள்ளியங்கைகளிருபதும்பற்றிப்பண்டரன்மா
வெள்ளியங்கிரியெடுத்தனன்வெள்கினானென்ன
எள்ளில்பொன்மலையெடுக்கலுற்றானெனவெடுத்தான். (௨0௯)

அடுத்தநல்லுணர்வழிந்திலனம்பரஞ்செம்பொன்
உடுத்தநாயகன்றனெனவுணர்ந்தனனெருங்கே
தொடுத்தவெண்வகைமூர்த்தியைத்துளக்கிவெண்பொருப்போ
டெடுத்ததோள்களுக்கெழுந்திலனிராமனுக்கிளையான். (௨௪0)

தலைகள்பத்தொடுந்தழுவியதசமுகத்தலைவன்
நிலைகொண்மாகடலொத்தனன்கரம்புடைநிமிரும்
அலைகளொத்தனவதிலெழுமிரவியையொத்தான்
இலைகொடண்டுழாயிலங்குதோளிராமனுக்கிளையான். (௨௪௧)

எடுக்கலுற்றவன்மேனியையேந்துதற்கேற்ற
மிடுக்கிலாமையினிராவணன்வெய்துயிர்ப்புற்றான்
இடுக்கினின்றவம்மாருதிபுகுந்தெடுத்தேந்தித்
தடுக்கலாததோர்விசையினனெழுந்தயல்சார்ந்தான். (௨௪௨)

தொகவொருங்கியஞானமொன்றேசொலவெவர்க்கும்
தகவுகண்டதோரன்பெனுந்தனித்துணையதனால்
அகவுகாதலாலண்டகையென்னினுமறுமன்
மகவுகொண்டுபோய்மரம்புகுமந்தியைநிகர்த்தான். (௨௪௩)

மையல்கூர்மனத்திராவணன்படையினன்மயங்கும்
செய்யவாளரியேறனன்சிறிதினிற்றேறக்
கையுங்கால்களுநயனமுங்கமலமேயனைய
பொய்யிலாதவனின்றிடத்தறுமனும்போனான். (௨௪௪)

போனகாலையிற்புக்கனன்புங்கவன்போர்வேட்
டியானைமேற்செலுங்கோளரியேறிவனென்ன
வானுளோர்கணமார்த்ததுதூர்த்ததுமலர்மேல்
ஆனவின்றவேலரக்கனுந்தேரினைத்துரந்தான். (௨௪௫)

தேரிற்போரரக்கன்செலச்சேவகன்செவ்வே
பாரிற்செல்கின்றவறுமையைநோக்கினன்பரிந்தான்
சீரிற்செல்கின்றதில்லையிச்செருவெனுந்திறத்தால்
வாரிற்பெய்கழன்மாருதிகதுமெனவந்தான். (௨௪௬)

பண்டைநாடருபனித்திரைப்புனல்சடையேற்றுக்
கொண்டதூயவன்கொடுந்தொழினிருதர்கள்குழுமி
மண்டுவாளமர்க்களத்திலம்மலர்க்கழல்சேறல்
கண்டுகூசலனிற்குமென்றால்துகடனே. (௨௪௭)

நூறுபத்துடைநொறில்பரித்தேரின்மேனுன்முன்
மாறில்போரரக்கன்பொரநிலத்துநீமலைதல்
வேறுகாட்டுமோர்வெறுமையைமெல்லியவேனும்
ஏறுநீயையவென்னுடைத்தோளின்மேலென்றான் (௨௪௮)

நன்றுநன்றெனுநாயகனேறினனுமக்
குன்றுமேலிவர்கோளரியேறெனக்கூறி
அன்றுவானவராசிகளியம்பினரீன்ற
கன்றுதாங்கியதாயெனமாருதிகளித்தான்.] (உகக)

மாணியாயுலகளந்தநாளவனுடைவடிவை
ஆணியாயுணர்மாருதியதிசயமுற்றான்
காணியாகப்பண்டுடையனுமொருதனிக்கலுழன்
நாணினன்மற்றறையநந்தனுந்தலைநடுக்குற்றான். (உஉ0)

ஓதமொத்தனன்மாருதியதனகத்துறையும்
நாதனொத்தனனென்னின்றேதுயில்கிலனம்பன்
வேதமொத்தனன்மாருதிவேதத்தின்சிரத்தின்
போதமொத்தனனிராமன்வேறிதனினில்பொருவே. (உஉக)

வேறு.

தகுதியாய்நின்றவென்றிமாருதிதனிமைசார்ந்த
மிகுதியைவேறுநோக்கினெவ்வண்ணம்விளம்புந்தன்மை
புகுதிகூர்ந்துள்ளார்வேதம்பொதுவுறப்புலத்துநோக்கும்
பகுதியையொத்தான்வீரன்மேலைத்தன்பதமேயொத்தான். (உஉஉ)

மேருவின்சிகரம்போன்றதென்னினும்வெளிறுண்டாமால்
மூரிநீரண்டமெல்லாம்வயிற்றிடைமுன்னங்கொண்ட
ஆரியற்கநேகமார்க்கத்தாலிடம்வலமதாகச்
சாரிகைதிரியலானுன்மாருதிதருமப்பொற்றேள். (உஉ௩)

வேறு.

ஆசிசொல்லினரருந்தவரறமெனுந்தெய்வம்
காசினன்னெடுங்கரமுயர்த்தாடிடக்கயிலை
ஈசனுன்முகனென்றிவர்முதலியவிமையோர்
பூசல்காணியவந்தனரந்தரம்புகுந்தார். (உஉச)

அண்ணலஞ்சனவண்ணனுமமர்குறித்தமைந்தான்
எண்ணரும்பெருந்தனிவலிச்சிலையைநாணெறிந்தான்
மண்ணும்வானமுமற்றையபிறவுந்தன்வாய்ப்பெய்
துண்ணுங்காலத்தவ்வுருத்திரனுர்ப்பொத்ததோதை. (உஉ௫)

ஆவிசென்றிலர்நின்றிலரரக்கரோடியக்கர்
நாவுலர்ந்தனர்கலங்கினர்விலங்கினர்நடுங்கிக்
கோவைநின்றபேரண்டமுங்குலைந்தனகுலையாத்
தேவதேவனும்விரிஞ்சனுஞ்சிரதலங்குலைந்தார். (உஉசு)

ஊழிவெங்கனலொப்பனதப்பனவுருவ
ஆழிநீரையுங்குடிப்பனதிசைகளையளப்ப
வீழின்மீச்செலின்மண்ணையும்விண்ணையுந்தொளைப்ப
ஏழுவெஞ்சரமுடன்றெடுத்திராவணனெய்தான். (உஉஎ)

எய்தவாளியையெழிஞலேழிஞேடேழு
செய்துவெஞ்சரமைந்தொருதொடையினிற்சேர்த்தி
வெய்துகாலவெங்கனல்களும்வெள்குறப்பொறிகள்
பெய்துபோம்வகையிராகவன்சிலைநின்றுபெயர்த்தான். (௨௨௯)

வாளியைந்தையுமைந்திஞல்விசும்பிடைமாற்றி
ஆளிமொய்ம்பனவ்வரக்கனுமையிரண்டம்பு
தோளிஞுறவாங்கினன்றுரந்தனன்சுருதி
ஆளுநாயகனவற்றையுமவற்றிஞலறுத்தான். (௨௨௧)

அறுத்துமற்றவனயனின்றவளக்கருமளக்கர்
செறுத்துவிட்டனபடையெலாங்கணைகளாற்சிந்தி
இறுத்துவீசியகிரிகளையெரியுறநூறி
ஒறுத்துமற்றவர்தலைகளாற்சிலமலையுயர்த்தான். (௨௩௦)

மீனுடைக்கருங்கடல்புரையிராக்கதர்விட்ட
ஊனுடைப்படையிராவணனம்பொடுமோடி
வானரக்கடல்படாவகைவாளியான்மாற்றித்
தானுடைச்சரத்தாலவர்தலைமலைதடிந்தான். (௨௩௧)

இம்பரானெனின்விசும்பினருகுமோரிமைப்பின்
தும்பைசூடியவிராவணன்முகந்தொறுந்தோன்றும்
வெம்புவஞ்சகர்விழிதொறுந்திரியுமேனின்முன்
அம்பின்முன்செலுமனத்திற்குமுன்செலுமநுமன். (௨௩௨)

ஆடுகின்றனகவந்தமுமவற்ருெடுமாடிப்
பாடுகின்றனவலகையுநீங்கியபணைக்கைக்
கோடுதுன்றியகரிகளும்பரிகளுந்தலைக்கொண்
டோடுகின்றனவுலப்பிலவுதிரவாறுவரி. (௨௩௩)

அற்றவாழியவறுப்புண்டவச்சினவம்போ
டிற்றகொய்யுளைப்புரவியதேர்க்குலமெல்லாம்
ஒற்றவாளியோடுருண்டனகருங்களிற்ருேங்கல்
சுற்றும்வாசியுந்துமிந்தனவமர்க்களந்தொடர்ந்த. (௨௩௪)

தேரிழந்துவெஞ்சிலைகளுமிழந்துசெந்தறுகட்
காரிழந்துவெங்கலினமாக்கால்களுமிழந்து
சூரிழந்துவன்கவசமுமிழந்துதுப்பிழந்து
தாரிழந்துபின்னிழந்தனர்நிருதர்தந்தலைகள். (௨௩௫)

அரவினுண்ணிடைமடந்தையர்கணவரன்றற்ற
சிரமுமன்னவையாதலின்வேற்றுமைதெரியாப்
புரவியின்றலைபூட்கையின்றலையிவைபொருத்திக்
கரவிலின்னுயிர்துறந்தனர்கவ்வுறத்தழுவி. (௨௩௬)

ஒன்றுநூற்றினோடாயிரங்கொடுந்தலையுருட்டிச்
சென்றுதீர்வனவெனைப்பலகோடியுஞ்சிந்தி
நின்றதேரொடுமிராவணனொருவனுநிற்பக்
கொன்றுவீழ்த்தினவிராகவன்சரமெனுங்கூற்றம். (உ௩எ)

ஆர்ப்படங்கினவாயெலாமழற்கொழுந்தொழுகப்
பார்ப்படங்கினகண்ணெலாம்பல்வகைப்படைகள்
தூர்ப்படங்கினகையெலாந்தூளியின்படலைப்
போர்ப்படங்கினவுலகெலாமுரசெலாம்போன. (உ௩அ)

தேரும்யானையும்புரவியுமரக்கருந்தெற்றிப்
பேருமோரிடமின்றெனத்திசைதொறும்பிறங்கிக்
காரும்வானமுந்தொடுவனபிணக்குவைகண்டான்
மூரிவெஞ்சிலையிராவணனராவெனமுனிந்தான். (உ௩௯)

முரண்டொகுஞ்சிலையிமைப்பினின்முறையுறவாங்கிப்
புரண்டுதோளுறப்பொலன்கொணுண்வலம்படப்போக்கித்
திரண்டவாளிகள்சேவகன்மரகதசிகரத்
திரண்டுதோளினுமிரண்டுபுக்கழுந்திடவெய்தான். (உ௪0)

முறுவலெய்தியமுகத்தினன்முளரியங்கண்ணன்
மறுவிலாததோர்வடிக்கணைதொடுத்துறவாங்கி
இறுதியெய்துநாட்கால்பொரமந்தரமிடையிட்
டறுவதாமெனவிராவணன்சிலையினையறுத்தான். (உ௪க)

மாற்றும்வெஞ்சிலைவாங்கினன்வடிம்புடைநெடுநாண்
ஏற்றுமுமுனமிடையறக்கணைகளாலெய்தான்
காற்றினுங்கடிதாயவன்கதிர்மணிநெடுந்தேர்
ஆற்றுகொய்யுளைப்புரவியின்சிரங்களுமறுத்தான். (உ௪உ)

மற்றும்வெம்படைவாங்கினன்வழங்குறுமுன்னம்
அற்றவிந்துகவயின்முகக்கணைகளாலறுத்தான்
கொற்றவெண்குடைகொடியொடுந்துணிபடக்குறைத்தான்
கற்றையுஞ்சுடர்க்கவசமுங்கட்டறக்கடிந்தான். (உ௪௩)

மாற்றுத்தேரவண்வந்தனவந்தனவாரா
வீற்றுவீற்றுறவெயிலுமிழ்கடுங்கணைவிட்டான்
சேற்றுச்செம்புனல்படுகளப்பரப்பிடைச்செங்கட்
கூற்றுக்கையெடுத்தாடவிராவணன்கொதித்தான். (உ௪௪)

மின்னும்பன்மணிமௌலிமேலொருகணைவிட்டான்
அன்னகாய்கதிரிரவிமேற்பாய்ந்தபோரரமன்
என்னலாயதோர்விசையினிற்சென்றவன்றலையில்
பொன்னின்மாமணிமகுடத்தைப்புணரியில்வீழ்த்து. (உ௪௫)

செறிந்தபன்மணிப்பெருவனந்திசைபரந்தெரியப்
பொறிந்தவாய்வயக்கடுஞ்சுடர்க்கணைபட்டபொழுதின்
எறிந்தகால்பொரமேருவின்கொடுமுடியிடந்து
மறிந்துவீழ்ந்ததுமொத்ததவ்வரக்கன்றன்மகுடம். (௨௪௬)

அண்டர்நாயகனடுசிலையுஞ்சத்தபேரம்பு
கொண்டுபோகப்போய்க்குரைகடல்குளித்தவக்கொள்கை
மண்டலந்தொடர்வயங்குவெங்கதிர்களைவாயால்
உண்டகோளொடுவொலிகடல்வீழ்ந்ததுமொக்கும். (௨௪௭)

சொல்லுமத்தனையளவையின்மணிமுடிதுறந்தான்
எல்லிமைத்தெழுமதியமுஞாயிறுமிழந்த
அல்லுமொத்தனன்பகலுமொத்தனனமர்பொருமேல்
வெல்லுமத்தனையல்லதுதோற்றிலாவிறலோன். (௨௪௮)

மாற்றருந்தடமணிமுடியிழந்தவாளரக்கன்
ஏற்றமெவ்வுலகத்தினுமுயர்ந்துளானெனினும்
ஆற்றநன்னெடுங்கவிஞராங்கதமுறைப்பப்
போற்றரும்புகழிழந்தபேரொருவனும்போன்றான். (௨௪௯)

அறங்கடந்தவர்செயலிதென்றுலகெலாமார்ப்ப
நிறங்கரிந்துகானிலம்விரல்கிளைத்திடநின்றான்
இறங்குகண்ணினனெல்லழிமுகத்தினன்றலையன்
வெறுங்கைநாற்றினன்விழுதுடையாலன்னமெய்யன். (௨௫௰)

நின்றவந்நிலைநோக்கியநெடுந்தகையிவனைக்
கொன்றலுன்னிலன்வெறுங்கைநின்றானெனக்கொள்ளா
இன்றவிந்ததுபோலுமுன்றீமையென்றிசையோ
டொன்றுவந்தனவாசகமினையனவுரைத்தான். (௨௫௧)

அறத்தினாலன்றியமரர்க்குமருஞ்சமங்கடத்தல்
மறத்தினாலரிதென்பதுமனத்திடைவலித்தி
பறத்திநின்னெடும்பதிபுகவிமைப்பினிற்பாவி
இறத்தியானதுநினைக்கிலென்றனிமைகண்டிரங்கி. (௨௫௨)

உடைப்பெருங்குலத்தினரொடுமுறவொடுமுதவும்
படைக்கலங்களுமற்றுநீதேடியபல்லவும்
அடைத்துவைத்தனதிறந்துகொண்டாற்றுதியாயின்
கிடைத்தியல்லையேலொளித்தியாற்சிறுதொழிற்கீழோய். (௨௫௩)

சிறையின்வைத்தவடன்னைவிட்டுலகினிற்றேவர்
முறையின்வைத்துநின்றம்பியையிராக்கதமுதற்பேர்
இறையின்வைத்தவற்கேவல்செய்திருத்தியாலன்றேல்
தறையின்வைக்கிலெனின்றலையாளியிற்றடிந்து. (௨௫௪)

அல்லையாமெனினூரமராற்றெனுந்தோற்றம்
வல்லையாமெனினுனக்குளவலியெலாங்கொண்டு
நில்லையாவெனநோர்நின்றுபொன்றுதியெனினும்
நல்லையாகுதியிழைப்பினியுண்டெனநயவேல். (௨௫௫)

ஆளையாவுனக்கமைந்தனமாருதமறைந்த
பூளையாயினகண்டனையின்றுபோய்ப்போரற்கு
நாளைவாவெனநல்கினனிளங்கமுகின்
வாளைதாவுறுகோசலைநாடுடைவள்ளல். (௨௫௬)

முதற்போர்ப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௧௨௧௭.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௧௫-வது. கும்பகருணன்வதைப்படலம்.

வாரணம்பொருதமார்பும்வரையினையெடுத்ததோளும்
ஆரணமுனிவர்க்கேற்பவருமறைபயின்றநாவும்
தாரணிமௌலிபத்துஞ்சங்கரன்கொடுத்தவாளும்
வீரமுங்களத்தேபோக்கிவெறுங்கையோடிலங்கைபுக்கான். (௧)

கிடந்தபோர்வலியார்மாட்டேகொடாதவானவரையெல்லாம்
கடந்துபோயுலகமூன்றுங்காக்கின்றகாவலாளன்
தொடர்ந்துபோம்பழியினோடுந்தூங்கியகரங்களோடும்
நடந்துபோய்நகரம்புக்கானருக்கனுநாகஞ்சேர்ந்தான். (௨)

மாதிரமெவையுநோக்கான்வளநகர்நோக்கான்வந்த
காதலர்தம்மைநோக்கான்கடற்பெருஞ்சேனைநோக்கான்
தாதவிழ்கூந்தன்மாதர்தனித்தனிநோக்கத்தானப்
பூதலமென்னுநங்கைதன்னையேநோக்கிப்புக்கான். (௩)

நாளொத்தநளினமன்னமுகத்தியர்நயனமெல்லாம்
வாளொத்தமைந்தர்வார்த்தையிராகவன்வாளியொத்த
கோளொத்தசிறைவைத்தாண்டகொற்றவற்கற்றைநாடன்
றோளொத்ததுணைமென்கொங்கைநோக்கங்குத்தொடர்கிலாமை. ()

மந்திரச்சுற்றத்தாரும்வாணுதல்சுற்றத்தாரும்
தந்திரச்சுற்றத்தாருந்தன்கிளைச்சுற்றத்தாரும்
எந்திரப்பொறியினிற்பயாவருமின்றித்தானே
சிந்துரக்களிறுகூடம்புக்கெனக்கோயில்சேர்ந்தான். (௫)

ஆண்டொருசெம்பொற்பீடத்திருந்துதன்வருத்தமாறி
நீண்டுயர்நினைப்பனாகிக்கஞ்சுகியயனின்றானை
ஈண்டுநந்தூதர்தம்மையிவ்வழித்தருதியென்றான்
பூண்டதோர்பணியின்வல்லைநால்வரைக்கொண்டுபுக்கான். (௬)

மனசதிவாயுவேகன்மருத்தன்மாமேகனென்றிவ்
வினையறிதொழிலர்முன்னுவாயிலர்விரவினூரை
நினைவதன்முன்னநீர்போய்நெடுந்திசையெட்டுநீந்திக்
கனைகழலரக்கர்தானைகொணருதிர்கடிதினென்றான். (௭)

ஏழ்பெருங்கடலுஞ்சூழ்ந்தவேழ்பெருந்தீவுமெண்ணில்
பாழியம்பொருப்புங்கீழ்பாற்படுத்தபாதாளத்துள்ளும்
ஆழியங்கிரியின்மேலுமரக்கராயோரையெல்லாம்
தாழ்விலிர்கொணர்திரென்றானப்பணித்தலையினின்றார். (௮)

மூவகையுலகுளோருமுறைமையினின்றேவல்செய்வார்
பாவகமின்னதென்றுதெரிகிலர்பதைத்துவிம்மித்
தூவகலாதவை[illegible]ஃகுறத்தொளைக்கையானை
சேவகமமைந்ததென்னச்செறிமலரமளிசேர்ந்தான். (௯)

பண்ணிறைபவளச்செவ்வாய்ப்பைந்தொடிச்சீதையென்னும்
பெண்ணிறைகொண்டநெஞ்சினுண்ணிறைகொண்டபின்னர்க்
கண்ணிறைகோடல்செய்யான்கையறுபழங்கண்சுற்ற
உண்ணிறைமானந்தன்னையுமிழ்ந்தெரியுயிர்ப்பதானான். (௧௦)

வானகுமண்ணுமெல்லாநகுநெடுவயிரத்தோளான்
தானகுபகைஞரெல்லாநகுவரென்றதற்குநாணான்
வேனகுநெடுங்கட்செவ்வாய்மெல்லியன்மிதிலைவந்த
சானகிநகுவளென்றேநாணத்தாற்சாம்புகின்றான். (௧௧)

ஆங்கவன்றன்மூதாதையாகியமுப்பின்யாக்கை
வாங்கியவரிவிலன்னமாலியவானென்றோதும்
பூங்கழலரக்கன்வந்துபொலன்கழலிலங்கைவேந்தைத்
தாங்கியவமளிமாடோர்தவிசுடைப்பீடஞ்சார்ந்தான். (௧௨)

இருந்தவனிலங்கைவேந்தனியற்கையையெய்தநோக்கிப்
பொருந்தவந்துற்றபோரிற்றேறினன்போலுமென்னா
வருந்தினைமனமுந்தோளும்வாடினைநாளும்வாடாப்
பெருந்தவமுடையவையவென்னுற்றபெற்றியென்றான். (௧௩)

கவையுறுநெஞ்சன்காந்திக்கனல்கின்றகண்ணன்பத்துச்
சிவையின்வாயென்னச்செந்தீயுயிர்ப்புறச்சேர்ந்தமூக்கன்
நவையறுபாகையன்றியமுதினைநக்குமேனும்
சுவையறவுணங்குநாவானினையனசொறலுற்றான். (௧௪)

சங்கம்வந்துற்றகொற்றத்தாபதர்தம்மோடெம்மோ
டங்கம்வந்துற்றதாகவமரர்வந்துற்றதாற்றார்
கங்கம்வந்துற்றசெய்யகளத்துநங்குலத்துக்கொவ்வாப்
பங்கம்வந்துற்றதன்றிப்பழியும்வந்துற்றதென்றான். (௧௫)

முளையமைதிங்கள்சூடுமுக்கணுன்முதல்வனுகக்
கிளையமைபுவனமூன்றும்வந்துடன்கெழீஇயவேனும்
வளையமைவரிவில்வாளிமெய்யுறவழங்குமேலவ்
விளையவன்றனக்குமாற்ருவென்பெருஞ்சேனையென்னே. (கரு)

எறித்தபோரரக்கராவியெண்ணிலாவெள்ளமெஞ்சப்
பறித்தபோதென்னையந்தப்பரிபவமுதுகிற்பற்றப்
பொறித்தபோதந்நாளந்தக்கூனிகூன்போகவுண்டை
தெறித்தபோதொத்ததன்றிச்சினவுண்மைதெரிந்ததில்லை. (கஎ)

மலையுறப்பெரியராயவாளெயிற்றரக்கர்தானை
நிலையுறச்செறிந்தவெள்ளநூற்றிரண்டெனினுநேரோ
குலையுறக்குளித்தவாளிகுதிரையைக்களிற்றையாளின்
தலையறப்பட்டதல்லாலுடல்களிற்றங்கிற்றுண்டோ. (கஅ)

போயபினவன்கைவாளியுலகெலாம்புகுவதல்லால்
ஓயுமென்றுரைக்கலாமோவூழிசென்ருலுமூழித்
தீயையுந்திக்குஞ்செல்லுந்திசையையுந்திக்குஞ்செப்பும்
வாயையுந்திக்குமுன்னின்மனத்தையுந்திக்குமன்றே. (கக)

மேருவையுருவுமென்னின்விண்கடந்தேகுமென்னின்
பாரினைப்பிளக்குமென்னிற்கடல்களைப்பருகுமென்னின்
ஆருமேயவற்றினுற்றலாருமேலநந்தகோடி
மேருவும்விண்ணுமண்ணுங்கடல்களும்வேண்டுமன்றே. (உ0)

வரிசிலைநாணிற்கோத்துவாங்கினன்விடுதலொன்றும்
தெரிகிலதமரரோயும்யாரவன்செய்கைதேர்வார்
பொருசினத்தரக்கராவிபோகியபோகவென்று
கருதியவுலகமெல்லாஞ்சரங்களாய்க்காட்டுமன்றே (உக)

நல்லியற்கவிஞர்நாவிற்பொருள்குறித்தமைந்தஞானச்
சொல்லெனச்செப்பங்கொண்டதொடையெனத்தொடையைநீக்கி
எல்லையிற்சென்றுதீராவிசையெனப்பழுதிலாத
பல்லலங்காரப்பண்பேகாகுத்தன்பகழிமாதோ. (உஉ)

இந்திரன்குலிசவேலுமீசன்கையிலைமூன்றென்னும்
மந்திரவயிலுமாயோன்வளையெஃகின்வரவுங்கண்டேன்
அந்தரநீளிதம்மாதாபதனம்புக்காற்ரு
நொந்தனென்யானலாதாராரவைநோற்ககிற்பார். (உங)

பேயிருங்கணங்களோடுசுடுகளத்துறையும்பெற்றி
ஏயவன்ருேள்களெட்டுமிந்திரனிரண்டுதோளும்
மாயிருஞாலமுற்றும்வயிற்றிடைவைத்தமாயன்
ஆயிரந்தோளுமன்னன்விரலொன்றினுற்றலாற்ரு. (உச)

சீர்த்தவீரியராயுள்ளார் செங்கண்மாலெனினும்யானக்
கார்த்தவீரியனேநேர்வாருளரோனக்கருதலாற்றேன்
பார்த்தபோதவனுமற்றுத்தாபதன்றம்பிபாதத்
தார்த்ததோர்துகளுக்கொவ்வானரவற்காற்றகிற்பார். (௨௫)

மூப்புரமொருங்கச்செற்றமூரிவெஞ்சிலையவ்வீரன்
அற்புதவில்லுக்கையவம்பெனக்கொளலுமாகா
ஒப்புவேறுரைக்கலாவதொருபொருளில்லைவேதம்
தப்பினபோதுமன்னூன்றனுவுமிழ்சரங்கடப்பா. (௨௬)

உற்பத்திபயனேயொக்குமோடும்போதரியேயொக்கும்
சுற்பத்தினரனேயொக்கும்பகைஞரைக்கலந்தகாலைச்
சிற்பத்தினம்மாற்பேசச்சிறியவோவென்னைத்தீராத்
தற்பத்தைத்துடைத்தவென்றூற்பிறிதொருசான்றுமுண்டோ. (௨௭)

குடக்கதோகுணக்கதேயோகோணத்தின்பாலதேயோ
தடத்தபேருலகத்தேயோவிசும்பதோவெங்குந்தானே
வடக்கதோதெற்கதோவென்றுணர்ந்திலென்மனிசன்வல்வில்
இடத்ததோவலத்ததோவென்றுணர்ந்திலென்யானுமின்னும். (௨௮)

ஏற்றமொன்றில்லையென்பதேழைமைப்பாலதன்றே
ஆற்றல்சால்கலுழனேதானூற்றுமேயமரினூற்றல்
காற்றையேமேற்கொண்டானோகனலையேகடாவினானோ
கூற்றையேயூர்கின்றானோதுரங்கின்மேற்கொண்டுநின்றான். (௨௯)

போயினித்தெரிவதென்னேபொறையினுலகம்போலும்
வேயெனத்தகையதோளியிராகவன்மேனிநோக்கின்
தீயெனக்கொடியவீரச்சேவகச்செய்கைகண்டால்
நாயெனத்தகுதுமன்றேகாமனுநாமுமெல்லாம் (௩௦)

வாசவன்மாயன்மற்றைமலருளோன்மழுவாளங்கை
ஈசனென்றினையதன்மையிளிவருமிவராலன்றி
நாசம்வந்துற்றபோதுநல்லதோர்பகையைப்பெற்றேன்
பூசல்வண்டுறையுந்தாராயிதுவிங்குப்புகுந்ததென்றான். (௩௧)

முன்னுரைத்தேனேவாளாமுனிந்தனேமுனியாவும்பி
இன்னுரைப்பொருளுங்கேளாயேதுவுண்டெனினுமோராய்
நின்னுரைக்குரைவேறுண்டோநெருப்புரைத்தாலுநீண்ட
மின்னுரைத்தாலுமொவ்வாவிளங்கொளியலங்கல்வேலோய். (௩௨)

உளைவனவெனினுமெய்ம்மையுற்றவாமுற்றுமோர்ந்து
விளைவனசொன்னபோதுங்கொள்கிலைவிடுதிகண்டாய்
கிளைதருசுற்றம்வெற்றிகேண்மைநங்கல்விசெல்வம்
களைவருதானையோடுகெழிவதுகாண்டியென்றான். (௩௩)

ஆயவனுரைத்தலோடுமப்புறத்திருந்தானன்ற
மாயைகள்பலவும்வல்லமகோதரன்கடிதின்வந்து
தீயெழநோக்கியென்னிச்சிறுமைநீசெப்பிற்றென்னா
ஓய்வுறுசிந்தையானுக்குருதபேருறுதிசொன்னான். (௩௪)

நன்றியீதென்றுகொண்டநயத்தினைநயந்துவேறு
வென்றியேயாகமற்றோர்தோற்றுயிர்விடுகலாக
ஒன்றிலேநிற்றல்போலாமுத்தமற்குரியதொல்லைப்
பின்றுமேலவனுக்கன்றோபழியொடுநரகம்பின்னை. (௩௫)

திரிபுரமெரியவாங்கோர்தனிச்சரந்துரந்தசெல்வன்
ஒருவனிப்புவனமூன்றுமோரடியொடுக்கிக்கொண்டோன்
பொருதுனக்குடைந்துபோனார்மானுடர்பொருதபோர்க்கு
வெருவுதிபோலுமானக்கயிலையைவெருவல்கண்டாய். (௩௬)

வென்றவர்தோற்பர்தோற்றோர்வெல்குவரொவர்க்குமேலாய்
நின்றவர்தாழ்வர்தாழ்ந்தோருயர்குவர்நெறியுமஃதே
என்றனரறிஞரன்றேயாற்றலுக்கெல்லையுண்டோ
புன்றவரிருவர்போரைப்புகழ்தியோபுகழ்க்குமேலோய். (௩௭)

தேவியைவிடுதியாயிற்றீருமுன்றீமையன்றேல்
ஆவியைவிடுதலன்றியல்லதொர்ன்றுவதுண்டோ
தாவரும்பெருமையம்மாநீயினித்தாழ்த்ததென்னே
காவலவிடுதியின்றிக்கையறுகவற்சிநோய்தின் (௩௮)

இனியிறைதாழ்த்தியாயினிலங்கையும்யாமுமெல்லாம்
கனியுடைமரங்களாகக்கவிக்குலங்கடக்குங்காண்டி
பனியுடைவேலைச்சின்னீர்பருகினனிரவியென்னத்
அனியுழந்தயர்வதென்னேதுறத்தியாற்றுன்பமென்றான். (௩௯)

முன்னுனக்கிறைவராயமூவருந்தோற்றார்தேவர்
பின்னுனக்கேவல்செய்யவுலகொருமூன்றும்பெற்றாய்
புன்னுனைப்பனிநீரன்னமனிசரைப்பொருளென்றுன்னி
என்னுனக்கிளையகும்பகருணனையிகழ்ந்ததெந்தாய் (௪௦)

ஆங்கவன்றன்னைக்கூவியேவுதியென்னினைய
ஓங்கலேபோல்வான்மேனிகாணவேயொளிப்பரன்றே
தாங்குவர்செருமுன்னென்னிற்றுபதருயிரைத்தானே
வாங்குமென்றினையசொன்னானவனதுமனத்துக்கொண்டான். (௪௧)

பெறுதியேயெவையுஞ்சொல்லப்பேரறிவாளசீரிற்
றறுதியேயென்பால்வைத்தவன்பினுக்கவதியுண்டோ
உறுதியேசொன்னாயென்னாவுள்ளமும்வேறுபட்டான்
இறுதியேயெய்வதாயினிடையொன்றுற்றதைகவுண்டாமோ. (௪௨)

ன்றிதுகருமமென்னாநம்பியைநணுகவோடிச்
சென்றிவட்டருதியொன்றுனென்றலுநால்வர்சென்றார்
தென்றிசைக்கிழவன்றூதர்தேடினர்திரிவரொன்னக்
குன்றினுமுயர்ந்ததோளான்கொற்றமாக்கோயில்புக்கார். (௪௩)

ங்கரர்நால்வர்சென்றக்கிரியன்றன்கிடந்தகோயில்
ங்குரேய்வாயில்சார்ந்துமன்னநீயுணர்தியென்னுத்
ங்கையினெழுவினாலேதலைசெவிதாக்கிப்பின்னும்
வெங்கணார்துயில்கின்றானைவெகுளியாலினையசொன்னார். (௪௪)

வேறு.

உறங்குகின்றகும்பகன்னவுங்கண்மாயவாழ்வெலாம்
இறங்குகின்றவின்றுகாணெழுந்திராயெழுந்திராய்
கறங்குபோலவிற்பிடித்தகாலதூதர்கையிலே
உறங்குவாயுறங்குவாயினிக்கிடந்துறங்குவாய். (௪௫)

என்றுமீதிலாவரக்கரின்பமாயவாழ்வெலாம்
சென்றுதீயநும்முனோன்றெரிந்துதீமைதேடினான்
இன்றிறத்தறிண்ணமாகவின்னுமுன்னுறக்கமே
அன்றலைத்தசெங்கையாலலைத்தலைத்துணர்த்தினார். (௪௬)

என்றுசொல்லவன்னவனெழுந்திராமைகண்டுபோய்
மன்றறங்குமாலைமார்பவன்றுயில்லெழுப்பலம்
நன்றுகொள்கைசென்மினென்றுமாவொடாளியேவினான்
ஒன்றின்மேலொராயிரமுழக்கிவிட்டெழுப்புவீர். (௪௭)

அனையதானையன்றுசெல்லவாண்டுநின்றுபேர்ந்திலன்
இனையசேனைமீண்டதென்றிராவணற்கியம்பலும்
வினையம்வல்லநீர்களுங்கடானையோடுசென்மினென்
றினையமல்லராயிராளையேவிநின்றியம்பினான். (௪௮)

வேறு.

சென்றனர்பத்துநூற்றுச்சிரியவீரரோடி
மன்றலந்தொங்கலான்றன்மன்றனின்வருத்தமாற
இன்றிவன்முடிக்குமென்னுவெண்ணினரொண்ணியீண்டக்
குன்றெனவுயர்ந்ததோளான்கொற்றமாக்கோயில்புக்கார். (௪௯)

திண்டிறல்வீரர்வாயிதிறத்தலுஞ்சுவாதவாதம்
மண்டுறவீரரெல்லாம்வருவதுபோவதாகிக்
கொண்டுறுதடக்கைபற்றிக்குலமுடைவலியினாலே
கண்டுயிலெழுப்பவெண்ணிக்கடிதொருவாயில்புக்கார். (௫௦)

இங்கிவன்றன்னையாமின்றெழுப்பலாம்வகையாதென்னுத்
துங்கவெவ்வாயுமூக்குங்கண்டுமெய்தணுக்கமுற்றார்
அங்கைகடண்டவஞ்சியாழ்செவியதனினூடு
சங்கொடுதாளசின்னஞ்சமைவுறச்சாற்றலுற்றார். (௫௧)

கோடிகடண்டுகூடங்குந்தம்பல்லோர்கள்கூடித்
தாடைகள்சந்துமார்புதலையெனுமவையிற்றாக்கி
வாடியகையராகிமன்னவற்குரைப்பப்பின்னும்
நீடியபரிகளெல்லாமிரப்பிமின்விரைவினென்றான். (௫௨)

கட்டுறுகலினமாவோராயிரங்கடிதின்வந்து
மட்டறவுறங்குவான்றன்மார்பிடைமாலைமான
விட்டுறநடத்தியோட்டிவிரைவுளசாரிவந்தார்
தட்டுறல்குறங்குபோலத்தடந்துயில்கொள்வதானான். (௫௩)

கொய்மலர்த்தொங்கலான்றன்குரைகழல்வணங்கியைய
உய்யலாம்வகைகளென்றிங்கெழுப்பலாம்வகையேசெய்தும்
கையெலாம்வலியுமோய்ந்துகவனமாக்காலுமோய்ந்த
செய்யலாம்வகைவேறுண்டோசெப்புதிதெரியவென்றார். (௫௪)

வேறு.

இடைபேராவிளையானையிணையாழிமணிநெடுந்தேர்
படைபேராவரும்போதும்பதையாதவுடம்பானை
மடைபேராச்சூலத்தான்மழுவாள்கொண்டெறிந்தாலும்
புடைபேராத்துயிலானைத்துயிலெழுப்பிக்கொணர்கென்றான். (௫௫)

என்றலுமேயடிவணங்கியிராஞ்ஞூற்றிராக்கதர்கள்
வன்றொழிலாற்றுயில்கின்றமன்னவன்றன்மாடணுகி
நின்றிரண்டுகதுப்புழுறநெடுமுசலங்கொடுதாக்கப்
பொன்றினவனெழுந்தாப்போற்புடைபெயர்ந்தங்கெழுந்திருந்தான். ()

வேறு.

விண்ணினையிடறுமேன்மைவிசும்பினைநிறைக்குமேனி
கண்ணெனுமவையிரண்டுங்கடல்களிற்பெரியவாகும்
எண்ணினும்பெரியனாயவிலங்கையர்வேந்தன்பின்றோன்
மண்ணினையளந்துநின்றமாலெனவளர்ந்துநின்றான். (௫௭)

மூவகையுலகமுட்கமுரட்டிசைப்பனைக்கையானை
தாவருந்திசையினின்றுசலித்திடக்கதிருமுட்கப்
பூவுளரன்புணரிமேலான்பொருப்பினன்முதல்வராய
யாவருந்துணுக்குற்றேங்கவெளிதினினெழுந்தான்வீரன். (௫௮)

வேறு.

உறக்கமவ்வழிநீங்கியுணத்தரும்
அறைக்கமைந்தனவூனொடுமாக்கிய
நறைக்குடங்கள்பெறுன்கடைநக்குவான்
இறக்கநின்றமுகத்தினையெய்துவான். (௫௯)

ஆறுநூற்றுச்சகடத்தடிசிலும்
நூறுநூற்றுக்குடங்களுநுங்கினன்
ஏறுகின்றபசியையெழுப்பினன்
சீறுகின்றமுகத்திருசெங்கணன். (௬0)

ஓடிப்புகுவாயினெருக்கினுலந்தார்
கோடிக்கணிதத்தினுமேலுளர்குத்தால்
பீடிப்புறுபுண்ணுடலோடுபெயர்ந்தார்
பாடித்தலையுற்றவரொண்ணிலர்பட்டார். (உருங)

தண்ணீர்தருகென்றனர்தாவுறவோடி
உண்ணீறவாவியுலந்தனருக்கார்
கண்ணீரொடுமாவிகலுழ்ந்தனர்காலால்
மண்ணீரமுறக்கடிதூர்புகவந்தார். (உருச)

விண்மேனெடிதோடினராருயிர்விட்டார்
மண்மேனெடுமால்வரையென்னமறிந்தார்
எண்மேலுமிமிர்ந்துளரீருடயங்கப்
புண்மேலுடைமேனியினூர்திசைபோனார். (உருரு)

அறியும்மவர்தங்களையையவிவம்பைப்
பறியும்மெனவந்துபறித்தலுமாவி
பிறியும்மவரெண்ணிலர்தம்மனைபெற்றார்
குறியும்மறிகின்றிலர்சிந்தைகுறைந்தார். (உருசு)

பரிபட்டுவிழச்சிலர்நின்றுபதைத்தார்
கரிபட்டுருளச்சிலர்கால்கொடுசென்றார்
நெரிபட்டழிதேரிடையேபலர்நின்றார்
எரிபட்டமனைக்கணிருந்தவரொன்ன. (உருஎ)

மண்ணின்றலைவானரமேனியர்வந்தார்
புண்ணின்றவுடற்பொறையோர்சிலர்புக்கார்
கண்ணின்றகுரங்குகலந்தனவென்று
உண்ணின்றவரக்கர்மலைக்கவுலைந்தார். (உருஅ)

வேறு.

ஒருகணுந்திறந்துநோக்கியயலிருந்திரங்குகின்ற
உருகுதங்காதலோரையுண்ணுநீருதவுமென்றார்
வருவதன்முன்னமாண்டார்சிலர்சிலர்வந்தநன்னீர்
பருகுவாரிடையேபட்டார்சிலர்சிலர்பருகிப்பட்டார். (உருகூ)

மக்களைச்சுமந்துசெல்லுந்தாதையர்வழியினூவி
டக்கனவொன்னவீசித்தம்மைக்கொண்டோடிப்போனார்
சக்கினர்குருதிவாயாற்கண்மணிசிதறிக்காலால்
திக்கொடுநெறியுங்காணார்திரிந்துசென்றுயிருந்தீர்ந்தார் (உசுo)

இன்னதோர்தன்மையெய்தியிராக்கதரிரிந்துசிந்திப்
பொன்னகர்புக்காரிப்பாற்பூசல்கண்டோடிப்போய
மன்னருந்தூதர்சென்றார்தொடுகழலரக்கர்க்கெல்லாம்
மன்னவனடியில்வீழ்ந்தார்மழையினீர்வழங்குகண்ணார். (உசுக)

நோக்கியவிலங்கைவேந்தனுற்றதுநுவன்மினென்றுன்
போக்கியசேனைதம்மிற்புகுந்துளவிறையும்போதா
ஆக்கியபோரினையவதிகாயன்முதல்வராய
கோக்குலக்குமாரரெல்லாங்கொடுத்தனராவியென்றார். (உ௬உ)

ஏங்கியவிம்மன்மானமிரங்கியவிரக்கம்வீரம்
ஓங்கியவெகுளிதுன்பமென்றிவையொன்றிற்கொன்று
தாங்கியதரங்கமாகக்கரையினைத்தள்ளித்தள்ளி
வாங்கியகடல்போனின்றனருவிநீர்வழங்குகண்ணான். (உ௬௩)

திசையினைநோக்குநின்றதேவரைநோக்கும்வந்த
வசையினைநோக்குங்கொற்றவாளினைநோக்கும்பற்றிப்
பிசையுறுங்கையைமீசைசுறுக்கொளவுயிர்க்கும்பேச
நசையிடைக்கண்டானென்னநகுமழுமுனியுநாணும். (உ௬௪)

மண்ணினையெடுக்கவெண்ணும்வானினையிடிக்கவெண்ணும்
எண்ணியவுயிர்களெல்லாமொருகணத்தெற்றவெண்ணும்
பெண்ணெனும்பெயரவெல்லாம்பிளப்பெனென்றெண்ணுமெண்ணின்
புண்ணிடையெரிபுக்கென்னமானத்தாற்புழுங்கிநையும். (உ௬௫)

ஒருவருமுரையார்வாயினுயிர்த்திலருள்ளமோய்வார்
வெருவருந்தகையராகிவிம்மினரிருந்தவேலை
தருவனமனையதோளான்றன்னெதிர்தானமாலை
இரியலிட்டலறியோயாப்பூசலிட்டேங்கிவந்தாள். (உ௬௬)

மலைக்குவடிடிவீழ்ந்தென்னவளைகளோடாரமேங்க
முலைக்குவடெற்றுங்கையாண்முழைதிறந்தன்னவாயாள்
தலைக்குவடணைந்தசெக்கர்சரிந்தெனக்குழல்கடத்தி
உலைக்குவடுருகுசெம்பொத்துதிரநீர்வழங்குகண்ணாள் (உ௬௭)

வீழ்ந்தனளரக்கன்றண்மேன்மென்மைத்தோணிலத்தைமேவப்
போழ்ந்தனள்பெரும்பாம்பென்னப்புரண்டனள்பொருமிப்பொங்கிச்
சூழ்ந்தனைகொடியாயென்னுத்துடித்தருந்துயரவெள்ளத்
தாழ்ந்தனள்புலம்பலுற்றாளழக்கண்டுமறிந்திலாதாள். (உ௬௮)

வேறு.

மாட்டாயோவிக்காலம்வல்லோர்வலிதீர்க்க
மீட்டாயோவீரமெலிந்தாயோதோளாற்றல்
கேட்டாயுணர்ந்திலையோவென்னுரையுங்கேளாயோ
காட்டாயோவென்னுடையகண்மணியைக்காட்டாயோ. (உ௬௯)

இந்திரற்குந்தோலாதநன்மகனையீன்றுளென்
றந்தரத்துவாழ்வாருமேத்துமளியத்தேன்
மந்தரத்தோளென்மகனைமாட்டாமனிசன்றன்
உந்துசிலைப்பகழிக்குண்ணக்கொடுத்தேனே (உ௭௦)

அக்கனுலந்தானதிகாயன்றனுலந்தான்
மிக்கதிறத்துள்ளாரெல்லாரும்வீடினார்
மக்களினின்றுள்ளான்மண்டோதரிமகனே
திக்குவிசயமினியொருகாற்செய்யாயோ. (உ௭௧)

ஏதையார்சிந்தித்திருக்கின்றயெண்ணிறந்த
கோதையார்வேலரக்கர்பட்டாரைக்கூவாயோ
பேதையாய்க்காமம்பிடிப்பாய்பிழைப்பாயோ
சீதையாலின்னும்வருவசிலவேயோ. (உ௭௨)

உம்பியுணர்வுடையான்சொன்னவுரைகேளாய்
நம்பிகுலக்கிழவன்கூறுநலமோராய்
கும்பகருணனையுங்கொல்வித்தென்கோமகனை
அம்புக்கிரையாக்கியாண்டாயரசைய. (உ௭௩)

என்றுபலபலவும்பன்னியெடுத்தழைத்துக்
கன்றுபட்டபிழைத்ததாய்போற்கவல்வானை
நின்றவுருப்பசியுமேனகையுநேர்ந்தெடுத்துக்
குன்றுபுரையுநெடுங்கோயில்கொண்டணைந்தார். (உ௭௪)

தானநகரத்தரக்கர்தலைமயங்கிப்
போனமகவுடையார்போலப்புலம்பினார்
ஏனைமகளிர்நிலையென்னுகும்போயிரங்கி
வானமகளிருந்தம்வாய்திறந்துமாழ்கினார். (உ௭௫)

தாரகலத்தண்ணறனிக்கோயிறசரதி
பேரவுலகுற்றதுற்றதாற்பேரிலங்கை
ஊரகலமெல்லாமரந்தையுவாவுற்ற
ஆர்கலியேயொத்ததமுதகுரலோசை. (உ௭௬)

அதிகாயன்வதைப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௧௯௪௮.
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௧௮-வது. நாகபாசப்படலம்.

குழுமிக்கொலைவாட்கணாக்கியர்கூந்தருழத்
தழுவித்தலைப்பெய்துதங்கைகொடுமார்பினெற்றி
அழுமித்தொழில்யாதுகொலென்றெராயிர்ப்புமுற்றான்
எழிலித்தனியேறெனவிந்திரசித்தெழுந்தான். (௧)

எட்டாகியதிக்கையும்வென்றவனின்றுமீடு
பட்டான்கொலதன்றெனிற்பட்டழிந்தான்கொல்பண்டு
சுட்டானிவகன்பதியைத்தொடுவேலையாடும்
கட்டான்கொலிதற்கொருகாரணமென்கொலென்றான். (௨)

கேட்டானிடையுற்றதெனென்றுகிளத்தல்யாரும்
மாட்டாதுநடுங்கினர்மாற்றமறந்துநின்றார்
ஒட்டாநெடுந்தேர்கடிதோட்டியிமைப்பினுற்றான்
காட்டாதனகாட்டியதாதையைச்சென்றுகண்டான். (௩)

கண்டானிறையாறியநெஞ்சினன்கைகள்கூப்பி
உண்டாயதென்னோவிவணென்றலுமும்பிமாரைக்
கொண்டானுயிர்காலனுங்கும்பனுங்கும்பரோடும்
விண்டானடைந்தானதிகாயனும்வீரவென்றான். (௪)

சொல்லாதமுன்னஞ்சுடரைச்சுடர்தூண்டுகண்ணான்
பல்லாலதரத்தையதுக்கிவிண்மீதுபார்த்தான்
எல்லாருமிறந்தனரோவெனவேங்கிநைந்தான்
வில்லாளரையெண்ணின்விறற்குமுனிற்கும்வீரன். (௫)

ஆர்கொன்றவரென்றலும்பேரதிகாயனென்னும்
பேர்கொன்றவன்வென்றியிலக்குவன்பின்புநின்றார்
ஊர்கொன்றவனுற்பிறராலெனவுற்றவெல்லாம்
தார்கொன்றையினுன்கிரிசாய்த்தவன்றானுரைத்தான். (௬)

கொன்றாரவரோகொலைசூழ்கெனநீகொடுத்தாய்
வன்றானையர்மானுடர்வன்மையறிந்தமன்ன
என்றானுமெனைச்செலவேவலையிற்றதென்னா
நின்றானெடிதுன்னிமுனிந்துநெருப்புயிர்ப்பான். (௭)

அக்கப்பெயரோனைநிலத்தொடரைத்துளானை
விக்கற்பொருதூதுவனென்றுவிளம்பிவிட்டாய்
புக்கத்தலையெய்தநினைந்திலைபுந்தியில்லாய்
நக்கட்டுணையற்றனையிற்றதுன்வாழ்க்கையன்றே. (௮)

என்னின்றுநினைத்துமியம்பியுமெண்ணியுந்தான்
கொன்னின்றபடைக்கலத்தெம்பியைக்கொன்றுளானை
அந்நின்றநிலத்தவனுக்கையைநீக்கியல்லால்
மன்னின்றநகர்க்கினிவாரலென்வாழ்வும்வேண்டேன். (௯)

மாற்றுவுயிரொம்பியைமாற்றியமானுடன்றன்
ஊற்றார்குருதிப்புனல்பார்மகளுண்டிலாளேல்
ஏற்றுனிகலிந்திரனீரிருகாலெனக்கே
தோற்றான்றனக்கென்னெடுஞ்சேவகந்தோற்கவென்றான். (௧0)

வெங்கண்ணெடுவானரத்தானையைவீற்றுவீற்றுப்
பங்கம்முறநூறியிலக்குவனைப்படேனேல்
அங்கந்தாவஞ்சியென்னுணைகடக்கிலாது
செங்கண்ணெடுமான்முதற்றேவர்சிரிக்கவென்னை. (௧௧)

பாம்பிற்றருவெம்படைபாசுபதத்திறேடு
தேம்பற்பிறைசென்னிவைத்தான்றருதெய்வவேதி
ஓம்பித்திரிந்தேற்கினியின்றுதவாதுபோமேல்
சோம்பித்துறப்பேனுயிர்சோறுமுகந்துவாழேன். (கஉ)

மருந்தேரிகரொம்பிதன்றாருயிர்வவ்விறானே
விருந்தேயெனவந்தகற்கிகிலென்வில்லுமேந்திப்
பொருந்தேவர்குழாநகைசெய்திடப்போந்துபாரின்
இருந்தேனெனிறனவிராவணியல்லெனென்றான். (கங)

ஏகாவிதுசெய்தெனதின்னலேநீக்கிடெந்தைக்
காகாதனவும்முளவோவெனக்காற்றலார்மேல்
மாகால்வரிவெஞ்சிலையோடும்வளைத்தபோது
சேகாகுமென்றெண்ணியிவ்வின்னலிற்சிந்தைசெய்தேன். (கச)

என்றானைவணங்கியிலங்கையில்வாளும்யாத்திட்
டொன்றானுமருவுருவாவுடற்காவலோடும்
பொன்றாழ்கணையின்னெடும்புட்டில்புறத்துவீக்கி
வன்றாள்வயிரச்சிலைவாங்கினன்வானைவென்றான். (கரு)

வயிரந்நெடுமால்வரைகொண்டுமலர்க்கண்வந்தான்
செயிரொன்றுமுருவகையிந்திரற்கென்றுசெய்த
உயர்வெஞ்சிலையச்சிலைபண்டவன்றன்னையோட்டித்
துயரின்றலைவைத்தவன்கொண்டதுதோற்றமீதால். (கசு)

தோளிற்கணைப்புட்டிலுமிந்திரன்றேற்றநாளே
ஆளித்திறலன்னவன்கொண்டனவாழியேழும்
மாளப்புனல்வற்றினும்வாளியறாதவன்கட்
கூளிக்கொடுங்கூற்றினுறைத்ததொர்கூடுபோல்வ. (கஎ)

பல்லாயிரகோடிபடைக்கலம்பண்டுதேவர்
எல்லாருமுனைத்தலையாவருமீந்தமேரு
வில்லாளனளித்தவிரிஞ்சனளித்தமெய்ம்மை
அல்லாற்புரியாதனயாவையுமாய்ந்துகொண்டான். (கஅ)

நூறாயிரம்யாளியினேன்மைதெரிந்தசீயத்
தேறுமவையன்னவையாயிரம்பூண்டதென்ப
மாறாயொரிலங்கைநிகர்ப்பதுவானுளோரும்
தேறாததுமற்றவனேறியதெய்வமாத்தேர். (ககூ)

பொன்சென்றறியாவுவணத்தனிப்புள்ளினுக்கும்
மின்சென்றறியாமழுவாளன்விடைக்குமேனாள்
பின்சென்றதல்லதொருமாண்சிறப்புற்றபோதும்
முன்சென்றறியாததுமூன்றுலகத்தினுள்ளும். (உ0)

ஏயாத்தனிப்போர்வலிகாட்டியவிந்திரன்றன்
சாயாப்பெருஞ்சாய்கெடத்தாம்புகளாற்றடந்தோள்
போயார்த்தவன்வந்தனன்வந்தனனென்றுபூசற்
பேயார்த்தெழுந்தாடுநெடுங்கொடிபெற்றதம்மா. (உக)

சேதுகைப்பெருந்தானவருேேடுந்தேய்த்தநேமி
யதுகைத்திசையானையையோட்டியதென்னலாமே
மதுகைத்தடந்தோள்வலிகாட்டியவானவேந்தன்
முதுகைத்தழும்பாக்கியமொய்யொளிமொட்டதம்மா. (உ௨)

அத்தேரினையேறியதொப்பனவாயிரந்தேர்
ஒத்தேய்வனசேமமதாய்வரவுள்ளம்வெம்போர்
பித்தேறினனென்னநடந்தனன்பின்பலான்மற்
றெத்தேவரையும்முகங்கண்டறியாதவீட்டான். (உ௩)

அன்றொடுபோகியதானையறிந்துகூற
என்றாலரிதேனுமியம்புவான்மீகனென்னும்
நன்றான்மறையானதுநாற்பதுவெள்ளமென்னச்
சொன்னான்பிறர்யாரதுணர்ந்துதொகுக்கவல்லார். (உ௪)

தூமக்கணரக்கனுந்தொல்லமரர்க்குந்தோலா
மாபக்கனுமங்நெடுந்தேர்மணியாழிகாக்கத்
தாமக்கடைமீதுயரப்பெருஞ்சங்கம்விம்ம
நாமக்கடற்பல்லியநாற்கடன்மேலுமார்ப்ப. (உ௫)

தேராயிரவாயிரகோடிதன்மாடுசெல்லப்
போரானைபுறத்தினவற்றினிரட்டிபோதத்
தாரார்புரவிக்கடல்பின்செலத்தானைவீரப்
பேராழிமுகஞ்செலச்சென்றனன்போர்ச்சியில்லான். (உ௬)

வேறு.

நின்றனனிலக்குவன்களத்தைநீங்கலன்
பொன்றினனிராவணன்புதல்வன்போர்க்கினி
அன்றவனல்லனேலமரர்வேந்தனை
வென்றவன்வருமெனவிரும்புஞ்சிந்தையான். (உ௭)

யாரிவன்வருபவனியம்புவாயென
வீரவெந்தொழிலினான்விளம்பவீடணன்
ஆரியவிவனிகலமரர்வேந்தனைப்
போர்கடந்தவனினிவலிதுபோவென்றான். (உ௮)

எண்ணினனுணர்த்துவதுளதொன்றெம்பிரான்
கண்ணகன்பெரும்படைத்துணைவர்காத்திட
நண்ணினதுணையொடுபொருதனன்றிது
திண்ணிதினுணர்தியாற்றெளியுஞ்சிந்தையால். (உ௯)

மாருதிசாம்பவன்வானரேந்திரன்
தாரைசேய்நீலனென்றினையதன்மையார்
வீரர்வந்துடனுறவிமலனீநெடும்
போர்செயறகுதியாற்புகழின்பூணினாய். (௩0)

பல்பதினாயிரந்தேவர்பக்கமா
எல்லையில்சேனைகொண்டெதிர்ந்தவிந்திரன்
ஒல்லையினுடைந்தனனுயிர்கொண்டுய்ந்துளான்
மல்லலந்தோளினாயமுதின்வன்மையால். (௩௧)

இனியவைமறையுமோவிந்திரன்புயப்
பனிவரையுளநெடும்பாசப்பஃறமும்
பருமனைப்பிணித்துளனானபோதவன்
தருமறைவித்தகந்தடுக்கற்பாலதோ. (௩௨)

என்றவனிறைஞ்சலுமிளையவள்ளலும்
நன்றெனமொழிதலுநணுகினானரோ
வன்றிறன்மாருதியிலங்கைக்கோமகன்
சென்றனனிளவன்மேலென்னுஞ்சிந்தையான். (௩௩)

கூற்றமுங்கட்புலன்புதைப்பக்கோத்தெழு
தோற்றமுமிராவணிதுணிவுநோக்குறு
மேற்றிசைவாயிலைவிட்டுவெங்கடுங்
காற்றெனவணுகினான்கடிதின்வந்தரோ. (௩௪)

அங்கதன்முன்னரேயாண்டையானயல்
துங்கவன்றோளினாரொவருஞ்சுற்றினார்
செங்கதிரோன்மகன்முன்புசென்றனன்
சங்கநீர்க்கடலெனத்தழீஇயதானையான். (௩௫)

இருதிரைப்பெருங்கடலிரண்டுதிக்கினும்
பொருதொழில்வேட்டுவந்தார்த்துப்பொங்கின
வருவனபோன்றனமனத்தினாற்சினம்
திருகினவெதிரொதிர்செல்லுஞ்சேனையே. (௩௬)

கண்ணினான்மனத்தினாற்கருத்தினாற்றெரிந்
தெண்ணினாற்பெறுபயனெய்துமின்றெனா
நண்ணினாரிமையவர்நங்கைமாரொடு
விண்ணினாடுறைவிடம்வெறுமைகூரவே. (௩௭)

ஒத்திருதானையுமுடற்றவுற்றுழி
அத்தனைவீரருமார்த்தவார்கலி
நத்தொலிமுரசொலிநடுக்கலாற்றலை
பொத்தினர்செவிகளைப்புரந்தராதியர். (௩௮)

எற்றுமின்பற்றுமினெறிமினெய்ம்மினென்
றுற்றனவுற்றனவுரைக்குமோதையும்
முற்றுறுகடையுகத்திடியின்மும்மடி
பெற்றனபிறந்தனசிலையின்பேரொலி. (௫௯)

கற்படமரம்படக்காலவேல்பட
விற்படுகணைபடவீழும்வீரர்தம்
எற்படுமுடல்படவிரண்டுசேனையும்
பிற்படநெடுநிலம்பிளந்துபேருமால். (௬௦)

எழுத்தொடர்மரங்களாலெற்றமுற்றிய
விழுத்தலைமுழுவதுஞ்சிதறிவீழ்ந்தன
வழுத்தியபெருஞ்சினத்தரக்கராக்கைகள்
கழுத்துளதலையிலகளத்தினுடுவ. (௬௧)

வெட்டியதலையனநரம்புவீசமேல்
முட்டியகுருதியகுரங்கின்மொய்யுடல்
சுட்டுயர்நெடுவனந்தொலைந்தபின்னெடுங்
கட்டைகளெரிவனபோன்றகாட்டுவ. (௬௨)

பிடித்தனநிருதரைப்பெரியதோள்பெயர்த்
தொடித்தனகால்விசைத்துதைத்தவுந்தின
கடித்தனகழுத்தறக்கைகளாலெடுத்
தடித்தனவரைத்தனவார்த்தவானரம். (௬௩)

வாள்களிற்கவிக்குலவீரர்வார்கழற்
றாள்களைத்துணித்தனர்தலையைத்தள்ளினர்
தோள்களைப்பிரித்தனருடலைத்துண்டவன்
போழ்களிற்புரட்டினர்நிருதர்பொங்கினார். (௬௪)

மரங்களினரக்கரைமலைகள்போன்றுயர்
சிரங்களைச்சிதறினவுயிரைச்சிந்தின
கரங்களைக்கழல்களையொடியக்காதின
குரங்கெனப்பெயர்கொடுதிரியுங்கூற்றமே (௬௫)

சுடர்த்தலைநெடும்பொறிசொரியுங்கண்ணன
அடர்த்தலைநெடுமரமற்றகையன
உடர்த்தலைவயிரவேலுருவவுய்த்தவர்
மிடற்றினைக்கடித்துடன்விளிந்துபோவன (௬௬)

அடர்ந்தனகிரிகளையசனியேறெனத்
தொடர்ந்தனமழைபொழிதும்பிக்கும்பங்கள்
இடந்தனமூளைகளினிதினுண்டன
கடந்தனபசித்தழல்கரடிகாதுவ. (௬௭)

கொலைமதகரியன குதிரைமேலன
வலமணித்தேரனவாளின்மேலன
சிலைகளிற்குடமியசிரத்தின்மேலன
மலைகளிற்பெரியனகுரங்குவாவுவ. (சஅ)

வேறு.

ண்டுகொண்டரக்கர்தாக்கத்தகர்ந்துகுலையசந்தில்
ண்டங்களாகவாளிற்றுணிந்தபேருடலைத்தூவிக்
காண்டெழுமலைகளோடுங்குரக்கினப்பிணத்தின்குப்பை
ண்டுவெங்குருதியாறம்மறிகடன்மடுத்தமாதோ. (சக)

னிவென்றபதாகையென்றும்பல்லுளைப்பரிமாவென்றும்
னுவென்றும்வாளியென்றுந்தண்டென்றுந்தனிவேலென்றும்
னவென்றிமதமாவென்றுந்தேரொன்றுந்தெரிந்ததில்லை
றுமன்கைவயிரக்குன்றாலைப்புண்டவரக்கர்தானை. (௫0)

பொங்குதேர்புரவியானைபொருகழனிருதரொன்னும்
ங்கையுமில்லாவண்ணந்தன்னுள்ளேதழுவிக்கூற்றம்
ங்குளவுயிரொன்றெண்ணியிணைக்கையாற்கிளைத்ததென்ப
ங்கதன்மரங்கொண்டெற்றவழுந்துபட்டழிந்ததானை. (௫க)

ரக்கியதிசைகடோறுந்தலைத்தலைமயங்கித்தம்மின்
ராக்கியகளிறுந்தேரும்புரவியுநூழில்செய்ய
க்கியசெருவைநோக்கியமரரோடசுரர்போரைத்
ராக்கியமுனிவரொன்னேயிதற்கதுதோற்றமென்றார். (௫உ)

டுத்ததுநிருதர்தானையிரிந்ததுகுரங்கினீட்டம்
டுத்தனர்முகங்கடாங்கித்தனித்தனித்தலைவர்தள்ளிப்
டுத்தனரரக்கர்வேலைபட்டதும்படவும்பாரார்
டுத்தனர்கடுத்தபின்னுங்காத்தனர்கவியின்வீரர். (௫௩)

நலமுமழுவுந்தாங்கித்தோளிருநான்குந்தோன்ற
மலம்வந்துலகையுண்ணுமுருத்திரமூர்த்தியென்ன
லனின்றுழியேநின்றானிரந்தரங்கணங்களோடு
ாலனென்றொருவன்யாண்டும்பிரிந்திலன்பாசக்கையான். (௫ச)

ாற்றலன்புனலோவல்லன்கனலல்லனிரண்டுகையால்
ற்றலனூற்றுகின்றவருஞ்சமமிதுவேயாகின்
ற்றமெண்பலவுஞ்சொல்லியெண்பதமிழந்தேனென்னுக்
ற்றமுஞ்சிரம்பனிப்பவெங்கதக்குமுதன்கொன்றான். (௫௫)

றிகடல்புடைசூழ்வைப்பின்மானவன்வாளிபோன
சறிபணைமரமேநின்றமரங்களிற்றெரியச்செப்பும்
நறியுடைமலைகடம்மிற்குலவரைக்குலமேகொள்ளா
றிதலோடறைதல்வேட்டவிடவுனன்றிடந்திலாத. (௫௬)

வாம்பரிமதமாமான்றேர்வாளெயிற்றரக்கர்மாயப்
பாம்பினும்வெய்யோர்சாலப்படுகுபயமின்றன்றே
ஆம்புறழ்குருதிமண்டத்தொடர்நெடுமரங்கள்சுற்றிச்
சாம்பவன்கொல்லச்சாம்புமென்றுரையமரர்தந்தார். (௪எ)

பொருங்குலப்புரவிப்பொற்றூர்த்திரைகளுங்கலம்பொற்றேரும்
இருங்களியானையாயமகரமுமிரியல்போக
நெருங்கியபடைகளாயமீன்குலமிரிந்துசிந்தக்
கருங்கடல்கடக்குமத்திற்பனசனுங்கலக்கப்புக்கான். (௪அ)

மயிர்தனுமிளவருனுமழைக்குலங்கிழித்துவானத்
துயர்ந்தெழுமெருவைவேந்தனுடன்பிறந்தவரையொத்தார்
கயங்குடைந்தாடும்வீரக்களிறெனத்தான்கவயன்காலில்
பெயர்ந்திலனுற்றதல்லாற்கேசரிபெரும்போர்பெற்றான். (௪௯)

பெரும்படைத்தலைவர்யாரும்பெயர்ந்திலர்பிணத்தின்குப்பை
வரம்பிலபரம்பியார்த்துமலைகின்றபொழுதின்வந்துற்
றிரிந்தனகவியுங்கூடியெடுத்தனவெடுத்தலோடும்
சரிந்ததுவிருதர்தானைதாக்கினனரக்கன்றானே. (௫0)

வேறு.

பூணெறிந்துருவடனையதோள்களிருபுடைபரந்துயரவடல்வலித்
தூணெறிந்தனையவிரல்கள்கோதையொடுசுவடெறிந்தொருகைதொழில்படச்
சேணெறிந்துநிமிர்திசைகளோடுமலைசெவிடெறிந்துடையமிடல்வலோன்
நாணெறிந்துமுறைமுறைதொடர்ந்துகடலுலகம்யாவையுநடுக்கினான். (௫க)

சிங்கவேறுகடல்போன்முழங்கிநிமிர்தேர்கடாய்நெடிதுசெல்கெனு
அங்கதாதிபனனுங்கவானவர்களஞ்சவெஞ்சினமநந்தமாச்
சங்கபாலகுளிகாதிவாலெயிறுதந்ததீவிடமுமிழ்ந்துசார்
வெங்கணுகமெனவேகமாயுருமுவெள்கவெங்கணைகள்சிந்தினான். (௫௨)

சுற்றும்வந்துகவிவீரர்வீசியசுடர்த்தடங்கல்வரைதோய்மரம்
இற்றெறிந்துபொடியாயுதிர்ந்தனவெழுந்துசேணிடையிழிந்தபோல்
வெற்றிவெங்கணைபடப்படத்தலைகள்விண்ணினூடுதிசைமீதுபோய்
அற்றெழுந்தனவிழுந்துமண்ணிடையழுந்துகின்றனவநந்தமால். (௫௩)

சிலைத்தடம்பொழிவயக்கடும்பகழிசெல்லவொல்கினர்சினத்தினால்
உலைத்தெறிந்திடவெடுத்தகுன்றுதொறுடற்பரங்கள்கொடொதுங்கினார்
நிலைத்துநின்றுநினைமுந்துசெல்லவெதிர்சென்றுசென்றுறநெருக்கலால்
மலைத்தலைகளொடுரத்தலங்கழலவூடுசென்றபலவாளியால். (௫௪)

முழுத்தமொன்றிலொருவெள்ளவானரமுடிந்துமாள்வனதடிந்துபோய்க்
கழுத்தைகையநிமிர்காலவாலபலகண்டமானபடிகண்டுநேர்
எழுத்தொடர்ந்தபடர்தோள்களாலெறியவெற்றவுற்றனவெழுந்துமேல்
விழுத்தலைத்தலையவேனுமால்வரைகள்வீசிவீசியுடன்வீழுமால். (௫௫)

அற்றபைந்தலையரிந்துசென்றனவயிற்கடுங்கணைவெயிற்கள்போல்
புற்றடைந்தகொடுவெவ்வராவினெடுநாகலோகமதுபுக்கவால்
வெற்றவெள்ளிடைவிரிந்துபோவதொருமேடுபள்ளம்வெளியின்மையால்
உற்றசெங்குருதிவெள்ளம்விள்ளுதிரையோதவேலையொடுமொத்ததால். (சுசு)

விழிக்குமேல்விழியகிற்கின்மார்பிடையமீளுமேன்முதுகவோதநீர்க்
கழிக்குமேலுயரவோடுமேநெடியகாலவீசினிமிர்கையவாய்
செழிக்குமேலகவுநாவசிந்தையனவுன்னுமேற்சிகரம்யாவையும்
பழிக்குமேனியகுரங்கின்மேலவன்விடுங்கொடும்பகழிபாயவே. (சுஎ)

மொய்யெடுத்தகணைமாரியாலிடைமுடிந்ததொன்றுமுறைகண்டிலார்
எய்விடத்தெறியுநாணிலோசையலதியாதுமொன்றுசெவியுற்றிலார்
மெய்யெடுத்தகவிவெள்ளம்யாவையும்விழுந்துபோனவெனும்விம்மலால்
கையெடுத்தனகுரங்கினோடுமுறைகண்டுதேவர்கள்கலங்கினார். (சுஅ)

கண்டவானரமநந்தகோடிமுறைகண்டமானபடிகண்டவக்
கண்டன்மாறொருவரின்மைகண்டுகணைமாறினான்விடுதலின்மையாக்
கண்டகாலையில்விலங்கினானிரவிகாதல்காதுவதொர்காதலால்
கண்டகார்சிதையமீதுயர்ந்தொளிர்மராமரஞ்சுலவுகையினான். (சுகூ)

உடைந்துதன்படையுலைந்துசிந்தியபொர்கவெல்செருவுடற்றலால்
கடைந்துதெள்ளமுதுகொள்ளும்வள்ளலெனமேனிமிர்ந்ததொர்கருப்பினான்
இடைந்துசென்றவணையெய்தியெய்தரியகாவல்பெற்றிகலியற்றுவான்
மிடைந்துநின்றபடைவேலைகாறளரவீசினானிருதர்கூசினார். (எ0)

சுற்றுநின்றபடைசிந்தியோடவொர்மராமரங்கொடுற்சைத்துளான்
வெற்றிகண்டவலிநன்றுநன்றெனவியந்துவெங்கணைதெரிந்தவன்
நெற்றியின்றலையிரண்டுமார்பிடையொரஞ்சுநஞ்செனவிறுத்தினான்
பற்றிவந்தமரம்வேறுவேறுறவொறுக்கிநுண்பொடிபரப்பினான், (எக)

அக்கணத்தநுமனுலமஞ்சுமெனலாயதோர்வெகுளியாயினான்
புக்கனைத்துலகமுங்குலுங்கவியிர்தோள்புடைத்துருமுபோலுரு
இக்கணத்திவனிறக்குமென்பதொருகுன்றெடுத்துமிசையேவினான்
உக்கதக்கிரிசொரிந்தவாளிகளினூழிலாதசிறுபூழியாய். (எஉ)

நில்லடாசிறிதுநில்லடாவுணநினைந்துவந்தனென்முனைவன்றான்
வில்லெடாமைநினதாண்மைபேசியுயிரோடுநின்றுவிளையாடினும்
கல்லடாநெடுமரங்களோவருகருத்திதென்வலிகடப்பநீ
சொல்லடாவெனவியம்பினானிகலரக்கனையனிவைசொல்லினான். (எ௩)

வில்லெடுக்கவுரியார்கள்வெய்யசில்வீரரிங்குளர்மெல்லியோய்
கல்லெடுக்கவுரியேனுநின்றனென்னதின்றுநாளையிடைகாணலாம்
மெல்லெடுத்தபடையிந்திராதியருணக்கிடைந்துயிர்கொடேகுவார்
புல்லெடுத்தவர்களல்லம்வேறுசிலபோரெடுத்தெதிர்புகுந்துளேம். (எச)

என்னொடேபொருதியோவதன்றெனினிலக்குவப்பெயரினெம்பிரான்
தன்னொடேபொருதியோவுனுந்தைதலைதள்ளநின்றதனிவள்ளலாம்
மன்னொடேபொருதியோவுரைத்ததுமறுக்கிலேமெனவழங்கினான்
பொன்னொடேபொருவினல்லதொன்றொடுபொருப்படாவுயர்புயத்தினான். எ௫

எங்குநின்றனனிலக்குவப்பெயரவ்வேழையெம்பியதிகாயனும்
சிங்கம்வந்தவனைவென்றுதன்னுயிரெனக்குவைத்ததொர்சிறப்பினான்
அங்கவன்றனைமலைந்துகொன்றுமுனிவாறவந்தனெனதன்றியும்
உங்கடன்மையினடங்குமோவுலகொடுக்கும்வெங்கணைதொடுக்கினே. (எசு)

ஆருமென்படைஞொய்தலின்றியயலேகயானுமிகல்வில்லுமோர்
தேரினின்றுமையடங்கலுந்திரள்சிரந்துணிப்பெனிதுதிண்ணமால்
வாருமுங்களுடன்வானுளோர்களையுமண்ணுளோரையும்வரச்சொலும்
போருமின்றொருபகற்கணேபொருதுவெல்வென்வென்றலதுபோகிலேன். எஎ

என்றுவெம்பகழியேழுநூறுமிருநூறும்வெஞ்சிலைகொடேவினான்
குன்றுநின்றனையவீரமாருதிதன்மேனிமேலவைகுழுக்களாச்
சென்றுசென்றுருவலோடும்வாளெயிறுதின்றுசீறியொருசேமவன்
குன்றுநின்றதுபறித்தெடுத்தவனையெய்திநொய்தினிதுகூறினான். (எஅ)

தும்பியென்றுலகினுள்ளயாவையவையேவையுந்தொகுபுதுள்ளுதாள்
வெம்புவெஞ்சினமடங்கலொன்றின்வலிதன்னைநின்றெளிதின்வெல்லுமோ
நம்பிதம்பியெனதெம்பிரான்வருதுணைத்தரிக்கிலைநலித்தியேல்
அம்பின்மூர்த்தியுனதாவியுண்ணுமிதுகாவடாசிலைவலாண்மையால் (எகூ)

செருப்பயிற்றியதடக்கையாளிசெலவிட்டகுன்றுதிசையானையின்
மருப்பையுற்றதிடோளிராவணன்மகன்றன்மார்பினுயர்வச்சிரப்
பொருப்பையுற்றதொர்பொருப்பெனக்கடிதொடிந்திடிந்து திசைபோயதால்
நெருப்பையுற்றதொரிரும்புகூடமுறநீறுபட்டதுகிர்க்கவே. (அ0)

விலங்கன்மேல்வரவிலங்கவீசியவிலங்கனீறுபடுவேலையில்
சலங்கைகைமேனிமிரவெஞ்சினந்திருகிவஞ்சன்மேனிமிர்தருக்கினான்
வலங்கொள்பேருலகமேருவோடெனமதிக்குமாருதிதன்வாசநா
றலங்கன்மார்பினொடுதோளினொடுருவவாயிரஞ்சரமழுத்தினான். (அக)

ஒன்றுபோல்வனவொராயிரம்பகழியூடுபோயுருவவாடகக்
குன்றுகால்குடையமேலுயர்ந்திடைகுலுங்குகின்றனையகொள்கையான்
மன்றலாறுதடமேனிமேலுதிரவாரிசோரவருமாருதி
நின்றுதேறுமளவின்கண்வெங்கண்விழிநீலனங்கிடைநெருக்கினான். (அ௨)

நீலனின்றதொருநீலமால்வரைநெடுந்தடக்கையினிடந்துநேர்
மேல்விழுந்தெரிவிசும்புசெல்வதொருவெம்மையோடுவரவீசலும்
சூலமந்தகனெறிந்ததன்னதுதுணிந்துசிந்தவிடைசொல்லுறும்
காலமொன்றுமறியாமலம்புகொடுகல்லினொடியவில்லினான். (அ௩)

உளகமெங்குமுயிரோடுநின்றனவுமோடவானவர்களுள்ளமும்
மோகமெங்குமுளவாகமேருவினுமும்மடங்குவலிதிண்மைசால்
ஆகமெங்கும்வெளியாகவெங்குருதியாறுபாயவனலஞ்சவாய்
நாகவெங்கணைகுவாளிபாய்தொறுநடுங்கினன்மலைபிடுங்கினன். (அச)

மேருமேருவெனவல்லதல்லதெனவேரினோடுநெடுவெற்பெலாம்
மாரின்மேலுமுயர்தோளின்மேலும்வரவாலிகாதலன்வழங்கினன்
சேருமேயவைதனுக்கைநிற்கவெதிர்செல்லுமேகடிதுசெல்லினும்
பேருமேகொடியவாளியான்முறிபெறுக்கலாவகைநொறுக்கினன். (அரு)

நெற்றிமேலுமுயர்தோளின்மேலுநெடுமார்பின்மேலுநிமிர்தாளினும்
புற்றினூடுநுழைநாகமன்னபுகைவேகவாளிகள்புகப்புகத்
தெற்றிவாளெயிறுதின்றுகைத்துணைபிசைந்துகண்களெரிதீயுக
வற்றினோடுதிரவாரிசோர்வுறமயங்கினனிலமுயங்கினன். (அசு)

மற்றவீரர்கடமார்பின்மேலுமுயர்தோளின்மேலுமழைமாரிபோல்
கொற்றவெங்கணையுலக்கவெய்தவைகுளிப்பநின்றுடல்குலுங்கினர்
இற்றவிந்தனபெரும்பதாதியுயிருள்ளவெங்கணுமிரிந்தவப்
பெற்றிகண்டிளையவள்ளலொள்ளெரிபிறந்தகண்ணனிவைபேசினன். (அஎ)

வேறு.

பிழைத்ததுகொள்கைபோதப்பெரும்படைத்தலைவர்யாரும்
உழைத்தனர்குருதிவெள்ளத்துலந்ததுமுலப்பிற்றன்றே
அழைத்திவன்றன்னையானேயாருயிர்கொளப்படாதே
இழைத்ததுபழுதேயன்றேவீடணவென்னச்சொன்னான். (அஅ)

ஐயவீதன்னதேயாலாயிரகோடிதேவர்
எய்தினரெய்தினரேயீடுபட்டிரிந்ததல்லால்
செய்திலரிவனையொன்றுநீயிதுதீர்ப்பினல்லால்
உய்திறனுண்டோவேறிவ்வுலகினுக்குயிரோடென்றான். (அகூ)

என்பதுசொல்லக்கேட்டவிந்திரவில்லினோடும்
பொன்பொருமேகமொன்றுவருவதுபோல்நின்றானை
முன்பனைமுன்புநோக்கியிவன்கொலாம்பரதன்முன்னோன்
தன்பெருந்தம்பியென்றானுமெனச்சாரன்சொன்னான். (கo)

தீயவனிளவறன்மேற்செல்வதன்முன்னஞ்செல்கென்
றேவினனொருவரின்றியிராக்கதத்தலைவரெங்கள்
நாயகன்மகனைக்கொன்றாய்நண்ணினைநாங்கள்காணப்
போயினியுய்வதெங்ஙனென்றெறிவிழித்துப்புக்கார் (கக)

கோடிநூறியைந்தகூட்டத்திராக்கதர்கொடித்திண்டேரும்
ஆடன்மாக்களிறுமாவுங்கடாவினரார்த்துமண்டி
மூடினார்மூடினாரைமுறைமுறைதுணித்துவாகை
சூடினனிராமன்பாதஞ்சூடியதோன்றறம்பி. (கஉ)

அதிர்ந்தனவுலகமேழுமனற்பொறியசனியென்னப்
பிதிர்ந்தனமலையும்பாரும்பிளந்தனபிணத்தின்மேன்மேல்
உதிர்ந்தனதலைகண்மண்டியோடினவுதிரநீத்தம்
விதிர்ந்தனரமரர்கைகள்விளைந்ததுகொடியவெம்போர் (௯௩)

விட்டனன்விசிகம்வேகம்விடாதனவீரர்மார்பில்
பட்டனவுலகமெங்கும்பரந்தனபதாகைக்காட்டைச்
சுட்டனதுரகராசிதுணித்தனபணைக்கைமாவை
அட்டனகூற்றமென்னவடர்ந்தனவநந்தமம்மா. (௯௪)

உலக்குநருலக்கின்றானாயெண்ணுவானுற்றவிண்ணோர்
கலக்குறுகண்ணார்நோக்கிக்கடையுறக்காணலாற்றார்
விலக்கரும்பகழிமாரிவிளைக்கின்றவிளைவையுன்னி
இலக்குவன்சிலைகொடேகொலெழுமழைபயின்றதென்றார். (௯௫)

ஒளியொண்கணைகடோறுமுந்தியவேழமொற்றை
வளியின்றலையபாரின்மறிவனமலையிற்சூழ்ந்த
ஆளியின்றுப்பின்வீரர்பொருகளத்தார்த்தவாழித்
தூளியின்றொகையவள்ளல்சுடுகணைத்தொகையுமம்மா. (௯௬)

பிறவியிற்பெரியநோக்கிற்பிசிதமுண்டுழலும்பெற்றிச்
சிறையனவன்னநோக்கித்தேவருந்திகைக்கத்தெற்றித்
துறைதொறுந்தொடர்ந்துவர்னம்வெளியறத்துவன்றிவீழும்
பறவையிற்பெரிதுபட்டார்பிணத்தின்மேற்படிவமாதோ. (௯௭)

திறந்தருகவியின்சேனைசெறிகழனிருதன்சீற
இறந்தனகிடக்கவெள்ளமெழுபதிற்பாதிமேலும்
பறந்தலைமுழுதும்பட்டவஞ்சகர்படிவமூடி
மறிந்ததுகுருதியோடிமறிகடன்மடுத்திலாத (௯௮)

கையற்றார்கால்களற்றார்கழுத்தற்றார்கவசமற்றார்
மெய்யற்றார்குடர்கள்சோரவிசையற்றார்வில்லுமற்றார்
மையற்றார்க்கரியுந்தேரும்வாசியுமற்றுமற்றார்
உய்யச்சாய்ந்தோடிச்சென்றுருயிருள்ளாராகியுள்ளார். (௯௯)

வற்றியகடலுணின்றமலையெனமருங்கின்யாரும்
சுற்றினரின்றித்தோன்றுந்தசமுகன்றோன்றறள்ளித்
தெற்றினபுருவத்தோன்றன்மனமெனச்செல்லுந்தேரான்
உற்றனனிளையகோவையநுமனுமுடன்வந்துற்றான். (௧00)

தோளின்மேலாதியையவென்றடிதொழுதுநின்றான்
ஆளிபோன்மொய்ம்பினுனுமேறினனமரரார்த்தார்
காளியேயனையகாலன்கொலையனகனலின்வெய்ய
வாளிமேல்வாளிதூர்த்தார்மழையின்மேல்மழைவந்தன்னார். (௧0௧)

இடித்தனசிலையினாண்களெரிந்தனதிசைகளிற்று
வெடித்தனமலைகள்விண்டுபிளந்தனவிசும்புமேன்மேல்
பொடித்தவிவ்வுலகமெங்கும்பொழிந்தனபொறிகள்பொங்கிக்
கடித்தனகணைகளோடுகணைகடம்மயில்வாய்கவ்வி. (௧௦௨)

அம்பினோடம்பொன்றொன்றையறுக்கமற்றறுக்கிலாத
வெம்பொறிகதுவவிண்ணின்வெந்தனகரிந்துவீழ்ந்த
உம்பருமுணர்வுசிந்தியொடுங்கினாருலகம்யாவும்
கம்பமுற்றலைந்தவேலைக்கலமெனக்கலங்கிற்றண்டம். (௧௦௩)

அரியினம்பூண்டதேருமநுமனுமகந்தசாரி
புரிதலினிலங்கையூருந்திரிந்ததுபுலவரோயும்
எரிகணைப்படலமூடவிலருளொன்னுந்தன்மை
தெரிகிலர்செவிடுசெல்லக்கீண்டனதிசைகளெல்லாம். (௧௦௪)

நாண்பொருவரிவிற்செங்கைநாமநூனவின்றகல்வி
மாண்பொருவகையிற்றன்றுவலிக்கிலையவதிவானம்
சேண்பெரிதென்றுசென்றதேவருமிருவர்செய்கை
காண்பரிதென்றுகாட்சிக்கையுறவெய்திற்றன்றே. (௧௦௫)

என்செய்தானென்செய்தானொன்றியம்புவாரனையதன்மை
முன்செய்தார்யாவரென்பார்முன்னேதுபின்னேதென்பார்
கொன்செய்தார்வீரரின்னதிசையினொன்றுங்கொள்ளார்
பொன்செய்தார்மௌலிவிண்ணோருணர்ந்திலர்புகுந்ததொன்றும். (௧௦௬)

ஆயிரகோடிபல்லமயிலெயிற்றரக்கனெய்தான்
ஆயிரகோடிபல்லத்தலைதுணித்தறுத்தானையன்
ஆயிரகோடிநாகக்கணைதொடுத்தரக்கனெய்தான்
ஆயிரகோடிநாகக்கணைகளாலறுத்தானண்ணல். (௧௦௭)

கோட்டியின்றலையகோடிகோடியம்பரக்கன்கோத்தான்
கோட்டியின்றலையகோடிகோடியாற்குறைத்தான்கொண்டல்
மீட்டொருகோடிகோடிவெஞ்சினத்தரக்கன்விட்டான்
மீட்டொருகோடிகோடிகொண்டவைதடுத்தான்வீரன். (௧௦௮)

கங்கபத்திரமோர்கோடிகைவிசைத்தரக்கனெய்தான்
கங்கபத்திரமோர்கோடிகணைதொடுத்திளவல்காத்தான்
திங்களிற்பாதிகோடியிலக்குவன்றெரிந்துவிட்டான்
திங்களிற்பாதிகோடிதொடுத்தவையரக்கன்றீர்த்தான். (௧௦௯)

கோணையின்றலையகோடிகொடுங்கணையரக்கன்கோத்தான்
கோணையின்றலையகோடிதொடுத்தவையிளவல்கொன்றான்
பாணையின்றலையகோடிபரப்பினானிளவல்பல்கால்
பாணையின்றலையகோடியரக்கனும்பதைக்கவெய்தான். (௧௧௦)

தாமரைத்தலையவாளிதாமரைக்கணக்கிற்சார்ந்த
தாம்வரத்துரந்துமுந்தித்தயமுகன்றநயனூர்த்தான்
தாமரைத்தலையவாளிதாமரைக்கணக்கிற்சார்ந்த
தாம்வரத்தடுத்துவீழ்த்தான்றாமரைக்கண்ணன்றம்பி. (௧௧௧)

வச்சிரப்பகழிகோடிவளையெயிற்றரக்கனெய்தான்
வச்சிரப்பகழிகோடிதுரந்தவையநகன்மாய்த்தான்
முச்சிரப்பகழிகோடியிலக்குவன்முடுகவிட்டான்
முச்சிரப்பகழிகோடிகடுத்தவைதடுத்தான்முன்பன். (௧௧௨)

அஞ்சலியஞ்சுகோடிதொடுத்திகலரக்கனெய்தான்
அஞ்சலியஞ்சுகோடிதொடுத்தவையறுத்தானையன்
குஞ்சரக்கன்னங்கோடியிலக்குவன்சிலையிற்கோத்தான்
குஞ்சரகன்னங்கோடிதொடுத்தவையரக்கன்காத்தான். (௧௧௩)

எய்யவுமெய்தவாளிவிலக்கவுமுலகமெல்லாம்
மொய்கணைக்கானமாகிமுடிந்ததுமுழங்குவேலை
பெய்கணைப்பொதிகளாலேவளர்ந்ததுபிறந்தகோபம்
கைமிகக்கனன்றதல்லாற்றளர்ந்திலர்காளைவீரர். (௧௧௪)

வீழியின்கனிபோன்மேனிகிழிபடவநுமன்வீரச்
சூழெழுவனையதோண்மேலாயிரம்பகழிதூவி
ஊழியினிமிர்ந்தசெந்தீயுருமினையுமிழ்வதென்ன
ஏழிருநூறுவாளியிலக்குவன்கவசத்தெய்தான். (௧௧௫)

முற்கொண்டானரக்கனென்றுமுளரிவாண்முகங்கடேவர்
பிற்கொண்டாரிளையகோவைப்பியல்கொண்டான்பெருந்தோணின்றும்
கற்கொண்டார்கிரியினூலுமருவிபோற்குருதிகண்டார்
விற்கொண்டாரிவனேயென்றுவெருக்கொண்டார்முனிவர்மேலார். (௧௧௬)

சீறிநூறெறிந்தசிந்தையிலக்குவன்சிலைக்கைவாளி
நூறுநூறேவிநொய்தினுடங்குளைமடங்க்ன்மாவும்
வேறுகூறியற்றிவீரக்கொடியையுமறுத்துவீழ்த்தி
ஆறுநூறம்புசெம்பொற்கவசம்புக்கழுந்தவெய்தான். (௧௧௭)

காளமேகத்தைச்சார்ந்தகதிரவனென்னக்காந்தித்
தோளின்மேன்மார்பின்மேலுஞ்சுடர்விடுகவசஞ்சூழ
நீளநீள்பவளவல்லிநிரையொளிநிமிர்வவென்ன
வாளிவாய்தோறும்வந்துபொடித்தனகுருதிவாரி. (௧௧௮)

பொன்னுறுதடந்தேர்பூண்டமடங்கன்மாப்புரண்டபோதும்
மின்னுறுபதாகையோடுசாரதிவீழ்ந்தபோதும்
தன்னிறத்துருவவாளிதடுப்பிலசார்ந்தபோதும்
இன்னதென்றறியானன்னுனிளையதோர்மாற்றஞ்சொன்னான். (௧௧௯)

அந்நரனல்லனுகிறானனனையனன்றேல்
பின்னரன்பிரமனென்பார்ப்பேசுகபிறந்துவாழும்
மன்னனம்பதியின்வந்துவரிசிலைபிடித்தகல்வி
இந்நரன்றன்னெடொப்பார்யாருளரிணையொன்றான். (கஉ0)

வாயிடைநெருப்புக்காலவுடனெடுங்குருதிவாரத்
தீயிடைநெய்வார்த்தன்னவெகுளியானுயிர்தீர்ந்தாலும்
ஓய்விடமில்லான்வல்லையோரிமையொடுங்காமுன்னர்
ஆயிரம்புரவிபூண்டவாழியந்தேரனானான்.  (கஉக)

வேறு.

ஆசையெண்கணுமம்புகவெம்புபோர்
ஓசைவிம்மவுருத்திரனும்முடல்
கூசவாயிரகோடிகொலைக்கணை
வீசிவிண்ணைவெயிலிலதாக்கினான். (கஉஉ)

அத்திறத்திலநகனுமாயிரம்
பத்திபத்தியினெய்குவபல்கணை
சித்திரத்தினிற்சிந்தியிராவணன்
புத்திரற்குமோராயிரம்போக்கினான். (கஉங)

ஆயிரங்கணைபாய்ந்தனவாற்றருங்
காயெரித்தலைநெய்யெனக்காந்துருத்
தூயவன்சுடர்சூழொளிநெற்றியில்
தீயவெங்கணைநூறுசெலுத்தினான். (கஉச)

நெற்றிமேலொருநூற்றுநெடுங்கணை
உற்றபோதினும்யாதுமொன்றுற்றிலன்
மற்றவன்றொழிலான்மணிமார்பிடை
முற்றவெங்கணைநூறுமுடுக்கினான். (கஉரு)

நூறுவெங்கணைமார்பினுழைதலின்
ஊறுசோரியொடுள்ளமுஞ்சோர்தரத்
தேறலாந்துணையுஞ்சிலையூன்றியே
ஆறினின்றனனாற்றலிற்றேற்றிலான். (கஉசு)

புதையுநன்மணிப்பொன்னுருளச்சொடு
சிதையவாயிரம்பாய்பரிசிந்திட
வதையின்மற்றொருகூற்றெனமாருதி
உதையினாலவன்றேரையுருட்டினான். (கஉஎ)

பேயொராயிரம்பூண்டதுபெய்ம்மணி
ஏயதேரிமைப்பின்னிடையேறினான்
தூயவன்சுடர்த்தோளிணைமேற்சுடர்
தீயவெங்கணையைம்பதுசிந்தினான். (கஉஅ)

ஏறியேறியிழிந்ததல்லாலிகல்
வேறுசெய்திலன்வெய்யவன்வீரனும்
ஆறுகோடிப்பகழியினையிரு
நூறுதேரொருநாழிகைநூறினான். (௧௨௯)

ஆசிகூறினரார்த்தனராய்மலர்
வீசிவீசிவணங்கினர்விண்ணவர்
ஊசனீங்கினருத்தரிகத்தொடு
தூசுவீசினர்நன்னெறிதுன்னினர். (௧௩௦)

அக்கணத்தினோராயிரமாயிரம்
மிக்கவெங்கணரக்கரவ்வீரனோ
டொக்கவின்பமொருவழியூணினர்
புக்குமூர்ந்தினர்போரிடைப்பொன்றுவான். (௧௩௧)

தேரர்தேரினிவுளியர்செம்முகக்
காரர்காரினிடிப்பினர்கண்டையின்
தாரர்தாரணியும்விசும்புந்தவழ்
பேரர்பேரிமுழக்கன்னபேச்சினர். (௧௩௨)

பார்த்தபார்த்ததிசைதொறும்பன்மழை
போர்த்தவானமெனவிடிபோர்த்தெழ
ஆர்த்தவோசையுமம்பொடுவெம்படை
தூர்த்தவோசையும்விண்ணினைத்தூர்த்தவால். (௧௩௩)

ஆளியார்த்தனவாளரியார்த்தன
கூளியார்த்தனகுஞ்சரமார்த்தன
வாளியார்த்தனதேரிவர்மண்டிலம்
ஆளியார்த்திலதாற்பிணங்துன்னலால். (௧௩௪)

வந்தணைந்ததோர்வாளரிவாவுதேர்
இந்திரன்றனைவென்றவனேறினான்
சிந்தினன்சரமாரிதிசைத்திசை
அந்திவண்ணனோரம்பினகற்றினான். (௧௩௫)

சுற்றும்வந்துபரந்துதொடர்ந்தவர்
எற்றுகின்றனவெய்தவெறிந்தன
அற்றுதிர்ந்தனவாயிரம்வன்றலை
ஒற்றைவெங்கணையோடுமுருண்டவால். (௧௩௬)

குடர்கிடந்தனபாம்பெனக்கோண்மதித்
திடர்கிடந்தனசிந்தினதேர்த்திரள்
படர்கிடந்தனர்பல்படைக்கையினர்
கடர்கிடந்தனபோன்றகளத்தினே. (௧௩௭)

குண்டலங்களுமாரமுங்கோவையும்
கண்டநாணுங்கழலுங்கவசமும்
சண்டமாருதம்வீசத்தலத்துகும்
விண்டலத்தினின்மீனின்விளங்கின. (கருஅ)

ஆக்கன்மைந்தனையாரியனம்பினால்
கரக்கநூறியெதிர்பொருகண்டகர்
சிரக்கொடுங்குவைக்குன்றுதிரட்டினன்
இரக்கமெய்திவெங்காலனுமெஞ்சவே. (கருக)

சுற்றிவால்கொடுதூவுந்துகைக்கும்விட்
டெற்றும்வானிலெடுத்தெறியும்மெதிர்
உற்றுமோதுமுதைக்குமுறுக்குமால்
கொற்றவில்லியன்றேறியகூற்றமே. (கசo)

பார்க்குமஞ்சவுறுக்கும்பகட்டினால்
தூர்க்கும்வேலையைத்தோள்புடைகொட்டினின்
றார்க்குமாயிரந்தேர்பிடித்தங்கையால்
ஈர்க்குமையனன்றேறியயானையே. (கசக)

மாவும்யானையும்வாளுடைத்தானையும்
பூவுநீரும்புனைதளிரும்மெனத்
தூவுமள்ளிப்பிசையுந்துகைக்குமால்
சேவகன்றெரிந்தேறியசீயமே. (கசஉ)

அவ்விடத்தினிலாய்மருந்தாலழல்
வெவ்விடத்தினையுண்டவர்மீண்டென
எவ்விடத்தினும்வீழ்ந்தவினத்தலைத்
தெவ்வடக்கும்வலியவர்தேறினார். (கசஙு)

தேறினார்களெருப்புகச்சீறினார்
ஊறினார்வந்திளவலையொன்றினார்
மாறுமாறுமலையுமரங்களும்
நூறுமாயிரமுங்கொடுநூறினார். (கசச)

விகடமுற்றமரனொடுவெற்பினம்
புகடபுத்தபொறுத்தனபோவன
துகடவத்தொழில்செய்துறைக்கம்மியர்
சகடமொத்தனதாரணிதேரொலாம். (கசரு)

வாலிமைந்தனோர்மாமரம்வாங்கினான்
காலின்வந்தவரக்கனைக்காவிது
போலுமுன்னுயிருண்பதுபுக்கெனு
மேனிமீர்ந்துநெருப்புகவீசினான். (கசசு)

ஏழிழித்ததுசெய்தவனீண்டெழிற்
சீரழித்தவனுமெனத்தேவர்கள்
ஊரழித்தவுயர்வரைத்தோளவன்
தேரழித்ததிமைப்பினிற்சென்றதால். (கசுஎ)

அந்தவேலையினூர்த்தெழுந்தாடினர்
சிந்தைசீரினுயர்ந்தனர்தேவர்கள்
தந்தைதந்தைபண்டுற்றசழக்கெலாம்
எந்தைதீர்த்தனனென்பதோரேம்பலால். (கசுஅ)

அழிந்ததேரினின்றந்தரத்தக்கணத்
தெழுந்துமற்றோரிரதமுற்றேறினன்
கழிந்துபோகலேயில்லெனக்கைக்கணை
பொழிந்துசென்றனன்றீயெனப்பொங்கினன். (கசுகூ)

இந்திரன்மகன்மைந்தனேயின்னுயிர்
தந்துபோகெனச்சாரலுற்றான்றனே
வந்துமற்றையவானரவீரரும்
முந்துபோர்க்குமுறைமுறைமுற்றினர். (கருO)

மரமுங்குன்றுமடிந்தவரக்கர்தம்
சிரமுந்தேரும்புரவியுந்திண்கரிக்
கரமுமாளியும்வாரிக்கடியவன்
சரமுந்தாழ்தரவீசினர்தாங்கினர். (கருக)

அனையகாலேயிலாயிரமாயிரம்
வினையவெங்கணரக்கரைவிண்ணவர்
நினையுமாத்திரத்தாருயிர்நீக்கினன்
மனையும்வாழ்வுமுறக்கமுமாற்றினன். (கருஉ)

ஆனையுந்தடந்தேருந்தன்னுருயிர்த்
தானையும்பரியும்பட்டதன்மையை
மானவெங்கணரக்கன்மனக்கொளாப்
போனவென்றியன்றீயெனப்பொங்கினன். (கருங)

தேர்த்தடம்பெருஞ்சில்லியந்தேரினர்
காத்துநின்றவிருவரைக்கண்டனன்
ஆர்த்ததம்பெருஞ்சேனேகொண்டண்மலர்
ஈர்த்தசோரிப்பரவைநின்றீர்த்தலால். (கருச)

நேர்செலாதிடைநின்றனர்நீணெடுங்
கார்செலாவிருள்கீறியகண்ணகன்
றேர்செலாதுவிசும்பிடைச்செல்வதோர்
பேர்செலாதுபிணத்தின்பிறக்கமே. (கருரு)

அன்றுதன்னயனின்றவரக்கரை
ஒன்றுவாண்முகநோக்கியொருவிலான்
நன்றுநம்படைநாற்பதுவெள்ளமும்
கொன்றுநின்றபடியெனக்கூறினான். (௧௫௬)

ஆயவீரருமையவமர்த்தலை
நீயுநாற்பதுவெள்ளநெடும்படை
மாயவெங்கணைவாரிவழங்கினை
ஒய்வில்வெஞ்செருவொக்குமென்றோதினன். (௧௫௭)

வந்துநேர்ந்தனன்மாருதிமேல்வரும்
அந்திவண்ணனுமாயிரமாயிரம்
சிந்தினான்கணைதேவரைவென்றவன்
நூந்தநுந்தமுறைமுறைநூறினான். (௧௫௮)

ஆறுமேழுமறுபதுமைம்பதும்
நூறுமாயிரமுங்கணைநூக்கிவந்
தூறினாரையுணர்வுதொலைத்துயிர்
தேறினாரைநெடுநிலஞ்சேர்த்தினான். (௧௫௯)

கதிரின்மைந்தன்முதலினர்காவலோர்
உதிரவெள்ளத்தினாழ்கியொதுங்கலும்
எதிரினின்றவிராவணியீடுற
வெதிரின்காட்டெரிபோற்சரம்வித்தினான். (௧௬௦)

உளைவுதோன்றவிராவணியொல்கினான்
இளையினின்றவிருவர்கிளைத்தலும்
அளவில்சேனையவிதரவாரியற்
றிளையவீரன்சுடுசரமேவினான். (௧௬௧)

வேறு.

தெரிகணைமாரிபெய்யத்தேர்களுஞ்சினைக்கைமாவும்
பரிகளுந்தாமுமன்றுபட்டவர்கிடக்கக்கண்டார்
இருவருநின்றார்மற்றங்கிராக்கதரென்னும்பேரார்
ஒருவருநின்றாரில்லையுள்ளவரோடிமாய்ந்தார். (௧௬௨)

ஓடினாரரக்கர்தண்ணீருண்ணசையுலந்தநாவர்
தேடினாரெதிர்ந்துகையான்முகிலினைமுகந்துதேக்கிப்
பாடுறுபுண்கடோறும்பசும்புனல்பாயப்பாய
வீடினார்சிலவர்சில்லோர்பெற்றிலர்விளிந்துவீழ்ந்தார். (௧௬௩)

வெங்கணைதிறந்தமெய்யர்விளிந்திலர்விரைந்துசென்றார்
செங்குழற்கற்றைசோரத்தெரிவையரரற்றத்தெய்வப்
பொங்கிரும்பள்ளிபுக்காரவருடல்பொருந்தப்புல்லி
அங்கவராவியோடுந்தம்முயிர்போக்கியற்றார். (௧௬௪

பொறிக்கொடும்பகழிமார்பர்போயினரிடங்கள்புக்கார்
மறிக்கொளுஞ்சிறுவர்தம்மைமற்றுளசுற்றந்தம்மைக்
குறிக்கொளுமென்றுகூறியவர்முகங்குழையநோக்கி
நெறிக்கொளுங்கூற்றைநோக்கியாருயிரொறுத்துநீத்தார். (கசுரு)

தாமரைக்கண்ணன்றம்பிதன்மையீதாயின்மெய்ம்மை
வேமரைக்கணத்தினிவ்வூரிராவணிவிளிதன்முன்னம்
மாமரக்காளிற்குன்றின்மறைந்திருமறையவல்லே
போமெனத்தமரைச்சொல்லிச்சிலருடனுறந்துபோனர் (கசுசு)

வளையுண்டமதுகைமேனிமருமத்துவள்ளல்வாளி
இளையுண்டுதுயிலச்சென்றூர்வாங்கிடனிறப்பெனென்பார்
பிளையுண்டபாலினுள்ளம்பிறிதுறப்பிறர்முன்சொல்லா
உளையுண்டநல்லோரொன்னவுயிர்த்துயிர்த்துழைப்பதானூர். (கசுஎ)

தேரிடைச்செல்லார்மானப்புரவியிற்செல்லார்செங்கட்
காரிடைச்செல்லார்காலிற்காலெனச்செல்லார்காவு
லூரிடைச்செல்லார்நாணுலுயிரின்மேலுடையவன்பால்
போரிடைத்திரியாநின்றநடுங்கினர்புறத்துப்போகார். (கசுஅ)

நொய்தினிற்சென்றுகூடியிராவணியுளவைநோக்கி
வெய்தினிற்கொன்றுவீழ்ப்பலென்பதோர்வெகுளிவீங்கிப்
பெய்துழிப்பெய்யுமாரியனையவன்பிணங்குகூற்றின்
கையினிற்பெரியவம்பாற்கவசத்தைக்கழித்துவீழ்த்தான். (கசுகூ)

கவசத்தைக்கழித்துவீழ்ப்பக்காப்புறுகடனின்றூகி
அவசத்தையடைந்தவீரனறிவுறுந்துணையின்வீரத்
துவசத்தின்புரவித்திண்டேர்கடிதுறத்தூண்டியாமித்
திவசத்தின்முடித்தும்வெம்போரொனச்சினந்திருகிச்சென்றூர். (கஎ0)

மாருதிமேலுமையன்மார்பினுந்தோளின்மேலும்
தேரினரிருவர்சென்றூர்சிந்தினபகழிசிந்தி
ஆரியனவர்கைவில்லுமச்சுடைத்தேருமத்தேர்
ஊர்குவாருயிருங்கொண்டான்புரவியினுயிருமுண்டான். (கஎக)

இருவருமிழந்தவில்லரொழுமுளேவயிரத்தண்டர்
உருமெனக்கடிதிறேடியநுமனையிமைப்பிலுற்றூர்
பொருகனற்பொறிகள்சிந்தப்புடைத்தனர்புடைத்தலோடும்
பருவலிக்கரத்தினூற்றண்டிரண்டையும்பறித்துக்கொண்டான். (கஎஉ)

தண்டவன்கையவாயதன்மையைத்தறுகணாளர்
கண்டனர்கண்டுசெய்யலாவதொன்றூனுங்காணூர்
கொண்டனனெறிந்துநம்மைக்கொல்லுமென்றச்சங்கொண்டார்
உண்டசெஞ்சோறுநோக்காருயிருக்கேயுதவிசெய்தார். (கஎங)

காற்றுவந்தசைதலாலுங்காலமல்லாமையாலும்
கூற்றுவந்தாவிகொள்ளுங்குறியின்மைகுறித்தலாலும்
தேற்றம்வந்தெய்திநின்றமயக்கமுநோவுந்தீர்ந்தார்
ஏற்றமும்வலியும்பெற்றுரொழுந்தனர்வீரரெல்லாம். (கஎச)

அங்கதன்குமுதனீலன்சாம்பவனருக்கன்மைந்தன்
பங்கமின்மயிர்தன்றம்பிசதவலிபனசன்முன்னுச்
சிங்கவேறனையவீரர்யாவருஞ்சிகரமேந்தி
மங்கலம்வானோர்சொல்லமழையெனவார்த்துவந்தார். (கஎரு)

அத்தனையோருங்குன்றமளப்பிலாவசனியேற்றோ
டொத்தனநெருப்புவீசுமுருமெனவொருங்கவுய்த்தார்
இத்தனைபோலுஞ்செய்யுமிகலெனுமுறுவலெய்திச்
சித்திரவில்வலோனுஞ்சின்னபின்னங்கள்செய்தான். (கஎசு)

மரங்களுமலையுங்கல்லுமழையெனவழங்கிவந்து
நெருங்கினர்நெருங்கக்கண்டுமொருதனிநெஞ்சும்வில்லும்
சரங்களுந்துணையாய்நின்றநிசாசரன்றனிமைநோக்கி
இரங்கினனென்னமேல்பாற்குன்றுபுக்கருக்கனின்றான். (கஎஎ)

வாழியவேதநான்குமனுமுதல்வந்தநூலும்
வேள்வியுமெய்யுந்தெய்வவேதியர்விளைவுமஃதே
ஆழியங்கமலக்கையானுதியம்பரமனென்னு
ஏழையருள்ளமென்னவிருண்டனதிசைகளெல்லாம். (கஎஅ)

நாகமேயனையநம்பநாழிகையொன்றுநான்கு
பாகமேகாலமாகப்படுத்தியேற்பட்டானன்றேல்
வேகவாளரக்கர்காலம்விளைந்ததுவிசும்பின்மீதா
ஏகுமேல்வெல்லுமென்பதிராவணற்கிளவல்சொன்னான். (கஎகூ)

அத்தனைவீரர்மேலுமாண்டகையநுமன்மேலும்
எத்தனைகோடிவாளிமழையெனவெய்யாநின்ற
வித்தகவில்லினானைக்கொல்வதுவிரும்பிவீரன்
சித்திரத்தேரைத்தெய்வப்பகழியாற்சிதைத்துவீழ்த்தான். (கஅ0)

அழித்ததேரழுந்தாமுன்னமம்பொடுகிடந்துவெம்பி
உழைத்துயிர்விடுவதல்லாலுறுசெருவென்றேமென்று
பிழைத்திவர்போவரல்லர்பாசத்தாற்பிணிப்பினென்னு
விழித்திமையாதமுன்னம்வில்லொடுவிசும்பிற்சென்றான். (கஅக)

பொன்குலாமேனிமைந்தன்றன்னொடும்புகழ்தற்கொத்தான்
வன்கலாமியற்றுநின்றான்மற்றொருமனத்தனாகி
மின்குலாங்கழற்கால்வீரன்விண்ணிடைவிளைந்ததன்மை
என்கொலாமென்னவஞ்சிவானவரிரியல்போனார். (கஅஉ)

தாங்குவிற்கரத்தன்றூணிதழுவியபுறத்தன்றன்னின்
ஓங்கியுற்றெரியாநின்றவெகுளியனுயிர்ப்பன்றீயன்
தீங்கிழைப்பவருக்கெல்லாஞ்சீரியன்மாயச்செல்வன்
வீங்கிருட்பிழம்பினும்பர்மேகத்தின்மீதனானான். (கஅங)

தணிவுறப்பண்டுசெய்ததவத்தினுந்தருமத்தானும்
பிணியறுப்பவரிற்பெற்றவரத்தினும்பிறப்பினானும்
மணிநிறத்தரக்கன்செய்தமாயமந்திரத்தினானும்
அணுவெனச்சிறியதாங்கோராக்கையுமுடையனானான். (கஅச)

வாங்கினான்மலரின்மேலவானவன்வானக்கங்கை
தாங்கினானுலகந்தாங்குஞ்சக்கரத்தவனென்றாலும்
வீங்குவான்றோளைவீக்கிவீழ்த்தலின்மீள்கிலாத
ஓங்குவாளரவினாமத்தொருதனிப்படையையுன்னி. (கஅரு)

ஆயினகாலத்தார்த்தாரமர்த்தொழிலஞ்சியப்பால்
போயினனென்பதுன்னிவானரவீரர்போல்வார்
நாயகற்கிளையகோவுமன்னதேநினைந்துநக்கான்
மாயையைத்தெரியவுன்னார்போர்த்தொழின்மாற்றிநின்றார். (கஅசு)

அதுகணத்தநுமன்றோணின்றையனுமிழிந்துவெய்ய
கதுவலிச்சிலையைவென்றியங்கதன்கையதாக்கி
முதுகுறச்சென்றுநின்றகணையெலாமுறையின்வாங்கி
விதிர்விதிர்ப்பாற்றலுற்றான்விளைகின்றதுணர்ந்திலாதான். (கஅஎ)

விட்டனனரக்கன்வெய்யபடையினைவிடுத்தலோடும்
எட்டினோடிரண்டுதிக்குமிருடிரிந்திரியவோடிக்
கட்டினதென்பமன்னோகாகுத்தற்கிளையகாளை
வட்டவான்வயிரத்திண்டோண்மலைகளையுளையவாங்கி. (கஅஅ)

இறுகுறப்பிணித்தலோடும்யாவையுமெதிர்ந்தபோதும்
மறுகுறக்கடவானல்லன்மாயமென்றுணர்வானல்லன்
உறுகுறைத்துன்பமில்லானொடுங்கினன்செய்வதோரான்
அறுகுறைக்களத்தைநோக்கியந்தரமதனைநோக்கும். (கஅகூ)

காலுடைச்சிறுவன்மாயக்கள்வனைக்கணத்தின்காலை
மேல்விசைத்தெழுந்துநாடிப்பிடிப்பெனென்றுறுக்கும்வேலை
ஏல்புடைப்பாசமேனாளிராவணன்புயத்தைவாலி
வால்பிணித்தென்னச்சுற்றிப்பிணித்ததுவயிரத்தோளை. (ககூ0)

மற்றையோர்தமையுமெல்லாம்வாளெயிற்றரவம்வந்து
சுற்றினவயிரத்தூணின்மலையினிற்பெரியதோள்கள்
இற்றனவிற்றவென்னவிறுக்கினவிளகாவுள்ளம்
தெற்றெனவுடையவீரரிருந்தனர்செய்வதோரார். (ககூக)

மலையெனவெழுவர்வீழ்வர்மண்ணிடைப்புரள்வர்வானில்
தலைகளையுயர்த்துநோக்கித்தழலெழவிழிப்பர்தாவி
அலைகிளர்வாலாற்பாரினடிப்பர்வாய்மடிப்பராண்மைச்
சிலையவற்கிளையகோவைநோக்குவருள்ளந்தீவர். (௧௯௨)

வீடணன்முகத்தைநோக்கிவினையுண்டேயிதனுக்கென்பர்
மூடினகங்குன்மாலையிருளினைமுனிவர்மெய்யில்
ஈடுறத்தக்கான்போலாநம்மெதிரொன்றுவேந்தல்
ஆடகத்தோளைநோக்கிநகைசெய்வர்விழுவரஞ்சார். (௧௯௩)

ஆரிதுதீர்க்கவல்லாரஞ்சனைபயந்தவள்ளல்
மாருதியிழைத்தான்கொல்லோவென்றனர்மறுகிநோக்கி
வீரனைக்கண்டுபெட்டதிதுகொலாமென்றுவிம்மி
வார்கழற்றம்பிதன்மைகாணுமோவள்ளலென்பார். (௧௯௪)

என்சென்றதன்மைசொல்லினெறுழ்வலியரக்கனெய்தான்
மின்சென்றதன்னவானத்துருமினம்வீழ்வவென்னப்
பொன்சென்றவடிம்பின்வாளிபுகையொடுபொறியுஞ்சிந்தி
முன்சென்றமுதுகிற்பாயப்பின்சென்றமார்பமுற்ற. (௧௯௫)

மலைத்தலைக்காலமாரிமறித்தெறிவாடைமோதத்
தலைத்தலைமயங்கிவீழுந்தன்மையிற்றலைகள்சிந்தும்
குலைத்தலைவாளிபாயுங்குன்றனகுவவுத்தோளார்
நிலைத்திலருலைந்துசாய்ந்தார்நிமிர்ந்ததுகுருதிநீத்தம். (௧௯௬)

ஆயிரகோடிமேலுமம்புதனுகத்தூடு
போயினபோதுமொன்றுந்துடித்திலன்பொடித்துமானத்
தீயெரிசிதறுஞ்செங்கணஞ்சனைச்சிங்கமேனி
நாயகன்றம்பிக்குற்றதுயர்கூடநடுங்குகின்றான். (௧௯௭)

வேறுளவீரரெல்லாம்வீழ்ந்தனருருமின்வெய்ய
நூறுமாயிரமும்வாளியுடலிடைநுழையச்சோரி
ஆறுபோலொழுகவள்ளலங்கதனநந்தவாளி
ஏறினமெய்யனேனுமிருந்தனனிடைந்திலாதான். (௧௯௮)

கதிரவன்காதன்மைந்தன்கழற்றருபசுங்காயன்ன
எதிரொதிர்பகழிதைத்தயாக்கையனெரியுங்கண்ணன்
வெதிர்ஒருநெடுங்கானமென்னவேகின்றமனத்தன்மெய்யன்
உதிரவெங்கடலுட்டாதையுதிக்கின்றான்றனையுமொத்தான். (௧௯௯)

வெப்பாரும்பாசம்வீக்கிவெங்கணைவளைக்குமெய்யன்
ஒப்பாருமில்லான்றம்பியுணர்ந்திருந்தின்னறுப்பான்
இப்பாசமாய்க்குமாயம்யான்வல்லெனெனப்படுதோர்ந்தும்
அப்பாசம்வீசவாற்றுதழிந்தநல்லறிவுபோன்றான். (௨௦௦)

அம்பெலாங்கதிர்களாகவழிந்தழிந்திழியுமாகச்
செம்புனல்வெயிலிற்றேன்றத்திசையிருளிரியச்சீறிப்
பம்புபேரொளியநாகம்பற்றியபடிவத்தோடும்
உம்பர்நாடிறந்துவீழ்ந்தவொளியவனேயுமொத்தான். (உ0௧)

மயங்கினுன்வள்ளறம்பிமற்றையோர்முற்றுமண்ணை
முயங்கினர்மேனியெல்லாமூடினுனரக்கன்மூரித்
தயங்குபேராற்றலானுந்தன்னுடைறைத்தவாளிக்
குயங்கினுனுளேந்தான்வாயாலுதிரநீருமிழாநின்றன். (உ0௨)

சொற்றதுமுடித்தேனுளேயென்னுடற்சோர்வைநீக்கி
மற்றதுமுடிப்பெனென்றுவெண்ணினுன்மனிசன்வாழ்க்கை
இற்றதுகுரங்கின்றூனையிறந்ததென்றிரண்டுபோலும்
கொற்றமங்கலங்களார்ப்பவிராவணன்கோயில்புக்கான். (உ0௩)

ஈர்க்கடைபகழிமாரியிலக்குவனென்னநின்ற
நீர்க்கடைமேகந்தன்னைநீங்கியுஞ்செருவினீங்கான்
வார்க்கிடைமதுகைக்கொங்கைமணிக்குறுமுறுவன்மாதர்
போர்க்கடைக்கருங்கண்வாளிபுயந்தொறும்பொழியப்புக்கான். (உ0௪)

ஐயிருகோடிச்செம்பொன்மணிவிளக்கங்கையேந்தி
மையுறுவானநாட்டுமாதருமற்றைநாட்டுப்
பையரவல்குலாரும்பலாண்டிசைபரவத்தங்கள்
தையலரறுகுதூவிவாழ்த்தினர்தழுவச்சார்ந்தான். (உ0௫)

தந்தையையெய்தியன்றுங்குற்றுளதன்மையெல்லாம்
சிந்தையினுணரக்கூறித்தீருதியிடர்நீயெந்தாய்
நொந்தனென்யாக்கைநொய்தினுற்றிமேனுவல்வெனென்னுப்
புந்தியிலனுக்கந்தீர்ப்பான்றன்னுடைக்கோயில்புக்கான் (உ0௬)

இத்தலையின்னலுற்றவீடணனிழைப்பதோரான்
மத்துறுதயிரினுள்ளமறுகினன்மயங்குகின்றன்
அத்தலைக்கொடியனென்னையட்டிலனளியத்தேனுன்
செத்திலென்வலியெனின்றேனென்றுபோய்வையஞ்சேர்ந்தான். (உ0௭)

பாசத்தாலநகன்றம்பிபிணிப்புண்டபடியேபட்ட
நேசத்தாரொல்லாம்வீழ்ந்தார்யாரொருதமியனின்றேன்
தேசத்தாரென்னையென்னென்சிந்திப்பாரென்றுதீயும்
வாசத்தார்மாலைமார்பன்வாய்திறந்தரற்றலுற்றன். (உ0௮)

கொல்வித்தானுடனேநின்றனென்பரோகொண்டுபோனுன்
வெல்வித்தான்மகனையென்றுபகர்வரோவிளைவிற்கெல்லாம்
நல்வித்தாய்நடந்தாள்முன்னேயென்பரோநயந்தோர்தத்தம்
கல்வித்தாம்வார்த்தையென்றுகளைவித்தானுயிரைக்கண்போல். (உ0௯)

போரவன்புரிந்தபோதேபொருவருவயிரத்தண்டால்
தேரொடும்புரண்டுவீழச்சிந்தியென்சிந்தைசெப்பும்
வீரமுன்றெரித்தேனல்லேன்விளிந்திலேன்மெலிந்தேனிஞ்ஞான்
ஆருறவாகத்தக்கேனளியத்தேனழுந்துகின்றேன். (உசo)

ஒத்தலைத்தொக்கவீடியுய்வினுமுய்வித்துள்ளம்
கைத்தலைநெல்லிபோலக்காட்டிலேன்கழிந்துமில்லேன்
அத்தலைக்கல்லேன்யானீண்டவயமென்றடைந்துநின்ற
இத்தலைக்கல்லேனல்லேனிருதலைக்கொள்ளியொப்பேன். (உசக)

அனையனபலவும்பன்னியாகுலித்தரற்றுவானை
வினையுளபலவுஞ்செய்யத்தக்கனவீரநீயும்
நினைவிலார்போலநெஞ்சநெகிழ்தியோநீத்தியென்று
இனையனசொல்லித்தேற்றியனலன்மற்றிதுவுஞ்சொன்னான். (உசஉ)

நீயிவணிருத்தியான்போய்நெடியவற்குரைப்பெனென்னுப்
போயினனனலன்போயப்புண்ணியன்பொலன்கொள்பாதம்
மேயினன்வணங்கியுற்றவினையெலாமியம்பினின்றான்
ஆயிரம்பெயரினானுமருந்துயர்க்கடலுளாழ்ந்தான். (உசங)

உரைத்திலனென்றுந்தன்னையுணர்ந்திலனுயிருமோடக்
கரைத்திலன்கண்ணினீராக்கண்டிலன்யாதுங்கண்ணால்
அரைத்திலனுலகமெல்லாமங்கையாற்பொங்கிப்பொங்கி
இரைத்திலனுளனென்றெண்ணியிருந்தனன்விம்மியேங்கி. (உசச)

விம்மினன்வெதும்பிவெய்துற்றேங்கினனிருந்தவீரன்
இம்முறைதாழ்ந்துசெய்வதியாவதுமில்லென்றெண்ணிப்
பொம்மெனவெழுந்துநொய்திற்பொருக்கெனவிசையிற்போனான்
தெம்முறைதுரந்துவென்றசெங்களமருங்கிற்சேர்ந்தான். (உசரு)

இழிந்தெழுகாளமேகமெறிகடலனையமற்றும்
ஒழிந்தனநீலவண்ணமுள்ளனவெல்லாமொக்கப்
பிழிந்ததுகாலமாகக்காளிமைப்பிழம்புபோதப்
பொழிந்ததுபோன்றதன்றேபொங்கிருட்கங்குற்போர்வை. (உசசு)

ஆரிருளன்னதாசவாயிரநாமத்தண்ணல்
சீரியவனலித்தெய்வப்படைக்கலந்தெரிந்துவாங்கிப்
பாரியல்விடுத்தலோடும்பகையிருளிரிந்துபாறச்
சூரியனுச்சியுற்றாலொத்ததவ்வுலகின்சூழல். (உசஎ)

படையுறுபிணத்தின்பம்மற்பருப்பதந்துவன்றிப்பல்வே
றிடையுறுகுருதிவெள்ளத்தெறிகடலெழுநீர்பொங்கி
உடையுறுதலைக்கையண்ணலுயிரொலாமொருங்கியுண்ணும்
கடையுறுகாலத்தாழியுலகன்னகளத்தைக்கண்டான். (உசஅ)

பிணப்பெருங்குன்றினூடுங்குருதிநீர்பெயரப்பேரும்
நிணப்பெருஞ்சேற்றினூடும்படைக்கலநெருக்கினூடும்
மணப்பெருங்களத்தின்மோடிமங்கலவாழ்க்கைவைப்பில்
கணத்தினும்பாதிப்போதிற்றம்பியைச்சென்றுகண்டான். (உகக)

ஐயவனுக்கைதன்மேல்விழுந்துமார்பழுந்தப்புல்லி
உய்யலனென்னவாவியுயிர்த்துயிர்த்துருகுகின்றான்
பெய்யிருதாரைக்கண்ணன்பெருந்துளிபிறங்கவானின்
வெய்யவன்றன்னைச்சேர்ந்தநீனிறமேகமொத்தான். (உஉ0)

உழைக்கும்வெய்துயிர்க்குமாவியுருகும்போயுணர்வுசோரும்
இழைக்குவதறிதறேற்றானிலக்குவாவிலக்குவாவென்
றழைக்குந்தன்கையைவாயின்மூக்கின்வைத்தயர்க்குமைய
பிழைத்தியோவென்னுமெய்யேபிறந்தேயும்பிறந்திலாதான். (உஉக)

தாமரைக்கையாற்றாளத்தைவருங்குறங்கைத்தட்டும்
ஆமலர்க்கண்ணைநோக்குமார்பிடைத்துடிப்புண்டென்று
ஏமுறும்விசும்பைநோக்குமெடுக்குந்தன்மார்பினேற்றும்
பூமியின்வளர்த்துங்கள்வன்போயகன்றானோவென்னும். (உஉஉ)

வில்லினைநோக்கும்பாசவிசிப்பினைநோக்கும்வீயா
அல்லினைநோக்கும்வானத்தமரரைநோக்கும்பாரைக்
கல்லுவென்வேரோடென்னும்பவளவாய்கறிக்குங்கற்றோர்
சொல்லினைநோக்குந்தன்போற்புகழினைநோக்குந்தோளான். (உஉங)

வீரரையெல்லாம்பார்க்கும்விதியினைப்பார்க்கும்வீரப்
பாரவெஞ்சிலையைப்பார்க்கும்பகழியைப்பார்க்கும்பாரின்
யாரிதுபட்டாரென்போலெளிவந்தவண்ணமென்னும்
நேரிதுபெரிதென்றேதுமளவையினிமிர்கின்றான். (உஉச)

எடுத்தபோரிலங்கைவேந்தன்மைந்தனேடிளையகோவுக்
கடுத்ததென்றென்னைவல்லையழைத்திலையமரர்பாசம்
தொடுத்தகைதலையினோடுந்துணித்துயிர்துடைப்பலென்னைக்
கெடுத்தனைவீடணாநீயென்றனன்கேடிலாதான். (உஉரு)

அவ்வுரையருளக்கேட்டானழிகின்றவரக்கன்றம்பி
இவ்வழியவன்வந்தேற்பதறிந்திலமெதிர்ந்தபோது
வெவ்வழியவனேதோற்குமென்பதுவிரும்பிநின்றேன்
தெய்வவெம்பரஞ்செய்தசெயலிந்தமாயச்செய்கை. (உஉசு)

அற்றதிகாயனுக்கைதலையிலதாக்கியாண்ட
வெற்றியனுயவீரன்மீண்டிலனிலங்கைமேனாள்
பெற்றவனெய்துமென்னும்பெற்றிமையுன்னிப்பிற்போ
ஆற்றனன்மைந்தன்றானைநாற்பதுவெள்ளத்தோடும். (உஉஎ)

ஈண்டுநஞ்சேனைவெள்ளமிருபதிற்றிரட்டிமாளத்
தீண்டினன்பகழிமாரிதலைவர்கடோலைந்துசோர
மூண்டெழுபோரிற்யாரின்முறைமுறைமுடித்தான்பின்னர்
ஆண்டகையோடுமேற்றானாயிரமடங்கற்றேரான். (உஉஅ)

அருமேனின்றவையனாயிரந்தேருமாயத்
தருவலங்காட்டிப்பின்னைநாற்பதுவெள்ளத்தானை
பனியெனப்படுவித்தன்றன்பலத்தையுந்தொலைத்துப்பட்டான்
இனியெனவயிரவாளியெண்ணிலதிறத்தினெய்தான். (உஉகூ)

எவுண்டபகுவாயோடுகுருதிநீரொழுகாநின்றான்
ஆவுண்டதானைமுற்றும்படவொருதமியன்சோர்வான்
போவுண்டதென்னினையபுணர்க்குமாமாயமென்று
பாவுண்டகீர்த்தியானுக்குணர்த்தினென்பரிதிபட்டான். (உ௩0)

மாயத்தாலிருண்டதாழியுலசெலாம்வஞ்சன்வானில்
போயத்தானுடையவஞ்சவரத்தினாலொளித்துப்போயிவ்
வாயத்தாற்பாசமேவியயர்வித்தானம்பின்வெம்பும்
காயத்தானென்னச்சொல்லிவணங்கினான்கலுழிக்கண்ணான். (உ௩க)

பின்னையுமெழுந்துபோர்த்தும்வணங்கியெம்பெருமயாரும்
இன்னுயிர்துறந்தாரல்லரிருக்கியபாசமீதால்
புன்னனைப்பகழிக்கோயுந்தரத்தரோபுலம்பியென்னை
இன்னலுற்றயரல்வெல்லாதருமத்தைப்பாவமென்றான். (உ௩உ)

யாரிதுகொடுத்ததேவனென்னையிதனைத்தீரும்
காரணம்யாதுநின்றானுணர்ந்ததுகழறிக்காணென்
றூரியன்வினவவண்ணல்வீடணனமலசாலச்
சீரிதென்றதனையுள்ளபரிசெலாந்தெரியச்சொன்னான். (உ௩௩)

ஆழியஞ்செல்வபண்டிங்ககலிடமளித்தவண்ணல்
வேள்வியிற்படைத்ததிசன்வேண்டினன்பெற்றுவெற்றித்
தாழ்வுறுசிந்தையோற்குத்தவத்தினாலளித்ததானை
ஊழியினிமிர்ந்தகாலத்துருமினதாற்றமீதால். (உ௩௪)

அன்னதனாற்றலன்றேயாயிரங்கண்ணினானைப்
பின்னுறவயிரத்திண்டோள்பிணித்ததுபெயர்த்தொன்றெண்ணி
என்னினியநுமன்றோளையிறுக்கியதிதனாலாண்டும்
பொன்னுலகாளுஞ்செல்வந்துறந்ததுபுலவோரெல்லாம். (உ௩ரு)

தான்விடின்விடுமிதன்றேற்சதுமுகன்முதலவாய
வான்விடின்விடாதுமற்றிம்மண்ணினையெண்ணியென்னே
ஊன்விடவுயிர்போய்நீங்கநீங்கும்வேறுய்தியில்லைத்
தேன்விடுதுளபத்தாராயிதுவிதன்செய்கையென்றான். (உ௩சு)

ஈந்துளதேவன்மேலேயெழுசென்னுவுலகம்யாவும்
தீந்துகநூறியானுந்தீர்கென்னுவிலங்கைசிந்தப்
பாய்ந்தவர்சுற்றமுற்றும்படுப்பெனுவியன்றபண்போ
டேய்ந்ததுபகர்தியென்ருனிமையவரிடுக்கண்டீர்ப்பான் (உருஎ)

வரங்கொடுத்தினையபாசம்வழங்கினுன்ருனேநேர்வந்
திரங்கிடத்தக்கதுண்டேலிகழ்கிலெனில்லையென்னின்
உரங்கெழுத்துலகமூன்றுமொருவனேரம்பிற்சுட்ட
புரங்களிற்றீத்துக்காண்பேன்பொடியொருகடிகைப்போழ்தின். (உருஅ)

எம்பியேயிறக்குமென்னினெனக்கினியிலங்கைவேந்தன்
தம்பியேபுகழ்தானென்னைபழியென்னையறந்தானென்னை
நம்பியேயென்னைச்சேர்ந்தநண்பரினல்லவாமே
உம்பருமுலகத்துள்ளவுயிர்களுமுதவிபார்த்தால். (உருகூ)

என்றுகொண்டியம்பியீண்டிங்கொருவனிவ்விடுக்கண்செய்ய
வென்றறவுலகைமாய்த்தல்விதியன்ருலென்றுவிம்மி
நின்றுநின்றுன்னியுன்னிநெடிதுயிர்த்தலக்கணுற்ருன்
தன்றுணைத்தம்பிமேலுந்துணைவர்பாற்ருழ்ந்தவன்பான். (உச0)

மீட்டும்வந்திளையவீரன்வெற்பன்னவிசயத்தோளைப்
பூட்டுறுபாசந்தன்னைப்பன்முறைபுரிந்துநோக்கி
வீட்டியதென்னிற்பின்னைவீவெனென்றெண்ணும்வேதத்
தோட்டியின்ருடக்கினிற்குந்தொளைக்கைமால்யானையன்னுன். (உசக)

வேறு.

இத்தன்மையெய்துமளவின்கண்வந்தவிமையோர்களஞ்சியிதுபோய்
எத்தன்மையெய்திமுடியுங்கொலென்றுகுலைகின்றவெல்லையதன்வாய்
அத்தன்மைகண்டுபுடைநின்றவண்ணல்கலுழன்றன்னன்பின்மிசையால்
சித்தந்நடுங்கியிதுதீர்வெனென்றவ்விருளூடுவந்துதெரிவான். (உசஉ)

அசையாதசிந்தையயர்வானனுங்கவழியாதவுள்ளமழிவான்
பிசகாவிலங்கையரசோடுமண்ணலருடன்மைகண்டுபெயர்வான்
விசையாலனுங்கவடமேருவையமொளியால்விளங்கவிமையாத்
திசையானைகண்கண்முகிழாவொடுங்கநிறைகால்வழங்குசிறையான். (உசங)

காதங்கள்கோடிகடைசென்றுகாணுநயனங்கள்வாரிகலுழக்
கேதங்கள்கூரவயர்கின்றவள்ளறிருமேனிகண்டுகிளர்வான்
சீதங்கொள்வேலையலைசிந்தஞாலமிருள்சிந்தவந்துசிறைதாழ்
வேதங்கள்பாடவுலகங்கள்யாவும்வினைசிந்தநாகமெலிய. (உசச)

அல்லைச்சுருட்டிவெயிலைப்பரப்பியகலாசையெங்குமழியா
வில்லைச்செலுத்திநிலவைத்தெருட்டிவிரிகின்றசோதிமிளிர
எல்லைக்குயிற்றியிடைநின்றமவுலியிடைநின்றமேருவெனுமத்
தொல்லைப்பொருப்பின்மிமிசையேவிளங்குசுடரோனின்மும்மைசுடர். (உசரு)

னன்பால்விளங்குமணிதொண்டினோடுநளிர்போதுசெம்பொன்முதலாத்
தன்பாலியைந்தநிழல்கொண்டமைந்ததழுவாதவந்துதழுவ
மின்பாலியன்றதொருகுன்றம்வானின்விழுகின்றதென்னவெயிலோன்
தென்பாலெழுந்துவடபானிமிர்ந்துவருகின்றசெய்கைதெரிய. (உசசு)

பன்னாகர்சென்னிமணிகோடிகோடிபலகொண்டுசெய்தவகையால்
மின்னாலியன்றவெனலாய்விளங்குமிளிர்பூண்வயங்குவெயில்கால்
பொன்னால்வகைந்தவகையோடைபொங்கவனமாலைமார்புபுரளத்
தொன்னாள்பிரிந்ததுயர்தீரவண்ணதிருமேனிகண்டுதொழுவான். (உசஎ)

முடிமேனிமிர்ந்தமுகிழேறுகையன்முகின்மேனிமிர்ந்தவொளியான்
அடிமேல்விழுந்துபணியாமனின்றநிலையுள்ளியுள்ளியழிவான்
தொடிமேலிருந்திவ்வுலகேழொடேழுதொழநின்றகோனுமிலனாய்ப்
படிமேல்விழுந்துவருவான்விரைந்துபலகானினைந்துபணிவான். (உசஅ)

வந்தான்மறந்துபிரிவால்வருந்துதுயர்தீரவானமுதலோர்
தந்தாதைதந்தைபிறவாபிறந்துவிளையாடுகின்றதமியாய்
சிந்தாகுலங்கடவிர்வாய்தளர்ந்துதுயர்கூரலென்னசெயலோ
எந்தாய்வருந்தலிறைவாவருந்தலெனவின்னபன்னியழுதான். (உசகூ)

தேவாதிதேவர்பலராலுநாதிதிருநாமமோதுசெயலால்
மூவாதுநாளுமுலகேழொடேழுமரசாளுமேன்மைமுதலா
மேவாதவின்பமவைமேவிமேவிநெடுவீடுகண்டுமுடிவார்
ஆவாவருந்தியழிவாய்கொலாரிவ்வதிரோகமாயையறிவார். (உருo)

எழுவாயெவர்க்குமுதலாகியீறுமிடையாகியெங்குமுளையாய்
வழுவாதவர்க்குவரமீயவல்லையவரால்வரங்கள்பெறுவாய்
தொழுவாயுணர்ச்சிதொடராததன்மையுருவாய்மறந்துதுயரால்
அழுவாயொருத்தருளைபோலுமாரிவ்வதிரோகமாயையறிவார். (உருக)

உன்னைக்கவைத்தவிருவர்க்குமொத்தியொருவற்குமுண்மையுளையாய்
முன்னைக்கிற்றிவுலகொக்கவொத்திமுடிவொக்கவென்றுமுடியாய்
என்னைக்குமின்னசெயநேரவெண்ணிநிருளொக்குமென்றும்விடியா
தன்னைப்பதேகொல்பிறிதேகொலாரிவ்வதிரோகமாயையறிவார். (உருஉ)

வானுளளித்திமுடியாமனீபின்வருநாளிறத்திமறையாய்
பேணுயுனக்கொர்பொருள்வேண்டுமென்றுபெறுவானருத்திபிடியாய்
ஊனுயிர்க்குமுயிராகிநிற்குமுணர்வாதிபெண்ணினுருவாய்
ஆணுதிமற்றையலியாதியாரிவ்வதிரோகமாயையறிவார். (உருங)

தானந்தமில்லைபலவென்னுமொன்றுதனியென்னுமொன்றுதவிரா
ஞானந்தொடர்ந்தசுடரென்னுமொன்றுநயனந்தொடர்ந்தவொளியால்
மானந்துறந்தபதமென்னுமுன்னைமறைநாலுமந்தமறியா
ஆனந்தமென்னுமயலென்னுமாரிவ்வதிரோகமாயையறிவார். (உருச)

மீளாதவேதமுடிவின் கணுன்னேவினேமேயமெய்யின் விளையும்
கேளார்கணின்றுபிறவேறுபேசுகெடுவார்கள்சொன்னதொடர்பாய்
மாளாதநீயதிகழாமைமின்கணபிமானமில்லைவறியோர்
ஆளாயும்வாழ்தியரசாதியாரிவ்வதிரோகமாயையறிவார். (உருரு)

வினைவர்க்கமுற்றுமுடனேபடைத்தியவைசெய்தியொன்றும்விழையாய்
நினைவர்க்குநெஞ்சினுறுகாமமுற்றியறியாமைநிற்றிநிகராய்
முனைவர்க்குமொத்தியமரர்க்குமொத்திமுழுமூடரொன்றிம்முதலோர்
அனைவர்க்குமொத்திதெரியாமைபாரிவ்வதிரோகமாயையறிவார். (உருசு)

எறிந்தாருமேறுபடுவாருமின்னபொருள்கண்டிரங்குபவரும்
செறிந்தாயநுண்மையென்லாயதன்மைதெரிகின்றதுன்றனிடையே
பிறிந்தார்பிறிந்தபொருளோடுபோதிபிறியாதுநிற்றிபிறியா
தறிந்தாரறிந்தநெறியாதியாரிவ்வதிரோகமாயையறிவார். (உருஎ)

சொல்லென்றுநிற்றிபொருளாதிதூயமறையும்பறைந்துதிரிவாய்
வில்லொன்றெடுத்துமிகையொன்றிநிற்றிவிள்சங்கையங்கையுடையாய்
கொல்லென்றுரைத்திகொலையுண்டுநிற்றிகொடியாயுன்மாயையறியேம்
அல்லென்றுநிற்றிபகலாதியாரிவ்வதிரோகமாயையறிவார். (உருஅ)

பேராயிரங்களுடையாய்தொடர்ந்தபொருடோறுநின்றுபிரியாய்
நீராய்பிறந்துதிரிவாய்திறந்தொறவைதேயுமென்றுசிதையாய்
கூராழியங்கையுடையாய்திரண்டொருருவாயகோடலுரிபோல்
ஆராயினேதுமிலையாதியாரிவ்வதிரோகமாயையறிவார். (உருகு)

மறந்தாயுமொத்திமறவாயுமொத்திமயராகிமற்றெவ்வினையும்
துறந்தாயுமொத்திதுறவாயுமொத்தியொருதன்மைசொல்லவுலவாய்
பிறந்தாய்நினைத்தல்பிறழாதவன்பர்பிறவாமைநல்குபெரியோய்
அறந்தானிறுத்தலரிதாகவாரிவ்வதிரோகமாயையறிவார். (உசுo)

எனறின்னபன்னியழியாமுனிற்கவெறிசோதிநீறவிருளைப்
பொன்றுன்னியன்னவெயில்வீசுகின்றபொருள்சண்டுநின்றபுகழோன்
நின்றுன்னியுன்னியிவன்யாவனென்றுநினைகின்றவெல்லைநிமிரச்
சென்றுன்னுமுன்னமுடனுயிஞனிவ்வுலகேழுமூடுசிறையான். (உசுக)

பல்லாயிரத்தின்முடியாதபக்கமலைவீசவந்தபடர்கால்
செல்லாநிலத்தினிருளூடுசெல்லவுடனின்றவாளிசிதறுற்
றெல்லாமவித்துமுணர்வோடுமெண்ணியறனேயிழைக்குமுரவோன்
வல்லானொருத்தனிடையேபடைத்தவடுவானமேனிவடிவும். (உசுஉ)

வாசங்கலந்தமறைநாளநூலின்வகையென்பதென்னேமழையென்
றூசங்கைகொண்டகொடைமீளியண்ணல்சராமன்வெண்ணெயணுகும்
தேசங்கலந்தமறைவாணர்செஞ்சொலறிவாளரொன்றிம்முதலோர்
பாசங்கலந்தபசிபோலகன்றபதகன்றுரந்தவுரகம். (உசுரு)

தருமத்தினின்றுமொழுகாதசெய்கைதழுவப்புணர்ந்ததகைசால்
உருமொத்தவெங்கண்வினைதீயவஞ்சருடலுய்ந்ததில்லையுலகின்
கருமத்தினின்றகவிசேனைவெள்ளமலர்மேலைவள்ளல்கடைநாள்
நிருமித்தவென்னவுயிரோடெழுந்துநிலைநின்றதெய்வநெறியால். (௨௬௪)

இளையானெழுந்துதொழுதானையண்ணலிணையாரமார்பினணையா
விளையாததுன்பம்விளைவித்ததெய்வம்வெளிவந்ததென்னவியவாக்
கிளையோர்களன்னதுணையோரையாவிகெழுமத்தொடர்ந்துதழுவா
முளையானதிங்களெயிறான்முன்வந்துமுறைநின்றவீரன்மொழிவான். (௨௬௫)

வேறு.

ஐயநீயானையெங்களருந்தவப்பயத்தினால்வந்
தெய்தினையுயிரும்வாழ்வுமீந்தனையெம்மனோரால்
கைம்முறைகோடற்கொத்தகாட்சியையல்லைமீட்சிச்
செய்திறமில்லையாலென்றான்றேவர்க்குந்தெரிக்கலாதன். (௨௬௬)

பொருளினியுணரவேறுபுறத்துமொன்றுண்டோபுந்தித்
தெருளினையுடையராகிச்செயலருங்கருணைச்செல்வம்
மருளினையிரவின்வந்தவாழ்க்கையீதாகின்வாயால்
அருளினையென்னினெய்தவரியனவுளவோவைய. (௨௬௭)

கண்டிலைமுன்புசொல்லக்கேட்டிலைகடனென்றெம்பால்
கொண்டிலைகொடுப்பதல்லாற்குறையிலையிதுநின்கொள்கை
உண்டிலையென்னநின்றவுயிர்தந்தவுதவியோனே
பண்டிலைநண்புநாங்கள்செய்வதென்பகர்தியென்றான். (௨௬௮)

பறவையின்குலங்கள்காக்கும்பாரகன்பழையநின்னோ
டுறவுளதன்மையெல்லாமுணர்த்துவனரக்கனோடம்
மறவினைமுடித்தபின்னர்வருவெனின்னுழையின்மாயப்
பிறவியின்பகைஞநல்குவிடையெனப்பெயர்ந்துபோனான். (௨௬௯)

ஆரியனவனைநோக்கியாருயிருதவியாதும்
காரியமில்லான்போனான்கருணையோர்கடன்மையீதால்
பேரியலாளர்செய்கையூதியம்பிடித்துமென்றால்
மாரியைநோக்கிக்கைம்மாறியற்றுமோவையமென்றான். (௨௭௦)

இறந்தனனிளவலென்றாலிறைவியுமிடுக்கணெய்தும்
மறந்தனருறங்குகின்றவஞ்சருமறுகிமீளப்
பிறந்தனரொன்றுகொண்டோர்பெரும்பயம்பிடிப்பரன்றே
அறந்தருசிந்தையெந்தையார்த்துமென்றனுமன்சொன்னான். (௨௭௧)

அழகிதென்றண்ணல்கூறவார்த்தனர்கடல்களஞ்சிக்
குழைவுறவநந்தனுச்சிகுன்றநின்றண்டகோளம்
எழுமிசையுலகமேண்மேலெங்கிடவிரிந்துசிந்தி
மழைவிழமலைகள்கீறமாதிரம்பிளந்தமாதோ. (௨௭௨)

பழிப்பருஞ்சிந்தையாள்பாற்சிந்தனைபடரக்கண்கள்
விழிப்பிலன்மேனிசாலவெதும்பினனீசன்வேலும்
குழிப்பரிதாயமார்பைமன்மதன்கொற்றவாளி
கிழிப்புறவுயிர்ப்புவீங்கிக்கிடந்தவாளரக்கன்கேட்டான். (உஎங)

தாதைசொற்றலைமேற்கொண்டதாபதன்றருமமூர்த்தி
தீதவைதீர்க்குநாமத்திராமனையெண்ணியெங்கும்
சீதையுமவளையுன்னிச்சிந்தனைதீர்ந்திராப்
பேதையுமன்றியவ்வூர்யாருளர்துயில்பெறுதார். (உஎச)

சிங்கவேறசனியேறுகேட்டலுந்திருகிச்சீற்றம்
பொங்கியதென்னமன்னன்பொருக்கெனவெழுந்துபோரில்
மங்கினர்பகைஞரொன்றவார்த்தையேவலியதென்று
அங்கையோடங்கைகொட்டியலங்கற்றோள்குலுங்கநக்கான். (உஎரு)

இடிக்கின்றதசனியென்னவிளைக்கின்றதிராமன்போர்வில்
வெடிக்கின்றதண்டமென்னப்படுவதுதம்பிவின்னாண்
அடிக்கின்றதென்னவந்துசெவிதொறுமறுமனார்ப்புப்
பிடிக்கின்றதுலகையெங்கும்பரிதிசேயார்ப்பின்பெற்றி. (உஎசு)

அங்கதனவனைவார்த்தானந்தரத்தமரரார்த்தார்
வெங்கதநீலன்மற்றைவீரரும்வேறுவேறு
பொங்கினரார்த்தவோசையண்டத்துப்புறத்தும்போன
சங்கையொன்றின்றுதீர்ந்தார்பாசத்தைத்தருமநல்க. (உஎஎ)

என்பதுசொல்லிப்பன்னிச்சேக்கைநின்றிழிந்துவேந்தன்
ஒன்பதுகோடிவாட்கையரக்கர்வந்துழையர்சுற்றப்
பொன்பொதிவிளக்கங்கோடிபூங்குழைமகளிரேந்தத்
தன்பெருங்கோயினின்றுமகன்றனிக்கோயில்சார்ந்தான். (உஎஅ)

தாங்கியதுகிலர்மெள்ளச்சரிந்துவீழ்குழலர்தாங்கி
வீங்கியவுயிர்ப்பர்விண்ணைவிழுங்கியமுலையர்மெல்லத்
தூங்கியவிழியர்தள்ளித்துளங்கியநடையர்வல்லி
வாங்கியமருங்குன்மாதரனந்தரான்மயங்கிவந்தார். (உஎக)

பானமுந்துயிலுங்கண்டகனவும்பண்கனிந்தபண்ணைக்
கானமுந்தள்ளத்தள்ளிக்களியொடுங்கள்ளங்கற்ற
மீனினும்பெரியவாட்கண்விழிப்பதுமுகிழ்ப்பதாகி
வானவர்மகளிர்போனார்மழலையஞ்சதங்கைமாழ்க. (உஅ0)

மழையினைநீலமூட்டிவாசமும்புகையுமாட்டி
உழையுழைசுருட்டிமென்பூக்குவித்திடைக்கிடையூறென்றுப்
பிழையுடைவிதியார்செய்தபெருங்குழற்கருங்கட்செவ்வாய்
இழையணிமகளிர்தாழ்ந்தாரனந்தராலிடங்கடோறும். (உஅக)

தேனிடைக்கரும்பிற்பாலிலமுதினிற்கிளவிதேடி
மானிடைக்கயலில்வாளின்மலரிடைநயனம்வாங்கி
மேனடையனையமற்றுநல்வழிநல்கவேண்டி
வானுடையண்ணல்செய்தமங்கையர்மருங்குசென்றார். (உஅஉ)

தொடங்கியவார்ப்பினோசைசெவிப்புலந்தொடர்தலோடும்
இடங்கரின்வய்ப்போத்தன்னவெறுழ்வலியரக்கர்யாரும்
மடங்கலின்முழக்கங்கேட்டவான்கரியொத்தார்மாதர்
அடங்கலுமசனிகேட்டவளையுறையரவமொத்தார். (உஅங)

அரக்கனுமைந்தன்வைகுமாடகத்தமைந்தமாடம்
பொருக்கெனச்சென்றுபுக்கான்புண்ணினீர்க்குமிழிபொங்கத்
தரிக்கிலன்மடங்கலேற்றாற்றொலைப்புண்டுசாய்ந்துபோன
கருக்கிளர்மேகமன்ன களிறனையானைக்கண்டான். (உஅச)

எழுந்தடிவணங்கலாற்றானிருகையுமரிதினெற்றித்
தொழுந்தொழிலானைநோக்கித்துணுக்குற்றமனத்தன்றோன்றால்
அழுங்கினைவந்ததென்னையடுத்ததென்னறைதியென்றான்
புழுங்கியபுண்ணினானுமினையனபுகறலுற்றான். (உஅரு)

உருவினவுரத்தைமுற்றுமுலப்பிலவயிரம்வற்றப்
பருகினவளப்பிலாதபகழிகள்கவசம்பற்றற்
றருகினபின்னைச்சாலவலசினெனனையகண்கள்
செருகினவன்றேயானுமாயையிற்றீர்ந்திலேனேல். (உஅசு)

இந்திரன்விடையின்பாகனேறும்வலிக்கலுழனேறும்
சுந்தரனருக்கனென்றித்தொடக்கத்தார்தொடர்ந்தபோரில்
நொந்திலெனினையதொன்றுநுவன்றிலென்மனிசனென்மை
மந்தரமனையதோளாய்வரம்புடைத்தன்றுமன்றோ. (உஅஎ)

இளையவன்றன்மையீதாலிராமனதாற்றலெண்ணின்
தலையவிழலங்கன்மார்பநம்வயிற்றங்கிற்றன்றால்
விளைவுகண்டுணர்தலல்லால்வென்றிமேல்விளையுமென்ன
உளையதன்றென்னச்சொன்னானுற்றுளதுணர்ந்திலாதான். (உஅஅ)

வென்றதுபாசத்தாலுமாயையின்விளைவினாலும்
கொன்றதுகுரக்குவீரர்தம்மொடக்கொற்றத்தோளை
நின்றனனிராமனின்னுநிகழ்ந்தவாநிகழ்கமேன்மேல்
என்றனனென்னக்கேட்டவிராவணனிதனைச்சொன்னான். (உஅகூ)

வார்கழற்காலமற்றவ்விலக்குவன்வயிரவில்லின்
பேரொலியரவம்விண்ணைப்பிளந்திடக்குரங்குபோர்ந்த
காரொலிமடங்கவல்லைக்கம்பிக்கக்களத்தினார்த்த
போரொலியொன்றுமையவறிந்திலைபோலுமென்றான். (உகூ0)

ஐயவெம்பாசந்தன்னாலார்ப்புண்டாரசனியென்னப்
பெய்யும்வெஞ்சரத்தான்மேனிபிளப்புண்டாருணர்வுபோந்தார்
உய்யுநவொன்றுணாத்ததுண்மையேவொழிக்கவொன்றே
செய்யுமென்றெண்ணத்தெய்வஞ்சிறிதன்றேதெரியினம்மா. (உகக)

ஈதுணாநிகழும்வேலையெய்துவதறியப்போய
தூதுவர்விரைவின்வந்தார்புகுந்தடிதொழுதலோடும்
யாதவணிகழ்ந்ததென்னவிராவணனியம்பவீறின்
றோதியகல்வியாளர்புகுந்துளதுரைக்கலுற்றார். (உகஉ)

பாசத்தாற்பிணிப்புண்டாரைப்பகழியாற்களப்பட்டாரைத்
தேசத்தாரரசன்மைந்தனிடையிருள்சேர்ந்துநின்றே
ஏசத்தானிரங்கியேங்கியுலகெலாமெரிப்பெனென்றான்
வாசத்தார்மாலைமார்பவானுறைகலுழன்வந்தான். (உகங)

அன்னவன்வரவுகாணவயிலெயிற்றரவமெல்லாம்
சின்னபின்னங்களானபுண்ணொடுமயர்வுதீர்ந்தார்
முன்னையின்வலியராகிமொய்க்களநெருங்கிமொய்த்தார்
இன்னதுநிகழ்ந்ததென்றாரரக்கனீதெடுத்துச்சொன்னான். (உகச)

ஏற்றருந்தடந்தோளாற்றலென்மகனெய்தபாசம்
காற்றிடைக்கழித்துத்தீர்த்தான்கலுழனுங்காண்மின்காண்மின்
வார்த்தையீதாயினன்றாலிராவணன்வாழ்ந்தவாழ்க்கை
மூத்ததுகொள்கைபோலாமென்னுடைமுயற்சியெல்லாம். (உகரு)

உண்டுலகேழுமேழுமிழ்ந்தவனென்னுமூற்றம்
கொண்டவனென்னோடேற்றசெருவினின்மறுக்கங்கொண்டான்
மண்டிலந்திரிந்தபோதுமறிகடன்மறைந்தபோதும்
கண்டிலன்போலுஞ்சொற்றகலுழனன்றென்னைக்கண்ணால். (உகசு)

கரங்களினேமிசங்கந்தாங்கியகரியோன்காக்கும்
புரங்களுமழியப்போனபோழ்திலென்சிலையிற்பொங்கி
உரங்களின்முதுகிற்றோளினுறையுறுசிறையினூற்ற
சரங்களுநிற்கவேகொல்வந்ததவ்வருணன்றம்பி. (உகஎ)

ஈண்டதுகிடக்கமேன்மேலியைந்தவாறிசையவெஞ்சி
மீண்டவர்தம்மைக்கொல்லும்வேட்கையைவேட்குமன்றே
ஆண்டகைநீயேயின்னுமாற்றுதியரும்போரன்றேன்
காண்டலுநாணுமென்றான்மைந்தனுக்கருத்தைச்சொன்னான். (உகஅ)

இன்றொருபொழுதுதாழ்த்தென்னிகற்பெருஞ்சிரமநீங்கிச்
சென்றொருசணததினுள்ளேநான்முகன்படைத்ததெய்வ
வென்றிவெம்படையினலுன்மனத்துயர்மீட்பெனென்றான்
நன்றெனவரக்கன்போய்த்தனவிமலர்க்கோயில்புக்கான். (உகக)

நாகபாசப்படலம்-முற்றிற்று. ஆ திருவிருத்தம்-உஉசுஎ.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

ஆர்த்தெழுமோசைகேட்டவரக்கருமுரசமார்ப்பப்
போர்த்தொழில்வேட்கைபூண்டுபொங்கினர்புகுந்துமொய்த்தார்
தார்த்தடமார்பன்றன்னைத்தாவிடையென்னச்சார்ந்தார்
பார்த்தனன்முனிந்துமன்னனினையனபகர்வதானான். (க)

மாபெருமக்கனோடுவான்புகைக்கண்ணன்வந்தான்
ஏவுதியெம்மையென்பார்தம்முகமினிதுநோக்கிப்
போவதுபுரிதிரென்னப்புகறலும்பொருசதூதர்
தேவமற்றிவர்கள்செய்கைகேளெனத்தெரியச்சொன்னார். (உ)

ஆனையும்பரியுந்தேருமரக்கருமமைந்தவானித்
தானையும்வீயநின்றதலைமகன்றனிமையோரார்
மாணவன்வாளிவாளியென்கின்றமழலைவாயார்
போனவர்மீளவந்துபுகுந்தனர்போலுமென்றார். (௩)

வேறு.

அற்றவர்கூறலுமாரழலிற்றாய்
முற்றியகோபமுருங்கமுனிந்தான்
இற்றிதுவோவிவர்சேவகமென்னாப்
பற்றுமினென்றனன்வெம்மைபயின்றான். (௪)

என்றலுமெய்தினர்கிங்கரரென்பார்
பின்றலினோவலிந்துபிடித்தார்
அன்றனராயிடைநீலநிறத்தான்
கொன்றிடுவீரலிர்கொணருதிரென்றான். (௫)

ஏற்றமினிச்செயல்வேறிலையீர்விர்
நாற்றநுகர்ந்துயர்நாசியைநாமக்
கோற்றகுதிண்பணைகொட்டினிர்கொண்டே
சாற்றுமினஞ்சினரென்றுரைதந்தே. (௬)

அக்கணனேயயில்வாளினர்நேரா
மிக்குயர்நாசியையீரவிரைந்தார்
புக்கனரப்பொழுதிற்புகழ்தக்கோய்
தக்கிலதென்றனன்மாலிதடுத்தான். (௭)

அஞ்சமமஞ்சியழிந்துளரானார்
வெஞ்சமம்வேறலும்வென்றியதன்றாய்த்
துஞ்சலுமென்றிவைதொல்லையவன்றே
தஞ்செனவாருளராண்மைதகைந்தார். (அ)

அந்தரமொன்றுமறிந்திலையன்றே
வந்தனநம்வயினெத்துணைமன்னா
தந்திரம்வானவர்தானவரொன்னும்
இந்திரனஞ்சினனென்னுதியன்றே. (௯)

வருணனடுங்கினன்வந்துவணங்கிக்
கருணைபெறுந்துணையும்முழிர்கால்வான்
இருணிறவஞ்சகரொங்குளரொந்தாய்
பருணிதர்தண்டமிதென்றுபகர்ந்தால். (க0)

பத்தொருநான்குபகுத்தபரப்பின்
அத்தனைவெள்ளமரக்கரவிந்தார்
ஒத்தொருமூவர்பிழைத்தனருய்ந்தார்
வித்தகயாரினிவீரம்விளைப்பார். (கக)

பிரசமுமிற்றதுபாதியின்மேலும்
நாசமுமுற்றதுநம்பிநடந்தாய்
பூசன்முகத்தொருகான்மூளைபோதா
நீசரைவெட்டுதியோநெடுநாசி. (கஉ)

வாழியிலக்குவனென்னின்மறுக்குற்
றூழியரக்கர்தம்வாயிலடைப்பார்
ஏழுகடற்றுணையோயினிநாசி
ஊழியறுத்திடினும்முலவாதால். (கந)

ஆதுநடந்தவனைத்தொழுதந்நாள்
ஓதுநெடுஞ்செருவஞ்சியுடைந்தார்
தீதிலர்நின்றவர்சேனையினின்றார்
பாதியின்மேலுளர்நாசிபடைத்தார். (கச)

விட்டிலைசீதையையாமெனின்வீர
ஒட்டியபோருளதொவ்வொருநாளே
வெட்டுதிநாசியைவெந்தொழில்வல்லோர்
பட்டிலரொன்னலையென்றுபகர்ந்தான். (கரு)

ஆறினனென்னவறிந்தனரன்னோர்
தேறினரன்னதுசிந்தையுணர்ந்தார்
சீறினநெஞ்சினர்செங்கணரொன்றே
கூறினர்தந்நிலைசெய்கைகுறித்தார். (கசு)

உன்மகனெல்கியொதுங்கினனென்றே
மின்னகுவானிடையேகவிளைந்தான்
அன்னதின்மாயையியற்றியகன்றான்
இந்நகரொய்தினனுய்ந்தனனெந்தாய். (கஎ)

இப்பகலன்றெனினுளையினல்லால்
முப்பகதீர்கிலமாவிமுடிப்பேம்
வெப்பகலாவெரிவெந்தழல்வந்த
செப்பகல்வெண்ணெயினுன்மைதெரிந்தோய். (கஅ)

விட்டனையெம்மைவிடுத்தினிவெம்போர்
பட்டனவொன்றுபடுத்தனவொன்றோ
கெட்டனவொன்பதுகேளினியென்று
ஒட்டினராவிமுடிக்கவுணர்ந்தார். (கக)

அன்னவர்தம்மொடுமையிருவெள்ளம்
மின்னுபடைக்கையரக்கரைவிட்டான்
சொன்னதொகைக்கமையானைசுடர்த்தேர்
துன்னுவயப்பரியோடுதொகுத்தான். (உ0)

நெய்யமைவேள்விநெடும்பகைநேர்விண்
தைவருசூரியசத்துருவென்பான்
பெய்கழன்மாலிபிசாசனெனும்போர்
வெய்யவன்வச்சிரம்வென்றவெயிற்றுன். (உக)

என்றவரோடுமெழுந்துலகேழும்
வென்றவனேவலின்முன்னம்விரைந்தார்
சென்றனமால்கரிதேர்பரிசெல்லக்
குன்றினமாகநடந்தனர்கோட்பால். (உஉ)

விண்ணைவிழுங்கியதூளியவிண்ணோர்
கண்ணைவிழுங்குதலிற்கரைகாணூர்
எண்ணைவிழுங்கியசேனையர்யாரும்
பண்ணைவிழுங்கவுணர்ந்திலர்பண்பால். (உங)

கால்கிளர்தேரொடுகார்வரையோடு
மேல்கிளர்பல்கொடிவெண்டிரைவீச
மால்கடலாயதுமாமழைவானப்
பால்கிளர்மீனிடையாடியபண்பால். (உச)

பேரிகலித்தனபேருலகைச்சூழ்
வாரிகலித்தனவாமெனயானைக்
காரிகலிக்கடலோடுகலித்த
மாரிகலித்தெனவாசிகலித்த. (உரு)

சென்றனசென்றசுவட்டினசெல்லா
நின்றுபிணங்கியகலவியினில்லா
ஒன்றினையொன்றுதொடர்ந்தனவோடைக்
குன்றுதொடர்ந்தனபோற்கொலையானை. (உசா)

மாகநெடுங்கரம்வானின்வழங்கா
மேகநெடும்புனல்வாரினமேன்மேல்
போகவிலங்கினவுண்டனபோலாங்
காகநெடுங்களியானைகளிப்பால். (உஎ)

எரிர்தெழுபல்படையின்ஞெளியாணர்
அருங்கலனன்னிழறேர்பரியானை
பொருந்தியபண்ஞெளிதாரொளிபொங்க
இரிந்ததுபேரிருளெண்டிசைதோறும். (உஅ)

எய்தியசேனையையீசனெதிர்ந்தான்
வெய்திவண்வந்தவன்மாயையின்வெற்றி
செய்தவனேகொறெரித்தியிதென்றான்
ஐயமில்வீடணனன்னதுரைத்தான். (உகூ)

வேறு.

முழைக்குலச்சீயம்வெம்போர்வேட்டதுமுனிந்தசென்னப்
புழைப்பிறையெயிற்றுப்பேழ்வாயிடிக்குலம்பொடிப்பவார்த்துத்
தழற்பொறிவாளிப்புட்டில்கட்டிவிற்றாங்கிச்சார்வான்
மழைக்குரற்றேரின்மேலான்மாபெரும்பக்கன்மன்ன. (௩0)

வேறு.

சிகைசிறக்கனல்பொழிதெறுகட்செக்கரான்
பகைசிறத்தவருயிர்பருகும்பண்பினல்
நகைசிறப்பெருங்கடைவாயைநக்குவான்
புகைசிறக்கண்ணவன்பொலம்பொற்றேரினன். (௩க)

பிச்சரிற்றிகைத்தனன்பெற்றிபோரினன்
முச்சிரத்தயிலினன்மூரித்தேரினன்
இச்சிரமுன்னதேயெனவந்தெய்துவான்
வச்சிரத்தெயிற்றவன்மலையின்மேனியான். (௩உ)

காலையுமனத்தையும்பிறகுகாண்பதோர்
வாலுளைப்புரவியன்மடித்தவாயினன்
வேலையினார்ப்பினன்விண்ணைமீக்கொளும்
சூலமொன்றுடையவன்பிசாசன்றோன்றினன். (௩௩)

சூரியன்பகைஞனச்சுடர்பொற்றேரினன்
சோரியுங்கனலியுஞ்சொரியுங்கண்ணினன்
நீரினுமுழக்கினனெருப்பின்வெம்மையான்
ஆரியன்வேள்வியின்பகைஞனுமரோ. (௩௪)

சாலியன்கதிர்நிகர்புரவித்தானையான்
மூலிவெங்கொடுமையிற்றவத்தின்முற்றினன்
சூலியும்வெருக்கொளத்தேரிற்றோன்றுவான்
மாலியென்றடிமுறைவணங்கிக்கூறினன். (௩ரு)

ஆர்த்தெதிர்கடந்தவவ்வரியினார்கலி
தீர்த்தனைவாழ்த்தியுற்றிரண்டுசேனையும்
போர்த்தொழில்புரிந்தனபுலவர்போக்கிலார்
வேர்த்துயிர்பதைத்தனர்நடுங்கிவிம்மியே, (௩சு)

கல்லெறிந்தன கடையுருமிற்காரென
வில்லெறிந்தன கணைவிசும்பின்மேகத்தைச்
செல்லெறிந்தனவெனச்சிதறிவீழ்ந்தன
பல்லெறிந்தன தலைமலையின்பண்பெண. (ருஎ)

கடம்படுகரிபடக்கலினமாப்பட
இடம்படுசில்லியினெழிலித்தேர்பட
உடம்படுமரக்கரையநந்தனுச்சியில்
படம்படுமெனப்படுங்கவியின்கற்பல. (ருஅ)

கொலையொடுங்காநெடும்புயத்தின்குன்றொடும்
நிலைநெடுங்காலொடுநிமிர்ந்தவாலொடும்
மலையொடுமரத்தொடுங்கவியின்வன்னெடுந்
தலையொடும்போம்விசைத்தெறியுஞ்சக்கரம். (ருகூ)

ஆண்டகைக்கவிக்குலத்தலைவராக்கையைக்
கீண்டனபுவியினைக்கிழித்தமாதிரம்
தாண்டுவகுலப்பரிமனத்திற்றுவுவ
ஆண்டினர்கைவிசைத்தெறியுந்தோமரம். (சுo)

சில்லியந்தேரொடுசிதையச்சாரதி
பல்லுடைநெடுந்தலைமடியப்பாதகர்
வில்லொடுங்கழுத்தறப்பகட்டைவீழ்த்துமால்
கல்லெனக்கவிக்குலம்வீசுங்கல்லரோ. (சுக)

கரகமுந்தினமலைமுழையிற்கட்செவி
உரகமுந்தினவெனவொளிக்குமொள்ளிலை
அரகமுந்தினகவித்தலைவராக்கையில்
அரகமுந்தினரெடுத்தெறியுஞ்சூலமே. (சுஉ)

வால்பிடித்தடிக்கும்வானரத்தைமால்கரி
கால்பிடித்தடிக்குமக்கரிகளைக்கவி
தோல்பிடித்தரக்கரையெறியுஞ்சூர்முசு
வேல்பிடித்தெறிவரம்முசுவைவெங்கணர். (சுரு)

முற்படுகவிக்குலமுடுகிவீசிய
கற்படக்களம்படுமரக்கர்கார்க்கடல்
பிற்படுதலைபடப்படுவபாதகர்
விற்படுகணைபடக்குரங்கின்வேலையே. (சுச)

எயிற்றொடுநெடுந்தலையிட்டகல்லொடும்
வயிற்றிடைபுக்கபல்பகலும்வைகிய
பயிற்றியராயினுந்தெரிக்கும்பண்பிலார்
உயிர்ப்பர்தங்கணவலையுணுகியர்நலார். (சுரு)

இச்சுறுகிரிபடக்கிளர்பொற்றேர்நிறை
அச்சிறச்செல்கிலவாடன்மாப்பரி
எச்சுறுதுயரிடையெய்தவித்தனு
முச்சிறுவாழ்க்கையின்மூண்டுளோரென. (சசு)

மீயவர்யாவரும்வீயவெங்கரி
சேயிருங்குருதியிற்றிரிவசேர்கில
நாய்கன்மீகானொடும்வீயநவ்விதம்
பாயொடுவேலையிற்றிரியும்பண்பின. (சஎ)

படையொடுமேலவர்மடியப்பல்பரி
இடையிடைத்தாயெழுந்திழந்தபண்ணன
கடனெடுங்குருதியகனலிகாலுறு
வடவையையிகர்த்தனவுதிரவாயன. (சஅ)

வேறு.

அமக்கண்ணனுமநுமனுமெதிரெதிர்தொடர்ந்தார்
தாமத்தங்கதன்மாபெரும்பக்கனைத்தடுத்தான்
சேமத்திண்சிலைமாலியுநீலனுஞ்செறுத்தார்
வாமப்போர்வயப்பனசனும்பிசாசனுமலைந்தார். (சகூ)

சூரியன்பெரும்பகைஞனுஞ்சூரியன்மகனும்
நேரெதிர்ந்தனர்நெருப்புடைவேள்வியின்பகையும்
ஆரியன்றனித்தம்பியுமெதிரடர்ந்தார்த்தார்
வீரவச்சிரத்தெயிற்றனுமிடபனுமிடைந்தார். (ருO)

வெங்கண்வெள்ளெயிற்றரக்கரிற்கவிக்குலவீர
சிங்கமன்னபோர்த்தலைவரிற்றலைவராத்தெரிந்தார்
அங்கமர்க்களத்தொருவரோடொருவர்சென்றடர்ந்தார்
பொங்குவெஞ்செருத்தேவரும்வெருக்கொளப்பொருதார். (ருக)

இன்னகாலையிலீரைந்துவெள்ளம்வந்தேற்ற
மின்னும்வெள்ளெயிற்றரக்கர்தஞ்சேனையில்வீரன்
அன்னவெஞ்சமத்தாறுவெள்ளத்தையுமறுத்தான்
சொன்னநாலையுமிலக்குவன்பகழியாற்றொலைத்தான். (ருஉ)

உப்புடைக்கடன்மடுத்ததுகுருதியினோதம்
அப்பொடொத்தனகடுக்கிலவார்கலிமுழுதும்
செப்புருக்கெனத்தெரிந்தனமீன்குலஞ்செருக்கித்
துப்பொடொத்தனமுத்தினங்குன்றியிற்றோன்ற. (ருங)

தத்துநீர்க்கடன்முழுவதுங்குருதியாய்த்தயங்கச்
சித்திரக்குலப்பன்னிறமணிகளுஞ்சேந்த
ஒத்துவேறுருத்தெரியலவுயர்மதத்தோங்கல்
மத்தகத்துகுதரளமுமத்தகைமூற்றும். (ருச)

அதிரும்வெஞ்செருவன்னதொன்றமைகின்றவளவில்
கதிரவன்கொழுஞ்சேயொளிக்கற்றையங்கரத்தால்
எதிரும்வல்லிருட்கரியிறுத்தெழுமுறைமுழுகி
உதிரவெள்ளத்தினெழுந்தவனுமெனவுதித்தான். (௫௫)

அரக்கரொன்றபேரிருளினையிராமனுமிரவி
துரக்கச்செஞ்சுடர்க்கதிரவன்புறத்திருபிரக்கப்
புரக்கும்வெய்யவரிருவரையுடையவாபோல
நிரைக்குநல்லொளிபரந்தனவுலகெலாநிமிர. (௫௬)

நிலைகொள்பேரிருணீங்கலுநிலத்திடைநின்ற
மலையும்வேலையும்வரம்பிலவயின்றெறும்பரந்து
தொலைவிலாதவைதோன்றுவபோன்றனசோரி
அலைகொள்வேலையுமரும்பிணக்குன்றமுநிரம்ப. (௫௭)

நிலந்தவாதசெந்நீரிடைநிணக்கொழுஞ்சேற்றில்
புலர்ந்தகாலையிற்பொதிவரியம்பெனுந்தும்பி
கலந்ததாமரைப்பெருவனங்கதிரவன்கரத்தால்
மலர்ந்ததாமெனப்பொலிந்தனவுலந்தவர்வதனம். (௫௮)

தேரும்யானையும்புரவியும்விரவினதேவர்
ஊருமானமுமுடிக்களுமுலகமுமலையும்
பேருமன்னவெங்காலத்துக்கால்பொரப்பிணங்கிப்
பாரின்வீழ்ந்தனகிடந்தனபோன்றனபரந்த (௫௯)

எல்லிசுற்றியமதிநிகர்முகத்தியரொரிவீழ்
அல்லிசுற்றியகோதையிற்களம்புகுந்தடைந்தார்
புல்லிமுற்றியவுயிரினர்பொருந்திடக்கிடந்தார்
வல்லிசுற்றியமராமரநிகர்த்தனர்வயவர். (௬0)

வணங்குநுண்ணிடைமலைமுலைச்செக்கர்வார்கூந்தல்
அணங்குவெள்ளெயிற்றரக்கியர்களத்துவந்தடைந்தார்
குணங்கொடேதமகணவர்தம்பசுந்தலைகொடாது
பிணங்குபேய்களின்வாய்களைப்பிளந்தனர்பிடித்தார். (௬௧)

சுடரும்வெள்வளைத்தோளிதன்கொழுநனைத்தொடர்வாள்
உடருமங்கமுங்கண்டுகண்டொருவழியுய்ப்பாள்
குடருமீரலுங்கண்ணுமோர்குறுநரிகொள்ளத்
தொடரவாற்றலணெடிதுயிர்த்தாருயிர்துறந்தாள். (௬௨)

பெரியவாட்டடங்கண்ணியோர்கணவன்றன்பெருந்தோள்
நரிகளீர்த்தனவணங்கவுமிணங்கவுநல்கா
இரியல்போவனதொடர்ந்தயலினைப்படைகிடந்த
அரியநேர்ந்திலளாலத்தகச்சிறடியயர்ந்தாள். (௬௩)

நலங்கொணெஞ்சினுடன்றுணைக்கணவனைநாடி
விலங்கலன்னவான்பெரும்பிணக்குப்பையின்மேலாள்
அலங்கலோதியாளருந்துணைபிரிந்துநின்றயரும்
பொலங்கொண்மாமயில்வரையின்மேற்றிரிவதுபோன்றாள். (௬௪)

சிலவர்தம்பெருங்கணவர்தஞ்செருத்தொழிற்சினத்தால்
பருகும்வாய்மடித்துயிர்துறந்தவர்களைப்பார்த்தார்
அலகில்வெள்ளெயிற்றுலிதழ்மறைத்துளதயலாள்
கலவியின்குறிகாண்குநாமென்றெனக்கனன்றார். (௬௫)

மாரியாக்கியகண்ணியர்கணவர்தம்வயிரப்
போரியாக்கைகனுடியபொருகளம்புகுந்தார்
பேரியாக்கையின்பிணப்பெருங்குன்றிடைப்பிறந்த
சோரியாற்றிடையழுந்தினரின்னுயிர்துறந்தார். (௬௬)

நவைசெய்வன்றலையிழந்தநண்பரையெய்தி
அவசமெய்தியமங்கையருருத்தெரிந்தறியார்
துவசமன்னர்தங்கூருகிர்ப்பெருங்குறிதோண்மேல்
கவசநீக்கினர்கண்டுகொண்டாருயிர்கழித்தார். (௬௭)

வேறு.

வகைநின்றுயர்தோணெடுமாருதியும்
புகையும்பொருகண்ணவனும்பொருதார்
மிகைசென்றிலர்பின்றிலர்வென்றிலரால்
சிகைசென்றுநிரம்பியதீயுமிழ்வார். (௬௮)

ஐயஞ்சயில்வாளியழற்கொடியோன்
மெய்யஞ்சனைகான்முளைமேனியின்மேல்
வையஞ்சலிபாயவழங்கினனால்
மொய்யஞ்சனமேகமுனிந்தனையான். (௬௯)

பாழிப்புயமம்புபுகப்பட்டும்
வீழிக்கனிபோல்புனல்வீசவெகுண்
டாழிப்பொருதேரையழித்தனனால்
ஊழிப்பொருகாணிகரொண்டிறலோன். (௭௦)

சில்லிப்பொருதேர்சிதையச்சிலையோ
டெல்லிற்பொருவிண்ணில்விசைத்தெழுவான்
வில்லிற்றிலக்குவன்வெங்கணையால்
புல்லித்தரையிட்டனனேர்பொருவான். (௭௧)

மலையிற்பெரியானுடன்மண்ணிடையிட்
டுலையக்கடருவியகால்கொடுதைத்
தலையிற்றிருகிப்பருவாயனல்கால்
தலைகக்கொட்டிர்ந்துதணிந்தனனால். (௭௨)

மாபக்கனுமங்கதனும்மலைவார்
தீபத்தினெரிந்தெழுசெங்கணினர்
கோபத்தினர்கொல்லலினைந்தெழுவார்
தூபத்தினுயிர்ப்பர்தொடர்ந்தனரால். (எ௩)

ஐம்பத்தொருவெங்கணையங்கதன்மார்
மொய்ம்பிற்புகவுய்த்தனன்மொய்த்தொழிலோன்
வெம்பிக்களியோடுவிழித்தெழுதிண்
கம்பக்கரியுண்டைகடாயினவே. (எ௪)

ஊரோடுமெடுத்தொளியோனையுறும்
காரோடுநிறக்கதநாகமனன்
தேரோடுமெடுத்துயர்திண்கையினல்
பாரோடுமெடுத்தெறிபண்பிடையே. (எ௫)

வில்லைச்செலவீசிவிழுந்தழியும்
எல்லிற்பொலிதேரிடைநின்றிழியாச்
சொல்லிற்பிழையாததொர்சூலமவன்
மல்லிற்பொலிமார்பின்வழங்கினனல். (எ௬)

சூலம்மெனினன்றதுதொல்லைவரும்
காலம்மெனவுன்னுகருத்தினனாய்
ஞாலம்முடையானதுகாமறவோர்
ஆலம்முகவம்பினறுத்தனனல். (எஎ)

உளந்தானினையாதமுனுற்றுதவாக்
கிளர்ந்தானையிரண்டுகிழித்துணியாப்
பிளந்தானுலகேழினொடேழுபெயர்ந்
தளந்தான்வலிநன்றெனவங்கதனே. (எ௮)

மாமாலியுநீலனும்வானவர்தம்
கோமானொடுதானவர்கோனிகலே
ஆமாறுமலைந்தனவொன்றிமையோர்
பூமாரிபொழிந்துபுகழ்ந்தனரால். (எ௯)

அற்றத்தொழிலெய்தலுமக்கணனே
மற்றைப்புறநின்றவன்வந்தணுகா
கொற்றக்குமுதன்னொருகுன்றுகொளா
எற்றப்பொருதேர்பொடியெய்தியதால். (அ0)

கல்லொன்றுகடாவியகாலையவன்
வில்லொன்றிருகூறுவிளைத்திடலும்
மல்லொன்றியவாளொடுதேரினனாய்
நில்லென்றிடைசென்றுநெருக்கினனல். (அ௧)

தாளார்மரனீலனெறிந்ததுதன்
வாளான்மடிவித்துவலித்தடர்வான்
தோளாசறவாளிதுரந்தனனால்
மீளாவினைநூறும்விடைக்கிளையான். (அஉ)

மின்போனிமிர்வாளொடுதோள்விழவும்
தன்போர்தவிராதவனைச்சலியா
என்போலியர்போரொனினன்றிதுவோர்
புன்போரெனவின்றயல்போயினனால். (அங)

மல்லற்றடமார்பன்வடிக்கணையால்
எல்லுற்றுயர்வேள்வியிரும்பகைஞன்
வில்லிற்றதுதேரொடுமேனிமிரும்
கல்லற்றகரத்தொடுகால்களொடும். (அச)

நீர்வீரையனனெதிர்நேர்வரலும்
போர்வீரனைவாசிபிடித்தவனை
யார்வீரதையின்னசெய்தார்களெனப்
போர்வீரருவந்துபுகழ்ந்தனரால். (அரு)

வேள்விப்பகையோடுவெகுண்டடரும்
தோள்வித்தகனங்கொர்சுடர்க்கணையால்
வாழ்வித்தனையென்றவன்மார்பகலம்
போழ்வித்திடவாருயிர்போயினனால். (அசு)

தன்றாதையைமுன்புதடுத்தொருநாள்
வென்றானைவிலங்கலின்மேனியனைப்
பின்றாதவலத்துயர்பெற்றியனைக்
கொன்றான்கவியின்குலமாளுடையான். (அஎ)

இடவன்றனிவெஞ்சமமுற்றெதிரும்
விடவெங்கணையிற்றவன்விண்ணதிரக்
கடவுங்கதழ்தேர்கதிர்வாளினொடும்
படவுங்கொருகுன்றுபடர்த்தினனால். (அஅ)

திண்டேரழியச்சிலைவிட்டொருதன்
தண்டோடுமிழிந்துதலத்தினனாய்
உண்டேனுயிரென்னவுருத்தருமோ
டெண்டோளனுமுட்கிடவெற்றினனால். (அக)

அடியுண்டவனுவிகுலைந்தயரா
இடியுண்டமலைக்குவடிற்றதுபோல்
முடியும்மெனும்வேலையின்முன்னினனால்,
நெடியன்குறியன்னெனுநீர்மையினான். (கo)

இடைத்தானிகன்மாருதியைக்கிளர்வான்
அடைத்தானெனுமீதுயராக்கையனைப்
படைத்தானைநெடும்புகழ்பைங்கழலான்
புடைத்தானகன்மார்புபொடிச்சிதற. (கூக)

எற்றிப்பெயர்வானையிடக்கையினால்
பற்றிக்கிளர்தண்டுபறித்தெறியா
மற்றைக்கிளர்கைக்கொடுமால்வலிபோய்
முற்றத்தனிகுத்தமுடிந்தனனால். (கூஉ)

காத்தோர்மரம்வீசுறுகைக்கதழ்வன்
போத்தோர்புலிபோற்பனசன்புரளக்
கோத்தோடநெடுங்குருதிப்புனறிண்
மாத்தோமரமார்பின்வழங்கினனால். (கூங)

கார்மேலினனோகடன்மேலினனோ
பார்மேலினனோபகன்மேலினனோ
ஆர்மேலினனோவெனவென்றறியாம்
போர்மேலினன்வாசியெனும்பொறியால். (கூச)

நூறுயிரகோடிகொலன்றுகொலென்
றுறுயினவானவரும்மறிவின்
தேறுவகைநின்றுதிரிந்துளதால்
பாறூடுகளத்தொருபாய்பரியே. (கூரு)

கண்ணிற்கடுகும்மனனிற்கடுகும்
விண்ணிற்படுகாலின்மிகக்கடுகும்
உண்ணிற்குமெனிற்புறனிற்குமுலாய்
மண்ணிற்றரியாதவயப்பரியே. (கூசு)

மாப்புண்டரவாசியின்வட்டணைமேல்
ஆப்புண்டவனொத்தவனூரயிலால்
பூப்புண்டரவாவிபுறத்தகலக்
கோப்புண்டனவானரவெங்குழுவே. (கூஎ)

நூறும்மிருநூறுநொடிப்பளவா
ஏறுந்நுதிவேலினிறைப்பொழுதில்
சீறுங்கவிசேனைசிதைக்குமெனு
ஆறுந்திறலும்பருமஞ்சினரால். (கூஅ)

தோற்றும்முருவொன்றெனவேதுணியாக்
கூற்றின்கொலையானுழல்கொள்கையனை
ஏற்றுஞ்சிலையாண்மையிலக்குவன்வெங்
காற்றின்படைகொண்டுகடந்தனனால். (கூகூ)

குலையப்பொருகுலநெடுங்குலையும்
உலைவுற்றிலனுய்த்தலுமோய்விலனொண்
டலையற்றுகவுந்தனையுற்றிலனால்
இலையப்பரிமேற்கொளிருக்கையினான். (௧00)

இன்றாதியமுண்டெனவின்னகைபால்
சென்றாதினதும்பிகடென்றிசையான்
வன்றாதருமெய்தினர்வஞ்சனையான்
றன்றாதருமெய்தினர்தன்னகர்வாய். (௧0௧)

ஏகித்தனிமன்னனிருந்துபுழிக்
கோகைப்பொருளின்றெனவுள்ளழியா
வேகத்தடல்வீரர்விளிந்தவெலாம்
சோகத்தொடிறைஞ்சினர்சொற்றனரால். (௧0௨)

படைத்தலைவர்-வதைப்படலம்-முற்றிற்று. ஆ திருவிருத்தம்-உ௩சகூ.
கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

## உ0-வது-மகரக்கண்ணன்வதைப்படலம்.

சொன்னாரவர்சொற்செவியிற்றொடர்தோ
றின்னாதமனத்தனிலங்கையர்கோன்
வெந்நாகமுயிர்த்தெனவிம்மினனால்
அன்னானிலைகண்டயனின்றறைவான். (௧)

முந்தேயெனதாதையைமொய்யமர்வாய்
அந்தோவுயிருண்டவனாருயிர்மேல்
உந்தாயெனையாதுமுணர்ந்திலையே
எந்தாயொருநீயிடர்கூருதியோ. (உ)

யானேசெலவெண்ணுவெனெய்தவவன்
றானேர்வதுநீயதெனத்தணிவென்
வானேநிலனேமுதன்மற்றுமெலாம்
கோனேயெனைவெல்வதொர்கொள்கையதோ (௩)

வேறு.

அருந்துயர்க்கடலுளாளென்னம்மனையமுதகண்ணள்
பெருந்திருக்கழித்தலாற்றாள்கணவனைக்கொன்றுபோந்தோன்
கருந்தலைக்கலத்தினல்லாற்கடன்கழியேனென்பாளால்
பருந்தினுக்கினியவேலாயின்னருள்பணித்தியென்றான். (௪)

அவ்வுரைமகரக்கண்ணனுரைத்தலுமரக்கனைய
செவ்விதுசென்றுநீயுன்பழம்பகைதீர்த்தியென்றான்
வெவ்வியவவனும்பெற்றவிடையினன்றேர்மேற்கொண்டான்
வவ்வியவில்லான்போரின்வரம்பெற்றுவளர்ந்ததோளான். (௫)

தன்னுடைச்சேனைகோடியைந்துடன்றழுவநின்ற
மன்னுடைச்சேனைவெள்ளமீரைந்துமழையிற்பொங்கிப்
பின்னுடைத்தாகப்பேரிக்கடல்படப்பெயர்ந்ததூளி
பொன்னுடைப்புவனத்துச்சிக்குச்சியும்பொதியப்போனான். (சு)

சோணிதக்கண்ணனோடுசிங்கனுந்துரகத்திண்டேர்
தாண்முதற்காவல்பூண்டுசெல்கெனத்தக்கதென்று
வாண்முதற்றானையோடுமனையவர்தொடரப்போனான்
நாண்முதற்றிங்கடன்னைத்தழுவியவனையநன்பான். (எ)

பல்பெரும்பதாகைபற்றிமீமிசைத்தொடுத்தபந்தர்
எல்லவன்கதிரின்கற்றைமுற்றியநீழலீயத்
தொல்சினயானையங்கைவிலாழிநீர்த்துவலைதூற்றச்
செல்பெருங்கவியின்சேனையமர்த்தொழிற்சிரமந்தீர்ந்த (அ)

முழங்கினயானைவாசியொலித்தனமுரசின்பண்ணை
தழங்கினவயவரார்த்தாரொன்பதோர்முறைமைதள்ள
வழங்கினபதலையோதையண்டத்தின்வரம்பின்காறும்
புழுங்கினவுயிர்கள்யாண்டுங்கால்புகப்புரையின்றாகி. (கூ)

வெய்தினினுற்றதானைமுறைவிடாநூழில்வெம்போர்
செய்தனசெருக்கிச்சென்றுநெருக்கினர்தலைவர்சேர்த்திக்
கையொடுகைகளூற்றுக்கலந்தனர்கல்லும்வில்லும்
எய்தனவெறிந்தயானையீர்த்தனகோத்தசோரி. (க0)

வானரவீரர்விட்டமலைகளையரக்கர்வவ்வி
மீனொடுமேகஞ்சிந்தவிசைத்தனர்விட்டுவீசக்
கானகமிடியுண்டென்னக்கவியினமடியக்கவ்விப்
போனகநுகரும்பேய்கள்வாய்ப்புறம்புடைப்போடார்ப்ப. (கக)

மைந்நிறத்தரக்கர்வன்கைவயிரவாள்வலியின்வாங்கி
மெய்ந்நிறத்தெறிந்துகொல்வர்வானரவீரர்வீரர்
கைந்நிறத்தெடுத்தகல்லுமரனுந்தங்கரத்தின்வாங்கி
மொய்ந்நிறத்தெறிந்துபற்றிமுருக்குவரரக்கர்மொய்ம்பால். (கஉ)

வண்டுழலலங்கன்மாலைமகரக்கண்மழையேறன்ன
திண்டிறலரக்கன்கொற்றப்பொற்றடஞ்சில்லித்தேரான்
தண்டலைமருதவைப்பிற்கங்கைநீர்தழுவுநாட்டார்
கொண்டன்மேலோட்டிச்சென்றுகுரக்கினப்பரப்பைக்கொன்றான். (கங)

இந்திரன்பகைஞனேகொலென்பதோரச்சமெய்திச்
சந்திரமிரிந்துசிந்தப்படைப்பெருந்தலைவர்தாக்கி
எந்திரமறிந்தவென்னவேவுண்டுபுரண்டாரொய்திச்
சுந்திரத்தோளினானைநோக்கிநின்றினையசொன்னான். (கச)

என்னுடைத்தாதைதன்னையின்னுயிருண்டாயென்னும்
முன்னுடைத்தாயதீயமுழுப்பகைமூவர்க்கின்றி
நின்னுடைத்தாயதன்றேயின்றதுநீப்பலென்றான்
பொன்னுடைத்தாதுவண்டுகுடைந்துண்ணும்பொலம்பொற்றாரான். (௧௫)

தீயவன்பகர்ந்தமாற்றஞ்சேவகன்றெரியக்கேட்டான்
நீகரன்புதல்வன்போலாநெடும்பகைதீரவந்தாய்
ஆயதுகடனேயன்றேவாண்பிறந்தாருக்கைய
ஏயதுசொன்னாயென்றானிசையினுமிசையதோளான். (௧௬)

உருமிடித்தென்னவின்னாவொலிபடுத்துன்றோடெந்தை
செருமுடித்தென்கணின்றசினமுடித்தமைவெனென்னாக்
கருமுடித்தமைந்தமேகங்காலடித்தெழுந்தகாலம்
பெருமுடிக்கிரியிற்பெய்யுந்தாரைபோற்பகழிபெய்தான். (௧௭)

அம்புயக்கண்ணன்கண்டத்தாயிரம்பகழிநாட்டித்
தம்பிதன்கவசமீதேயிரட்டிச்சாயகங்கடாக்கி
வெம்பிகலநுமன்மீதேவெங்கணைமாரிவித்தி
உம்பர்தமுலகமுற்றுஞ்சரங்களாய்மூடியுய்த்தான். (௧௮)

சொரிந்தனபகழியெல்லாஞ்சுடர்க்கடுங்கணைகடேவி
அரிந்தனனகற்றிமற்றையாண்டகையலங்கலாகத்
தெரிந்தொருபகழிவாங்கியேவினனிராமனேவ
நெரிந்தெழுபுருவத்தான்றன்னிறத்துற்றுநின்றதன்றே. (௧௯)

ஏவுண்டுதுளக்கமெய்தாவீர்த்தகைப்பரிதியீன்ற
பூவுண்டகண்ணன்வாயிற்புகையுண்டதுமிழ்வான்போல்வான்
தேவுண்டகீர்த்தியண்ணறிருவுண்டகவசஞ்சேரத்
தூவுண்டவயிரவாளியாயிரந்தூவியார்த்தான். (௨௦)

அன்னதுகண்டவானோர்திசயமுற்றாராழி
மன்னனுமுறுவலெய்திவாயம்போராறுவாங்கிப்
பொன்னெடுந்தடந்தேர்பூண்டதுரங்கத்தின்குரங்கள்போக்கி
வின்னடுவறுத்துப்பாகன்றலையையுநிலத்துவீழ்த்தான். (௨௧)

மார்பிடைநின்றவாளிவாயிடைவெரிநின்வாரும்
சோரியன்விசும்பினூடோரிமையிடைமறைந்துதோன்றான்
காருருமேறுங்காற்றுங்கனலியுங்கடைநாள்வையம்
பேர்வுறுகாலமென்னப்பெருக்கினன்றவத்திற்பெற்றான். (௨௨)

உருமுறையநந்தகோடியுதிர்ந்தனவூழிநாளின்
இருமுறைகாற்றுச்சீறியெழுந்ததுவிழுந்தவெங்கும்
கருமுறைகழுமுமேகங்கான்றனகல்லின்மாரி
பொருமுறைமயங்கிச்சுற்றியிரித்தலிற்குரங்குபோன. (௨௩)

போயினதிசைகளெங்கும்புகையொடுநெருப்புப்போர்ப்பத்
தீயினமமையச்செல்லுமாயமாமாரிசிந்த
ஆயிரகோடிமேலுமவிந்தனகவிகளையன்
மாயமோவரமோவென்றான்வீடணன்வணங்கிச்சொன்னான். (௨௪)

நோற்றுடைத்தவத்தினோன்மைநோக்கினர்கருணைநோக்கிக்
காற்றுடைச்செல்வன்றானுமழையுடைக்கடவுடானும்
மாற்றலரீந்ததெய்வவரத்தினால்வந்ததென்றான்
நாற்றிதழ்க்கமலக்கண்ணனகற்றுவெனொடியினென்றான். (௨௫)

காலவன்படையுந்தெய்வக்கடலவன்படையுங்காலக்
கோலவன்சிலையிற்கோத்தகொடுங்கணையோடுங்கூட்டி
மேலவன்றுரத்தலோடும்விசும்பினின்றெரிந்துவெய்தின்
மாலிருங்கடலின்வீழ்ந்துமறைந்தனமழையுங்காற்றும். (௨௬)

அத்துணையரக்கனோக்கியந்தரவானமெல்லாம்
ஒத்ததனுருவேயாக்கித்தான்மறைந்தொளித்துச்சூலப்
பத்திகள்கோடிகோடிபரப்பினனதனைப்பார்த்த
வித்தகனொருவன்செய்தவினையமென்றினையசெய்தான். (௨௭)

மாயத்தால்வருத்தான்யாண்டும்வரம்பிலாவுருவந்தானெத்
தேயத்தானென்னாவண்ணங்கரந்தனன்றெரிந்திலாதான்
காயத்தாலினையனென்றுகருதலாங்கருத்தனல்லன்
தீயொத்தான்றிறத்தினென்னசெயலெனச்சிந்தைசெய்தான். (௨௮)

அம்பின்வாயாறுசோருமாகத்தானளவிலாக்கை
உம்பரிற்பரப்பித்தான்வேறொளித்தனனென்னவோர்வான்.
செம்புனற்சுவடுநோக்கியிதுநெறியென்றுதேவர்
தம்பிரான்பகழிதூண்டத்தலையற்றுத்தலத்தனானான். (௨௯)

அயில்படைத்துருமிற்செல்லுமம்பொடுமரக்கனாக்கை
புயல்படக்குருதிவீசிப்படியிடைப்புரடலோடும்
வெயில்கெடுத்திருளையீட்டுங்கருமத்தினியற்கைவீயத்
துயில்கெடக்கனவுமாய்ந்தாலொத்ததுசூழ்ந்தமாயை (௩0)

குருதியின்கண்ணன்வண்ணக்கொடிநெடுந்தேரன்கோடைப்
பரிதியினடுவட்டோன்றும்பராஞ்சுடர்மேயபண்பன்
எரிகணைசிந்திக்காலினெய்தினான்றன்னோடேற்றான்
விரிகடற்றட்டான்கொல்லும்வெஞ்சினத்தச்சன்வெய்யோன் (௩௧)

அன்றவனாமவின்னாணலங்கற்றோள்குலுங்கவாங்கி
ஒன்றலபகழிமாரியூழித்தீயென்னவுய்த்தான்
நின்றவனெடியதாங்கோர்தருவினாலகலநீக்கிச்
சென்றனன்கரியின்வாரிக்கெதிர்பட்டசியமன்னான். (௩௨)

காத்தினிற்றிரியாநின்றமரத்தினைக்கண்டமாகச்
சரத்தினிற்றுணித்துவீழ்த்ததறுகணுன்றன்னைநோக்கி
உரத்தினைச்சுருக்கிப்பாரினேங்கினன்றன்னையொவ்வான்
சிரத்தினிற்குதித்தான்றேவர்திசைமுகங்கிழியவார்த்தார். (ஙங)

எரியும்வன்குன்றினும்பரிந்திரவில்லிட்டென்னப்
பெரியவன்றலைமேனின்றபேரொழிலாளன்சோரி
சொரியவன்கண்ணின்மூக்கிற்செவிகளின்மூளைதூங்கி
நெரியவன்றலையைக்காலானுதைத்துமாநிலத்திளிட்டான். (ஙச)

அங்கவனுலத்தலோடுமனற்கொழுந்தொழுகுங்கண்ணன்
சிங்கன்வெங்கணையான்வில்லான்முரணிதேரின்மேலான்
எங்கடாபோதியென்னவெய்தினன்றன்முனெய்திப்
பங்கமின்மேருவாற்றற்பநசன்வந்திடையிற்பாய்ந்தான். (ஙரு)

பாய்ந்தவன்றேரின்மார்பிற்பல்லங்கணல்லபண்போ
டாய்ந்தனவசனிபோலவையிரண்டழுந்தவெய்யக்
காய்ந்தெழுகனலிநெய்யாற்கனன்றதுபோலக்காந்தி
ஏய்ந்தெழுதேரினேடுமிமைப்பிடையெடுத்துக்கொண்டான். (ஙசு)

தேரொடுமெடுத்தலோடுநிலத்திடைக்குதித்தசெங்கண்
மேருவிற்றேற்றத்தான்றனுச்சிமேலதனைவீசப்
பாரிடைவிழுதலோடுந்தானவனும்பர்பாயாச்
சோரியுமுயிருஞ்சோரத்துகைத்தனன்வயிரத்தோளான். (ஙஎ)

தராதலவேந்தன்மைந்தர்சரத்தினுங்கவியின்றானை
மராமரமலையென்றின்னவழங்கவும்வளைந்ததானை
பராவருவெள்ளம்பத்தும்பட்டனபட்டிலாதார்
இராவணன்றூதர்போனார்படைக்கலமெடுத்திலார். (ஙஅ)

கரன்மகன்பட்டவாறுங்குருதியின்கண்ணன்காழ்த்த
சிரனெரிந்துக்கவாறுஞ்சிங்கன்வெஞ்சிறுசேனைப்
பரமினியுலகுக்காகாவென்பதும்பகரக்கேட்டான்
வரன்முறைதுறந்தானவல்லேதருதியொன்மகனையென்றான். (ஙகூ)

மகரக்கண்ணன்வதைப்படலம் முற்றிற்று ஆ திருவிருத்தம் உஙஅ.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

## உக-வது, பிரமாத்திரப்படலம்.

கூயினனுந்தையென்றார்குன்றெனக்குவிந்ததோளான்
போயினநிருதரெல்லாம்பொன்றினர்போலுமென்றான்
ஏயினபின்னைமீள்வார்நீயலாதியாவரொன்று
மேயதுசொல்லக்கேட்டான்றுதைபால்விரைவின்வந்தான். (க)

வணங்கிநீயையரொய்தின்மாண்டனர்மக்களென்ன
உணங்கலையின்றுகாண்டியுலைவுறுகுரங்கினோதப்
பிணங்களின்குப்பைமற்றையாருயிர்பிரிந்தவாக்கை
கணங்குழற்சீதைகாணுமமரருங்காண்பரன்றே. (உ)

வலங்கொடுவணங்கிவான்செலாயிரமடங்கல்பூண்ட
பொலங்கொடிநெடுந்தேரேறிப்போர்ப்பணையொலிப்பப்போனான்
ஆலங்குவாளரக்கர்தானையறுபதுவெள்ளயானைக்
குலங்களுந்தேருமாவுங்குழாங்கொளாக்குழீஇயவன்றே. (ங)

கும்பிகைதிமிலைசண்டைகுறடுமாப்பேரிகொட்டும்
பம்பைதார்முரசங்கஞ்சம்பாண்டில்போர்ப்பணவந்தூக்கம்
கம்பியுறுமைதக்கைகரடிகைதுடிகைகண்டை
அம்புலிகடுவையூமைசகடையோடார்த்தவன்றே. (ச)

யானைமேற்பறைகிழட்டத்தெறிமணியிரதத்தாழி
மானமாப்புரவிப்பொற்றார்மாக்கொடிக்கண்டைமானச்
சேனையோர்கழலுந்தாருஞ்சேடகப்புளகச்சில்லி
ஆனகத்தோடுவானையரியெனவலைந்தவன்றே. (ரு)

சங்கொலிவயிரிநேரைசையாகுளிதழைத்தகாளப்
பொங்கொலிவரிதாட்பீலிப்போரொலிவேயின்பொம்மல்
சிங்கத்தின்முழக்கம்வாசிச்சிரிப்புத்தேரிடிப்புத்திண்கைம்
மங்குலினதிர்வுவானின்மழையொடுமலைந்தவன்றே. (சு)

பண்டருகிளவிச்செவ்விப்பல்லியத்தொழுகுதீந்தேன்
கண்டினிற்குயின்றவீணைநரம்பொடுகமழுந்தேறல்
வண்டினிற்பொலியுநல்யாழ்வழியுறுநறவம்வானத்
தண்டர்தஞ்செவியினுண்ணுமமுதெனலாயவன்றே. (எ)

வில்லொலிவயவரார்க்கும்விளியொலிதெழிப்பினோங்கும்
ஒல்லொலிவீரர்பேசுமுனையொலியுரப்பிற்றோன்றும்
செல்லொலிதிரடோள்கொட்டுஞ்சேணொலிசிறத்திற்செல்லும்
கல்லொலிபரப்பமற்றைக்கடலொலிமறைந்ததன்றே. (அ)

நாற்கடலனையதானைநடந்திடக்கிடந்தபாரின்
மேற்கடநதெழுந்ததுளிவிசும்பின்மேற்கொழுந்துவீச
மாற்கடற்சேனைகாணும்வானவர்மகளிர்மானப்
பாற்கடலனையவாட்கண்பனிக்கடல்படைத்தவன்றே. (கூ)

ஆயிரகோடித்திண்டேரமரர்கோனகரமென்ன
மேயவர்சுற்றத்தானோர்கொற்றப்பொற்றேரின்மேலான்
தூயமாச்சுடர்களெல்லாஞ்சுற்றுறநடுவட்டோன்றும்
காயகப்பரிதிபோன்றனமரரைநடுக்கங்கண்டான். (க0)

சென்றுவெங்களத்தையெய்திச்சிறையொடுதுண்டஞ்செங்கண்
ஒன்றியகழுத்துமேனிகாலுகிர்வாலோடொப்பப்
பின்றலில்வெள்ளத்தானைமுறைபடப்பரப்பிப்பேழ்வாய்
அன்றிலினுருவதாயவணிவகுத்தமைந்துநின்றான். (கக)

புரந்தரன்செருவிற்றந்துபோயதுபுணரியேழும்
உரந்தையுற்றூழிபெருங்காலத்துளொலிக்குமோதை
கரந்ததுவயிற்றுட்காலவலம்புரிகையின்வாங்கிச்
சிரம்பொதிர்த்தமாரஞ்சவூதினன்றிசையுஞ்சிந்த. (கஉ)

சங்கத்தின்முழக்கங்கேட்டகவிப்பெருந்தானைதள்ளிச்
சிங்கத்தினுதம்வந்துசெவிப்புகவிலங்குசிந்தி
எங்குற்றவென்னுவண்ணமிரிந்தபோலிரிந்தவேழை
பங்கத்தன்மலைவில்லன்னசிலையொலிபரப்பியார்த்தான். (கங)

கீண்டனசெவிகணெஞ்சங்கிழிந்தனகிளர்ந்துசெல்லா
மீண்டன்கால்கள்கையின்விழுந்தனமரமும்வெற்பும்
பூண்டனநடுக்கம்வாய்கள்புலர்ந்தனமயிரும்பொங்க
மாண்டனமன்றோவென்றவானரமெவையுமாதோ. (கச)

படைப்பெருந்தலைவர்நிற்கப்பல்பெருந்தானைவேலை
உடைப்புறுபுனலினோடவூழிநாளுவரியோதை
கிடைத்தடமுழங்கியார்த்துக்கிளர்ந்தெழுநிருதர்சேனை
அடைத்தது திசைகளெல்லாமன்னவர்களத்தரானார். (கரு)

செங்கதிர்ச்செல்வன்சேயுஞ்சமீரணன்சிறுவன்றானும்
அங்கதப்பெயரினானுமண்ணலுமிளையகோவும்
வெங்கதிர்மவுலிச்செங்கண்வீடணன்முதலவீரர்
இங்கிவர்நின்றாரல்லதிரிந்ததுசேனையெல்லாம். (கசா)

மாருதியலங்கன்மாலைமணியணிவயிரத்தோண்மேல்
வீரனும்வாலிசேய்தன்விறல்கெழுசிகரத்தோண்மேல்
ஆரியற்கிளையகோவுமேறினரமரர்வாழ்த்தி
வேரியம்பூவின்மாரிசொரிந்தனரிடைவிடாமல். (கஎ)

விடையின்மேற்கலுழன்றன்மேல்வில்லினர்விளங்குகின்ற
கடையின்மேலுயர்ந்தகாட்சியிருவருங்கடுத்தார்கண்ணுற்
றடையின்மேருவையுஞ்சாய்க்குமநுமன்ங்கதனென்றின்ன
தொடையின்மேல்மலர்ந்ததாரார்தோளின்மேற்றோன்றும்வீரர். (௰அ)

நீலனைமுதலாயுள்ளநெடும்படைத்தலைவர்நின்றார்
தாலமுமலையுமேந்தித்தாக்குவான்சமையும்வேலை
ஞாலமும்விசும்புங்காத்தநானிலக்கிழவன்மைந்தன்
மேல்வருவினையையுன்னிவிலக்கினன்விளம்பலுற்றான். (சகூ)

கட்வுளர்படைகளும்மேல்வெய்யவன்றுரந்தகாலை
தடையுளவல்லதாக்குந்தன்மையீரல்லீர்தாக்கிற்
கிடையுளதெம்பானல்கிப்பின்னிறைநிற்றிரீண்டிப்
படையுளதெனையென்றம்பிவிற்றொழில்பார்த்திரொன்றான். (௨0)

அருண்முறையவருகின்றாராண்டகைவீரராழி
உருண்முறைத்தேரின்மாவினோடைமால்வரையினூழி
இருண்முறைநிருதர்தம்மேலேவினரிமைப்பிலோரும்
மருண்முறையெய்திநொய்திற்சிலைவழங்கசனிகேட்டார். (௨௧)

இமைப்பதன்முன்னம்வந்தவிராக்கதவெள்ளந்தன்னைக்
குமைத்தொழில்புரிந்தவீரர்தனுத்தொழில்குறித்தின்றெம்மால்
அமைப்பதென்பிறிதொன்றுண்டோமேருவென்றமைந்தவில்லால்
உமைக்கொருபாகனெய்தபுரங்களினொருங்கிவீழ்ந்த. (௨௨)

தேரின்மேற்சிலையனின்றவிந்திரசித்தென்றோதும்
வீரருள்வீரன்கண்டான்விழுந்தனவிழுந்தவென்னும்
பாரின்மேனோக்கினன்றேற்பட்டனர்பட்டாரொன்னும்
போரின்மேனோக்கினீதிவ்விருவரும்பொருதபூசல். (௨௩)

யானைபட்டனவோவென்றானிரதமிற்றனவோவென்றான்
மானமர்வந்தவெல்லாமறிந்தொழிந்தனவோவென்றான்
ஏனைவாளரக்கர்யாருமில்லையோவெடுக்கவென்றான்
வானுயர்பிணத்தின்குப்பைமாய்த்தலின்மயக்கமுற்றான். (௨௪)

செய்கின்றாரிருவர்வெம்போர்சிதைகின்றசேனைநோக்கின்
ஐயந்தானில்லாவெள்ளமறுபதும்வீகவென்று
வைகின்றாரல்லராகின்வரிசிலைவலத்தான்மாள
எய்கின்றாரல்லரீதெவ்விந்திரசாலமென்றான். (௨௫)

அம்பின்மாமழையைநோக்குமுதிரத்தினாற்றைநோக்கும்
உம்பரினளவுசென்றபிணக்குன்றினொழுக்கைநோக்கும்
கொம்பறவுதிர்ந்தமுத்தின்குழுமலைநோக்குங்கொன்ற
தும்பையைநோக்கும்வீரர்சுந்தரத்தோளைநோக்கும். (௨௬)

மலைகளைநோக்குமற்றவானுறக்குவிந்தவன்கட்
டலைகளைநோக்கும்வீரர்சரங்களைநோக்குந்தாகி
உலைகொள்வெம்பொறியினுக்கபடைக்கலத்தொழுக்கைநோக்கும்
சிலைகளைநோக்குநாணினிடிப்பினைச்செவியினோக்கும். (௨௭)

ஆயிரந்தேரையாடல்யானையையலங்கன்மாவை
ஆயிரந்தலையையாழிப்படைகளையறுத்துமப்பால்
போயினபகழிவேகத்தன்மையைப்புரிந்துநோக்கும்
பாயவன்பகழிக்கொன்றுங்கணக்கிலாப்படியைப்பார்க்கும். (௨௮)

வயிறலைத்தோடிவந்துகொழுநர்மேன்மகளிர்மாழ்கிக்
குயிறலைத்துக்கவென்னக்குழைகின்றகுழைவைநோக்கி
எயிறலைத்திடிக்கும்பேழ்வாய்த்தலையிலாவாக்கையீட்டம்
பயிறலைப்பறவைபாரிற்படிகலாப்படியைப்பார்க்கும். (உகூ)

அறுபதுவெள்ளமாயவரக்கர்தமாற்றற்கேற்ற
எறிவனவெய்வபெய்வவெற்றுறுபடைகள்யாவும்
பொறிவனம்வெந்தபோலச்சாம்பராய்ப்போவதல்லால்
செறிவனவில்லாவாற்றைச்சிந்தையாற்றெரியநோக்கும். (௩0)

அங்கதரநந்தகோடியுளரொனுமறுமனென்பார்க்
கிங்கினியுலகம்யாவுமிடமிலைபோலுமென்னும்
எங்குமிம்மனிசரொன்பாரிருவரேகொள்கவென்னும்
சிங்கவேறனையவீரர்கடிமையைத்தெரிக்கிலாதான். (௩க)

ஆர்க்கின்றதேவர்தம்மைநோக்குமங்கவர்களள்ளித்
தூர்க்கின்றபூவைநோக்குந்துடிக்கின்றதோளைநோக்கும்
பார்க்கின்றதிசைகளெல்லாம்பெரும்பிணப்பரப்பைப்பார்க்கும்
ஈர்க்கின்றகுருதியாற்றின்யானையின்பிணத்தைநோக்கும். (௩உ)

ஆயிரகோடித்தேருமரக்கருமொழியவல்லா
மாயிருஞ்சேனையெல்லாமாய்ந்தவாகண்டும்வல்லைப்
போயினகுரக்குச்சேனைபுகுந்திலதன்றேபொற்றோர்த்
தீயவன்றன்மேலுள்ளபயத்தினாற்கலக்கந்தீரா. (௩௩)

தளப்பருஞ்சேனைவெள்ளமறுப்துந்தலத்தவாக
வளப்பருந்தேரினுள்ளவாயிரகோடியாகத்
துளக்கமில்லாதவீரர்தோளும்போர்த்தொழிலுநோக்கி
அளப்பருந்தோளைக்கொட்டியஞ்சனைச்சிறுவனார்த்தான். (௩௪)

ஆருடையறுமனார்த்தவார்கலியசனிகேளாத்
தேரிடைநின்றுவீழ்ந்தார்சிலர்சிலர்படைகள்சிந்திப்
பாரிடையிழிந்துபோகப்பாரித்தார்பைம்பொனிஞ்சி
ஊரிடைநின்றுளாருமுயிரினோடுதிரங்கான்றார். (௩௫)

அஞ்சினிர்போமினென்னுவார்ப்பொலிக்கழியற்பாலீர்
வெஞ்சமம்விளைப்பதென்னேநீவிரும்வீரரோடும்
துஞ்சினிர்போலுமன்றேயென்றவர்ச்சுளித்துநோக்கி
மஞ்சினுங்கரியமெய்யானிருவர்மேலொருவன்வந்தான் (௩௬)

அக்கணத்தார்த்துமண்டியாயிரகோடித்தேரும்
புக்கனநேமிப்பாட்டிற்கிழிந்ததுபுவனமென்னத்
திக்கிடைநின்றயானைசிரம்பொதிரொறியச்சிந்தி
உக்கனவிசும்பின்மீன்களுதிர்ந்திடத்தேவருட்க. (௩எ)

வேறு.

மாற்றமொன்றிளையவன்வளைவிற்செங்கரத்
தேற்றினன்வணங்கிநின்றியம்புவானிகல்
ஆற்றினனரவுகொண்டசைப்பவாரமர்
தோற்றனனென்றுகொண்டுலகஞ்சொல்லுமால். (௩௮)

காக்கவுங்கிற்றிலன்காதனண்பரைப்
போக்கவுங்கிற்றிலனொருவன்போய்ப்பிணி
ஆக்கவுங்கிற்றிலன்வென்றியாருயிர்
நீக்கவுங்கிற்றிலனென்றுநின்றதால். (௩௯)

இந்திரன்பகையெனுமிவனையென்சரம்
அந்தரத்தருந்தலையறுக்கலாதெனின்
வெந்தொழிற்செய்கையான்விருந்துமாய்நெடு
மைந்தரிற்கடையெனப்படுவென்வாழியாய். (௪௦)

நின்னுடைமுன்னரிந்நெறியினீர்மையான்
றன்னுடைச்சிரத்தையென்சரத்திற்றள்ளினல்
பொன்னுடைவனைகழற்பொலன்பொற்றோளினாய்
என்னுடையடிமையுமிசையிற்றுமரோ. (௪௧)

கடிதினிலுலகெலாங்கண்டுநிற்கவென்
அடுசரமிவன்றலையறுக்கலாதெனின்
முடியவொன்றுணர்த்துவெனினக்குநான்முயல்
அடிமையின்பயனிழந்தறுவதாகென்றான். (௪௨)

வல்லவனவ்வுரைவழங்குமெல்லையுள்
அல்லலினீங்கியவமரரார்த்தனர்
ஒல்லையினுலகங்கள்யாவுமார்த்தன
நல்லறமார்த்ததுநமனுமார்த்தனன். (௪௩)

முறுவல்வாண்முகத்தினன்முளரிக்கண்ணனும்
அறிவநீயடுவலென்றமைதியாமெனின்
இறுதியுங்காவலுமியற்றுமீசரும்
வெறுவியர்வேறினிவிளைவதியாதென்றான். (௪௪)

சொல்லதுகேட்டடிதொழுதுசுற்றிய
பல்பெருந்தேரொடுமரக்கர்பண்ணையைக்
கொல்வலிங்கன்னதுகாண்டிகொல்லென
ஒல்லையினெழுந்தனனுவகையுள்ளத்தான். (௪௫)

அங்கதனூர்த்தனனசனியேறன
மங்குனின்றதிர்ந்துகவயவன்றேர்வரும்
சிங்கமூநடுக்குறத்திருவினாயகன்
சங்கமொன்றொலித்தனகடலுந்தள்ளுற. (௪௬)

எழுமழுச்சக்கரமீட்டிதோமரம்
முழுமுரட்டண்டுவேன்முசுண்டிமூவிலைக்
கழுவயில்கப்பணங்கவண்கல்கன்னகம்
விழுமழைக்கிரட்டிவிட்டாக்கர்வீசினார். (சஎ)

மீனெலாம்விண்ணினின்றொருங்கிவீழ்ந்தென
வானெலாம்மண்ணெலாமுறையவந்தன
தானெலாந்துணிந்துபோய்த்தகர்ந்துசாய்ந்தன
வேனிலானனையவன்பகழிவெம்மையால். (சஅ)

ஆயிரந்தேரொருதொடையினச்சிறும்
பாய்பரிக்குலம்படும்பாகர்பொன்றுவர்
நாயகர்கெடுந்தலைதுமியுநாமறத்
தீயெழும்புகையெழுமுலகந்தியுமால். (சகூ)

அடியறுந்தேர்முராணுழியச்சறும்
வடிநெடுஞ்சிலையறுங்கவசமார்பறும்
கொடியறுங்குடையறுங்கொற்றவீரர்தம்
முடியறுமுரசறுமுகிலுஞ்சிந்துமால். (ரு0)

இன்னவோருறுப்பிவையினையதேர்பரி
மன்னவரிவரிவர்படைஞர்மற்றுளோர்
என்னவோர்தன்மையுந்தெரிந்ததில்லையால்
சின்னபின்னங்களாய்மயங்கிச்சிந்தலால். (ருக)

தந்தையர்தேரிடைத்தநயர்வன்றலை
வந்தனதாதையர்வயிரவான்சிரம்
சிந்தினகாதலர்க்கியைந்ததேரிடை
அந்தரத்தம்பொடுமற்றெழுந்தன. (ருஉ)

செம்பெருங்குருதியிற்றிகழ்ந்தசெங்கண்மீன்
கொம்பொடுபரவையிற்றிரியுங்கொட்பெனத்
தும்பியந்தொடைமலர்த்தடக்கைதூணிவாங்
கம்பொடுதுணிந்தனசிலையொடற்றன. (ருங)

தடிவன்கொடுஞ்சரந்தள்ளத்தள்ளுற
மடிவனகுடைகளுங்கொடியுமற்றவும்
முடிவுறுபெரும்பிணக்களத்தின்மொய்த்தன
படிவனவொத்தனபதாதிப்பன்மைய (ருச)

வேறு.

சிந்துரங்களின்பருமமும்பகழியுந்தேரும்
குந்தவன்னெடுஞ்சிலைமுதற்படைகளுங்கொடியும்
இந்தனங்களாவிறந்தனர்விழிக்கனல்பிறங்கி
வெந்தவெம்பிணம்விழுங்குவகழுதுகள்விரும்பி. (ருரு)

சில்லியூடறச்சிதறினசிலசிலசேர்ந்த
வல்லியூடறமடிந்தனபுரவிகண்மறையப்
புல்லிமண்ணிடைப்புரண்டனசிலசிலபோராள்
வல்லிசாரதியொடும்படத்திரிந்தனவெறிய. (ருசு)

அலங்குபன்மணிக்கதிரினங்குருதியினழுந்த
விலங்குவெஞ்சுடர்விடுவனவளவின்றிமிடைந்த
துலங்கொள்வெய்யவரமர்க்களத்தீயிடைக்குளித்த
இலங்கைமாநகர்மாளிகையொத்தனவிரதம். (ருஎ)

ஆனகாலையிலிராமனுமயின்முகப்பகழி
சோனைமாரியிற்சொரிந்தனனநுமனைத்தூண்டி
வானமானங்கண்மடிந்தெனத்தேரொலாமடியத்
தானுந்தேருமேயாயினனிராவணன்றநயன். (ருஅ)

பல்விலங்கொடுபுரவிகள்பூண்டதேர்ப்பரப்பு
வல்விலங்கல்போலரக்கர்தங்குழாத்தொடுமடிய
வில்விலங்கியவீரரைநோக்கினன்வெகுண்டான்
சொல்விலங்கலைச்சொல்லினனிராவணன்ருேன்றல். (ருகு)

இருவிரொன்றெனும்பொருதிரோவன்றெனினேற்ற
ஒருவிர்வந்துயிர்தருதிரோவும்படையோடும்
பொருது,பொன்றுதல்புரிதிரோவுறுவதுபுகன்மின்
தருவெனின்றுமக்கேற்றுளதொன்றெனச்சலித்தான். (சுo)

வாளிற்றிண்சிலைத்தொழிலினின்மல்லினின்மற்றை
ஆளுற்றெண்ணியபடைக்கலமெவற்றினுமமரில்
கோளுற்றுன்னொடுகுறித்ததுசெய்துயிர்கொள்வான்
சூளுற்றேனிதுசரதமென்றிலக்குவன்சொன்னான். (சுக)

முன்பிறந்தவுன்றம்முனைமுறைதவிர்த்துனக்குப்
பின்பிறந்தவனுக்குவென்பின்பிறந்தோயை
முன்பிறந்தவனுக்குவெனிதுமுடியேனேல்
என்பிறந்ததனற்பயனிராவணற்கென்ருன். (சுஉ)

இலக்குவன்னெனும்பெயருனக்கியைவதேயென்று
இலக்குவன்கணைக்காக்குவெனினிப்புகுந்திடையே
விலக்குவன்னெனவிடையவன்விலக்கினும்வீரம்
விலக்குவன்னினைக்காணுமுன்றமையனும்விழியால். (சுங)

அறுபதாக்கியவெள்ளத்தினரக்கரையம்பால்
இறுவதாக்கியவிரண்டுவில்லீருங்கண்டிரங்க
மறுவதாக்கியவெழுபதுவெள்ளமுமாள
வெறுவிதாக்குவெனுலகினிக்கணத்திருேர்வில்லால். (சுச)

கும்பகன்னனன் றிராமனின் றமரிடைக்கொல்லத்
தம்பியென் றிரோலிராவணன் மகனெருதமியேன்
எம்பிமாருக்குமென்சிறுதாதைக்குமிருவீர்
செம்புனீர்கொடுகடன் கழிப்பானின் றுதிர்ந்தேன். (சுரு)

அரக்கனென்பதோர்பெயர்படைத்திர்க்கெலாமமரில்
புரக்குநன் கடன்செய்யவும்வீடணன்போந்தான்
கரக்குநுந்தைக்குநீசெயக் கடவியகடன்கள்
இரக்கமுற்றுனக்கவன்செயுமென் றனனிளங்கோ. (சுசு)

ஆனகாலையினயிலெயிற்றரக்கனெஞ்சழன்முன்
வானும்வையமுந்திசைகளும்யாவையுமறையப்
பானல்வேலையைப்பருகுவசுடர்முகப்பகழி
சோனைமாரியினிருமடிமும்மடிசொரிந்தான். (சுஎ)

அங்கதன்றன்மேலாயிரமவற்றினுக்கிரட்டி
வெங்கண்மாருதிமேனிமேல்வேறுவேறுள்ள
சிங்கமன்னவராக்கைமேலுலப்பிலசெலுத்தி
எங்கும்வெங்கணையாக்கினனிராவணன்சிறுவன். (சுஅ)

இளையவன்றன்மேலிராமன்மேலநுமன்மேலிகலா
விளையும்வன்றொழில்வானரவீரர்மேன்மெய்யுற்
றுளையவெஞ்சரஞ்சொரிந்தனனாழிகையொன்று
வளையமண்டிலப்பிறையெனநின்றதுவரிவில், (சுகூ)

பச்சிமத்தினுமுகத்தினுமருங்கினும்பகழி
உச்சிமுற்றியவெய்யவன்கதிரொன்வுமிழக்
கச்சமற்றனைத்துணைக்கடுந்தொழில்காணு
அச்சமுற்றனர்கண்புதைத்தொடுங்கினரமரர். (எ0)

மெய்யிற்பட்டனபடப்படாதனவெலாம்விலக்கித்
தெய்வப்பொற்கணைக்கத்துணைக்கத்துணைசெலுத்தி
ஐயற்காங்கிளங்கோளரியதிவிலானறைந்த
பொய்யிற்போம்படிபோக்கினன்கடிதினிற்புக்கான். (எக)

பிறகுநின்றனன்பெருந்தகையிளவலைப்பிரியான்
அறமிதன்றெனவரக்கன்மேற்சரந்துரந்தருளான்
இறவுகண்டிலரிருவருமொருவரையொருவர்
விறகின்வெந்தனவிசும்பிடைச்செறிந்தனவிசிகம். (எஉ)

மாடெரிந்தெழுந்திருவர்தங்கணைகளும்வழங்கக்
காடெரிந்தனகனமழையெரிந்தனகனக
வீடெரிந்தனவேலைகளெரிந்தனவிலங்கல்
ஊடெரிந்தனவூழியினெரிந்தனவுலகம். (எங)

படங்கொள்பாம்பணை துறந்தவற்கிளையவன்பகழி
விடங்கொள்வெள்ளத்தின்மேலனவருவனவிலக்கி
இடங்கரோறன்னவெறுழ்வலியரக்கன்றேரீர்க்கும்
மடங்கலையிருநூற்றையுங்கூற்றின்வாய்மடுத்தான். (எச)

தேரழிந்திடச்சேமத்தேர்பிறிதிலன்செறிந்த
ஊரழிந்திடத்தனிநின்றகதிரவனொத்தான்
பாரழிந்ததுகுரங்கெனும்பெயரொனப்பகைத்த
சூரழிந்திடத்துரந்தனன்சுடுசரஞ்சொரிந்தான். (எரு)

அற்றதேர்மிசைநின்றும்போரங்கதனலங்கற்
கொற்றத்தோளினுமிலக்குவன்புயத்தினுங்குளித்து
முற்றவெண்ணிலாமுரட்கணைதுரந்தனன்முரட்போர்
ஒற்றைச்சங்கெடுத்தூதினனுலகெலாமுலைய. (எசு)

சங்கமூதியதசமுகன்றனிமகன்றரித்த
கங்கடப்பெருங்கவசமூடறுத்துடல்கழல
வெங்கடுங்கணையிரண்டுருமெனவீசிச்
சிங்கவேறன்னவிலக்குவன்சிலையைநாணெறிந்தான். (எஎ)

கண்டகார்மழைவண்ணனுங்கமலக்கண்களுழத்
துண்டவெண்பிறைநிலவெனமுறுவலுந்தோன்ற
அண்டமுண்டதன்வாயினலார்மினென்றருள
விண்டதண்டமென்றுலந்திடவார்த்தனர்வீரர். (எஅ)

கண்ணிமைப்பதன்முன்புபோய்விசும்பிடைக்கரந்தான்
அண்ணன்மற்றவனுக்கைகண்டறிந்திலனுதிப்
பண்ணவற்கவன்பிழைக்குமேற்படுக்குநம்படையை
எண்ணமற்றிலையயன்படைதொடுப்பலென்றிசைத்தான். (எகூ)

ஆன்றவன்னதுபுகறலுமறனிலைவழாத
ஈன்றவந்தணன்படைக்கலந்தொடுக்கினிவ்வுலக
மூன்றையுஞ்சுடுமொருவனுன்முடிகிலதென்றான்
சான்றவன்னதுதவிர்ந்தனனுணர்வுடைத்தம்பி. (அ0)

மறைந்துபோய்நின்றவஞ்சனுமவருடைமனத்தை
அறிந்துதெய்வவான்படைக்கலந்தொடுப்பதற்கமைந்தான்
பிறிந்துபோவதேகருமமிப்பொழுதெனப்பெயர்ந்தான்
செறிந்ததேவர்களாவலங்கொட்டினர்சிரித்தார். (அக)

செஞ்சரக்கொடுஞ்சேண்மழைவிசும்பிடைச்செல்ல
மஞ்சின்மாமழையோவியதாமெனமாற
அஞ்சினன்கன்றனென்பதறிந்தனரார்த்தார்
வெஞ்சினந்தருகளிப்பினர்வானரவீரர். (அஉ)

உடைந்தவானரச்சேனையுமோதநீருவரி
அடைந்ததாமெனவந்துடனூர்த்தெழுந்தாடித்
தொடர்ந்துசென்றதுகொற்றநம்பிளவற்குத்தோற்றுன்
கடைந்தவேலைபோற்கலங்குறுமிலங்கையைக்கலந்தான். (அங)

எற்கொணுன்முகன்படைக்கலமிவனொன்மேலெடாமுன்
முற்கொள்வேனெனுமுயற்சியன்மறைமுறைமொழிந்த
சொற்கொள்வேள்வியோய்த்தொடங்குவானமைந்தவன்றுணிவை
மற்கொடோளவருணர்ந்திலரமர்த்திறமறந்தார். (அச)

அநுமனங்கதன்றேளினின்றிழிந்தனராகித்
தநுவும்வெங்கணைப்புட்டிலுங்கவசமுந்தடக்கைக்
கினியகோதையுந்துறந்தனரிருந்தனரிமையோர்
பனிமலர்த்தொகைபொழிந்தனர்வாழ்த்தொலிபரப்பி (அரு)

ஆர்த்தசேனையினமலைபோய்விசும்பினையலைக்க
ஏர்த்ததேரொடுங்கடிதுசென்றுனன்றவ்விரவி
தீர்த்தன்மேலவன்றிசைமுகன்படைக்கலஞ்செலுத்தப்
பார்க்கிலேன்முந்திப்படுவலென்பானெனப்பட்டான். (அசு)

இரவுநன்பகலும்பெருநெடுஞ்சமமியற்றி
உரவுநன்படைமெலிந்துளதருந்துதற்குணவு
வரவுதாழ்த்ததுவீடணவல்லையினேகித்
தரவுவேண்டினனென்றனன்றுமரைக்கண்ணன். (அஎ)

இன்னதேகடிதியற்றுவெனெனக்கடிதெழுந்தான்
பொன்னின்மோலியன்வீடணன்றமரொடும்போனுன்
கன்னலொன்றினேர்கலிகிலைவேலையைக்கடந்தான்
அன்னவேலையினிராமனீதிளையவற்கறைந்தான். (அஅ)

தெய்வவான்பெரும்படைகட்குவரன்முறைதிருத்தி
மெய்கொள்பூசனையியற்றினம்விடுவதுவிதியால்
ஐயநான்வையியற்றினென்வருவதோரளவும்
கைகொள்சேனையைக்காவென்றுபோர்க்களங்கடந்தான். (அகூ)

தந்தையைக்கண்டுபுகுந்துளதன்மையுந்தன்மேல்
முந்தைநான்முகன்படைக்கலந்தொடுக்குற்றமுறையும்
சிந்தையுட்புகச்செப்பினனையவன்றிகைத்தான்
எந்தையென்னினிச்செயத்தக்கதாமெனவிசைத்தான். (கூ0)

தன்னைக்கொல்லியதுணிவோற்றனக்கதுதகுமே
முன்னர்க்கொல்லியமுயல்வதென்றறிஞரோமொழிந்தார்
அந்நற்போரவரறிவுறுவகைமறைந்தயன்றன்
மின்னற்போர்ப்படைவிடுவதேநலமிதுவிதியால், (கூக)

தொடுக்கின்றேனென்பதுணர்வரோலப்படைதொடுத்தே
தடுப்பர்காண்பரோற்கொல்லவும்வல்லரத்தவத்தோர்
இடுக்கொன்றுகின்றதில்லைநல்வேள்வியையியற்றி
முடிப்பெனன்னவர்வாழ்வையோர்கணத்தென்றுமுடித்தான். (௯௨)

என்னையன்னவர்மறந்தனர்நின்றிகலியற்றத்
துன்னுபோர்ப்படைமுடிவிலாதவர்வயிற்றூண்டிப்
பின்னைநின்றதுபுரிவெனென்றனையவன்பேச
மன்னனின்றவம்மகோதரற்கிம்மொழிவழங்கும். (௯௩)

வெள்ளநூறுடைவெஞ்சினச்சேனையைவீர
அள்ளிலைப்படையகம்பனைமுதலியவரக்கர்
எள்ளிலெண்ணிலார்தம்மொடுவிரைந்தனையேகிக்
கொள்ளைவெஞ்செருவியற்றுதிமனிசரைக்குறுகி. (௯௪)

மாயையொன்றலவல்லனயாவையும்வழங்கித்
தீயிருட்பெரும்பிழம்பினையறிவறத்திருத்தி
நீயொருத்தனேயுலகொருமூன்றையுமிர்வாய்
போயுருத்தவருயிர்குடித்துதவெனப்புகன்றான். (௯௫)

என்றகாலையினென்றுகொலேவுவதென்று
நின்றவாளெயிற்றரக்கனுமுவகையினிமிர்ந்தான்.
ஒன்றுதேர்மிசையேறினனிராக்கதருருத்தார்
குன்றுசுற்றியமதகரிக்குலமன்னகுறியார். (௯௬)

கோடிகோடிநூறுயிரவாயிரங்குறித்த
ஆடல்யானைகளணிதொறுமணிதொறுமமைத்த
ஓடுதேர்க்குலமுலப்பிலவோடிவந்துற்ற
ஆடன்மாப்பரிகணக்கையுங்கடந்தவந்தடைந்த. (௯௭)

படைக்கலன்களும்பருமணிப்பூண்களும்பருவாய்
இடைக்கலந்தனவெயிற்றிளம்பிறைகளுமெறிப்பப்
புடைப்பரந்தனவெயில்களுநிலாக்களும்புரள
விடைக்குலங்கள்போல்விராக்கதப்பதாதியுமிடைந்த. (௯௮)

கொடிக்குழீஇயனகொழுந்தெடுத்தெழுந்துமேற்கொள்ள
இடிக்குழீஇயனமழைப்பெருங்குலங்களையிரித்த
அடிக்குழீஇயிடமிடந்தொறும்பிதிர்ந்தெழுந்தார்த்த
பொடிக்குழீஇயண்டம்படைத்தவன்கண்ணையும்புதைத்த. (௯௯)

யானையென்றமாமலையினின்றிழிதருமருவி
வானயாறுகள்வாசிவாய்நுரையொடுமயங்கிக்
கானமாமரங்கல்லொடுமீர்த்தனகடிதில்
போனபோதரும்பெருமையபுணரியுட்புக்க. (௪௦௦)

தடித்துமின்குலம்விசும்பிடைத்தயங்குவசலத்தின்
மடித்தவாயினர்வாளெயிற்றரக்கர்தம்வலத்தின்
பிடித்ததம்படைவிதிர்த்திடவிதிர்த்திடப்பிறழ்ந்து
பொடித்தவெம்பொறிகொதித்துமேற்போவனபோன்ற. (க0க)

சொன்னநூறுடைவெள்ளமொன்றிராவணன்றுரந்த
அன்னசேனையைவாயினூடுமிழ்கின்றவமைதி
முன்னம்வேலையைமுழுவதுங்குடித்தவம்முறையீ
தென்னவிட்டுமிழ்தமிழ்முனியொத்ததவ்விலங்கை. (க0உ)

சங்கபேரியுந்தாளமுங்காளமுந்தலைவர்
சிங்கநாதமுஞ்சிலையினுனொலிகளுஞ்சினமாப்
பொங்குமோதையும்புரவியினோதையும்பொலந்தேர்
வெங்கணோலமுமாலெனவிழுங்கியவுலகை. (க0௩)

புக்கதாற்பெரும்போர்ப்படைபறந்தலைப்புறத்தில்
தொக்கதானெடுவானரத்தானையுந்துவன்றி
ஒக்கவார்த்தனவுறுக்கினதெழித்தனவுருத்த
மிக்கவான்படைவிடுகணைமாமழைவிலக்கி. (க0௪)

குன்றுகோடியுங்கோடிமேற்கோடியுங்குறித்த
வென்றிவானரவீரர்தம்முகந்தொறுமிலங்க
ஒன்றிநால்வருமைவருமிாக்கதருலந்தார்
பொன்றிவீழ்ந்தனபொருகரிபாய்பரிபொலந்தேர். (க0௫)

மழுவும்பாலமும்வலயமுநாஞ்சிலும்வாளும்
எழுவுமீட்டியுந்தோட்டியுமெழுமுளைத்தண்டும்
கழுவும்வேலொடுகணையமும்பகழியுங்காக்கக்
குழுவினோடும்பட்டுருண்டனவானரக்குலங்கள். (க0௬)

முற்கரங்களுமுசுண்டியுமுசலமுமுளையும்
சக்கரங்களும்பிண்டிபாலத்தொடுதண்டும்
கற்பணங்களுங்கணையமுங்கவண்விடுகல்லும்
வெற்பினங்களைநொறுக்கினகவிக்குலம்வீழ்த்த. (க0௭)

கதிரயிற்படைக்கலம்வரன்முறைமுறைகடாவ
அதிர்பிணப்பெருங்குன்றுகள்படப்படவழிந்த
உதிரமுற்றபேராறுகடிசைத்திசையோட
எதிர்நடக்கிலகவிக்குலமரக்கருமியங்கார். (க0௮)

யாவருங்கிகல்வானரமாயினரொவரும்
தேவராகலினவருடன்விசும்பிடைத்திரிந்தார்
மேவுகாதலின்மெலிவுறுமரம்பையர்விரும்பி
ஆவியொன்றிடத்தழுவினர்பிரிவிலேயகன்றார். (க0௯)

சரக்குமாயமும்வஞ்சமுங்களவுமேசுடனு
இரக்கமேமுதற்றருமத்தினெறிக்கென்றுமிழியா
அரக்கரைப்பெருந்தேவர்களாக்கினவமலன்
சரத்தின்மேலினிப்பவித்திரமுளவெனத்தகுமே. (௧௧0)

அந்தகன்பெரும்படைக்கமலமந்திரத்தமைந்தான்
இந்துவெள்ளெயிற்றரக்கரும்யானையுந்தேரும்
வந்துவந்துயர்வானகமிடம்பெருவண்ணம்
சிந்தினன்சரமிலக்குவன்முகந்தொறுந்தெரிந்தான். (௧௧௧)

கும்பகன்னனுண்டிட்டதுவயிரவான்குன்றின்
வெம்புவெஞ்சுடர்விரிப்பதுதேவரைமேனாள்
அம்பையின்றலைதுரந்ததுசுடர்மணித்தண்டொன்
றிம்பர்ஞாலத்தைத்தடுப்பதுமாருதியெடுத்தான். (௧௧௨)

வேறு.

காற்றன்றிதுகனலன்றெனவிமையோரிடைகாணு
ஏற்றங்கடுவிசையோடுயர்கொலைநீடியவியல்பால்
சீற்றந்தனதுருவாயிடைதேறுதவொர்மாறுய்க்
கூற்றங்கொடுமுனைவந்தெனக்கொன்றுனிகனின்றுன். (௧௧௩)

வெங்கண்மதமலைமேல்விரைபரிமேல்விடுதேர்மேல்
சங்கந்தருபடைவீரர்களுடன்மேலவர்தலைமேல்
எங்கும்முளனொருவன்னெனவிருநான்மறைதெரியும்
செங்கண்ணவனிவனேயெனத்திரிந்தான்கலைதெரிந்தான். (௧௧௪)

கிளர்ந்தாரையுங்கிடைத்தாரையுங்கிழித்தான்கனல்விழித்தான்
களர்ந்தானொருகுழம்பாம்வகையரைத்தானுருக்கரைத்தான்
வளர்ந்தானிலையுணர்ந்தாருலகொருமூன்றையும்வலத்தால்
அளந்தானுமுன்னிவனேயெனவிமையோர்களுமயிர்த்தார். (௧௧௫)

மத்தக்கரிநெடுமத்தகம்வகிர்பட்டுகமணிமேல்
வித்தப்பொலிமுழுமேனியன்மழைவிண்டொடுமெய்யன்
ஒத்தக்கடையுகமுற்றழிவுறுகால்பொரவுடுவின்
தொத்துப்பொலிகனகக்கிரிவெயில்சுற்றியதொத்தான். (௧௧௬)

இடித்தானிலம்விசும்போடெனவிட்டானடியெழுந்தான்
பொடித்தான்கடற்பெருஞ்சேனையைப்பொலந்தண்டுதன்வலத்தால்
பிடித்தான்மதகரிதேர்முதற்பரியாவையும்பிழைப்ப
அடித்தானுயிர்குடித்தானெடுத்தார்த்தான்பகைதீர்த்தான். (௧௧௭)

நூறுயிரமதமால்கரியொருநாழிகைநுவல்போ
தாறுநெடுங்கடுஞ்சோரியிற்சேறும்வகையாப்பான்
ஏறுயிரமெனலாவெழுவயவீரரையிடறித்
தேறுதுறுகொலைமேவியதிசையானையிற்றிரிந்தான். (௧௧௮)

தேரேறினர்பரியேறினர்விடையேறினர்சினவெங்
காரேறினர்மழையேறினர்கலையேறினர்பலவும்
போரேறினர்புகழேறினர்புகுந்தார்புடைவளைந்தார்
நேரேறினர்விசும்பேறிடநெரித்தான்கதைதிரித்தான். (௧௬௯)

வேறு.

அரிகுலமன்னனீலனங்கதன்குமுதன்சாம்பன்
பருவலிப்பனசனென்றிப்படைத்தொழில்வீரர்யாரும்
பொருசினந்திருகிவென்றிப்போர்க்களமுயங்கிப்புக்கார்
ஒருவனையொருவர்காணாருயர்படைக்கடலினுள்ளார். (௧௭0)

தொகும்படையவுணர்வெள்ளந்துறைத்துறையள்ளித்தூவி
நகம்படையரக்கர்க்கொல்லுநரசிங்கநடந்ததென்ன
மிகும்படைக்கடலுட்செல்லுமாருதிவிரவூழ்க்கை
அகம்பனைக்கிடைத்தான்றண்டாலரக்கனாயனைக்குங்கையான். (௧௭௧)

மலைப்பருங்கழுதையைஞ்ஞூற்றிரட்டியான்மனத்திற்செல்லும்
தலைத்தடந்தேரன்வில்லன்றாருகனென்னுந்தன்மைக்
கொலைத்தொழிலவுணன்பின்னையிராக்கதவேடங்கொண்டான்
சிலைத்தொழிற்குமரன்கொல்லத்தொலைநாட்செருவிற்றீர்ந்தான். (௧௭௨)

பாகசாதனனுமற்றைப்பகையடுதிகிரிபற்றும்
ஏகசாதனனுமூன்றுபுரமும்பண்டெரித்துளானும்
போகதாமொருவர்மற்றிக்குரங்கொடுபொரக்கற்றாரே
ஆககூற்றாவியுண்பதிதனிற்பெற்றாகுமென்றான். (௧௭௩)

யான்றடேனென்னின்மற்றிவ்வெழுதிரைவளாகமென்னும்
வான்றடாதரக்கரென்னும்பெயரையுமாய்க்குமென்னா
ஊன்றோடாநின்றவாளிமழைதுரந்துருத்துச்சென்றான்
மீன்றோடாநின்றதிண்டோளநுமனும்விரைவின்வந்தான். (௧௭௪)

தேரொடுகளிறுமாவுமரக்கருநெருக்கித்தெற்றிக்
காரொடுகனலுங்காலுங்கிளர்ந்ததோர்காலமென்ன
வாரொடுதொடர்ந்தபைம்பொற்கழலினான்வருதலோடும்
சூரொடுதொடர்ந்ததண்டைச்சுழற்றினான்வயிரத்தோளான். (௧௭௫)

எற்றினவெறிந்தவல்லையேயினவெய்தபெய்து
முற்றினபடைகள்யாவுமுறைமுறைமுறிந்துசிந்தச்
சுற்றினன்வயிரத்தண்டாற்றுகைத்தனனமரார்துள்ளக்
கற்றனனன்றுகற்றான்கதையினால்வதையின்கல்வி. (௧௭௬)

அகம்பனுங்காணக்காணவையிருகோடிகைம்மா
முகம்பயில்கலினப்பாய்மாமூலையெயிற்றாளியீட்டம்
நுகம்பயிறேரினோடுநூறினானூழிதீர்த்தான்
உகம்பெயருழிக்காற்றினுலவினான்மேருவொப்பான். (௧௭௭)

இன்றிவன்றன்னைவிண்ணினேற்றிவாளிலங்கைவேந்தை
வென்றியனுக்கிமற்றைமனிசரைவெறியராக்கி
நின்றுழிநெடியதுன்பமமரர்பானிறுப்பலென்னாச்
சென்றனனரக்கனன்றுவருகெனவவனுஞ்சேர்ந்தான். (௧௨௮)

படிகளப்பரப்பைநோக்கிப்பாழிவாயதுக்கினூழிற்
சுடுகிளர்புகைவெங்கண்ணிற்றோன்றிடக்கொடித்தேர்தூண்டி
விடுகணைப்படலைமாரிமழையினுமும்மைவீசி
முடுகுறச்சென்றுகுன்றின்முட்டினான்முகிலினார்ப்பான். (௧௨௯)

சொரிந்தனபகழிமாரிதோளினுமார்பின்மேலும்
தெரிந்தனவசனிபோலத்தெறுபொறிபிதிர்வதிக்கின்
வரிந்தனவெருவைமானச்சிறைகளாலமரர்மார்பை
அரிந்தனவடிம்புபொன்கொண்டமைந்தனவாகுங்கண்ண. (௧௩௦)

மார்பினுந்தோளின்மேலும்வாளிவாய்மடுத்தவாயில்
சோர்பெருங்குருதிகக்கித்தொன்னிறஞ்சிவந்துதோன்றத்
தேரிரண்டருகும்பூண்டகழுதையுமச்சுஞ்சிந்தச்
சாரதிபுரளவீரத்தண்டத்தாற்றண்டஞ்செய்தான். (௧௩௧)

வில்லினாலிவனைவெல்வதரிதெனநிருதன்வெய்ய
மல்லினாலியன்றதோளின்வலியினான்வானத்தச்சன்
கொல்லினாலமைத்ததாண்டோர்கொடுமுனைத்தண்டுகொண்டான்
அல்லினால்வகுத்ததன்னமேனியான்கடலினார்ப்பான். (௧௩௨)

தாக்கினார்வலத்துமற்றையிடத்தினுந்திரிந்தார்சாரி
போக்கினார்தெழிப்பினார்ப்பக்கொட்டினார்கிட்டினார்கீழ்த்
தூக்கினார்சுழற்றினார்மேற்சுற்றினாரொற்றிவெற்றி
நீக்கினாருக்கினார்போய்நெருக்கினார்நீங்கினார்மேல். (௧௩௩)

தட்டினார்தழுவினார்மேற்றாயினார்தரையினோடும்
கிட்டினார்கிடைத்தார்வீசிப்புடைத்தவைகீழுமேலும்
கட்டினார்காத்தாரொன்றுகாண்கிலாரறிவுகண்ணாற்
றொட்டினார்மாதிவட்டமோடினாராதிபோனார். (௧௩௪)

மையொடுபகைத்துநின்றநிறத்தினான்வயிரமார்பில்
பொய்யொடுபகைத்துநின்றகுணத்தினான்புகன்றுமோத
வெய்யவனதனைத்தண்டால்விலக்கினான்விலக்கலோடும்
கையொடுமற்றுமற்றைக்கதைகளங்கண்டதன்றே. (௧௩௫)

கையொடுதண்டுநீங்கக்கடலெனக்கலக்கமுற்ற
மெய்யொடுநின்றவெய்யோன்மிடலுடையிடக்கையோச்சி
ஐயனையலங்கலாகத்தடித்தனனடித்தலோடும்
ஒய்யெனவயிரக்குன்றத்துருமினேறிடித்ததொத்த. (௧௩௬)

அடித்தவன்றன்னைநோக்கியசனியேறனையதண்டு
பிடித்துநின்றேயுமெற்றான்வெறுங்கையான்பிழையிற்றென்று
மடித்தவாயிடத்தகையான்மார்பிடைக்குத்தவாயில்
குடித்துநின்றுமிழ்வானென்னக்கக்கினன்குருதிக்கொள்ளை. (கஙஎ)

மீட்டுமக்கையால்வீசிச்செவித்தலத்தெற்றவீழ்ந்தான்
கூட்டினனுயிரைவிண்ணோர்குழாத்திடையரக்கர்கூட்டம்
காட்டில்வாழ்விலங்குமாக்கள்கோளரிகண்டவென்ன
ஈட்டமுற்றெதிர்ந்தவெல்லாமிரிந்தனதிசைகளெங்கும். (கஙஅ)

மாண்டனனகம்பன்மண்மேன்மடிந்தனநிருதர்சேனை
மீண்டனர்குரக்குவீரர்விழுந்தனசினக்கைவேழம்
தூண்டினகொடித்தேர்மற்றைத்தொளைக்கையம்பொருப்புவாசி
ஆண்டகையிளையவீரனடுசிலைபொழியுமம்பால் (கஙக)

ஆர்க்கின்றகுரலுங்கேளானிலக்குவனசனியேற்றைப்
போர்க்கின்றசிலையினுணின்பேரொலிகேளான்வீரர்
யார்க்கின்னலுற்றதென்றுவுணர்கிலனிசைப்போரில்லைப்
பேரர்க்குன்றமனையதோளானினையதோர்பொருமலுற்றான் (கச0)

வீசினநிருதர்சேனைவேலையுட்டென்மேற்றிக்கின்
ஓசனையேழுசென்றானங்கதனதனுக்கப்பால்
ஆசையினிரட்டிசென்றானரிகுலத்தரசனப்பால்
ஈசனுக்கிளையவீரனிரட்டிக்குமிரட்டிசென்றான். (கசக)

மற்றையோர்நாலுமைந்துமியோசனைமலைந்துபுக்கார்
கொற்றமாருதியும்வள்ளலிலக்குவனின்றகொற்றம்
முற்றினனிரண்டுமூன்றுகாவதமொழியப்பின்னும்
சுற்றியசேனைநீர்மேற்பாசியின்மிடைந்ததுள்ளி. (கசஉ)

இளையவனின்றசூழலெய்துவென்விளைவினென்றோர்
உளைவுவந்துள்ளந்தூண்டவூழிவெங்காலிற்செல்வான்
களைவருந்துன்பநீங்கக்கண்டனனென்பமன்றே
விளைவனசெருவிற்பல்வேறுயினகுறிகண்மேய. (கசங)

ஆனையின்கோடும்பீலித்தழைகளுமாரத்தோடு
மானமாமணியும்பொன்னுமுத்தமுங்கொழித்துவாரி
மீனெனவங்குமிங்கும்படைக்கலமிளிரவீசும்
யேனம்வெண்குடையினுயகுருதிப்பேராறுகண்டான். (கசச)

ஆசைகடோறுஞ்சுற்றியிலக்கின்றவரக்கர்தம்மேல்
வீசினகணைகளற்றதலையொடும்விசும்பைமுட்டி
ஓசையினுலகமெங்குமுதிர்கின்றவூழிநாளில்
காசறுகல்லின்மாரிபொழிவபோல்விழுவகண்டான். (கசரு)

மானவேலரக்கர்விட்டபடைக்கலம்வானமாரி
ஆனவொண்பகழிசிந்தத்திசையொடும்பொறியோடெற்ற
மீனினம்விசும்பினின்றுமிருளுகவீழுமாபோல்
கானகந்தொடர்ந்ததீயிற்சுடுவனபலவுங்கண்டான். (கசசு)

அருளுடைக்குரிசில்வாளியந்தரமெங்குந்தாமாய்த்
தெருளுறுத்தருத்துவீசிச்செல்வனதேவர்காண
இருளுடைச்சுடலையாடுமெண்புயத்தண்ணல்வண்ணச்
சுருளுடைச்சடையின்கற்றைச்சுற்றெனச்சுடர்வகண்டான். (கசஎ)

செய்யுறக்கொளுத்தப்பட்டநெருப்பெனப்பொருப்பினெங்கும்
மெய்யுறக்குருதித்தாரைவிசும்புறவிளக்குகின்ற
ஐயனிக்கங்குன்மாலையானெனவறிந்துகாலம்
கைவிளக்கெடுத்ததென்னக்கவந்தத்தின்கணங்கள்கண்டான். (கசஅ)

ஆளெலாமிழந்ததேருமானையுமாடன்மாவும்
நாளெலாமெண்ணினாலுந்தொலைவிலாநாதரின்றித்
தாளெலாங்குலையவோடித்தீர்வனதாங்கலாற்றும்
கோளிலாமுன்னனாட்டுக்குடியெனக்குலைவகண்டான். (கசகூ)

மிடல்கொடுபகழிமாரிவானினுமும்மைவீசி
மடல்கொளுமலங்கன்மார்பன்மலைந்திடவுலைந்துமாண்டார்
உடல்களுமுதிரநீருமிடைபடைக்கலமுமுற்ற
கடல்களுநெடியகானுங்கார்தவழ்மலையுங்கண்டான். (கரு0)

சுழித்தெறியூழிக்காற்றிற்றுருவினன்றொடருந்தோன்றல்
தழிக்கொடுகுருதிவேலைதாவுவான்றனிப்பேரண்டம்
கிழித்ததுகிழித்ததென்னுநாணுருமேறுகேட்டான்
அழித்தொழிகாலத்தார்க்குமார்கலிக்கிரட்டியார்த்தான். (கருக)

ஆர்த்தபேரமலைகேளாவணுகினனநுமனெல்லார்
வார்த்தையுங்கேட்கலாகுமென்றகமகிழ்ந்துவள்ளல்
பார்ப்பதன்முன்னம்வந்துவணங்கினன்விசயப்பாவை
தூர்த்தனையிளையவீரன்றழுவினனினையசொன்னான். (கருஉ)

அரிகுலவீரரையயாண்டையாரருக்கன்மைந்தன்
பிரிவினைச்செய்ததெங்கேயங்கதன்பிரிந்ததெங்கே
விரிதிருட்பரவைச்சேனைவெள்ளத்துவிளைந்ததொன்றும்
தெரிகிலெனுரைத்தியென்னச்சென்னிமேற்கையன்சொன்னான். (கருங)

போயினர்போனவாறும்போயினதன்றிப்போரின்
ஆயினாராயதொன்றுமறிந்திலெனையயாரும்
மேயினன்மேயபோதேதெரிவுறும்விளைந்ததென்றுன்
தாயினன்வேலையோடுமைந்திரப்பரவைதன்னை. (கருச)

மந்திரமுளதாலையவுணர்வுறுமாலைத்தஃதுன்
சிந்தையினுணர்ந்துசெய்யற்பாற்றெனிற்செய்திதெவ்வர்
தந்திரமிதனைத்தெய்வப்படைகளாற்சமைப்பினல்லால்
எந்தையுன்னடியர்யாருமெய்தலருன்னையென்றான். (௧௫௫)

அன்னதுபுரிவெனென்னாவாயிரநாமத்தண்ணல்
தன்னையேவணங்கிவாழ்த்திச்சரங்களைத்தெரிந்துதாவில்
பொன்மலைவில்லினான்றன்படைக்கலம்பொருந்தப்பற்றி
மின்னெயிற்றரக்கர்தம்மேல்வீசினான்வில்லின்செல்வன். (௧௫௬)

முக்கணான்படையைமூட்டிவிடுதலுமூங்கிற்காட்டில்
புக்கதோரூழித்தீயிற்புறத்தினோருருவும்போகா
தக்கணத்தெரிந்துவீழ்ந்ததரக்கர்தஞ்சேனையாழித்
திக்கெலாமிருளுந்தீர்ந்ததேவருமயக்கந்தீர்ந்தார். (௧௫௭)

தேவர்தம்படையைவிட்டானென்பதுசிந்தைசெய்யா
மாபெருந்தேரினின்றமகோதரன்மறையப்போனான்
ஏவரும்பிரிந்தாரெல்லாமினமழையிரியவார்த்துக்
கோவிளங்களிற்றைவந்துகூடினாராடல்கண்டார் (௧௫௮)

யாவர்க்குந்தீதிலாமைகண்டுவந்துவகையேறத்
தேவர்க்குந்தேவன்றம்பிதிருமனத்தையந்தீர்ந்தான்
காவற்போர்க்குரங்கின்சேனைகடலெனக்கடந்துபுல்லப்
பூவர்க்கமிமையோர்தூவப்பொலிந்தனர்தூதர்போனார். (௧௫௯)

இலங்கையர்கோனையெய்தியெய்தியதுரைத்தார்நீவிர்
விலங்கினிர்போலும்வெள்ளநூற்றையோர்வில்லின்வேழக்
குலங்களினோடுங்கொல்லக்கூடுமோவென்னக்கொன்றை
அலங்கலான்படையினென்றானன்னதேலாகுமென்றான். (௧௬0)

தோட்டவிழலங்கலென்சேய்க்குணர்த்துமினென்னச்சொன்னான்
ஓடினார்சாரர்வல்லையுணர்த்தினர்துணுக்கமெய்தா
ஆடவர்திலகன்யாண்டையானிகலனுமனேனோர்
வீடணன்யாங்கணுள்ளானுணர்த்துமின்விரைவினென்றான். (௧௬௧)

வந்திலனிராமன்வேறோர்மலையுளானுந்தைமாயம்
தந்தனிர்வான்போனானுண்பனதாழ்ப்பத்தாழா
தெந்தையீதியன்றதென்றார்மகோதரன்யாண்டையென்றான்
அந்தரத்திடையானென்னவிராவணியழகிற்றென்றான். (௧௬௨)

வேறு.

காலமீதெனக்கருதியவிராவணன்காதல்
ஆலமாமனோன்றினைவிரைவினினடைந்தான்
மூலவேள்விக்குவேண்டுவகலப்பைகண்முறையால்
கூலநீங்கியவிராக்கதப்பூசுரர்கொணர்ந்தார். (௧௬௩)

அம்பினாற்பெருஞ்சமிதைகளமைத்தனனவ்வில்
அம்பைமாமலரிட்டனன்காரியெட்சொரிந்தான்
கொம்புபல்லொடுகரியவெள்ளாட்டிருங்குருதி
வெம்புவெந்தசைமுறையினிட்டெண்ணெயால்வேட்டான். (௧௬௪)

வலஞ்சுழித்துவந்தெழுந்தெரிநறுவிரைவழங்கி
நலஞ்சுரந்தனபெருங்குறிமுறைமையினல்கக்
குலஞ்சுரந்தெழுகொடுமையானிறையினிற்கொண்டே
நிலஞ்சுரந்தமாவென்றியென்றும்பரினிமிர்ந்தான். (௧௬௫)

விசும்புபோயினன்மாயையின்பெருமையான்மேலைப்
பசும்பொனாட்டவர்நாட்டமுமுள்ளமும்படரா
அசும்புவிண்ணிடையடங்கினன்முனிவருமறியார்
தசும்புநுண்ணெடுங்கோளொடுகாலமுஞ்சார. (௧௬௬)

அனையனின்றனனவ்வழிமகோதரனறிந்தோர்
வினையமெண்ணினனிந்திரன்வேடத்தைமேவித்
துனைவலத்தவைராவதத்தெருத்தின்மேற்றோன்றி
முனைவர்வானவரோடும்போரதுசெயமூண்டான். (௧௬௭)

அரக்கர்மானுடர்குரங்கெனுமவையெலாமல்லா
உருக்கள்யாவுளவுயிரொடவுலகத்தினுழல்வ
தருக்குபோர்க்குடன்வந்துளவாமெனச்சமைத்தான்
வெருக்கொளப்பெருங்கவிப்படைகுலைந்ததுவிலங்கி. (௧௬௮)

கோடுநான்குடைப்பாணிறக்குன்றமேற்கொண்டான்
ஆடலிந்திரனல்லவர்யாவருமமரர்
சேடர்சிந்தனைமுனிவர்களமரர்கள்சேறி
ஊடுவந்துற்றதென்கொலோநிபமெனவுலைந்தார். (௧௬௯)

அநுமன்வான்முகநோக்கினனாழியையகற்றித்
தநுவலங்கொண்டதாமரைக்கண்ணவன்றம்பி
முனிவர்வானவர்முனிந்துவந்தெய்தயாமுயன்ற
துனியதென்கொலோசொற்றியிதுணர்ந்தெனச்சொன்னான். (௧௭௦)

இன்னகாலையினிலக்குவன்மேனிமேலெய்தான்
முன்னைநான்முகன்படைக்கலமிமைப்பதன்முன்னம்
பொன்னின்மால்வரைக்குரீஇனமொய்ப்பதுபோலப்
பன்னலாந்தரமல்லனசுடர்க்கணைபாய்ந்த. (௧௭௧)

கோடிகோடிநூறாயிரஞ்சுடர்க்கணைக்குழாங்கள்
மூடிமேனியைமுற்றுறச்சுற்றுறமூழ்க
ஊடுசெய்வதொன்றுணர்ந்திலனுணர்வுபுக்கொடுங்க
ஆடன்மாக்கரிசேவகமமைந்தெனவசந்தான். (௧௭௨)

அநுமனிந்திரன்வந்தவனேகொலிதமைந்தான்
இனியெனெற்றுவென்களிற்றினோடெடுத்தெனவெழுந்தான்
தநுவினாயிரகோடிவெங்கடுங்கணைதைக்க
நினைவுஞ்செய்கையுமறந்துபோய்நெடுநிலஞ்சேர்ந்தான். (கஎங)

அருக்கன்மாமகனுடக்குன்றமொன்றலர்ந்த
முருக்கின்கானகமாமெனக்குருதிநீர்முடுகத்
தருக்கிவெஞ்சரந்தலைத்தலைமயங்கினதைக்க
உருக்குசெம்பன்னகண்ணினனெடுநிலமுற்றான். (கஎச)

அங்கதன்பதினாயிரமயிற்கணையழுந்தச்
சிங்கவேறிடியுண்டெனநெடுநிலஞ்சேர்ந்தான்
சங்கமேறியபெரும்புகழ்ச்சாம்பனுஞ்சாய்ந்தான்
துங்கமார்பையுந்தோளையும்வடிக்கணைதொளைக்க. (கஎரு)

நீலனாயிரம்வடிக்கணைநிறம்புகநெருங்கக்
காலனார்முகங்கண்டனனிடவன்விண்கலந்தான்
ஆலமேயன்னபகழியாற்பனசனுமசந்தான்
கோலின்மேவியகூற்றினாற்குமுதனுங்குறைந்தான். (கஎசு)

வேலைதட்டவனாயிரம்பகழியால்வீழ்ந்தான்
வாலிநேர்வலிமயிந்தனுந்துமிந்தனுமடிந்தார்
காலின்வெந்தொழிற்கவயனும்வானகங்கண்டான்
மாலைவாளியிற்கேசரிமண்ணிடைமடிந்தான். (கஎஎ)

விந்தமன்னதோட்சதவலிசுடேடணன்வீந்தார்
கெந்தமாதனனிடும்பன்வன்றதிமுகன்கிளரா
உந்துவார்கணைகோடிதம்முடலமுற்றொளிப்பத்
தந்தநல்லுணர்வொடுங்கினர்மண்ணுறச்சாய்ந்தார். (கஎஅ)

மற்றைவீரர்கள்யாவரும்வடிக்கணைமழையால்
முற்றும்வீழ்ந்தனர்முழங்குபேருதிரத்தின்முந்நீர்
எற்றும்வான்றிரைக்கடலொடும்பொருதுசென்றேற
ஒற்றைவார்கணையாயிரங்குரங்கினையுருட்ட. (கஎகூ)

தலைத்துவைத்ததுசதுமுகன்பெரும்படைதள்ளி
ஒளிக்கமற்றொருபுகலிடமுணர்கிலவுருமின்
வளைத்துவீத்தியவாளியான்மண்ணொடுந்திண்ண
முளைப்புடைத்தனவாமெனவானரமுடிந்த (கஅ0)

குவளைக்கண்ணிணைவானரமடந்தையர்கொட்டித்
துவளப்பாரிடைக்கிடந்தனர்குருதிநீர்சுற்றித்
திவளக்கீழொடுமேற்புடைப்பரந்திடைசெறியப்
பவளக்காடுடைப்பாற்கடலொத்ததப்பரவை. (கஅக)

விண்ணிற்சென்றதுகவிக்குலப்பெரும்படைவெள்ளம்
கண்ணிற்கண்டனர்வானவர்விருந்தெனக்கலந்தார்
உண்ணிற்கும்பெருங்களிகளோடளவளாயுகந்தார்
மண்ணிற்செல்லுதிரிக்கண்த்தேயெனவலித்தார். (கஅஉ)

பார்படைத்தவன்படைக்கொருபூசனைபடைத்திர்
நீர்படக்கடவீரலிர்வரிசிலைநெடியோன்
பேர்படைத்தவரடியவரடியரும்பெறுவர்
வேர்படைத்தவெம்பிறவியாற்றுவக்கொணுவீடு. (கஅங)

நங்கள்காரியமியற்றுவானிலத்திடைநடந்திர்
உங்களாருயிரொம்முயிருடல்பிறிதற்றீர்
செங்கணுயகற்காகவெங்களத்திடைத்தீர்ந்திர்
எங்கணுயகர்நீவிரொன்றிமையவரிசைத்தார். (கஅச)

வெங்கண்வானரக்குழுவினோடிலக்குவன்விளிந்தான்
இங்குவந்திலனகன்றனனிராமனென்றிகழ்ந்தான்
சங்குமூதினன்றுதையைவல்லையிற்சார்ந்தான்
பொங்குபோரிடைப்புகுந்துளபொருளெலாம்புகன்றான். (கஅரு)

இறந்திலன்கொலவ்விராமனென்றிராவணனிசைத்தான்
துறந்துநீங்கினனல்லனேற்றம்பியைத்தொலைத்துச்
சிறந்தநண்பரைக்கொன்றுதன்சேனையைச்சிதைக்க
மறந்துநிற்குமோமற்றவன்திறமென்றான்மதலை. (கஅசு)

அன்னதேயெனவரக்கனுமாதரித்தமைந்தான்
சொன்னமைந்தனுந்தன்பெருங்கோயிலைத்தொடர்ந்தான்
மன்னனுணையான்மகோதரன்போயினன்வந்தான்
என்னையாளுடைநாயகன்வேறிடத்திருந்தான். (கஅஎ)

செய்யதாமரைநாண்மலர்க்கைத்தலஞ்சேப்பத்
துய்யதேவர்தம்படைக்கெலாமுறைமுறைதூக்கும்
மெய்கொள்பூசனைவிதிமுறையியற்றிமேல்வீரன்
மொய்கொள்போர்க்களத்தெய்துவாமினியெனமுயன்றான். (கஅஅ)

கொள்ளியிற்சுடரனலியின்பகழிகைக்கொண்டான்
அள்ளிநுங்கலாமாரிருட்பிழம்பினையழித்தான்
வெள்ளவெங்களப்பரப்பினிற்பொருக்கெனவிழித்தான்
தள்ளித்தாமரைச்சேவடிநுடங்குறத்தளர்ந்தான். (கஅக)

நோக்கினன்பெருந்திசைதொறுமுறைமுறைநோக்கித்
தூக்கினன்றடந்தாமரைத்திருமுகத்துதிரம்
போக்கினனிணைப்பங்கயமழுவத்துப்புக்கான்
காக்கும்வன்றுணைத்தலைவரைத்தனித்தனிக்கண்டான். (கக0)

சுக்கிரீவனைநோக்கித்தன்றுமரைத்துணைக்கண்
உக்கநீர்த்திரளொழுகிடநெடிதுநின்றுயிர்த்தான்
தக்கதோவிதுநினக்கெனத்தனிமனந்தளர்ந்தான்
பக்கநோக்கினன்மாருதிதன்மையைப்பார்த்தான். (௧௯௧)

கடர்கடந்துபுக்கரக்கரைக்காலொடுகலக்கி
இடர்கடந்துநானிருக்கநீயெய்தியதிதற்கோ
உடர்கடந்தனவோவுன்னையரக்கன்வில்லுதைத்த
அடர்கடந்தபோர்வாளியென்றுகுலித்தழுதான். (௧௯௨)

முன்னைத்தேவர்தம்வரங்களுமுனிவர்தம்மொழியும்
பின்னைச்சானகியுதவியும்பிழைத்தனபிறந்த
புன்மைச்செய்தொழிலென்வினைக்கொடுமையாற்புகழோய்
என்னைப்போல்பவர்யாருளரொருவரென்றிசைத்தான். (௧௯௩)

புன்றொழிற்புலையரசினைவெஃகினென்பூண்டேன்
கொன்றொருக்கினென்றதையைச்சடாயுவைக்குறைத்தேன்
இன்றொருக்கினேனிங்கனேயீனையுமிருந்தேன்
வன்றொழிற்கொருவரம்புமுண்டாய்வரவற்றே. (௧௯௪)

தமையனைக்கொன்றுதம்பிக்குவானரத்தலைமை
அமையநல்கினெனடங்கலுமவிப்பதற்கமைந்தேன்
கமைபிடித்துநின்றுங்களையித்துணைகண்டேன்
சுமையுடற்பொறைசுமக்கவந்தேனெனச்சொன்னான். (௧௯௫)

விடைக்குலங்களினடுவணோர்விடைகிடந்தென்னக்
கடைக்கண்டீயுகுமங்கதக்களிற்றினைக்கண்டான்
படைக்கலக்கடல்சுமக்கின்றபதகனேன்பழிபார்த்
தடைக்கலப்பொருள்காத்தவாறழகிதென்றழுதான். (௧௯௬)

உடலிடைத்தொடர்பகழியனொளிர்கதிர்க்கற்றை
சுடருடைப்பெருங்குருதியிற்பாம்பெனச்சுமந்த
மிடலுடைப்பணைமீமிசைத்தான்பண்டைவெள்ளக்
கடலிடைத்துயில்வானன்னதம்பியைக்கண்டான். (௧௯௭)

பொருமினனகம்பொங்கினனுயிர்முற்றும்புகைந்தான்
குருமணித்திருமேனியுமன்னவாகுலைந்தான்
தருமநின்றுதன்கண்புடைத்தலம்வரச்சாய்ந்தான்
உருமினுலிடியுண்டதோர்மராமரமொப்பான். (௧௯௮)

உயிர்த்திலன்னொருநாழிகையுணர்ந்திலனென்றும்
வியர்த்திலன்னுடல்விழித்திலன்கண்ணிணைவிண்ணோர்
அயர்த்தனன்கொலென்றஞ்சினரங்கையுந்தாளும்
பெயர்த்திலன்னுயிர்பிரிந்திலன்கருணையிற்பிறந்தான். (௧௯௯)

தாங்குவாரில்லைத்தம்பியைத்தழீஇக்கொண்டதன்னை
வாங்குவாரில்லைவாக்கினாற்றெருட்டுவாரில்லைப்
பாங்கராயுளர்யாவரும்பட்டனர்பட்ட
தீங்குவாலிதுதமியனையார்துயர்தீர்ப்பார். (௨௦௦)

கவந்தபந்தமுங்கழுதுந்தங்கணவரைக்காணார்
சிவந்தகண்ணினர்தேடினர்திரிபவர்திரளும்
உவந்தசாதகத்தீட்டமுமோரியினொழுக்கும்
நிவந்தவல்லதுபிறவில்லைக்களத்திடைநின்ற. (௨௦௧)

வானநாடியர்வயிறலைத்தழுதகண்மழைநீர்
சோனைமாரியிற்சொரிந்தனர்தேவருஞ்சொரிந்தார்
ஏனைநிற்பவுந்திரிபவுமிரங்கினவெவையும்
ஞானநாயகனுருவமேயாகலினடுங்கி. (௨௦௨)

முகையினுண்மலர்க்கிழவற்குமுக்கணன்றனக்கும்
நகையினீங்கியதிருமுகங்கருணையுணலியத்
தொகையுணின்றவர்க்குற்றனசொல்லியென்றொடர்ந்த
பகையும்பார்க்கின்றபாவமுங்கலுழ்ந்ததுபரிவால். (௨௦௩)

அண்ணலுஞ்சிறிதுணர்வினோடயாவுயிர்ப்பணுகிக்
கண்விழித்தனன்றம்பியைத்தெரிவுறக்கண்டான்
விண்ணையுற்றனன்மீள்கிலனென்றகம்வெதும்பாப்
புண்ணினுற்றதோர்வேலன்னதன்மையன்புலம்பும். (௨௦௪)

வேறு.

எந்தையிறந்தானென்றுமிருந்தேனுலகெல்லாம்
தந்தனனென்றுங்கொள்கைதவிர்ந்தேன்றமியல்லேன்
கந்தனிருந்தாய்நீயெனநின்றேனிதுகாணேன்
வந்தனெனையாவந்தனெனெம்பீயினிவாழேன். (௨௦௫)

தாயேநீயேதந்தையுநீயேதவநீயே
சேயோநீயேசெல்வமுநீயேதிருநீயே
போயோநின்றாயென்னையிகழ்ந்தாய்புகழ்பாராய்
நீயோயானோநின்றனெனெஞ்சம்வலிதேயால். (௨௦௬)

ஊறாநின்றபுண்ணுடையாய்பாலுயிர்காணேன்
ஆறாநின்றேனாவிசுமந்தேனழுகின்றேன்
ஏறேயின்னுமுய்யினுமுய்யேனிருகூறாக்
கீறாநெஞ்சம்பெற்றனெனன்றோகெடுவேனான். (௨௦௭)

பயிலுங்காலம்பத்துடனாலும்படர்கானத்
துயில்கின்றேனுக்காவனநல்கியயிலாதாய்
வெயிலென்றுன்னாய்நின்றுதளர்ந்தாய்மெலிவெய்தித்
துயில்கின்றாயோவின்றிவுறக்கந்துறவாயோ. (௨௦௮)

அயிராநெஞ்சுமாவியுமொன்றேயெனுமச்சொல்
பயிராவெல்லைப்பாதகனேற்கும்பரிவுண்டோ
செயிராவில்லாவுன்னையிழந்துந்திரிகின்றேன்
உயிராநாளுயாரினியுன்றேடுறவையா. (உ0க)

வேள்விக்கேகிவில்லுமிறுத்தோர்விடமம்மா
மாள்விக்குமென்றெண்ணிலென்முன்னேவருவித்தேன்
சூழ்வித்தென்னைச்சுற்றினரோடுஞ்சுடுவித்தேன்
தாழ்வித்தேனேவித்தனைகேடுந்தருவித்தேன். (உக0)

மண்மேல்வைத்தகாதலின்மாதாமுதலோரைப்
புண்மேல்வைத்ததீயிகர்துன்பம்புகுவித்தேன்
பெண்மேல்வைத்தகாதலினிப்பேறுகள்பெற்றேன்
எண்மேல்வைத்தேனென்புகழ்நன்றாலெளியேனே. (உகக)

மாண்டாய்நீயோயாரொருபோதும்முயிர்வாழேன்
ஆண்டானல்லனந்நிலமந்தோபரதன்றான்
பூண்டாரெல்லாம்பொன்றுவர்துன்பம்பொறையாற்றார்
வேண்டாவோநானல்லறமஞ்சிமெலிவுற்றால். (உகஉ)

சான்றோர்மாதைத்தக்கவரக்கன்சிறைவைக்க
ஆன்றோர்சொல்லுநல்லறமன்னான்வயமானால்
மூன்றாய்நின்றபேருலகொன்றாய்முடியாவேல்
தோன்றாவோவென்வில்வலிவீரத்தொழிலம்மா. (உகங)

அறந்தாய்தந்தைசுற்றமுமுற்றுமவையெல்லாம்
துறந்தாயென்றுமெய்ம்மறவாநீயுடன்வந்து
பிறந்தாயென்னைப்பின்புதொடர்ந்தாய்பிரிவாற்றாய்
இறந்தாயுன்னைக்கண்டுமிருந்தேனெளியேனே. (உகச)

வேலைப்பள்ளக்குண்டகழிக்கும்விராதற்கும்
காலிற்செல்லுங்காகமணிக்குங்கரனுக்கும்
மூலப்பொத்தற்செத்தமரத்தேழ்முதலுக்கும்
வாலிக்கும்மேயாயினவாறென்வலியம்மா. (உகரு)

இருந்தேனேவிவ்விந்திரசித்தேமுதலாய
பெருந்தேரோரைக்கொன்றுபிழைக்கப்பெறுவேனே
வருந்தேனானீவெல்லுமதற்கேவலிகொண்டேன்
பொருந்தேனினிப்புன்பிறவிக்கும்பொறையல்லேன். (உகசு)

மாதாவுந்நஞ்சுற்றமுநாடும்மறையோரும்
ஏதானாரோவென்றுதளர்ந்தேயிறுவாரைத்
தாதாய்காணச்சாலநினைந்தேன்றனைவாழப்
போதாயையாபொன்முடியென்னைப்புனைவிப்பான். (உகஎ)

பாசமுமுற்றச்சுற்றியபோதும்பகையாலே
நாசமுமுற்றபோதுநடந்தேனுடனல்லேன்
நேசமுமற்முர்செய்வனசெய்தேன்றனிநின்றேன்
தேசமுமற்றென்கொற்றநலத்தைத்தெரியாதோ. (உ௧அ)

கொடுத்தேனன்றேவீடணனுக்குக்குலமாள
முடித்தேர்செல்வநான்முடியாதேமுடிகின்றேன்
படித்தேனன்றேபொய்ம்மைகுடிக்கும்பழிபெற்றேன்
ஒடித்தேனன்றேயென்புகழ்நானேயுணர்வற்றேன். (உ௧௯)

என்றென்றேங்கும்விம்முமுயிர்க்கும்மிடையஃகிச்
சென்முன்முன்முடிந்தியமெல்லாஞ்சிறைசெய்து
பொன்றும்மென்னுத்தம்பியையார்வத்தொடுபுல்லி
ஒன்றுந்தேருன்றன்னைமறந்தான்றுயில்வுற்முன். (உஉ0)

கண்டார்விண்ணோர்கண்கள்புடைத்தார்கலுழ்கின்முர்
கொண்டார்துன்பமென்முடிவென்னுக்குலைகின்முர்
அண்டாவையாநங்கள்பொருட்டாலயர்கின்முய்
உண்டோவுன்பாற்றுன்பெனவன்பாலுரைசெய்தார். (உஉ௧)

வேறு.

உன்னையுள்ளபடியறியேமுலகையுள்ளதிறமுள்ளேம்
பின்னையறியேமுன்னறியேமிடையுமறியேம்பிறழாமல்
நின்னைவணங்கிநீவகுத்தநெறியினிற்குமதுவல்லால்
என்னையடியேஞ்செயற்பாலதின்பதுன்பமில்லோனே. (உஉஉ)

அரக்கர்குலத்தையறுத்தெம்மையவலநீக்கியருளாயென்
றிரக்கவெம்மேற்கருணையினுலியையாவுருவமிஃதெய்திப்
புரக்குமன்னர்குடிப்பிறந்துபோந்தாயறத்தின்பொறைதீர்ப்பான்
கரக்கநின்றநெடுமாயையெமக்குக்காட்டக்கடவாயோ. (உஉ௩)

ஏன்றெம்மிடுக்கண்டுடைத்தளிப்பானிரங்கியரசிற்பிறந்தாய்
மூன்றுமுலகத்துயர்தீர்த்தியென்னுமாசைமுயல்கின்றேம்
ஈன்றுமறந்தேமவனல்லன்மனிசனென்றேயிதுமாயம்
போன்றதில்லையாளுடையாய்பொய்யும்புகலப்புக்காயோ. (உஉ௪)

அண்டம்பலவுமனைத்துயிருமகத்தும்புறத்துமுளவாக்கி
உண்டுமுமிழ்ந்துமளந்திடந்துமுள்ளும்புறத்துமுளையாகிக்
கொண்டுசிலம்பிதனவாயினுலான்மெய்க்கூடியற்றியதாப்
பண்டுமின்றுமமைக்கின்றபடியையொருவாய்பரமேட்டி. (உஉ௫)

துன்பவிளையாட்டிதுவேயுமுன்னைத்துன்பந்தொடர்பின்மைத்
தின்பவிளையாட்டாமெனினுமறியாதேமுக்கிடருறுமால்
அன்புவிளைவுமருள்விளைவுமறிவுவிளைவுமவையெல்லாம்
முன்புபின்புநடுவில்லாய்முடிந்தாலன்றிமுடியாவால். (உஉ௬)

வருவாய்போலவாராதாய்வந்தாயென்றுமனங்களிப்ப
வெருவாதிருந்தேநீயிடையேதுன்பம்விளையமெலிகின்றேம்
கருவாயளிக்குங்களைகண்ணேநீயேயிதனைக்களையாயேல்
திருவாழ்மார்பநின்மாயையெம்மாற்றீர்க்கத்திருமோ. (உஉஎ)

அம்பரீடற்கருளியதுமயனார்மகனார்க்களித்ததுவும்
எம்பிரானேயெமக்கின்றுபயப்பாயென்றேயேமுறுவேம்
வெம்புதுயரநீயுழக்கவெளிகாணாதுமெலிகின்றேம்
தம்பிதுணைவநீயிதனைத்தவிர்த்தெம்முணர்வைத்தாராயோ. (உஉஅ)

என்பபலவுமெடுத்தியம்பியிமையாதோருமிடருழந்தார்
அன்புமிகுதியாலயனறிவுமுள்ளேயடங்கினான்
துன்பமனிசர்கருமமேபுரியமுன்னேதுணிந்தமையால்
புன்கணிருதப்பெருந்தூதர்போனாரரக்கனிடம்புகுந்தார். (உஉகூ)

என்வந்ததுநீயென்றரக்கர்க்கிறைவனியம்பவெறிசெருவில்
நின்மைந்தனதுநெடுஞ்சரத்தாற்றுணைவரொல்லாநிலஞ்சேரப்
பின்வந்தவனுமடிந்தான்பின்னவனுக்காகப்பேய்களிந்து
முன்வந்தவனுமடிந்தானுன்பகையுமுடிந்ததெனமொழிந்தார். (உ௩0)

பிரமாத்திரப்படலம்முற்றிற்று. ஆ. திருவிருத்தம்-உகூசஅ.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## உஉ-வது பிராட்டிகளன்காண்படலம்.



பொய்யார்தூதரொன்பதனாற்பொங்கியெழுந்தவுவகையனாய்
மெய்யார்நிதியம்பெறுவெறுக்கைவெறுக்கவீசிவிளைந்தபடி
கையார்வளைமேன்முரசெற்றிச்சாற்றிநகரங்களிசிறப்ப
நெய்யாராடலாகென்றுநிகழ்த்துமென்றானெறியில்லான். (க)

தெய்வமானத்திடையேற்றிமனித்தர்க்குற்றசெயலெல்லாம்
தையல்காணக்காட்டுமின்கள்கண்டாலன்றித்தனதுள்ளத்
தையநீங்காளென்றுரைப்பவரக்கர்மகளிரிரைத்தார்ப்ப
உய்யுமுணர்வுதீர்ந்தாளைநெடும்போர்க்களத்தினிடையுய்த்தார். (உ)

கண்டாள்கண்ணாற்கணவனுருவன்றியொன்றுங்காணாதாள்
உண்டாள்விடத்தையெனவுடலுமுணர்வுமுயிர்ப்புமுடனோய்ந்தாள்
தண்டாமரைப்பூநெருப்புற்றதன்மையுற்றாடரியாதாள்
பெண்டானுற்றபெரும்பீழையுலகுக்கெல்லாம்பெரிதன்றோ. (௩)

மங்கையழுதாள்வானாட்டுமயில்களழுதார்மழவிடையோன்
பங்கினுறையுங்குயிலழுதாள்பதுமமலர்மேன்மாதழுதாள்
கங்கையழுதாண்மடந்தையழுதாள்கமலத்தடங்கண்ணன்
தங்கையழுதாளிரங்காதவரக்கிமாருந்தளர்ந்தழுதார். (ச)

பொன்றாழ்குழையாடனையீன்றபூமாமடந்தைபுரிந்தழுதாள்
குன்றாமறையுந்தருமமுமேகுழைந்துகுழைந்துதளர்ந்தழுத
பின்றாவுடற்றும்பெரும்பாவமழுதபின்னென்பிறர்செய்கை
நின்றார்நின்றபடியழுதார்நினைப்புமுயிர்ப்புநீத்திட்டாள். (௫)

நினைப்புமுயிர்ப்புநீத்தாளைநீராற்றெளித்துநெடும்போதின்
இனத்தினரக்கர்மடவார்களெடுத்தாருயிர்வந்தேங்கினாள்
கனத்தினிறத்தான்றனைப்பெயர்த்துங்கண்டாள்கயலைக்கமலத்தால்
சினத்தின்மலைப்பாளெனக்கண்ணைச்சிதையக்கையான்மோதினாள். (௬)

அடித்தாண்முலைமேல்வயிறலைத்தாளழுதாள்விழுந்தாளனல்வீழ்ந்த
கொடித்தாமென்னமெய்சுருண்டாள்கொதித்தாள்பதைத்தாள்குலைவுற்றாள்
துடித்தாண்மின்போலுயிர்கரப்பச்சோர்ந்தாள்சுழன்றாடுள்ளினாள்
குடித்தாடியனையுயிரோடுங்குழைந்தாளுயிர்த்தாள்குயிலன்னாள். (௭)

விழுந்தாள்புரண்டாளுடன்முழுதும்வியர்த்தாளயர்த்தாள்வெதும்பினாள்
எழுந்தாளிருந்தாளிருகரத்தைநெரித்தாள்சிரித்தாளேங்கினாள்
கொழுந்தாவென்றாளயோத்தியர்தங்கோவேயென்றாண்மூவுலகும்
தொழுந்தாளரசேயோவென்றாள்சோர்ந்தாளரற்றத்தொடங்கினாள். (௮)

வேறு.

உறமேவியகாதலுனக்குடையார்
புறமேதுமிலாரொருபூண்முலையார்
மறமேபுரிவார்வசமாயினையோ
அறமேகொடியாயிதுவோவருடான். (௯)

முதியாருணர்வேதமொழிந்தவலால்
கதியேதுமிலார்துயர்காணுதியோ
மதியேன்மதியேனுனைவாய்மையிலா
விதியேகொடியாய்விளையாடுதியோ. (௧௦)

எண்ணாமெயினோடுமிருந்ததுநின்
புண்ணாகியமேனிபொருந்திடவோ
மண்ணோருயிரோயிமையோர்வலியே
கண்ணேயமுதேகருணாகரனே. (௧௧)

மேவிக்கனன்முன்மிதிலைத்தலையென்
பாவிக்கைபிடித்ததுபண்ணவநின்
ஆவிக்கொருகோள்வரவோவலர்வாழ்
தேவிக்கமுதேமறையின்றெளிவே. (௧௨)

உய்யாளுயர்கோசலையின்னுயிரோ
ஐயாவிளையோரினியுய்கிலரால்
மெய்யேவினையெண்ணிவிடுத்தகொடுங்
கைகேசிகருத்திதுவோகளிறே. (௧௩)

தகைவாணகர்நீதவிராயெனவும்
வகையாதுதொடர்ந்தொருமான்முதலாப்
புகையாடியகாடுபுகுந்துடனே
பகையாடியவாபரிவேதுமிலேன். (கச)

இன்றீசிலையேபிறரில்லிடைவாய்ப்
பின்றீயெனவேபிரிவோடடியேன்
நின்றீவதுநின்னைநெடுஞ்செருவில்
கொன்றீவதொர்கொள்கைகுறித்தலினே. (கரு)

கொடியேனிவைகாணகிலேனுயிர்கோள்
முடியாய்நமனேமுறையோமுறையோ
விடியாவிருள்வாயெனைவீசினையோ
அடியேனுயிரேயருளுடையகனே. (கசு)

செய்யார்புரிவேள்விகிரப்பிநெடுஞ்
செய்யார்புனனூடிருத்துதியால்
மெய்யாகியவாசகமும்விதியும்
பொய்யாயவென்மேனிபொருந்துதலால். (கஎ)

மேதாவினையோய்விதியார்வினைவால்
போதாநெறியெம்மொடுபோதுறுநாள்
மூதானவர்முன்னர்முடிந்திடெனும்
மாதாவுரையின்வழிநின்றனையோ. (கஅ)

பூவுந்தளிருந்தொகுபொங்கணைமேல்
கோவின்றுயிலைத்தவிர்வாய்கொடியார்
ஏவின்றலைவந்தவிருங்கணையால்
மேவுங்குளிர்மெல்லணைமேவினையோ. (கக)

மழுவாள்வரினும்பிளவாமனனுண்
டழுவேனினியின்றிடராறிடயான்
விழுவேனவன்மேனியின்மீதினெனு
எழுவாளைவிலக்கியம்பினளால். (உ0)

வேறு.

மாடுறவலைந்துநின்றவளையெயிற்றரக்கிமாரைப்
பாடுறவகற்றிநோக்கிப்பாவையைத்தழுவிப்பற்றிக்,
கூடினளென்னநின்றுசெவியிடைக்குறுகிச்சொன்ஞள்
தேடியதவமேயன்னதிரிசடைமறுக்கந்தீர்ப்பாள். (உக)

மாயமான்விடுத்தவாறுஞ்சனகனைவகுத்தவாறும்
போயநாளுகபாசம்பிணித்ததுபோனவாறும்
நீயமாநினையாய்மாளநினைதியோநெறியிலாரால்
ஆயமாமாயமொன்றுமறிந்திலைபோலுமன்றுய். (உஉ)

கண்டனகனவும்பெற்றநிமித்தமுமுனதுகற்பும்
தண்டகமுறையுநாளிற்செய்கையுந்தருமந்தாங்கும்
அண்டர்நாயகர்தம்வீரத்தன்மையுமயரோல்செங்கட்
புண்டரிகற்குமுண்டோவிறுதியிப்புல்லர்கையால். (உ௩)

ஆழியானுகந்தாக்கியம்பொன்றுமறுக்கிலாமை
ஏழைநீகாண்டியன்றேயிளையவன்வதனமின்னும்
ஊழிநாளிரவியென்னவொளிர்கின்றதுயிருக்கினம்
வாழியாற்கில்லைவாளாமயங்கலைவேள்விவந்தாய். (உ௪)

ஈர்ந்துளனிராமனென்னினுலகமோரேழுமேழும்
தீர்ந்தறுமிரவியின்னேத்திரியுமேதெய்வமென்னும்
வீந்தறும்விரிஞ்சன்முன்னுவுயிரொலாம்வெருவலன்னாய்
ஆய்ந்தவையுள்ளபோதேயவருளரறமுமுண்டால். (உ௫)

மாருதிக்கில்லையன்றேமங்கைநின்வரத்தினாலே
ஆருயிர்நீங்கினின்பாற்கற்புக்குமழிவுண்டாமே
சீரியதன்றிதோன்றுந்திசைமுகன்படையுஞ்செய்கை
பேருமிப்பொழுதேதேவவொண்ணமும்பிழைப்பதுண்டோ. (உ௬)

தேவ்வர்க்கண்டேன்பைம்பொற்செங்கரஞ்சிரத்திற்சேர்த்தி
மூவரைக்கண்டாலென்னவிருவரைமுறையினோக்கி
ஆவலிப்பெய்துகின்றாரயர்த்திலரஞ்சலன்னாய்
கூவலிற்புக்கவ்வேலைகோட்படுமென்றல்கோளோ. (உ௭)

மங்கலநீக்கினாயாருயிர்வாங்கினாரை
நங்கையிக்கடவுண்மானந்தாங்குறுநவையிற்றன்றால்
இங்கிவையுளவையாகவிடர்க்கடல்கடத்தியென்றாள்
சங்கையாளாயதையல்சிறிதுயிர்தரிப்பதானாள். (உ௮)

அன்னைநீயுரைத்ததொன்றுமழிந்திலதாதலானே
உன்னையேதெய்வமாக்கொண்டித்தனைக்காலமுய்ந்தேன்
இன்னுமிவ்விரவுமுற்றுமிருக்கின்றேனிறத்தலென்பால்
முன்னமேமுடிந்ததன்றேயென்றனண்முளரிநீத்தாள். (உ௯)

நாணெலாந்துறந்தேனில்லினன்மையுநலத்தார்க்கேய்ந்த
பூணெலாமாகின்றகுணங்களும்பொதுவிற்போகக்
காணலாமென்னுமாசைதடுக்கவென்னாவிகாத்தேன்
ஏணிலாவுடலைநீத்தலெளிதெனக்கென்றுசொன்னாள். (௩0)

தையலைப்பிராமன்மேனிதைத்தவேற்றடங்கணாளைக்
கைகளிற்பற்றிக்கொண்டார்விமானத்தைக்கடாவுகின்றார்
மெய்யுயிருலகத்தாக்கிவிதியையும்வலிந்துவிண்மேல்
பொய்யுடல்கொண்டுபோகுநமனுடைத்தூதர்போன்றார். (௩க)

பிராட்டிகளன்காண்படலம்முற்றிற்று. ஆ -திருவிருத்தம். உகூசக.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.



போயினடைய லிப்பாற்புரிகென்ப்புலவர்கோமான்
ஏயினகருமநோக்கியெய்தியவிலங்கைவேந்தன்
மேயினவுணவுகொண்டுமீண்டவையுறையுள்விட்ட
ஆயினவாகத்தானவ்வமர்ப்பெருங்களத்தனானான். (க)

நோக்கினான்கண்டான்பண்டிவ்வுலகினைப்படைக்கநோற்றான்
வாக்கினான்மாண்டாரொன்னவானரவீரர்முற்றும்
தாக்கினாரெல்லாம்பட்டதன்மையைவிடத்தைத்தானே
தேக்கினானென்னநின்றுதியங்கினானுணர்வுதீர்ந்தான். (உ)

விளிந்தவாறுணர்கிலாதான்வீங்கினான்வெதும்பினான்மெய்
உளைந்துளைந்துயிர்த்தானாவியுண்டிலையென்னவோய்ந்தான்
வளைந்தபேய்க்கணமுநாயுநரிகளுமிரியவந்தான்
இளங்கிளையோடுஞ்சாய்ந்தவிராமனையிடையிற்கண்டான். (ங)

என்பென்பதியாக்கையென்பதுயிரொன்பதிவைகளெல்லாம்
பின்பென்பவல்லவேனுந்தம்முடைநிலையிற்பேரா
முன்பென்றுமுளவென்றாலுமுழுவதுந்தெரிந்தவாற்றால்
அன்பென்பதொன்றின்றன்மையமரருமறிந்ததின்றால். (ச)

ஆயினுமிவருக்கில்லையழிவெனுமதனாலாவி
போயினதில்லைவாயாற்புலம்புவான்பொருமிப்பொங்கித்
தீயினுமெரியுநெஞ்சன்வெருவலன்றெரியநோக்கி
நாயகன்மேனிக்கில்லைவடுவெனநடுக்கந்தீர்ந்தான். (ரு)

அந்தணன்படையால்வந்ததென்பதுமாற்றலான்ற
இந்திரசித்தேயெய்தானென்பதுமிளவற்காக
நொந்தனனிராமனென்னுநுண்மையானெய்தினோக்கிச்
சிந்தையினெண்ணியெண்ணித்தேர்வதோருபாயந்தேர்வான். (சா)

உள்ளுறுதுன்பமூன்றவுற்றனனுறக்கமொன்றோ
தெள்ளிதினுணர்ந்தபின்னைச்சிந்தனைதெரிவதன்றே
வள்ளலோதம்பிமாளவாழ்கிலன்மாயவாழ்க்கைக்
கள்வரோவென்றானொன்றுமழையெனக்கலுழுங்கண்ணான். (எ)

பாசம்போயிற்றாப்போலப்பதுமத்தோன்படையுமின்னே
நாசம்போயெய்துநம்பிதம்பிக்குநடுக்கமில்லை
வீசும்போர்க்களத்துவீந்தசேனையுமீளும்வெய்ய
நீசன்போர்வெல்வதுண்டோவென்றனனெறியினின்றான். (அ)

உணர்வதன்முன்னமின்னேயுற்றுழியுதவற்கொத்த
துணைவர்கடுஞ்சல்செல்லாருளரொனிற்றுருவித்தோன்றக்
கொணர்குவென்வினாவினென்னாக்கொள்ளியொன்றங்கைகொண்டான்
புணரியினுதிரவெள்ளத்தொருதனிவிளாவிற்போனான். (கூ)

வாய்மடித்திரண்டுகையுமுறுக்கித்தன்வயிரச்செங்கண்
தீயுகக்கனகக்குன்றிற்றிரண்டதோண்மலையைத்தீண்ட
ஆயிரகோடியானைப்பெரும்பிணத்தமளிமேலாக்
காய்சினத்தநுமனென்னுங்கடல்கிடந்ததனைக்கண்டான். (௧௦)

கண்டுதன்கண்களூடுமழையெனக்கலுழிவார
உண்டுயிரொன்பதுன்னியுடற்கணையொன்றொன்றாக
விண்டநீர்ப்புண்ணினின்றுமெல்லெனவாங்கிக்கையால்
கொண்டனீர்முகந்துகோலமுகத்தினைக்குளிரச்செய்தான். (௧௧)

உயிர்ப்புமுன்னுதித்தபின்னரு ரோமங்கள்சிலிர்த்தவூடு
வியர்ப்புளதாகக்கண்கள்விழித்தனமேனிமெல்லப்
பெயர்த்துவாய்புனல்வந்தூறவிக்கலும்பிறந்ததாக
அயர்த்திலனிராமனுமம்வாழ்த்தினனரியின்றேன்றல். (௧௨)

அழுகையோடுவகையுற்றவீடணனூர்வங்கூரத்
தழுவினனவனைத்தானுமன்பொடுதழுவித்தக்கோய்
வழுவிலனன்றேவள்ளலென்றனன்வலியனென்றான்
தொழுதனனுலகமூன்றுந்தலையின்மேற்கொள்ளுந்தூயோன். (௧௩)

அன்புதன்றம்பிமேலாத்தறிவினைமயக்கவையன்
றுன்பவன்றுயிலனுணர்வினித்தொடர்ந்தபின்னை
என்புகுந்தெய்து மென்பதறிகிலெனென்றலோடும்
தன்பெருந்தகைமைக்கொத்தசாம்பனைத்தகையனென்றான். (௧௪)

அறிந்திலெனவனையாண்டுங்காண்கிலெனுவியாக்கை
பிறிந்திலனுளனென்றொன்றுந்தெரிந்திலென்பெயர்ந்தேனென்று
செறிந்ததார்நிருதர்வேந்தனுரைசெயக்காலின்செம்மல்
இறுந்திறமவனுக்கின்றோடுதுமவனையென்றான். (௧௫)

அன்னவன்றன்னைக்கண்டாலாணையேயரக்கர்க்கெல்லாம்
மன்னவவெம்மையீண்டுவாழ்விக்குமுபாயம்வல்லான்
என்னலுமுய்ந்தேமையவேகுதிவினாவினென்றான்
சின்னெறியிருளிற்சென்றார்சாம்பனைவிதியாற்சேர்ந்தார். (௧௬)

எரிகின்றழூப்பினுனுமேவுண்டநோவினுனும்
அரிகின்றதுன்பத்தானுமாருயிர்ப்படங்கியொன்றும்
தெரிகின்றதில்லாமம்மர்ச்சிந்தையனெனினுஞ்செல்வர்
வருகின்றசுவட்டையோர்ந்தான்செவிகளால்வயிரத்தோளான். (௧௭)

அரக்கனேவென்னையாளுமண்ணலோவநுமன்றானே
இரக்கமுற்றருளவந்ததேவரோமுனிவரேயோ
வரக்கடவார்களல்லர்மாற்றலர்மலைந்துபோனார்
புரக்கவுள்ளாரோவென்னுக்கருதினன்பொருமநீர்ந்தான். (௧௮)

வந்தயனின்றுகுன்றின்வார்ந்தவீழருவிமானச்
சிந்தியகண்ணினீரரேங்குவார்தம்மைத்தேற்றி
அந்தமில்குணத்தீர்யாவரணுகினிரொன்றனைய
உய்ந்தனமுய்ந்தேமென்றவீடணனுரையைக்கேட்டான். (௧௯)

மற்றயனின்றான்யாவனென்னமாருதியும்வாழிக்
கொற்றவவநுமனின்றேன்றொழுதனெனென்றுகூற
இற்றிலமையவெல்லேமெழுந்தனமெழுந்தேமென்று
உற்றபேருவகையாலேயோங்கினானாற்றமுற்றான். (௨௰)

விரிஞ்சன்வெம்படையென்றாலும்வேதத்தின்வேதமன்ன
அரிந்தமன்றன்னையொன்றுமாற்றிலதென்னுமாற்றல்
தெரிந்தனென்முன்னேயென்னைசெய்ததென்றெரித்தியென்றான்
பெருந்தகைதுன்பவெள்ளத்துயிலுளான்பெருமவென்றான். (௨௧)

அன்றவன்றன்மைகண்டாலாற்றுமேயாக்கைவேறே
இன்னுயிரொன்றேமூலத்திருவருமொருவரோயால்
இன்னதுநிற்கபாணியாதுநீயிமைப்பின்முன்னர்க்
கொன்னியல்வயிரத்தோளாய்மருந்துபோய்க்கொணர்தியென்றான். (௨௨)

எழுபதுவெள்ளத்தோருமிராமனுமிளையகோவும்
முழுவதிவ்வுலகமூன்றுநல்லறமூர்த்திதானும்
வழுவலின்மறையுமுன்னால்வாழ்ந்தனராவரைய
பொழுதிறைதாழாதென்சொனெறிதரக்கடிதுபோதி. (௨௩)

வேறு.

பின்புளதிக்கடலென்னப்பெயர்ந்ததற்பின்யோசனைகள்பேசநின்ற
ஒன்பதினாயிரங்கடந்தாலிமயமெனுங்குலவரையையுறுதியுற்றால்
தன்பெருமையோரிரண்டாயிரமுளயோசனையதுபின்றவிரப்போனால்
முன்புளயோசனைகடந்துமுற்றினைபொற்கூடஞ்சென்றுறுதிமொய்ம்ப. (௨௫)

அம்மலைக்குமொன்பதினாயிரமுளதால்யோசனையினிடதமென்னும்
செம்மலைக்குமளவுரைக்கினத்துணையேயதுகடந்தாற்சென்றுகாண்டி
எம்மலைக்கும்பெரிதாயவடமலையையம்மலையினகலமெண்ணின்
மொய்ம்மலைந்ததிரடோளாய்முப்பத்திராயிரயோசனையைமுற்றும். (௨௫)

மேருவினைக்கடந்தப்பாலொன்பதினாயிரமுளயோசனையைவிட்டால்
நேரணுகிநீலகிரிதானிரண்டாயிரமுளயோசனையினிற்கும்
மாருதிமற்றதற்கப்பால்யோசனைநாலாயிரத்துமருந்துவைகும்
கார்வரையைக்காணுதிமற்றதுகாணவித்துயர்க்குக்கரையுங்காண்டி. (௨௬)

மாண்டாரையுய்விக்குமருந்தொன்றுமுடல்வேறுவகிர்களாகக் [ம்
கீண்டாலும்பொருந்துவிப்பதொருமருந்தும்படைக்கலங்கள் கிளைப்பதொன்று
மீண்டேயுந்தம்முருவேயருளுவதோர்மெய்ம்மருந்துமுள்ளவீர
ஆண்டேகிக்கொணர்தியெனவடையாளத்தொடுமுரைத்தானறிவின்மிக்கான்.

இன்னமருந்தொருநான் கும்பயோததியைக்கலக்கியஞான்றெழுந்ததேவர்
உன்னியமைத்தனர்மறைக்குமொட்டாதபரஞ்சுடரிவ்வுலகமூன்றும்
தன்னிருதாளுள்ளடக்கிப்பொலிபோழ்தின்யான்முரசஞ்சாற்றும்வேலை
அன்னதுகண்டியாவுதலுந்தொன்முனிவரவற்றியலெற்கறிவித்தாரால். (உஅ)

இம்மருந்துகாத்துறையுந்தெய்வங்களெண்ணிலவாமிரங்காயார்க்கும்
செய்ம்மருங்குபடரகில்லாநெடுநேமிப்படையுமவற்றுடனேநிற்கும்
பொய்ம்மருங்குமில்லாதாய்புரிகின்றகாரியத்தின்பொதுமைநோக்கிக்
கைம்மருங்குதொடர்ந்துன்னைக்காயாவாமப்புறம்போய்க்காக்குமென்றான். ()

ஈங்கிதுவேபணியாகினிறந்தோரும்பிறந்தோரேயெங்கோற்கியாதும்
தீங்கிடையூறெய்தாமற்றெருட்டுதிர்போயெனச்செப்பியவனைத்தீர்ந்தான்
ஓங்கினன்வானெடுமுகட்டையுற்றனன்பொற்றோளிரண்டுந் திசையோடொக்க
வீங்கினவாகாயத்தைவிழுங்கினனேயெனவளர்ந்தான்வேதம்போல்வான் (௩௦)

கோளொடுதாரகைகள்கோத்தமைந்தமணியாரக்கோவைபோன்ற
தோளொடுதோளகலமாயிரயோசனையகலஞ்சொல்லவொண்ணு
தாளொடுதாள்பெயர்க்கவிடமலதாகியதிலங்கைதடக்கைவீசி
நீளொடத்திசைபோதாவிசைத்தெழுவானுருவத்தினிலையீதம்மா. (௩௧)

வால்விசைத்துக்கைந்நிமிர்த்துவாயினையுஞ்சிறிதகலம்வகுத்துமானக்
கானிலத்தினிடையூன்றியுரநெருக்கிக்கழுத்தினையுஞ்சுருக்கிக்காட்டித் [ந்த
தோன்மயிர்க்குந்தளஞ்சிலிர்ப்பவிசைத் தெழுந்தானவ்விலங்கைதுளங்கிச்சூழ்
வேலையிற்புக்கழுந்தியதோர்மரக்கலம்போற்சுரித்துலையவிசயத்தோளான். ()

கிழிந்தனமாமழைக்குலங்கள்கிண்டதுநீண்டகல்வேலைகிழக்குமேற்கும்
பொழிந்தனபின்றொடர்ந்தெழுந்தபொருப்பினமுந்தருக்குலமும்பிறவும்பொங் [கி
அழிந்தனவானவர்மானமாகாயத்திடையனபேரசனியென்ன
விழுந்தனநீர்க்கடலழுந்தவேறினமேற்கீறினபோய்த்திசைகளெல்லாம். (௩௩)

கடன்முன்னேநிமிர்ந்தோடக்கால்பின்னேதொடர்ந்தோடக் கடிதிற்செல்வான்
உடன்முன்னேசெலவுள்ளங்கடைக்குழையாய்ச் செலச்செல்வானுருவைநோக் [கி
அடன்முன்னேதொடங்கியநாளாழ்கடல்சூழிலங்கையெனுமரக்கர்வாழும்
திடர்முந்நீரிடைப்படுத்துமறுத்திலனந்துயரொன்றுற்றேவரொல்லாம். (௩௪)

பாய்ந்தனனப்பொழுதத்தேபருவரைகளனைப்பலவும்வடபாகத்துச்
சாய்ந்தனபேருடற்பிறந்தசண்டமாருதவிசையிற்றுதைசால
ஓய்ந்தனனென்றுரைசெய்யவிசும்பூடுபடர்கின்றானுருவேகத்தால்
காய்ந்தனவேலைகண்மேகங்கரிந்தனவெந்தெரிந்தபெருங்கானமெல்லாம் (௩௫)

மேகத்தின்பதங்கடந்துவெங்கதிருந்தண்கதிரும்விசும்பிற்செல்லும்
மாகத்தினெறிக்கப்பால்வானமீன்குலம்வழங்கும்வரம்புநீங்கிப்
போகத்தினெறிகடந்தோர்புகலிடங்கள்பிற்படப்போய்ப்பூவின்வந்த
ஏகத்தந்தணனிருக்கையினிச்சேய்த்தன்றுமென்னவெழுந்துசென்றான். (௩௬)

வானநாட்டுறைகின்றார்வயக்கலுழன்வல்விசையான்மாயன்வைகும்
தானநாட்டெழுகின்றானென்றுரைத்தார்சிலர்சிலர்கள்விரிஞ்சன்றானே
ஏனநாட்டெழுகின்றானென்றுரைத்தார்சிலர்சிலர்களீசனல்லார்
போனநாட்டிடைபோகவல்லரோவிவன்முக்கட்புனிதனென்றார். (௩எ)

வேண்டுருவங்கொண்டெழுந்துவிளையாடுகின்றான்மெய்வேதநான்கும்
தீண்டுருவனல்லாததிருமாலேயிவனென்றார்தெரியநோக்கிக்
காண்டிடுமுன்னினைப்பதன்முன்மனம்போலக்கடந்தகலுமின்னுங்காண்மின்
மீண்டுவருந்தரமல்லாவிட்டுலகம்புகுமென்றார்மேன்மேலுள்ளார். (௩அ)

உருவென்றார்சிலர்சிலர்களொளியென்றார்சிலர்சிலர்களொளியின்மேலும்
அருவென்றார்சிலர்சிலர்களண்டத்துக்கப்புறநின்றுலகங்காக்கும்
கருவென்றார்சிலர்சிலர்கள்காற்றேமற்றுமென்றார்கடலைத்தாவிச்
செருவென்றானிலையொருவர்தெரிக்கலாருலகனைத்துந்தெரியுஞ்செல்வர். (௩௯)

வாசநாண்மலரயன்றனுலகளவும்விரிந்தனன்மேல்வானமான
காசமாயினதெல்லாங்காந்ததுதன்னுருவிடையேகனகத்தோள்கள்
வீசவான்முகடுரிஞ்சவிசைத்தெழுவானுடற்பிறந்தமுழக்கம்விம்ம
ஆசைகாவலர்கடலைபொதிரொதிர்ந்தபிதிரொதிர்ந்ததண்டகோளம். (௪0)

வேறு.

தொடுத்தநாண்மாலைவானோர்முனிவரோமுதலதொல்லோர்
அடுத்தநான்மறைகளோதிவாழ்த்தவாளவுணர்வேந்தன்
கொடுத்தநாளளந்துகொண்டகுறளனுர்குறியபாதம்
எடுத்தநாளொத்ததண்ணலெழுந்தநாளுலகமெங்கும். (௪௧)

தேவருமுனிவர்தாமுஞ்சித்தருந்தெரிவைமாரும்
மூவுலகிடையுளோருமுவகையாற்றொடர்ந்துமொய்த்தார்
தூவினமலருஞ்சாந்துஞ்சுண்ணமுமணியுந்தொக்குப்
பூவுடையமரர்தெய்வத்தருவெனவிசும்பிற்போனான். (௪௨)

இமயமால்வரையையுற்றானங்குளவிமைப்பிலோரும்
கமையுடைமுனிவர்மற்றுநன்னெறிகலந்தோரெல்லாம்
அமைகவின்கருமமென்றுவாழ்த்தினரதனுக்கப்பால்
உமையொருகூறன்வைகுங்கயிலைகண்டுவந்துபோனான். (௪௩)

வடகுணதிசையிற்றோன்றுமழுவலானுண்டுவைகும்
தடவரையதனைநோக்கித்தாமரைச்செங்கைகூப்பிப்
படர்குவான்றன்னையன்பாற்பரமனுந்தெரியப்பார்த்துத்
தடமுலையுமைக்குக்காட்டிவாயுவின்றநயனென்றான். (௪௪)

என்னிவனேகுந்தன்மையென்றுலகின்றாள்கேட்ப
மன்னவனிராமன்றூதன்மருந்தின்மேல்வந்தான்வஞ்சர்
தந்நகரிலங்கைத்தீமைதீர்வதுதிண்ணஞ்சேர்ந்து
நன்னுதனுமும்வெம்போர்காணுதுநாளையென்றான். (௪௫)

நாமயோசனைகள்கொண்டவாயிரநடுவணீங்கி
ஏமகூடத்தினும்பரெய்தினனிறுதியில்லாக்
காமமேறுகருஞ்செல்வக்கடவுளரீட்டங்கண்டான்
நேமியின்விரைவிற்செல்வானிடதத்தினெற்றியுற்றான். (௪௬

எண்ணுக்குமளவிலாதவறிவினோரிமைத்துநோக்கும்
கண்ணுக்குங்கருதுந்தெய்வமனத்திற்குங்கடியனானான்
மண்ணுக்குந்திசைகள்வைத்தவரம்பிற்குமலரோன்வைகும்
விண்ணுக்குமளவையானமேருவின்மீதுசென்றான். (௪௭)

யாவதுநிலைமைத்தன்மையின்னதென்றிமையாநாட்டத்
தேவருந்தெரிக்கலாதவடமலைக்கும்பர்சென்றான்
நாவலம்பெருந்தீவென்னாநளிர்கடல்வளாகவைப்பில்
காவன்மூன்றுலகமோதுங்கடவுண்மாமரத்தைக்கண்டான். (௪௮)

அன்னமாமலையினும்பருலகெலாமமைத்தவண்ணல்
நன்னெடுநகரநோக்கியதனொடுநாப்பணமப்
பொன்மலர்ப்பீடந்தன்மேனான்முகப்புத்தேடோன்றும்
தன்மையுங்கண்டுகையால்வணங்கினன்றருமம்போல்வான் (௪௯)

ஆயதன்வடகீழ்பாகத்தாயிரமருக்கரான்ற
காய்கதிர்பரப்பியைந்துகதிர்முகக்கமலங்காட்டித்
தூயபேருலகமூன்றுந்தூவியமலரிற்சூழ்ந்த
சேயிழைபாகத்தெண்டோளொருவனைவணக்கஞ்செய்தான். (௫0)

தருவனமொன்றில்வானோர்தலைத்தலைமயங்கித்தாழப்
பொருவருமுனிவர்வேதம்புகழ்ந்துரையோதைபொங்க
மருவிரிதுளவமோலிமாநிலக்கிழத்தியோடும்
திருவொடுமிருந்தமூலத்தேவையும்வணக்கஞ்செய்தான். (௫௧)

சந்திரனனையகொற்றத்தனிக்குடைதலையதாகச்
சுந்தரமகளிரங்கைச்சாமரைதென்றறூவ
அந்தரவானநாடரடிதொழமுரசமார்ப்ப
இந்திரனிருந்ததன்மைகண்டுவந்திறைஞ்சிப்போனான். (௫௨)

பூவலர்மரத்தைப்போலவந்தரம்விரிந்துபொங்கும்
தேவர்தமிருக்கையானமேருவின்சிகரவைப்பின்
மூவகையுலகுஞ்சூழ்ந்தமூரட்டிசைமுறையிற்காக்கும்
காவலரெண்மர்நின்றதன்மையுந்தெரியக்கண்டான். (௫௩)

அத்தடங்கிரியைநீங்கியத்தலையடைந்தவண்ணல்
உத்தரகுருவையுற்றானொளியவன்கதிர்களூன்றிச்
செற்றியவிருளிற்றாகிவிளங்கியசெயலைநோக்கி
வித்தகன்விடிந்ததென்னாமுடிந்ததென்வேகமென்றான். (௫௪)

ஆதியானுணராமுன்னமருமருந்துதவியல்லிற்
பாதியாலினையதுன்பமகற்றுவான்பாவித்தேற்குச்
சோதியானுதயஞ்செய்தானுற்றதுதுணிதலாற்றேன்
ஏதியான்செய்வதென்னாவிடருற்றானிணையிலாதான் (௫௫)

காற்றிசைசுருங்கச்செல்லுங்கடுமையான்கதிரின்செல்வன்
மேற்றிசையெழுவானல்லன்விடிந்ததுமன்றுமேரு
மாற்றினன்வடபாற்றோன்றுமென்பதுமறைகள்வல்லோர்
சாற்றினவொன்றுதுன்பந்தவிர்ந்தனன்றவத்தின்மிக்கான். (௫௬)

இருவரோதோன்றியென்றுமீறிலாவாயுளெய்தி
ஒருவரோடொருவருள்ளமுயிரொடுமொன்றேயாகிப்
பொருவருமின்பந்துய்த்துப்புண்ணியம்புரிந்தோர்வைகும்
திருவுறைகமலமன்னநாட்டையுந்தெரியக்கண்டான் (௫௭)

வன்னிநாட்டியபூமௌலிவானவன்மலரின்மேலான்
கன்னிநாட்டிருவைச்சேருங்கண்ணனுமாளுங்காணி
சென்னிநாட்டெரியல்வீரன்றியாகவிநோதன்றெய்வப்
பொன்னிநாட்டுவளமைவைப்பைப்புலங்கொளநோக்கிப்போனான். (௫௮)

விரியவான்மேருவென்னும்வெற்பினுமீதுசெல்லும்
பெரியவனயனார்செல்வம்பெற்றவன்பிறப்பிற்போர்ந்தான்
அரியவனுலகமெல்லாமளந்தநாள்வளர்ந்துதோன்றும்
கரியவனென்னநின்றநீலமால்வரையைக்கண்டான். (௫௯)

அற்குன்றவலங்குஞ்சோதியம்மலையகலப்போனான்
பொற்குன்றமனையதோளானிருக்கினான்புதல்வன்சொன்ன
நற்குன்றமதனைக்கண்டானுணர்ந்தனனாகமுற்ற
எற்குன்றவெரியுந்தெய்வமருந்தடையாளமென்ன. (௬௦)

பாய்ந்தனன்பாய்தலோடுமம்மலைபாதாளத்துச்
சாய்ந்ததுகாக்குந்தெய்வஞ்சலித்தனகடுத்துவந்து
காய்ந்தனைநீதான்யாவன்கருத்தென்கொல்கழறுகென்ன
ஆய்ந்தவனுற்றதன்மையவற்றினுக்கறியச்சொன்னான். (௬௧)

கேட்டவையயவேண்டிற்றியற்றிப்பின்கெடாமலெம்பால்
காட்டெனவுணர்த்திவாழ்த்திக்கரந்தனகமலக்கண்ணன்
வாட்டடநேமிதோன்றிமறைந்ததுமண்ணினின்றும்
தோட்டனனநுமன்மற்றைக்குன்றினைவயிரத்தோளால். (௬௨)

வேறு.

இங்குநின்றின்னனமருந்தென்றெண்ணினால்
சிங்குமாற்காலமென்றுணர்ந்தசிந்தையான
அங்கதுவேரொடுமங்கைதாங்கினான்
பொங்குநல்விசும்பிடைக்கடிதுபோகின்றான். (௬௩)

ஆயிரயோசனையகலமீதுயர்ந்
தாயிரயோசனையாழ்ந்ததம்மலை
ஏயெனுமாத்திரத்தொருகையேந்தினான்
தாயினனுலகெலாந்தவழ்ந்தகீர்த்தியான். (௬௪)

அத்தலையன்னவனனையனுத்துணை
இத்தலையிருவரும்விரைவினெய்தினார்
கைத்தலத்தாலடிவருடுங்காலையில்
உத்தமற்குற்றதையுணர்த்துவாமரோ. (௬௫)

வண்டனமடந்தையர்மனத்தைவேரொடும்
கண்டனகொளவருங்கருணைதாமெனக்
கொண்டனகொடுப்பனவரங்கள்கோளிலாப்
புண்டரிகத்துணைதருமம்பூத்தென (௬௬)

நோக்கினன்கரடிகட்கரசுநோன்புகழ்
ஆக்கியமிருதனுமழுதகண்ணினர்
தூக்கியதலையினர்தொழுதகையினர்
ஏக்கமுற்றருகிருந்திரங்குவார்களை. (௬௭)

ஏவியகாரியமியற்றியெய்தினை
நோவிலைகொல்லெனநோக்கிவீடணற்
றுவரும்பெரும்புகழ்ச்சாம்பன்றன்னைநீ
ஆவிவந்தனைகொலென்றருளினானரோ. (௬௮)

ஐயன்மீர்நமக்குற்றவழிவிதாகலின்
செய்கையோபிறிதிலமுயிரிற்றீர்ந்தவர்
உய்கிலரினிச்செயற்குரியதுண்டெனின்
பொய்யிலிர்புகலுதிர்புலமையுள்ளத்தீர். (௬௯)

சீதையென்றொருத்தியாலுள்ளந்தீர்விலாப்
பேதையென்சிறுமையாலுற்றபெற்றிமை
யாதெனவுணர்த்துகேனுலகொடீர்வுறுக்
காதைவன்பழிபொடுநிறுத்திக்காட்டினேன். (௭௦)

மாயையிம்மானெனவெம்பிவாய்மையால்
தூயனவுறுதிகள்சொன்னசொற்கொளேன்
போயினென்பெண்ணுரைமறுதுபோகலால்
ஆயதிப்பழியுடைமரணமன்பினீர். (௭௧)

கண்டனனிராவணன்றன்னைக்கண்களால்
மண்டமர்புரிந்தனென்வலியினாலுயிர்
கொண்டிலெனுறவெலாங்கொடுத்துமாளநான்
பண்டுண்டத்தீவினைபயந்தபண்பினால். (௭௨)

தேவர்தம்படைக்கலந்தொடுத்துத்தீயவன்
சாவதுகாண்டுமென்றிளவல்சாற்றலும்
ஆவதையுணர்ந்திலெனழிவதென்வயின்
மேவுதலுறுவதோர்வினையின்வென்றியால். (௭௩)

நின்றிலெனுடனெடும்படைக்குநீதியால்
ஒன்றியபூசனையமைப்பவுன்னினேன்
பொன்றினர்நமரொலாமிளவல்போயினன்
வென்றிலனரக்கனைவிதியின்வெம்மையால். (௭௪)

ஈண்டிருந்திவையிவைவிளம்புமேழைமை
வேண்டுவதன்றினியமரின்வீடிய
ஆண்டகையன்பனாயமரர்நாட்டிடைக்
காண்டலேநலம்பிறகண்டதில்லையால். (௭௫)

எம்பியைத்துணைவனையிழந்தகானினி
வெம்புபோரரக்கரைமுருக்கிவேறுறுத்
தம்பினாலிராவணனாவிபாழ்படுத்
தும்பருக்குதவிமேலுறுவதென்னரோ. (௭௬)

இளையவனிறந்தபினெவ்வமென்னொனக்
களவறுகீர்த்தியென்னறிவென்னாண்மையென்
கிளையுறுசுற்றமென்னரசென்கேண்மையென்
விளைவுதானென்மறைவிதியென்மெய்ம்மையென். (௭௭)

இரக்கமும்பாழ்படவெம்பியீறுகண்
டரக்கரைவென்றுநின்றாண்மையாள்வெனேல்
மரக்கணவன்மனவஞ்சனாவென்யான்
கரக்குவதல்லதோர்கடனுண்டாகுமோ. (௭௮)

தாதையையிழந்தபின்சடாயுவிற்றபின்
காதலிற்றுணைவருமடியக்காத்துழல்
கோதறுதம்பியும்விளியக்கோளிலன்
சீதையையுகந்துளனென்பர்சீரியோர். (௭௯)

வென்றனனரக்கரைவேரும்வீந்தறக்
கொன்றனனயோத்தியைக்குறுகினேன்குணத்
தின்றுணைத்தம்பியின்றியானுளேனெனு
அன்றரசாளுமாசாலநன்றரோ. (௮௦)

படியவள்காதலன்யாதும்பார்க்கிலன்
முடிகுவெனுடனெனமுடியக்கூறலும்
அடியிணைவணங்கியசாம்பனுழியாய்
நொடிகுவதுளதெனநுவல்வதாயினன். (௮௧)

உன்னைநீயுணர்கிலையடியனேனுனை
முன்னரோயதிகுவேன்மொழிதறீசது
என்னெனினிமையவரொண்ணுக்கினமாம்
பின்னரோதெரிகுதிதெரிவில்பெற்றியாய். (௮௨)

அம்புயத்தவன்படையாதறேறினேன்
உம்பியையுலப்பருவலத்தினைதத்தை
வெம்புவெங்களத்திடைவீழ்த்தவென்றியால்
எம்பெருந்தலைவநின்மெய்ம்மையெய்தலால். (௮௩)

அன்னவன்படைக்கலமமர்க்களத்துறின்
தன்னையும்விடவுயிர்தவிர்க்குந்தற்பர
உன்னையொன்றிழைக்கிலதொழிந்துநீங்கிய
இன்னமுஞ்சான்றுவேறெண்ணவேண்டுமோ. (௮௪)

பெருந்திறலநுமனீண்டுணர்வுபெற்றுத்தன்
அருந்துயரளவிலானரற்றுவானவன்
மருந்திறைப்பொழுதினிற்கொணர்குவாயெனப்
பொருந்தினன்வடதிசைகடிதுபோயினான். (௮௫)

பனிவரைகடந்தனன்பருப்பதங்களில்
தனியரசதன்புறந்தவிரச்சார்ந்துளான்
இனியொருகணத்துவந்தெய்துமீண்டுறு
துனிவருதுன்பமுந்துறத்திதொல்லையோய். (௮௬)

யானலாலெந்தையாயுலகமீன்றவன்
தானலாச்சிவனலானேமிதாங்கிய
கோனலாலெனைவருமுணருங்கோளிலா
வேனிலான்மேனியாய்மருந்தைமெய்யுற. (௮௭)

ஆர்கலிகடைந்தநாளமுதின்வந்தன
கார்நிறத்தண்ணறன்னேமிகாப்புன
மேருவினுத்தரகுருவின்மேலுள
யாருமற்றுணர்கிலாவரணமெய்தின. (௮௮)

தோன்றியநாண்முதலெவருந்தொட்டில
ஆன்றபேரண்ணலம்மருந்தினாற்றலால்
மூன்றினோடொன்றளவுலகமுன்னைநாள்
ஈன்றவனிறப்பினுமாவியெய்துமால். (௮௯)

சல்லியமகற்றுவதொன்றுசந்துகள்
புல்லுறப்பொருத்துவதொன்றுபோயின
நல்லுயிர்நல்குவதொன்றுநன்னிறம்
தொல்லையதாக்குவதொன்றுதொல்லையோய். (௯0)

வருமதுதிண்ணநீவருந்தன்மாருதி
தருநெறிதருமமேகாட்டுந்தாழ்க்கிலன்
அருமையதன்றெனுவடிவணங்கினன்
இருண்மயுந்துடைப்பவனேம்பலெய்தினன். (௬௧)

பொன்மலைமீதுபோய்ப்போகபூமியின்
நன்மருந்தெய்துமென்றுணைத்தநல்லுணக்
கன்மையதுளதெனவயிர்க்கின்றேனரோ
என்னலும்விசும்பிடையெழுந்ததங்கொலி. (௬௨)

கடல்கிளர்ந்தெழுந்துமேற்படரக்கார்வரை
இடையிடைபறிந்தவிண்ணேறவிற்றிடை
தடையிலதுடற்றுறுசண்டமாருதம்
வடதிசைதோன்றியமறுக்கம்வந்ததால். (௬௩)

மீன்குலங்குலைந்திடவெயிலின்மண்டிலம்
தான்குலைந்துயர்மதிதழுவத்தன்னுழை
மான்குலம்வெருக்கொளமயங்கிமண்டிவான்
தேன்குலங்கலங்கியநறவிற்சென்றவால். (௬௪)

வேர்த்துளதூறொடும்விசும்பைமீச்செலப்
போர்த்தனமலைகளுமரனும்போவன
தூர்த்தனவேலையைக்காலின்றோன்றலும்
ஆர்த்தனனமரர்தமரர்தையாற்றுவான். (௬௫)

மழைகளுங்கடல்களுமற்றுமுற்றுமண்
உழையவும்விசும்பின்மேலொலித்தற்கொத்துள
குழியினகுமுறினகொள்கைகொண்டதால்
உழுவைவெஞ்சினத்தவனார்த்தவோசையே. (௬௬)

எறிதிரைப்பெருங்கடல்கடையவெற்றநாள்
செறிசுடர்மந்தரந்தருதிசென்றென
வெறிதுகொலெனக்கொடுவிசும்பின்மேற்செலும்
உறுவலிக்கலுழனையொத்துத்தோன்றினன். (௬௭)

பூதலத்தரவொடுமலைந்துபோனநாள்
ஓதியவென்றியனுடற்றுமூற்றத்தன்
ஏதமிலிலங்கையங்கிரியொடெய்திய
தாதையுமொத்தனனுவமைதப்பிலான். (௬௮)

தோன்றினனென்னுமச்சொல்லின்முன்னம்வந்
தூன்றினனிலத்தடிகடவுளோங்கருன்
வான்றனிநின்றதுவஞ்சரூர்வர
ஏன்றில்தாகலினறுமனெய்தினன். (௬௯)

வந்தனன்மருந்தினைமருத்துவானவன்
சிந்தையிற்பெருமகிழ்சிறப்பச்சேர்ந்தறீஇ
அந்தரத்தருக்கன்மாமகனொடாயவர்
வந்திரைத்தார்த்தெழும்வகைசெய்தானரோ. (௧00)

காற்றுவந்தசைத்தலுங்கடவுணட்டவர்
போற்றிடவிருந்துவந்திருந்தபுண்ணியர்
ஏற்றமொடெறும்வலியழகென்றின்னவும்
கூற்றினைவென்றுதம்முருவுங்கூடினார். (௧0௧)

அரக்கர்தம்யாக்கைகளழிவிலாழியில்
கரக்கவுற்றழிந்தனவொழியக்கண்டன
மரக்கலமுதலவுமுய்ந்துவாழ்ந்தன
குரக்கினமுயந்ததுகூறல்வேண்டுமோ. (௧0௨)

கழன்றனநெடுங்கணைகரந்தபுண்கடுத்
தழன்றனகுளிர்ந்தனவங்கஞ்செய்யகண்
சுழன்றனவுலகெலாந்தொழுததொங்கல்சூழ்
குழன்றெழுங்குஞ்சியானுணர்வுங்கூடினான். (௧0௩)

யாவருமெழுந்தனரோத்துமேழ்கடற்
றுவரும்பேரொலிசெவியிற்சார்தலும்
தேவர்தம்வாழ்த்தொலிகேட்டசெங்கணன்
யோகநீங்கினனெனவிளவலோங்கினான். (௧0௪)

ஓங்கியதம்பியையுயிர்வந்துள்ளுற
வீங்கியதோள்களாற்றழுவிவெந்துயர்
நீங்கினனிராமனுமுலகினின்றில
தீங்குளதேவருமறுக்கஞ்சிந்தினார். (௧0௫)

உந்தினபின்கொலையொழிவிலுண்மையும்
தந்தனைநீயதுநினக்குச்சான்றெனச்
சுந்தரவில்லியைத்தொழுதுசூழவந்
தந்தணன்படையுநின்றயர்ந்துபோயதலால். (௧0௬)

அரம்பையராடினரமுதவேழிசை
நரம்பயில்கின்னரமுதல்வர்நாணுற
நிரம்பினவுலகெலாமுவகைநெய்விழாப்
பரம்பினமுனிவரும்வேதம்பாடினார். (௧0௭)

வேதநின்றார்த்தனவேதவேதியர்
போதநின்றார்த்தனபுகழுமார்த்தன
ஓதநின்றார்த்தனவேலையுள்ளுறச்
சீதநின்றார்த்தனதேவர்சிந்தனை. (௧0௮)

ஆயினகாலையினமரரார்த்தெழத்
தாயினுமன்பனைத்தழுவினான்றனி
நாயகன்பெருந்துயர்நாளுநாமறத்
ஆயினன்காதனீர்துளங்குகண்ணினான். (௧௦௯)

வேறு.

எழுதருங்குமத்திருவினேந்துகோ
டுழுதமார்பினனுருகியுள்ளுறத்
தழுவநின்றலுந்தாழ்ந்துதாளுறத்
தொழுதமாருதிக்கினையசொல்லினான். (௧௧௦)

முன்னிற்றோன்றினோர்முறையினீங்கலா
தென்னிற்றோன்றியதுயரினீறுசேர்
மன்னிற்றோன்றினேமுன்னமாண்டுளேம்
நின்னிற்றோன்றினேநெறியிற்றோன்றினாய். (௧௧௧)

அழியுங்காற்றருமுதவியையனே
மொழியுங்காற்றருமுயிரின்முற்றுமோ
பழியுங்காத்தரும்பகையுங்காத்தெமை
வழியுங்காத்துநன்மறையுங்காத்தனை. (௧௧௨)

தாழ்விலிங்கிறைப்பொழுதுதாழ்த்ததேல்
வாழியெம்பிமேலன்புமாட்டவான்
எழும்வீயுமென்பகர்வதெல்லைநாள்
ஊழிகாணுநீயுதவினாயரோ. (௧௧௩)

இன்றுவீகலாதெவருமெம்மொடு
நின்றுவாழுநாணெடிதுநல்கினாய்
ஒன்றுமின்னனோயுறுகலாதுநீ
என்றும்வாழ்தியாலினிதெனேவலால். (௧௧௪)

மற்றையோர்களுமறுமன்வன்மையால்
பெற்றவாயுளார்பிறந்தகாதலார்
சுற்றுமேயினார்தொழுதுவாழ்த்தினார்
உற்றவாறெலாமுணரக்கூறினான். (௧௧௫)

உய்த்தமாமருந்துதவவொன்னலார்
பொய்த்தசிந்தையாரிறுதிபொய்க்குமால்
மொய்த்தகுன்றையுமுலவூழின்வாய்
வைத்துமீடியால்வரம்பிலாற்றலாய் (௧௧௬)

என்றுசாம்பவனியம்பவீதரோ
நன்றுசாலவென்றுவந்துநாழிகைச்
சென்றுமீள்வெனென்றெழுந்துதெய்வமாக்
குன்றுதாங்கியக்குரிசில்போயினான். (௧௧௭)

மருத்துமலைப்படலம்முற்றிற்று ஆ திருவிருத்தம் ௨௭௬௬
கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.



இன்னதித்தலையதாகவிராவணனெழுந்துபொங்கித்
தன்னையுங்கடந்துநீண்டவுவகையன்சமைந்தகீதம்
கின்னரமுதல்வர்பாடமுகத்திடைக்கிடந்தகெண்டைக்
கண்ணிநன்மயிலனாரைநெடுங்களியாட்டுக்கண்டான். (௧)

அரம்பையர்விஞ்சைமாதரரக்கியரவுணர்மாதர்
குரும்பையங்கொங்கைநாகர்கோதையரியக்கர்கோதில்
கரும்பினுமினியசொல்லார்சித்தர்தங்கன்னிமார்கள்
வரம்பறுசும்மையோர்கண்மயிற்குலமருளவந்தார். (௨)

மேநகைவிசயவாட்கட்டிலோத்தமையரம்பைமெல்லென்
தேனகுமழலையின்சொலுருப்பசிமுதலதெய்வ
வானவர்மகளிர்வந்தார்சில்லரிச்சதங்கைமாழ்கி
ஆநகமுரசஞ்சங்கமுருட்டொடுமிரட்டவாடி (௩)

தோடுண்டசுருளுந்தூங்குங்குழைகளுஞ்சுருளிற்றோன்றும்
ஏடுண்டபசும்பொற்பூவுந்திலகமுமிலவச்செவ்வாய்
ஊடுண்டமுறுவன்முத்துமுள்ளுண்டகமலச்செங்கேழ்க்
காடுண்டுபுகுந்ததென்னப்புகுந்ததுகறைவெண்டிங்கள் (௪)

முளைக்கொழுங்கதிரின்கற்றைமுறுவல்வெண்ணிலவுமூறி
ஒளிப்பிழம்பொழுகுபூணினூடுமிழ்வெயிலுமொண்பொன்
விளக்கையும்விளக்குமேனிமிளிர்கதிர்ப்பரப்பும்வீசி
வளைத்தபேருலகங்கண்டோரறிவையுமருட்டமாதோ. (௫)

நற்பெருங்கல்விச்செல்வநவையறுநெறியைநண்ணி
முற்பயனுணர்ந்ததூயோர்மொழியொடும்பழகிமுற்றிப்
பிற்பயனுணர்தறேற்றாப்பேதைபோல்வஞ்சர்செய்த
கற்பனையென்னவோடிக்கரந்ததுகள்ளின்வேகம். (௬)

பலபடமுறுவல்வந்துபயந்தனபனித்தமெய்வேர்
இலவிதழ்துடித்தமுல்லையெயிறுவெண்ணிலவையீன்ற
கொலைபயினயனவேல்கள்கொழுங்கடைசிவந்தகொற்றச்
சிலைநிகர்புருவநெற்றிகுனித்தனவளர்த்தசெவ்வாய். (௭)

கூந்தலம்பாரக்கற்றைக்கொந்தளக்கோலக்கொண்டல்
ஏந்தகலல்குற்றேரையிகந்துபோயிறங்கயாணர்ப்
பூந்துகிலோடும்பூசன்மேகலைசிலம்புபூண்ட
மாந்தரினெய்திநொய்தின்மயங்கினர்மழலைச்சொல்லார். (௮)

கோத்தமேகலையினோடுந்துகின்மணிக்குறங்கைக்கூடக்
காத்தனகூந்தற்கற்றையற்றவத்தன்மைகண்டு
வேர்த்தனகீழுளோர்தங்கீழ்மையேவிளைப்பமேலாம்
சீர்த்தவர்செய்யத்தக்ககருமமேசெய்தாலென்ன (௯)

பாணியிற்றள்ளிக்காலமாத்திரைப்படாதுபட்ட
நாணியின்முறையிற்செல்லாதொருவழிநடையிற்செல்லும்
ஆணியினளிந்தபாடனவின்றனரநங்கவேடன்
றூணியினடைத்தவம்பிற்கொடுந்தொழிலுறந்தகண்ணார். (௧௦)

வங்கியம்வகுத்தகானமாறுகொண்மழலைமானச்
சங்கையில்பெரும்பணுற்றதிறத்துறைதிறம்பத்தள்ளிச்
சிங்கலினமுதினோடுபுள்ளியளாந்தேறலன்ன
வெங்குரலெடுத்தபாடல்விளித்தனர்மயக்கம்வீங்க. (௧௧)

ஏனையபிறவுங்கண்டார்க்கிந்திரசாலமென்னத்
தானவையுருவிற்றோன்றும்பாவனைத்தகைமைசான்றோர்
மானமானோக்கநல்லார்மைந்தரைக்காட்டிவாயால்
ஆனையைக்காட்டித்தேரையவிநயத்தியற்றியுற்றார். (௧௨)

அழுகுவர்நகுவர்பாடியாடுவரயனின்றனைத்
தொழுகுவர்துயர்வர்மீளத்தூங்குவர்துவர்வாயின்றேன்
ஒழுகுவரொல்கியொல்கியொருவர்மேலொருவர்வீழ்ந்து
முழுகுவர்குருதிவாட்கண்முகிழ்த்திடூமரீபோவார். (௧௩)

உயிர்ப்புறத்துற்றதன்மையுணர்த்தினருள்ளத்துள்ள
தயிர்ப்பிலதறிதொன்றேயதுகளியாட்டதாகச்
செயிர்ப்பறுசிந்தைத்தெய்வத்திருமறைமுனிவர்க்கேயும்
மயிர்ப்புறந்தோறும்வந்துபொடித்ததுகாமவாரி. (௧௪)

மாப்பிறழ்நோக்கினார்தமணிநெடுங்குவளைவாட்கண்
சேப்புறவரத்தச்செவ்வாய்ச்செங்கிடைவெண்மைசேரக்
காப்புறுபடைக்கைக்கள்வனிருதற்கோரீறுகாட்டிப்
பூப்பிறழ்ந்துருவம்வேறாய்மலர்ந்ததோர்தன்மைபோன்ற (௧௫)

கயல்வருகாலன்கைவேல்காமவேள்கணையென்றாலும்
இயல்வருகிற்கிலாதநெடுங்கணாரிணைமென்கொங்கை
துயல்வருகனகநாணுங்காஞ்சியுந்துகிலும்வாங்கிப்
புயல்வருகூந்தற்பாரக்கற்றையிற்புனையலுற்றார். (௧௬)

முத்தன்மைமொழியலாகாமுகிழ்நிலாமுறுவனல்லார்
இத்தன்மையெய்தநோக்கியரசுவீற்றிருந்தவெள்ளை
அத்தன்மெய்யரியின்சேனையார்கலியார்த்தவோதை
மத்தன்மெய்மறுகவந்துசெவிதொறுமடுத்ததன்றே. (௧௭)

ஆடலுங்களியின்வந்தவமலையுமமுதினான்ற
பாடலுமுழவின்றெய்வப்பாணியும்பவளவாயர்
ஊடலிற்கடைக்கணோக்குமழலைவெவ்வுரையுமெல்லாம்
வாடியமலரேயொத்தவார்ப்பொலிவருதலோடும் (௧௮)

தறிபொருகளிநல்யானைசோர்வுற்றுத்தள்ளியேங்கித்
துறுசுவற்புரவிதூங்கித்துணுக்குறவரக்கர்துட்கச்
செறிகழலிருவர்தெய்வச்சிலையொலிபரந்தவன்றே
எறிகடல்கடந்தமேனாளெழுந்தபேரோதையென்ன. (௧௯)

முத்தவாணகையின்மூரன்முகத்தியர்முழுக்கண்வேலால்
குத்துவார்கூட்டமெல்லாம்வானரக்குழுவிற்றோன்ற
மத்துவாழ்கடலினுள்ளமறுக்குற்றுவதனமென்னும்
பத்துவாண்மதிக்குமந்நாட்பகலொத்ததிரவும்பைய. (௨௦)

ஈதிடையாகவந்தாரலங்கன்மீதேறினார்போய்
ஊதினார்வேய்கள்வண்டினுருவினுருற்றவெல்லாம்
தீதிலார்பகைஞரொன்னத்தீகின்றமனத்தன்றெய்வப்
போதுகுபந்தர்நின்றுமந்திரவிருக்கைபுக்கான். (௨௧)

களியாட்டுப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம் ௨௭௮.
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௨௫-வது· மாயாசீதைப்படலம்.



மைந்தனுமற்றுளோருமகோதரன்முதலோராய
தந்திரத்தலைமையோருமுதியருந்தழுவத்தக்க
பந்தியரொவரும்வந்துமருங்குறப்படர்ந்தார்பட்ட
அந்தரமுழுதுந்தானேயனையவர்க்கறியச்சொன்னான். (௧)

இலங்கையினின்றுமேருப்பிற்படவிமைப்பிற்றாவி
வலங்கிளர்மருந்துநின்றமலையொடுங்கொணரவல்லான்
அலங்கல்ந்தடந்தோள்வீரனநுமனேயாதல்வேண்டும்
கலங்கவிவுலகுக்கெல்லாங்காரணங்கண்டவாற்றால். (௨)

நங்கிளையுலந்ததேயுமுய்ந்திடநண்ணுமன்றே
வெங்கொடுந்தீமைதன்னால்வேலையினிட்டிலேமேல்
இங்குளவெல்லாமாடற்கினிவருமிடையூறில்லைப்
பங்கயத்தண்ணன்மீளாப்படைபழுதுற்றபண்பால். (௩)

நீரினைக்கடக்கவோட்டியிலங்கையாநின்றகுன்றைப்
பாரினைக்கிழியவீசினருளர்பிழைக்கற்பாலார்
போரினைப்பொருவதெங்கேபோயினவநுமன்பொன்மா
மேரினைக்கொணர்ந்திவ்வூர்மேலிடுமெனின்விலக்கலாமோ. (௪)

முறைகெடலேனும்வேண்டினினைத்ததேமுடிப்பன்முன்பின்
குறைவிலாக்குணங்கட்காங்கோர்கோளிலாவேதங்கூறும்
இறையவர்மூவரொன்பதெண்ணிலாரொண்ணமேதான்
அறைகழலநுமனோடுநேரல்வரோமுதல்வரம்மா. (௫)

இறந்தவரிறந்துதீரவினியொருபிறவிவந்து
பிறந்தனமாகியுள்ளேமுய்ந்தனம்பிழைக்கும்பெற்றி
மறந்திலேயென்னினின்னுஞ்சனகியைமரபினீந்தவ்
வறந்தருசிந்தையோனாயடைக்கலம்புகுதுமைய. (௬)

மறிகடல்குடித்துவானை மண்ணொடுமறிக்கவல்ல
எறிபடையரக்கரெல்லாமிறந்தனரிலங்கை யூரும்
சிறுவனுநீயுமல்லால்யாருளரொருவர்தீர்ந்தார்
வெறிதுநம்வீரமென்ருன்மாலிமேல்விளைவதோர்வான். (௭)

வாலியைவாளியொன்ருல்வானிடைவைத்துவாழி
வேலையைவென்றுகும்பகருணனைவீட்டினானை
ஆலியின்மொக்குளன்னவரக்கரோவமரின்வெல்வார்
சூலியைப்பொருப்பினோடுந்தளக்கியவிசயத்தோளாய். (௮)

என்றுமாலியவான்கூறப்பிறையெயிற்றெழிலிநாப்பண்
மின்றெரிந்தென்னநக்குவெருவரவுரப்பிப்பேழ்வாய்
ஒன்றினென்றசனியென்னவுருத்துநீயுரைத்தமாற்றம்
நன்றுநன்றென்றுசீறியுரைத்தனனலத்தையோரான். (௯)

கட்டுரையென்றுகொள்ளான்கண்ணெரிகதுவநோக்கிப்
பட்டனரரக்கரெண்ணில்படைக்கலம்படைத்தவெல்லாம்
கெட்டனவெனினும்வாழ்க்கைகெடாதினிக்கிளியனானை
விட்டிடவெண்ணியோயான்பிடித்ததுவேட்கைவீய. (௰)

மைந்தரொன்மற்றையோரென்னஞ்சினிர்வாழ்வுவேட்டீர்
உய்ந்தனிர்போவிர்நாளை யூழிவெந்தீயினோங்கிச்
சிந்தியமனித்தரோடக்குரங்கினைத்தீப்பெனென்ருன்
வெந்திறலரக்கர்வேந்தன்மகனிவைவிளம்பலுற்ருன். (௧௧)

உளதுநானுணர்த்தற்பாலதுணர்ந்ததுகோடலுண்டேல்
தளைமலர்க்கிழவன்றந்தபடைக்கலந்தழலிற்சார்த்தி
அளவிலாதமையவிட்டதிராமனைவீட்டியென்ருல்
விளைவிலதனையன்மேனிதீண்டின்றிமீண்டதம்மா. (௧௨)

மானுடனல்லன்ருல்லேவானவனல்லன்மற்று
மேனிவர்முனிவனல்லன்வீடணன்மெய்யிற்சொன்ன
தியானெனவெண்ணிற்றீர்ந்தாரொண்ணுறுமொருவனென்றே
தேனுகுதெரியுன்மன்னசிக்கெனத்தெரிந்ததன்றே. (௧௩)

அனையதுவேறுமிற்கவவனதுபகர்தலாண்மை
வினையெனினன்றுநின்றுவீழ்ந்தவர்வீழ்கவீர
இனையனீமூண்டியான்போய்நிகும்பலைவிரைவினெய்தித்
துனியறுவேள்விவல்லேத்தொடங்கினுன்முடியுந்துன்பம். (௧௪)

அன்னதுநலத்ததேயாலமைதியென்றரக்கன்சொன்னான்
நன்மகனும்பிசூறநண்ணலார்கண்டுநண்ணி
முன்னியவேள்விமுற்றுவகைசெருமுயலற்பாலர்
என்னவரெய்தாவண்ணமியற்றலாமுறுதியீதால். (௧௫)

சானகியுருவமாகச்சமைத்தவடன்மைகண்ட
வானுயரநுமன்முன்னேவாளினாற்கொன்றுமாற்றி
யானெடுஞ்சேனையோடுமயோத்திமேலெழுந்தேனென்னப்
போன்பின்புகுவதொன்றுமிலாதவர்துயரம்பூண்பர். (௧௬)

இத்தலைச்சீதைமாண்டாள்பயனிவணில்லையென்று
அத்தலைத்தம்பிமாருந்தாயருமடுத்துளோரும்
உத்தமத்தமருமாள்வரொன்பதோர்வருத்தமூன்றப்
பொத்தியதுன்பமூளச்சேனையுந்தாமும்போவார். (௧௭)

போகலரென்றபோதுமறுமனையாண்டுப்போக்கி
ஆகியதறிந்தாலன்றியருந்துயராற்றலாற்றார்
ஏகியகருமமுற்றியானவண்விரைவினெய்தி
வேகவெம்படையிற்கொண்டுதருகுவென்வென்றியென்றான். (௧௮)

அன்னதுபுரிதனன்றென்றரக்கனுமமையவஞ்சொற்
பொன்னுவமிக்குமாயமியற்றுவானமைந்துபோனான்
இன்னதித்தலையதாகவிராமனுக்கிரவிசெம்மல்
தொன்னகரிதனைவல்லைக்கடிகெடச்சுடுதுமென்றான். (௧௯)

அத்தொழில்புரிதனன்றென்றண்ணலுமமையவெண்ணித்
தத்துமென்றிலங்கைமூதூர்க்கோபுரத்தும்பர்சார்ந்தான்
பத்தடனேழுசென்றவானரப்பரவைபற்றிக்
கைத்தலத்தெடுத்தகொள்ளியொவ்வொன்றெவ்வுலகுங்காண. (௨௦)

வேறு.

எண்ணறுகோடிப்பல்படையாவும்
மண்ணுறுகாவற்றிண்மதில்வாயில்
வெண்ணிறமேகமின்னினம்வீசி
நண்ணினபோலத்தொன்னகர்நண்ணி. (௨௧)

ஆசைகடோறுமள்ளினகொள்ளி
காசறுவீரர்கடாவிடவீழ்வ
நாசமிவ்வூருக்குண்டெனநள்ளின்
வீசியவானின்மீன்விழலன்ன. (௨௨)

வஞ்சனையன்னவர்வாழுமிலங்கைக்
குஞ்சரமன்னவர்வீசியகொள்ளி
அஞ்சனவண்ணனவ்வாழியினேவும்
செஞ்சரமென்னச்சென்றனமேன்மேல் (௨௩)

கையகலிஞ்சிக்காவல்கலங்கச்
செய்யகொழுந்தீச்சென்றுநெருங்க
ஐயனெடுங்காலாழியையம்பால்
எய்யவெறிந்தாலொத்ததிலங்கை. (௨௪)

பரற்றுறுதொல்பழுவத்தெரிபற்ற
நிரற்றுறுபல்பறவைக்குலநெஞ்சின்
உரற்றினவிண்ணினொலித்தெழுவண்ணம்
அரற்றியெழுந்தவடங்கவிலங்கை. (௨௫)

இத்தலையின்னனிகழ்ந்திடுமெல்லைக்
கைத்தலையிற்கொடிகாலினெழுந்தான்
உய்த்தநெடுங்கிரிமேருவினுப்பால்
வைத்தநெடுந்தகைமாருதிவந்தான். (௨௬)

மூவுலகத்தவரும்முதலோதும்
ஏவின்வலத்தொழில்வீரனிராமன்
தீவமெனச்சிலவாளிசெலுத்தக்
கோவுரமற்றுவிழுந்ததுகுன்றின். (௨௭)

அறையரவக்கழன்மாருதியார்த்தான்
உறையரவஞ்செவியுற்றுளதவ்வூர்
சிறையரவக்கருளன்கொடுசீறும்
இறையரவின்குலமொத்ததிலங்கை. (௨௮)

மேற்றிசைவாயிலைமேவியவெங்கட்
காற்றின்மகன்றனைவந்துகலந்தான்
மாற்றலின்மாயம்வகுக்கும்வலத்தான்
கூற்றையும்வென்றொருவட்டணைகொண்டான். (௨௯)

சானகியாம்வகைகொண்டுசமைத்தோர்
மானனையாளைவடிக்குழல்பற்று
ஊனகுவாளொருகைக்கொடுருத்தான்
ஆனவனந்நிலையின்னவறைந்தான். (௩௰)

வந்திவள்காரணமாகமலைந்தீர்
எந்தையிகழ்ந்தனன்யானிவளாவி
சிந்துவெனென்றுசெறுத்துரைசெய்தான்
அந்தமின்மாருதியஞ்சியயர்ந்தான். (௩௧)

கண்டவளேயிவளென்பதுகண்டான்
விண்டதுபோலுநம்வாழ்வெனவெந்தான்
கொண்டிடர்தீர்வதொர்கோளறிகில்லான்
உண்டுயிரோவெனவாயுமுலர்ந்தான். (௩௨)

யாதுமினிச்செயலில்லெனவென்றால்
நீதியுரைப்பதுநேரொனவோராக்
கோதில்குலத்தொருநீகுணமிக்காய்
மாதையொறுத்தல்வசைத்திறமன்றோ. (௩௩)

நான்முகனுக்கொருநால்வரின்வந்தாய்
நூன்முகமுற்றுநுணங்கவுணர்ந்தாய்
பான்முகமுற்றபெரும்பழியன்றோ
மான்முகமுற்றொருமாதைவதைத்தால். (௩௪)

மண்குலைகின்றதுவானநடுங்கிக்
கண்குலைகின்றதுகாணுதிகண்ணால்
எண்குலைகின்றதிரங்கநுறந்தாய்
பெண்கொலைசெய்கைபெரும்பழியன்றோ. (௩௫)

என்வயினல்கினையேகுதியைய
நின்வயமாமுலகியாவையுநீநீ
டுன்வயமேதுமுணர்ந்திலைகொல்லிப்
புன்மைதொடங்கல்புகழ்க்கிழிவன்றோ. (௩௬)

என்றனன்மாருதியிந்திரசித்தும்
ஒன்றுரைகேளெனதெந்தையுமூரும்
பொன்றுதறீருமிதிற்புகழுண்டோ
நன்றுரையென்றுபினக்குரைசெய்தான். (௩௭)

எந்தையுமிந்தவிலங்கையுளோரும்
உய்ந்திடவானவர்யாவருமோடச்
சிந்துவென்வாளினினென்றுசெறுத்தான்
இந்திரசித்தவனின்னவிசைத்தான். (௩௮)

போமினடாவினைபோயதுபோலாம்
ஆமெனினின்னுமயோத்தியையண்மிக்
காமினதின்றுகளங்கரியாக
வேமிதுமெய்யினிமீள்கிலதன்றே. (௩௯)

தம்பியர்தம்மொடுதாயருமாயோர்
உம்பர்விலக்கிடினும்மினியுய்யார்
வெம்புகடுங்கனல்வீசிடுமென்கை
அம்புமுனுள்ளமறிந்துளதன்றே. (௪௦)

இப்பொழுதேகடிதேகுவென்யானிப்
புட்பகமானமிடைப்பொருபோழ்தில்
தப்புவரோயவர்தாமினியென்கை
வெட்புறுவாளிகளோடிவிசைத்தால். (௪௧)

ஆளுடையாயருளாயருளாயென்
றேழையுமன்புறசொல்லினிரங்க
வாளினெறிந்தனன்மாகடல்போலும்
நீளுறுசேனையினூடுகிமிர்ந்தான். (௬௨)

தென்றிசைநின்றுவடாதுதிசைக்கட்
பொன்றிணிபுட்பகமேற்கொடுபோனன்
ஒன்றுமறிந்திலன்மாருதியுக்கான்
வென்றிநெடுங்கிரிபோலவிழுந்தான். (௬௩)

போயவன்மாறிகிரும்பலைபுக்கான்
தூயவனெஞ்சுதுயர்ந்துசுருண்டான்
ஓய்வறுகேள்வியொருங்கவுணர்ந்தான்
ஏயினபன்னினனின்னனசொன்னன் (௬௪)

வேறு.

அன்னமேயென்னும்பெண்ணினருங்கலக்கலமேயென்னும்
என்னமேயென்னுந்தெய்வமில்லையோயாதுமென்னும்
சின்னமேசெய்யக்கண்டுந்தீவினைநெஞ்சம்பாவி
பின்னமேயாயதில்லையென்னும்பேராற்றல்பேர்ந்தான். (௬௫)

எழுந்தவன்மேலேபாயவெண்ணும்பேரிடரிற்றள்ளி
விழுந்துவெய்துயிர்த்துவிம்மிவீங்கும்போய்மெலியும்வேந்தீக்
கொழுந்துறவுயிர்க்கும்யாக்கைகுலைவுறுந்தலையேகொண்டுற்
றழுந்தனைதன்னைப்பின்னுமினையனவுரைப்பதானன். (௬௬)

முடிந்ததுநந்தமெண்ணமூவுலகிற்குமுடி
விடிந்ததென்றிருந்தேன்மீளவெந்துயரிருளின்வெள்ளம்
படிந்ததுவினையின்செய்கைபயந்ததுபாவிவாளால்
தடிந்தனன்றிருவையந்தோதனைந்ததுதருமமம்மா. (௬௭)

பெருஞ்சிறைக்கற்பினளைப்பெண்ணினைக்கண்ணிற்கொல்ல
இருஞ்சிறகற்றபுட்போல்யாதுமொன்றியற்றலாற்றேன்
பரிஞ்சிறையழுங்குகின்றேனெம்பிரான்றேவிபட்ட
அருஞ்சிறைமீட்டவண்ணமழகிதுபோலுமம்மா. (௬௮)

பாதகவரக்கன்றெய்வபத்தினிதவத்துளாளைப்
பேதையைக்குலத்தின்வந்தபிழைப்பிலாதாளைப்பெண்ணைச்
சீதையைத்திருவைத்தீண்டிச்சிறைவைத்ததீயோன்சேயே
காதவுங்கண்டுநின்றதருமமேபெருமைத்தம்மா. (௬௯)

கல்விக்குமிர்ந்தகீர்த்திக்காகுத்தன்றூதனாகிச்
சொல்விக்கவந்துபோந்தேனுயவித்துயர்செய்தாளை
வெல்விக்கவன்றுநின்னைமீட்பிக்கவன்றுவெய்தின்
கொல்விக்கவந்தேனென்றோர்நெடும்பழிகூட்டிக்கொண்டேன். (௭௦)

வஞ்சியையெங்குங்காணாதுயிரினைமறந்தானென்னச்
செஞ்சிலையுரவொன்றேடித்திரிகின்றானுள்ளந்தேற
அஞ்சொலாளிருந்தாள்கண்டேனென்றனனரக்கர்கொல்லத்
துஞ்சினளென்றுசொல்லத்தோன்றினேன்றேற்றந்தீதோ. (௫௧)

அருங்கடல்கடந்திவ்வூரையள்ளெரிமடுத்துநீசக்
கருங்கடல்கலக்கிமேருக்கடந்தொருமருந்துகாட்டிக்
குரங்கினின்னோடொப்பதில்லெனக்களிப்புக்கொண்டேன்
பெருங்கடற்கோட்டந்தெய்வவையாயதென்னடிமைப்பெற்றி. (௫௨)

விண்டுநின்றாக்கைசிந்தவென்னுயிர்விட்டிலாதேன்
கொண்டுநின்றானைக்கொல்லக்கூசினேனெதிரேகொல்லக்
கண்டுநின்றேனேநன்றென்கையினிற்கலந்தவெண்சோ
றுண்டுநின்றுய்யவல்லேனெளியனோவொருவனுள்ளேன். (௫௩)

இன்னனநின்றிரங்கிக்கள்வனயோத்திமேலெழுவனென்றான்
சொன்னதுமுண்டுபோனசுவடுண்டுதொடர்ந்துசெல்லின்
மன்னனிங்குற்றதன்மையுணர்கிலன்வருவதோரான்
பின்னினிமுடிப்பதியாதென்றிரங்குவானுணர்வுபெற்றான். (௫௪)

உற்றதையுணர்த்திப்பின்னையுலகுடையொருவனோடும்
இற்றிறனுற்றமாள்வெனன்றெனினேவியெண்ணிச்
சொற்றதுசெய்வென்வேறோர்பிறிதிலென்றுணிவிற்றென்னுப்
பொற்றடந்தோளான்வீரன்பொன்னடிமருங்கிற்போனான். (௫௫)

சிங்கவேறனையான்வீரன்செறிகழற்பாதஞ்சேர்ந்தான்
அங்கவன்மனமுங்கண்ணுமாவியுமலக்கணுற்றான்
பொங்கியபொருமல்வீங்கியுயிர்ப்பொடுபுறத்துப்போத
வெங்கணீரருவிசோரமால்வரையென்னவீழ்ந்தான். (௫௬)

வீழ்ந்தவன்றன்னைவீரன்விளைந்ததுவிளம்புகென்னாத்
தாழ்ந்திருதடக்கைபற்றியெடுக்கவுந்தரிக்கிலாதான்
ஆழ்ந்தெழுதன்பத்தாளையரக்கனின்றயில்கொள்வாளால்
போழ்ந்தனனென்றுகூறிப்புரண்டனன்பொருமுகின்றான். (௫௭)

துடித்திலனுயிர்ப்புமில்லனிமைப்பிலன்றுள்ளிக்கண்ணீர்
பொடித்திலன்யாதுமொன்றும்புகன்றிலன்பொருமியுள்ளம்
வெடித்திலன்விம்மிப்பாரின்வீழ்ந்திலன்விழித்தானல்லன்
அடுத்துளதன்மையாவுமறிந்திலரமரரேயும். (௫௮)

சொற்பதங்கேட்டபோதுதனுக்குருவுணர்வுசோர
நற்பெருவாடையுற்றமரங்களினடுக்கமெய்தாக்
கற்பகமனையவள்ளல்கருங்கழற்கமலக்கான்மேல்
வெற்பினமென்னவீழ்ந்தார்வானரவீரரெல்லாம். (௫௯)

சித்திரத்தன்மையுற்றசேவகனுணர்வுதீர்ந்தான்
மித்திரர்வதனநோக்கானிளையவன்வினவப்பேசான்
பித்தரினிறைபொருதபேரபிமானமென்னும்
சத்திரமார்பிற்றைக்கவுயிரிலனென்னச்சாய்ந்தான், (௬0)

நாயகன்றன்மைகண்டுந்தமக்குற்றநாணம்பார்த்தும்
ஆயனகருமமீளவழிவுற்றவதனைப்பார்த்தும்
வாயொடுமனமுங்கண்ணும்யாக்கையுமயங்கிச்சாய்ந்து
தாயினையிழந்தகன்றிற்றம்பியுந்தலத்தனானன். (௬௧)

தொல்லையதுணரத்தக்கவீடணன்றுளக்கமுற்றான்
எல்லையிறுன்பமூன்றவிடையொன்றுந்தரிக்கிலாதான்
வெல்லுவதரிதுநாசமிவடனுல்விளைந்ததென்னுக்
கொல்லவுமடுக்குமென்றுமனத்திஞேரையங்கொண்டான். (௬௨)

சீதநீர்முகத்தினப்பிச்சேவகன்மேனிதீண்டிப்
போதம்வந்தெய்தற்பாலயாவையும்புரிந்துபூம்பொற்
பாதமுங்கையுமெய்யும்பற்றினன்வருடலோடும்
வேதமுங்காணுவள்ளல்விழித்திலனுயிர்ப்புவீங்கி. (௬௩)

ஊற்றுவார்கண்ணிஞேடுமுள்ளழிந்துற்றதெண்ணி
ஆற்றுவானல்லனுகியயர்கின்றுனெனினுமையன்
மாற்றுவானல்லன்மானமுயிருகவருந்துமென்னுத்
தேற்றுவானிருந்துதம்பியிவையிவைசெப்பலுற்றான். (௬௪)

முடியுநாட்டானேவந்துமுற்றினுற்றுன்பமுந்நீர்ப்
படியுமாஞ்சிறுமையெந்தாய்நினக்கதுபழியிற்றுமால்
குடியுமாசுண்டதென்னினறத்தொடுமுலகைக்கொன்று
கடியுமாறன்றிச்சோர்ந்துகழிதியோகருத்திலார்போல். (௬௫)

தையலைத்துணையிலாளைத்தவத்தியைத்தருமக்கற்பின்
தெய்வதைதன்னைமற்றுன்றேவியைத்திருவைத்தீண்டி
வெய்யவன்கொன்றுனென்றால்வேதனையுழத்தலின்னும்
உய்யவோவெளிமையாலோதருமத்தோடுறவுமுண்டோ. (௬௬)

அரக்கனென்னமரர்தாமென்னந்தணர்தாமென்னந்தக்
குருக்களென்முனிவர்தாமென்வேதத்தின்கொள்கைதானென்
நெருக்கினர்வலியராகிநெறியின்றூர்சிதைவனென்னு
இருக்குமிதென்னுமிம்மூன்றுலகையுமெரிமடாதே. (௬௭)

முழுவதேமுலகோடின்னமுறைமுறைசெய்கைமேன்மூண்
டெழுவதேயமரரின்னமிருப்பதேயறமுண்டென்று
தொழுவதேமேகவாரிசுரப்பதேசோர்ந்துநாம்வீழ்ந்
தழுவதேநன்றுநந்தம்விற்றொழிலாற்றலம்மா. (௬௮)

புக்கிவ்வூரிமைப்பின்முன்னம்பொடிபடுத்தரக்கன்போன
திக்கெலாஞ்சுட்டுவானேருலகெலாந்தீத்துத்தீரத்
தக்கநாங்கண்ணீராற்றித்தலைசுமந்திருகைநாற்றித்
துக்கமேயுழப்பமென்றாற்சிறுமையாத்தோன்றுமன்றே. (௬௯)

அங்குமிவ்வறமேநோக்கியரசிழந்தடவியெய்தி
மங்கையைவஞ்சன்பற்றவரம்பழியாதுவாழ்ந்தேம்
இங்குமித்துன்பமெய்தியிருத்துமேலெளிமைநோக்கிப்
பொங்குவான்றளையிற்பூட்டியாட்செயப்புகல்வனன்றே. (எ0)

மன்றலங்கோதையாளைநம்மெதிர்கொணர்ந்துவாளின்
கொன்றவர்தம்மைக்கொல்லுங்கோளிலரநாணங்கூரப்
பொன்றினரொன்பராவிபோக்கினுற்பொதுமைபார்க்கின்
அன்றிதுகருமமென்னீயயர்கின்றததிவிலார்போல். (எக)

அனையவனன்னகூறவருக்கன்சேயயர்கின்றானோர்
கனவுகண்டனனேயென்னக்கதுமெனவெழுந்துகாணும்
வினையினியுண்டோவல்லைவிளக்கில்வீழ்விட்டிலென்ன
மனையிடையரக்கர்மார்பிற்குதித்துநாம்வம்மினென்றான். (எ௨)

இலங்கையையிடந்துவெங்கணிராக்கதரொன்கின்றானைப்
பொலங்குழைமகளிரோடும்பானுகர்புதல்வரோடும்
குலங்களொடடங்கக்கொன்றுகொடுந்தொழில்புரிதுநம்மேல்
விலங்குவரொன்னிற்றேவர்விண்ணையுமண்ணில்வீழ்த்தும் (எ௩)

அறங்கெடச்செய்துமென்பதமைந்தனமாகினைய
புறங்கிடந்துழைப்பதென்னேபொருதினிப்புவனமூன்றும்
கறங்கெனத்திரிந்துதேவர்குலங்களுங்கட்டுமென்றா
மறங்கிளர்வயிரத்தோளானிலங்கைமேல்வாவலுற்றான். (எ௪)

மற்றையவீரரெல்லாமன்னனின்முன்னம்வாவி
எற்றுதுமரக்கர்தம்மையில்லொடுமெடுத்தென்றேகல்
உற்றனருறுதலோடுமுணர்த்துவதுளதென்றுன்னாச்
சொற்றனனநுமன்வஞ்சனயோத்திமேற்போனசூழ்ச்சி. (எ௫)

தாயருந்தம்பிமாருந்தவம்புரிநகரஞ்சாரப்
போயினனென்றமாற்றஞ்செவித்தொளைபுகுதலோடும்
மேயினவடிவிலுற்றவேதனைக்கமையவைத்த
தீயிடைத்தணிந்ததென்னச்சீதைபாற்றுயரந்தீர்ந்தான். (எ௬)

அழுந்தியபாலின்வெள்ளத்தாழிநின்றனந்தர்நீங்கி
எழுந்தனனென்னத்துன்பக்கடலினின்றேறியாருக்
கொழுந்துறுகோபத்தீயுநடுக்கமுமனத்தைக்கூட
உழுந்துருள்பொழுதுந்தாழாவிளாவினுன்மறுக்கமுற்றான். (எஎ)

திருமிச்சீதையோடுமென்கிலதன்றெற்றீமை
வேறொடுமுடிப்பதாகவிளைந்ததுவேறுமின்னும்
யாரொடுந்தொடருமென்பதறிந்திலேனிதனையைய
பேர்வுறுகதியுமுண்டோவெம்பியர்பிழைக்கின்றாரோ. (எஅ)

நினைவதன்முன்னஞ்செல்லுமானத்துநெடிதுபோனான்
வினையொருகணத்தின்முற்றிமீள்கின்றான்வினையேன்வந்த
மனைபொடிபட்டதங்குமாண்டதுதாரமீண்டும்
எனையனதொடருமென்பதுணர்ந்திலேனிறப்புங்காணேன். (எகூ)

தாதைக்குஞ்சடாயுவானதந்தைக்குந்தமியளான
சீதைக்குங்கூற்றங்காட்டித்தவிர்ந்திலதொருவென்றீமை
பேதைப்பெண்பிறந்துபெற்றதாயர்க்கும்பிழைப்பிலாத
காதற்றம்பியர்க்குமூர்க்குநாட்டிற்குங்காட்டிற்றன்றே. (அ௦)

உற்றதொன்றுணரகில்லாருணர்ந்துவந்துருத்தாரேனும்
வெற்றிவெம்பாசம்வீசிவிசித்தவன்கொன்றுவீழ்த்தால்
மற்றைவெம்புள்ளின்வேந்தன்வருகிலன்மருந்துநல்கக்
கொற்றமாருதியுமாங்கில்லர்ருயிர்கொடுத்துக்காப்பான். (அக)

மாக்ழாநகரஞ்செல்லவல்லையின்வயிரத்தோளாய்
ஏகுவானுபாயமுண்டேலியம்புதிகின்றவெல்லாம்
சாகமற்றிலங்கைப்போருந்தவிர்கவச்சமுக்கண்கண்கள்
காக்முண்டதற்பின்மீண்டுமுடிப்பெனென்கருத்தையென்றான். (அஉ)

அவ்விடத்திளவலையபரதனையமரினார்க்க
எவ்விடற்குரியான்போனவிந்திரசித்தேயன்று
தெவ்விடத்தமைவின்மும்மையுலகமுந்தீர்ந்தாவோ
வெவ்விடர்க்கடலின்வைகல்கேளெனவிளம்பலுற்றான். (அ௩)

தீக்கொண்டவஞ்சன்வீசத்திசைமுகன்பாசந்தீண்ட
வீக்குண்டுவீழயானேபரதனும்வெய்யகூற்றைக்
கூய்க்கொண்டுகுத்துண்டான்றன்குலத்தொடுகிலத்தனுதல்
போய்க்கண்டுகோடியன்றேயென்றனன்புழுங்குகின்றான். (அச)

அக்கணத்தநுமனின்றனையவென்றேளிறுதல்
கைத்துணைத்தலத்தேயாதலேறுதிர்காற்றுந்தாழ
இக்கணத்தயோத்திமூதூரெய்தினெனிடமுண்டென்னின்
திக்கனைத்தினிஞுஞ்செல்வென்யானேபோய்ப்பகையுந்தீர்வென். (அ௫)

எழுபதுவெள்ளத்தோடுமிலங்கையையிடந்தென்றேண்மேல்
தழுவுறவைத்தின்றேகென்றுரைத்தியேற்சமைவென்றக்கோய்
பொழுதிறைதாழ்ப்பதென்னேபுட்பகம்போதன்முன்னம்
குழுவொடுகொண்டுபோவென்கணத்திடைக்குதிப்பென்கூற்றின். (அ௬)

கொல்லவந்தானைநீதிகூறினென்விலக்கிக்கொள்வான்
சொல்லவுஞ்சொல்லிநின்றேன்கொன்றபின்றுன்பமுற்றேன்
வெல்லவுந்தரையில்வீழ்வுற்றுணர்ந்திலென்விரைவிற்போனான்
இல்லையென்றுளனேற்றீயோன்பிழைக்குமோவிழுக்கமுற்றான். (அஎ)

மனத்தின்முன்செல்லுமானம்போனதுவழியதாக
நினைப்பின்முன்னயோத்தியெய்திவருநெறிபார்த்துநிற்பென்
இனிச்சிலதாழ்ப்பதென்னோவேறுதிரிரண்டுதோளும்
புனத்துழாயலங்கன்மார்பீர்புட்பகம்போதன்முன்னம். (அஅ)

ஏறுதுமென்றுவீரொழுதலுமிறைஞ்சியீண்டுக்
கூறுவதுளதுதுன்பங்கோளுறக்குலுங்கியுள்ளம்
தேறுவதரிதுசெய்கைமயங்கினென்றிகைத்துநின்றேன்
ஆறினெனிதனையையமாயமென்றயிர்க்கின்றேனால். (அகூ)

பத்தினிதன்னைத்தீண்டிப்பாதகன்படுத்தபோதின்
முத்திறத்துலகும்வெந்துசாம்பராய்முற்றுமன்றே
அத்திறமாயதேனுமயோத்திமேற்போனவார்த்தை
சித்திரமிதனையெல்லாந்தெரிகலாஞ்சிறிதுபோழ்தின். (கூ0)

இமையிடைப்பொழுதில்யான்சென்றேந்திழையிருக்கையெய்தி
அமைவுறநோக்கியுற்றதறிந்துவந்தறைந்தபின்னர்ச்
சமைவதுசெய்வதென்றுவீடணன்விளம்பத்தக்க
தமைவதென்றிராமன்சொன்னானந்தரத்தவனுஞ்சென்றான். (கூக)

வண்டினதுருக்கொண்டன்னான்மானவன்மனத்திற்போனான்
தண்டலையிருக்கைதன்னைப்பொருக்கெனச்சார்ந்துதானே
கண்டனனென்பமன்னோகண்களாற்கருத்தாலாவி
உண்டிலையென்னச்சாய்ந்தவோவியமொக்கின்றாளை. (கூஉ)

தீர்ப்பதுதுன்பம்யானென்னுயிரொடுமென்றுணர்ந்தசிந்தை
பேர்ப்பனசெஞ்சொலன்னதிரிசடைபேசப்போர்ந்தாள்
கார்ப்பெருமேகம்வந்துகடையுகங்கலந்தவன்ன
ஆர்ப்பொலியமுதமாகவாருயிராற்றினாளை. (கூ௩)

வஞ்சனையென்பதுன்னிவானுயருவகைவைகும்
நெஞ்சினனாகியுள்ளந்தள்ளுறலொழிந்துநின்றான்
வெஞ்சிலைமைந்தன்போனானிகும்பலைவேள்வியானென்
றெஞ்சலிலரக்கர்தானையெழுந்தெழுந்தேகக்கண்டான். (கூ௪)

வேள்விக்குவேண்டற்பாலகலப்பையும்விறகுநெய்யும்
வாழ்விக்குந்தாழ்விலென்னும்வானவர்மறுக்கங்கண்டான்
சூழ்வித்தவண்ணமீதோநன்றெனாத்துணிவுகொண்டான்
தாழ்வித்தமுடியான்வீரன்றாமரைச்சரணந்தாழ்ந்தான். (கூ௫)

இருந்தனடேவியானேயெதிர்ந்தனென்கண்களாலவ்
வருந்ததிகற்பினளுக்கழிவுண்டோவரக்கனம்மை
வருந்திடமாயஞ்செய்துநிகும்பலைமருங்குபுக்கான்
முருங்கழல்வேள்விமுற்றிமுதலறமுடிக்கமூண்டான். (௧௬)

என்றலுமுலகமேழுமேழுமாத்தீவுமெல்லை
ஒன்றியகடல்களேழுமுடனெழுந்தார்க்குமோதை
அன்றெனவாகுமென்னவமரருமயிர்க்கவார்த்த
குன்றுகண்மடியத்துள்ளியாடினகுரக்கினீட்டம். (௧௭)

வீரனுமையந்தீர்ந்தான்வீடணன்றன்னைமெய்யோ
டார்வமுமுயிருமொன்றவமுழ்ந்துறத்தழுவியைய
தீர்வதுபொருளோதுன்பநீயுண்டுதெய்வமுண்டு
மாருதியுண்டுநாஞ்செய்தவமுண்டுமறையுமுண்டால். (௧௮)

என்றலுமிறைஞ்சியாகமுற்றுமேல்யாரும்வெல்லார்
வென்றியுமரக்கர்மாட்டேவிடையருளிளவலோடும்
சென்றவனுவியுண்டுவேள்வியுஞ்சிதைப்பெனென்றான்
நன்றிதுபுரிதிபொன்னுநாயகனவில்வதானான். (௧௯)

மாயாசீதைப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம்.௨௩௮௬.
கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௨௬-வது. நிகும்பலைப்படலம்.

தம்பியைத்தழுவியையதாமரைத்தவிசின்மேலான்
வெம்படைதொடுக்குமாயின்விலக்குவதன்றிநொய்தின்
அம்புநீதுரப்பாயல்லையனையதுதுரந்தகாலை
உம்பருமுலகுமெல்லாமுடியுமஃதொழிநீயென்றான். (௧)

முக்கணன்படையுமாழிமுதலவன்படையுமுன்னின்
றுக்கவேவிடுமேல்விட்டாலவற்றையுமவற்றாலேயத்
தக்கவாறியற்றிமற்றன்சிலைவலித்தருக்கினாலே
புக்கவனுவியுண்டுபோதுதிபுகழுமீதால். (௨)

வல்லனமாயைவிஞ்சைவகுத்தனவறிந்துமாளக்
கல்லுதிதருமமென்னுங்கருமங்கள்கருத்திற்கொண்டாய்
பல்பெரும்போருஞ்செய்துவருந்தலையற்றம்பார்த்துக்
கொல்லுதியமர்வெங்கட்கூற்றினைக்கூற்றமொப்பாய். (௩)

வதைத்தவன்வெம்மையாடிப்பல்பெரும்பகழிமாரி
விதைத்தனவிதையாநின்றுவிலக்குதிமெலிவுமிக்கால்
உதைப்பனசிலையின்வாளிமருமத்தைக்கழியவோட்டி
வதைத்தொழில்புரிதிசாபநூனெறிமறப்பிலாதாய். (௪)

தொடுப்பதன்முன்னம்வாளிதொடுத்தவைதுறைகடோறும்
தடுப்பனதடுத்தியெண்ணங்குறிப்பினலுணர்ந்துதக்க
கடுப்பினுமளவிலாதகதியினுங்கணைகள்காற்றின்
விடுப்பனவவற்றைநோக்கிவிடுதியால்விரைவிலாதாய் (ரு)

என்பனமுதலுபாயம்யாவையுமியம்பியேற்ற
முன்பனைநோக்கியையமூவகையுலகுந்தானுய்த்
தன்பெருந்தன்மைதானுமறிகிலாவொருவன்றுங்கும்
வன்பெருஞ்சிலையீதாகும்வாங்குதிவலமுங்கொள்வாய். (சு)

இச்சிலையியற்கைமேனுட்டமிழ்முனியியம்பிற்றெல்லாம்
அச்செனக்கேட்டாயன்றேயாயிரமௌலியண்ணல்
மெய்ச்சிலைவிரிஞ்சன்றனேவேள்வியில்வேட்டுப்பெற்ற
கைச்சிலையென்றுகாட்டிக்கொடுத்தனன் கவசத்தோடும். (எ)

ஆணியிவ்வுலகுக்காயவாழியான்புறத்தினார்த்த
தூணியுங்கொடுத்துமற்றையுறுதிகள்பலவுஞ்சொல்லித்
தாணுவின்றேற்றத்தானைத்தழுவினன்றழுவலோடும்
சேனுயர்விசும்பிற்றேவர்தீர்ந்ததெஞ்சிறுமையென்றார். (அ)

மங்கலமுனிவர்கூறவானவர்மகிழ்ந்துவாழ்த்திப்
பங்கமிலாசிகூறிப்பலாண்டிசைபரவப்பாகத்
திங்களின்மௌலியண்ணறிரிபுரமெரிப்பச்சீறிப்
பொங்கினனென்னத்தோன்றிப்பொலிந்தனன்போர்மேற்போவான் (கூ)

மாருதிமுதல்வராயவானரத்தலைவரோடும்
வீரநீசேறியென்றுவிடைகொடுத்தருளுமெல்லை
ஆரியன்கமலபாதமகத்துநன்புறத்துமாகச்
சீரியசென்னிசேரச்சேர்த்தினன்றருமச்செல்வன். (க0)

பொலங்கொண்டலனையமேனிப்புரவலன்பொருமிக்கண்ணீர்
நிலங்கொண்டுபடரநின்றுநெஞ்சழிவானைத்தம்பி
வலங்கொண்டுவயிரவல்விலிடங்கொண்டுவஞ்சன்மேலே
சலங்கொண்டுகடிதிற்சென்றுன்றலைகொண்டுவருவெனென்று. (கக)

தான்பிரிகின்றிலாததம்பிவெங்கடுப்பிற்செல்லா
ஊன்பிரிவுடையதானவுயிரெனமறைதலோடும்
வான்பெருவேள்விகாக்கவளர்கின்றபருவந்தன்னில்
தான்பிரிகின்றநாளத்தயரதன்றன்னையொத்தான். (கஉ)

வேறு.

சேனுபதியேமுதல்சேவகர்தாம்
ஆனுமிர்கொள்ளிகொளங்கையினர்
கானார்நெறியும்மலையுங்கழியப்
போனார்கணிகும்பலைபுக்கனரால். (கங)

உண்டாயதொராலுலகுள்ளொருவன்
கொண்டானுறைகின்றதுபோற்குலவி
விண்டாலம்விழுங்கவிரிந்ததனைக்
கண்டாரவரக்கர்கருங்கடலை. (கச)

நேமிப்பெருயூகநிரைத்தநெடுஞ்
சேமத்ததுநின்றதுதீவினையோன்
ஓமக்கனல்வெவ்வடவைக்குடனே
பாமக்கடனின்றதொர்பான்மையதே. (கரு)

காராயினவெங்கரிதேர்பரிமாத்
தாயிரகோடிதழீஇயதுதான்
நீராழியோர்டாழிநிரீஇயதுபோல
ஓராயிரமால்புடையுள்ளதனை. (கசு)

பொற்றேர்பரிமாக்கரிமாப்பொருதார்
எற்றேபடைவீரரையெண்ணிலதா
உற்றேவியயூபமுலோகமுடன்
சுற்றுயிரமூடுசுலாயதனை. (கஎ)

வண்ணக்கருமேனியின்மேன்மழைவாழ்
விண்ணைத்தொடுசெம்மயிர்வீசுதலால்
அண்ணற்கரியானனலப்படைவெம்
பண்ணைக்கடனின்றதொர்பான்மையதே. (கஅ)

வழங்காசிலைநாணொலிவானினெடும்
பழங்கார்முகமொத்தபணைக்குலமும்
தழங்காகடல்வாழ்வனபோற்றகைசால்
முழங்காமுகிலொத்தனமாமுரசே. (கக)

வலியானவ்விராகவன்வாய்மொழியால்
சலியாதநெடுங்கடலுன்னெனலாய்
ஒலியாதொருசேனையுற்றொருநாள்
மெலியாதவரார்த்தனர்விண்கிழிய. (உ0)

ஆர்த்தாரொதிரார்த்தவரக்கர்குலம்
போர்த்தார்முரசங்கள்புடைத்தபுகத்
தார்த்தாரிவர்கற்படைசூன்முகிலின்
நீர்த்தாரையினம்பவர்நீட்டினரால். (உக)

மின்னும்படைவீசலின்வெம்படைமேல்
பன்னுங்கவிசேனைபடிந்துளதால்
துன்னுந்துறைநீர்நிறைவாவிதொறும்
அன்னங்கள்படிந்தனவாமெனலாய். (உஉ)

வில்லும்மழுவும்மெழுவும்மிடலோர்
பல்லுந்தலையும்முடலும்படியில்
செல்லும்படிசிந்தினசென்றனவால்
கல்லும்மரமுங்கரமுங்கதுவ. (௨௩)

வாலுந்தலையும்முடலும்வயிறும்
காலுங்கரமுந்தனைகண்டனவால்
கோலும்மழுவும்மெழுவுங்கொழுவும்
வேலுங்கணையும்வளையும்விசிற. (௨௪)

வென்றிச்சிலைவீரனைவீடணனீ
நின்றிக்கடைதாழுதனீதியதோ
சென்றிக்கடிவேள்விசிதைத்திலையேல்
வென்றிக்கடல்வெல்லலம்யாமெனலும். (௨௫)

தேவாசுரருந்திசைநான்முகனும்
மூவாமுதலீசனுமூவுலகின்
கோவாகியகொற்றவனும்முதலோர்
மேவாதவரில்லைவிசும்புறைவோர். (௨௬)

பல்லார்படைநின்றனபல்லணியாப்
பல்லார்படைநின்றனபல்பிறைவெண்
பல்லார்படைநின்றனபல்லியமும்
பல்லார்படைநின்றனபல்படையே. (௨௭)

அக்காலையிலக்குவனப்படையுள்
புக்கானயிலம்புபொழிந்தனனல்
உக்காரவரக்கர்தமூரொழியப்
புக்கார்நமனூருறைதென்புலமே. (௨௮)

தேருமதமாகரிதேர்பரிமா
நூருயிரமாயிரநூழில்படச்
சேறூர்குருதிக்கடலிற்றிடராக்
கூறுயுகவ்வாளிகுறைத்தனவால். (௨௯)

வாமக்கரிதானழிவார்குழிவன்
றீமொய்த்தவரக்கர்கள்செம்மயிரின்
தாமத்தலைபுக்கதழங்கெரியின்
ஓமத்தைநிகர்ப்பவுலப்பிலவால். (௩௦)

சிலையின்கணையூடுதிறந்தனதிண்
குலைவெங்குலமால்கரிசெம்புனல்கொண்
டுலைவின்றுகிடந்தனவொத்தனவால்
மலையுஞ்சுனையும்வயிறும்முடலும். (௩௧)

விற்றொத்தியவெங்கணையெண்ணினப்
பற்றொத்தியபோற்றடியப்பலவும்
முற்றச்சுடர்மின்மினிமொய்த்துளவன்
புற்றொத்தமுடித்தலைபூழியபோய். (௩௨)

படுமாரிநெடுங்கணைபாய்தலினால்
விடுமாறுதிரப்புனல்வீழ்வனமீ
தடுமாறுநெடுங்கொடிதாழ்கடல்வாய்
நெடுமாமுகில்வீழ்வனிகர்த்தனவால். (௩௩)

மின்னார்கணைதாளறவீசவிழுந்
தன்னாருதிரத்தினமூழ்ந்துதலால்
ஒன்னார்முழுவெண்குடையொத்துளவால்
சென்னாகம்விழுங்கியதிங்களினை. (௩௪)

கரியுண்டகளத்திடையுற்றனகார்
நரியுண்டையகப்படநட்டனவால்
இரியுண்டுளமிந்தியமீட்டிடரால்
வரியுண்டவுடற்பொறைமானினவால். (௩௫)

வாயிற்கடுவெங்கனல்வாளியினம்
பாயப்பருமக்குலம்வேவனபால்
வேயுற்றநெடுங்கிரிமீவயினார்
தீயுற்றனவொத்தசினக்கரியே. (௩௬)

கொடுநீள்கரிதாளொடுகைக்குறையப்
படுநீள்குருதிப்படர்கின்றனவால்
அடுநீளுயிரின்மையினாழ்கிலவான்
நெடுநீரினிடங்கர்நிகர்த்தனவால். (௩௭)

அலைவேலையரக்கரையெண்கணுகித்
தலைமீதின்முடித்திரடள்ளுதலால்
மலைமேலுயர்புற்றினம்வள்ளுகிரால்
நிலைபேரமறிப்பநிகர்த்தனவால். (௩௮)

மாவாளிகண்மாமழைபோல்வரலால்
மாவாளிகள்போர்தெறுமாமறவோர்
மாவாளிகள்வன்றலையின்னணிவாம்
மாவாளிகளோடுமறிந்தனரால். (௩௯)

அங்கங்கிழியத்துணிபட்டதனால்
அங்கங்கிழிகுற்றவமர்த்தலைவர்
அங்கங்கிழிசெம்புனல்பம்பவலைந்
தங்கங்கணிரம்பவலம்பியதால். (௪௦)

வன்றானையைவார்கணைமாரியினால்
அன்றுயிரமோலியநந்தனமர்ப்
பின்றுவெதிர்தானவர்பேரணியைக்
கொன்றானெனவெய்துகுறைத்தனனால். (௪௧)

வேறு.

மலைகளுமரங்களும்வானமீன்களும்
அலையவெங்கால்பொரவழிந்தவாமென
உலைகொள்வெங்கனற்பொதியோமமுற்றவால்
தலைகளுமுடல்களுங்கரமுந்தாவின. (௪௨)

வாரணமனையவன்றுணிக்கவான்படர்
தாரணிமுடிப்பெருந்தலைகடாக்கலால்
ஆரணமந்திரமமையவோதிய
பூரணப்பொற்குடமுடைந்துபோனவால். (௪௩)

தாறுகொண்மதகரிசுமந்துதாமரை
சீறியமுகத்தலையுருட்டிச்செந்நிறத்
தாறுகள்சொரிந்தபேருதிரத்தோங்கலை
ஆறுகளருங்கனலவியச்சென்றவால். (௪௪)

தெரிகணைவிசும்பிடைச்சுமந்துசெம்மயிர்
வரிகழலரக்கர்தந்தடக்கைவாளொடும்
உருமெனவிழுதலினனலுக்கோக்கிய
எருமைகண்மறிந்தனமறியுமீர்ந்தவால். (௪௫)

அங்கடங்கழிந்தபேருருவிக்குன்றினின்
அங்கடங்கிழிந்திலரழிந்தவாடவர்
அங்கடங்கலும்படர்குருதியாழியின்
அங்கடங்கினர்தொடர்பகழியஞ்சினார். (௪௬)

காறலத்தொடுதுணிந்தொழிந்தகாய்கதிர்க்
கோறலைத்தலையுறமறுக்கங்கூடினர்
வேறலத்தூன்றினர்துளங்குமெய்யினர்
நாறலைக்குடரினர்பலருநண்ணினார். (௪௭)

பொங்குடறுணிந்ததம்புதல்வர்போக்கிலார்
தொங்குடைத்தோண்மிசையிருந்துசோர்வுற
அங்குடைத்தம்பியைத்தழுவியண்மினர்
தங்குடர்முதுகிடைச்சொரியத்தள்ளுவார். (௪௮)

மூடியநெய்யொடுநறவுமுற்றிய
சாடிகள்பொரியொடுதகர்ந்துதள்ளுறக்
கோடிகள்பலபடுகுழாங்குழாங்களா
ஆடினவறுகுறையறுக்குமாக்கைகள். (௪௯)

காலெனக்கடுவெனக்கலிங்கக்கம்மியர்
நூலெனவுயிர்ப்பொறைதொடர்ந்தநோயெனப்
பாலுறுபிணியெனக்கலந்துபன்முறை
வேலுறுசேனையைத்துணித்துவீழ்த்தினான். (௫௰)

கண்டனன்றிசைதொறுநோக்கிக்கண்ணகன்
மண்டலமறிகடலன்னமாப்படை
விண்டெறிகால்பொரமறிந்துவீழ்ந்தன
தண்டலையாமெனக்கிடந்ததன்மையே. (௫௧)

மிடலின்வெங்கடகரிப்பிணத்தின்விண்டொடு
திடரும்வெம்புரவியுந்தேருஞ்சிந்தின
உடலும்வன்றலைகளுமுதிரத்தோங்கலைக்
கடலுமல்லாலிடையொன்றுங்கண்டிலன். (௫௨)

நூறுநூறாயிரகோடிநோன்கழல்
மாறுபோரரக்கரையொருவன்வார்கணை
கூறுகூறாக்கினகுவையின்சோரியின்
ஆறுமேயன்றிவேறரக்கர்க்கண்டிலன். (௫௩)

நஞ்சினும்வெய்யவர்நடுங்கிநாவுலந்
தஞ்சினர்சிலர்சிலரடைகின்றார்சிலர்
வெஞ்சினவீரர்கண்மீண்டிலாதவர்
துஞ்சினர்தொலைவிலொளித்துளங்கினார். (௫௪)

ஓமவெங்கனல்விந்துழைக்கலப்பையும்
காமர்வண்டருப்பையின்குலமுங்கட்டற
நாமமந்திரத்தொழின்மறந்துநாளறும்
தூமவெங்கனலெனப்பொலிந்துதோன்றினான். (௫௫)

அக்கணத்தடுகளத்தம்புமாரியால்
உக்கவரொழிதாவுயிருளோரெலாம்
தொக்கனரரக்கனைச்சூழ்ந்தாசுற்றுறப்
புக்கதுகலக்குலப்பொருவில்போர்க்கடல். (௫௬)

ஆயிரமலருடையாழிமாப்படை
ஏயெனுமாத்திரத்திற்றகொற்றமும்
தூயவன்சிலைவலித்தொழிலுந்துன்பமும்
மேயினவெகுளியுங்கிளரவெம்பினான். (௫௭)

மெய்குலைந்திருநிலமடந்தைவிம்முறச்
செய்கொலைத்தொழிலுந்தஞ்செய்கைதீயவர்
மொய்குலத்திறுதியுமுனிவர்கண்டவர்
கைகுலைக்கின்றதுங்கண்ணிநோக்கினான். (௫௮)

மானமும்பாழ்படவருத்தவேள்வியின்
மோனமும்பாழ்படமுடிவிலாமுரட்
சேனையும்பாழ்படச்சிந்தைமந்திரத்
தேனையும்பாழ்படவினையகூறினான். (௫௯)

வெள்ளமையைந்துடைவிரிந்தசேனையின்
உள்ளதக்குரோணியீரைந்தொடேயுமால்
எள்ளுறும்வேள்விநின்றிலிதியற்றுதல்
பிள்ளைமையனையதுஞ்சிதைந்துபேர்ந்ததால். (௬0)

தொடங்கியவேள்வியின்றாமவெங்கனல்
அடங்கியதவிந்துளதமையுமாமன்றே
இடங்கொள்வெஞ்சிலைத்தொழில்வென்றியின்றெடும்
அடங்கியதென்பதுக்கேதுவாகுமால். (௬௧)

அங்கதுகிடக்கநாள்மனிசற்காற்றலென்
சிங்கினெனென்பதோரொளிமைதேய்வுற
இங்குநின்றிவைசிலநினைக்கினெனினிப்
பொங்குபோராற்றலென்றேளும்போனவோ. (௬௨)

மந்திரவேள்விபோய்மடிந்ததாமெனச்
சிந்தையுணினைந்துநான்வருந்துஞ்சிற்றியல்
அந்தரத்தமராருமனிசற்காற்றலன்
இந்திரற்கேயிவன்வலியென்றேசவோ (௬௩)

என்றவன்பகர்கின்றவெல்லைவல்விசைக்
குன்றமுமரங்களும்பிணத்தின்கூட்டமும்
பொன்றினகரிகளுங்கவிகள்போக்கின
சென்றனபெரும்படையிரிந்துசிந்திட. (௬௪)

நூதங்கினரொருவர்மேலொருவர்புக்குறப்
பதுங்கினர்நடுங்கினர்பகழிபாய்தலின்
பிதுங்கினர்குடருடல்பிளவுபட்டனர்
மதம்புலர்களிறெனச்சீற்றமாற்றினார். (௬௫)

வீரன்வெங்கணையொடுமுதல்வர்வீசிய
கார்வரையரக்கர்வெங்கடலின்வீழ்ந்தன
போர்நெடுங்கால்பொரப்பொழியுமாமழைத்
தாரையுமேகமும்படிந்ததன்மையே. (௬௬)

நிரைக்கடற்பெரும்படையிரிந்துசிந்திட
மரத்தினிற்புடைத்தடர்த்தருத்தமாருதி
அரக்கனுக்கணித்தெனவணுகியன்னவன்
வரக்கதஞ்சிறப்பணமாற்றங்கூறினான். (௬௭)

வேறு.

தடந்திரைப்பரவையன்னசக்கரயூகம்புக்குக்
கிடந்ததுகண்டதுண்டோநாணொலிகேட்டிலாயோ
தொடர்ந்துபோயயோத்திதன்னைக்கிளையொடுந்துணியநூறி
நடந்ததெப்பொழுதுவேள்விமுடிந்ததேகருமநன்றே. (௬௮)

ஏந்தகன்ஞாலமெல்லாமினிதுறைந்திவரத்தாங்கும்
பாந்தளிற்பெரியதிண்டோட்பரதனைப்பழியிற்றீர்ந்த
வேந்தனைக்கண்டேயன்றீல்லலர்காட்டிமீண்டு
போந்ததோவுயிருங்கொண்டேயாயினும்புதுமையன்றே. (௬௯)

அம்புதந்தமைந்தவில்விற்சம்பரனுவிவாங்கி
உம்பருக்குதவிசெய்தவொருவனுக்குதயஞ்செய்த
நம்பியைமுதல்வராயமூவர்க்குநால்வனை
தம்பியைக்கண்டதுண்டேயவனொடுந்தாக்கிற்றுண்டோ. (௭0)

தீயொத்தவயிரவாளியுடலுறச்சிவந்தசோரி
காயத்துஞ்செவியினூடும்வாயினுங்கண்களூடும்
பாயப்போயிலங்கைபுக்குவஞ்சனைபலவுஞ்செய்யும்
மாயப்போராற்றலெல்லாமின்றொடுமடியுமன்றே. (௭௧)

பாசமோமலரின்மேலான்பெரும்படைக்கலமோபண்டை
ஈசனார்படையோமாயனேமியோயாதோவின்னும்
வீசநீர்விரும்புகின்றவிதற்குநாம்வெருவிச்சாலக்
கூசினேம்போதும்போதுங்கூற்றினார்குறுகவந்தார். (௭௨)

வரங்களீருடையவாறுமாயங்கள்வல்லவாறும்
பரங்கொள்வானவரிற்பெற்றபடைக்கலம்படைத்தவாறும்
உரங்களொடுன்னியன்றேவும்மையாமுயிரினோடும்
சிரங்கொளத்துணிந்ததன்னதுண்டதுதிறம்பினுமோ. (௭௩)

விடந்துடிக்கின்றகண்டத்தண்ணலும்விரிஞ்சன்றானும்
படிந்துடிக்கின்றநாகப்பாம்பணைப்பள்ளியானும்
சடந்துடித்திலராய்வந்துதாங்கினுஞ்சாகைதிண்ணம்
இடிந்துடிக்கின்றதுண்டேயென்னிருந்தெழுகிலீரோ. (௭௪)

கொல்வெனென்றுன்னைத்தானேகுறித்தொருகூனுக்கொண்ட
வில்லினர்தருகுசார்ந்துன்சேனையைமுழுதும்வீட்டி
வல்லைவாவாவென்றுவிளிக்கின்றான்வரிவில்லானின்
ஒல்லொலியைசெய்யமோமத்துக்குதப்பொனாறுமோ. (௭௫)

மூலைகள்ளைபினின்றமுழுமுசற்றலைவர்முன்னாக்
தேவர்கண்முனிவர்மற்றுந்திறத்திறத்துலகுசேர்ந்தார்
யாவருங்காணநின்றுரினியிறைதாழ்ப்பதெனைனோ
சாவதுசரதமன்றேவென்றனன்றருமங்காப்பான். (௭௬)

அன்னவாசகங்கள்கேளாவனுயிர்த்தலங்கற்பொற்றோள்
மின்னுருபகுவாயூடுவெயிலுகநகைபோய்வீங்க
முன்னரோவந்துமாற்றமொழிகின்றீர்மொழிந்தமாற்றம்
என்னதோநீயிரென்னையிகழ்ந்ததென்றினையசொன்னான். (எஎ)

மூண்டபோர்தோறும்பட்டுமுடிந்தனிர்முறையிற்றீர்ந்து
மீண்டபோதரனையெல்லாமறந்திரோவிளிதல்வேண்டி
ஈண்டவொட்டென்றுநின்றாயிவ்வனைவீருமின்னும்
மாண்டபோதுயிர்தந்தீயுமருந்துவைத்தனையோமான. (எஅ)

இலக்குவனாகமற்றவ்விராமனேயாகவீண்டு
விலக்குவரெல்லாம்வந்துவிலக்குககுரக்கின்வெள்ளம்
குலக்குலமாகமாளுங்கொற்றமுமனிசர்கொள்ளும்
அலக்கணுமுனிவர்தம்மோடமரருங்காண்பரன்றே. (எகூ)

யானுடைவில்லுமென்பொற்றோள்களுமிருக்கவின்னும்
ஊனுடையுயிர்கள்யாவுமுய்யுமோகழுகுணுவோ
கூனுடைக்குரங்கினோடுமனிசரைக்கொன்றுசென்றவ்
வானினுந்தொடர்ந்துகொல்வென்மருந்தினுமுய்யமாட்டீர். (அ0)

வேட்கின்றவேள்வியின்றேபிழைத்ததுவேறுமென்றோ
கேட்கின்றவீரமெல்லாங்கிளந்ததுகிளத்தலம்மா
தாழ்க்கின்றதென்னோநீவிர்தனித்தனித்தலைகள்சிந்தச்
சூழ்க்கின்றவிதியார்செய்கைதொடங்குமின்றுணிந்தவெல்லாம். (அக)

மற்றெலாநும்மைப்போலவாயினுற்சொல்லன்மாட்டேன்
வெற்றிதானிரண்டுதந்தீர்விளைவதுவிளம்பலல்லால்
உற்றுநானுருத்தகாலத்தொருமுறையெதிரோநிற்க
கிற்றிரோவின்னுமாண்டுகிடத்திரோநடத்திரோதான். (அஉ)

நின்மின்க்ணின்மினென்றுநெருப்பெழவிழித்துநீண்ட
மின்மின்கொள்கவசமிட்டான்றூக்கினன்றூணிவீரப்
பொன்மின்கொள்கோதைகையிற்பூட்டினன்பொறுத்தான்போர்வில்
என்மின்கொள்வயிரத்திண்டேரேறினனெறிந்தாணி. (அ௩)

ஊதினன்சங்கம்வானத்தொண்டொடிமகளிரொண்கண்
மோதினர்கணத்தின்முன்னமுழுவதுமுருங்கமுற்றிக்
காதிருளென்னவானோர்கலங்கினர்கயிலையானும்
போதினன்றானும்வல்லேபுகுந்ததுபெரும்போரென்றார். (அச)

இழைத்தபேர்யாகந்தானேயாஞ்செய்ததவத்தினாலே
பிழைத்ததுபிழைத்ததேனும்வானரம்பிழைக்கலாற்றா
தழைத்ததுவிதியேகொல்லென்றஞ்சினாம்பினோடும்
உழைத்தது ஞாண்கின்றமென்றுணங்கினரும்பரெல்லாம். (அரு

நாண்டொழிலோசைவீசிச்செவிதொறுநடத்தலோடும்
ஆண்டொழின்மறந்துகையினடுக்கியமராமுங்கல்லும்
மீண்டனமறிந்துசோரவீழ்ந்தனவீழ்ந்தமண்மேல்
மாண்டனமெய்யென்றுன்னியிரிந்ததுகுரங்கின்மாலை. (அசு)

படைப்பெருந்தலைவர்நின்றாரல்லவரிறுதிபற்றும்
அடைப்பருங்காலக்காற்றுலாற்றலதாகிக்கீறி
உடைத்திரிந்தோடும்வேலைப்புனலெனவிரியலுற்றார்
கிடைத்தபோதநுமனுங்கோர்நெடுங்கிரிகிழித்துக்கொண்டான். (அஎ)

நில்லடாநில்லுநில்லுநீயடாவாசிபேசிக்
கல்லடாநின்றதென்னைப்போர்க்களத்தமரர்காணக்
கொல்லலாமென்றேவுன்னிற்குரங்கொன்றாற்கூடுமன்றே
நல்லைபோர்வாவாவென்றானமனுக்குகோர்நமனுய்நின்றான். (அஅ)

வில்லெடுத்தருத்துநின்றவீரரில்வீரனோ
கல்லெடுத்தெறியவந்தவநுமனைக்கண்ணினோக்கி
மல்லெடுத்தமைந்ததோளாற்கென்கொலோவருவதென்னாச்
சொல்லெடுத்தமரர்சொன்னார்தாதையுந்துயக்கமுற்றான். (அகூ)

வீசியவயிரக்குன்றமெறிபொறிக்குலங்கள்விண்ணின்
ஆசையினிமிர்ந்துசெல்லவாயிரமுருமொன்றாகப்
பூசியபிழம்பதென்னவருவதன்புரிவைநோக்கிக்
கூசினவுலகமெல்லாங்குலைந்ததவ்வரக்கர்கூட்டம். (கூ௦)

குண்டலநெடுவில்வீசமேருவிற்குணித்ததோளான்
அண்டமுங்குலுங்கவார்த்தமாருதியசனியஞ்ச
விண்டலத்தெறிந்தகுன்றம்வெறுந்துகளாகிவீழக்
கண்டனனெய்ததன்மைகண்டிலரிமைப்பில்கண்ணார். (கூக)

மாறொருகுன்றம்வாங்கிமறுகுவான்மார்பிற்றோளில்
காறருகாலிற்கையிற்கழுத்தினினுதலிற்கண்ணில்
ஏறினவெண்பமன்றேவெரிமுதற்கடவுள்வெம்மை
சீறினபகழிமாரிதிக்கடுவிடத்திற்றோய்த்த. (கூஉ)

வெதிரொத்தசிகரக்குன்றமருங்குறவிளங்கலானும்
எதிரொத்தவிருளைக்கீறியெழுகின்றவியற்கையானும்
கதிரொத்தபகழிக்கற்றைகாலொளிகாட்டலானும்
உதிரத்தின்செம்மையானுமுதிக்கின்றகதிரோனொத்தான். (கூ௩)

ஆயவனயர்தலோடுமங்கதன்முதல்வராயோர்
காய்சினந்திருகிவந்துகலந்துளோர்தம்மைக்காணு
நீயிர்கணின்மினின்மினிருமுறைநெடியவானில்
போயவனெங்கேயென்றுனேன்றினர்ப்பொருள்செயாதான். (கூ௪)

வெம்பினர்பின்னுமேன்மேற்சீறலும்வெருண்டுசீயம்
தும்பியைத்தொடர்வதல்லாற்குரங்கின்மேற்சுளிவதுண்டே
அம்பினைமாட்டியென்னேசிறிதுபோழ்தாற்றவன்றான்
தம்பியைக்காட்டித்தாரீர்சாகிரோசலத்தினென்றான். (௯௫)

அநுமனைக்கண்டிலீரோவவனினும்வலியிரோவென்
தநுவுளதன்றேதோளுமவையலாற்றவிர்ந்தவுண்டோ
இனிமுனைநீரலீரோவெவ்வலியீட்டிவந்தீர்
மனிசனைக்காட்டிநுந்தமலையிடைவழிக்கொளீரோ. (௯௬)

என்றுரைத்திளவறன்மேலெழுகின்றவியற்கைநோக்கிக்
குன்றமுமரனும்வீசக்குறுகினர்குழாங்கடோறும்
சென்றனற்பகழிமாரிமேருவையுருவித்தீர்வ
ஒன்றலகோடிகோடியுளவெனவலியினுய்த்தான். (௯௭)

படுகின்றதன்றேமற்றுன்பெரும்படைபகழிமாரி
[illegible]றதன்றேவென்றியரக்கனுங்காளமேகம்
[illegible]றவேள்விமாண்டதினியவன்பிழைப்புறாமே
[illegible]னரக்கன்றம்பிநம்பியுஞ்சென்றுமூண்டான். (௯௮)

வேறு.

[illegible]டுந்தகைமாருதிமயங்காமுகமலர்ந்தான்
[illegible]டிதேறாயெனதிருதோண்மிசையென்றான்
[illegible]தாவதென்றுவந்தையனுமமைவாயினனிமையோர்
சிந்தாகுலந்துறந்தாரவன்பெருஞ்சாரிகைதிரிந்தான். (௯௯)

காராயிரமுடனாயினவெனலாம்வகைகடியோன்
ஓராயிரம்பரிபூண்டதொருயர்தேர்மிசைபுகுந்தான்
நேராயினரிருவோர்களுநெடுமாருதிமிரும்
பேராயிரமுடையானெனத்திசையெண்களும்பெயர்ந்தான். (௧௦௦)

தீயொப்பனவுருமொப்பனவுயிர்வேட்டனதிரியும்
பேயொப்பனபசியொப்பனபிணியொப்பனபெயரா
மாயக்கொடுவினையொப்பனமனமொப்பனகழுகின்
தாயொப்பனசிலவெங்கணைதுரந்தான்றுயிறுறந்தான். (௧௦௧)

அவ்வம்பையுமவ்வம்பினினறுத்தானிகலரக்கன்
எவ்வம்பினியுலகத்துளவென்னும்படியெய்தான்
வெவ்வம்பரம்வையந்திசைமலைவேலைகள்பிறவும்
வவ்வுங்கடையுருமாமழைபொழிகின்றதுமான (௧௦௨)

ஆயோனெடுங்குருவிக்குலமெனலாஞ்சிலவம்பால்
போயேவிடத்துரந்தானவைபொறியோவெனமறியாத்
தூயோனுமத்துணைவாளிகடொடுத்தானவைதுணித்தான்
தீயோனுமக்கணத்தாயிரநெடுஞ்சாரிகைதிரிந்தான். (௧௦௩)

கல்லுந்நெடுமலையும்பலமரனுங்கடைகாணும்
புல்லுஞ்சிறுகொடியும்மிடைதெரியாவகைபுரியச்
செல்லுந்நெறிதொறுஞ்சென்றனதெறுகால்புரைமறவோன்
மல்லின்முதிர்தேருஞ்சினவயமாருதிதானும். (௧௦௪)

இருவீருமிவனின்னவனிவனின்னனென்றிமையாத்
திருவீருந்தெரியாவகைதிரிந்தார்கணைதெரிந்தார்
ஒருவீருமிவரொக்கிலரெனவானவருவந்தார்
பொருவீரையும்பொருவீரையும்பொருதாலெனப்பொருதார். (௧௦௫)

விண்செல்வனசெல்கின்றனவிசிகம்மெனவிமையோர்
கண்செல்கிலமனஞ்செல்கிலகணிதம்முறுமெனவோர்
எண்செல்கிலநெடுங்காலவனிடைசெல்கிலனுடன்மேல்
புண்செல்வனவல்லாலொருபொருள்செல்வதுதெரியா. (௧௦௬)

எரிந்தேறினதிசையாவையுமலையாவையுமிடியா
நெரிந்தேறினநெடுநாணொலிபடலாநிறையுருமும்
சொரிந்தேறினதூரந்தேறினசுடுவெங்கணைமுழுதும்
கரிந்தேறினவுலகியாவையுங்கனல்வெம்புகைகதுவ. (௧௦௭)

வெடிக்கின்றனதிசையாவையும்விழுகின்றனவிடிவந்
திடிக்கின்றனசிலைநாணொலியிருவாய்களுமெதிராக்
கடிக்கின்றனகனல்வெங்கணைகலிவானுறவிசைமேல்
பொடிக்கின்றனபுகைவெங்கனலிவைகண்டனர்புலவோர். (௧௦௮)

கடல்வற்றினமலைபுக்கனபருவக்கனல்பருகுற்
றுடல்வற்றினமாமுற்றினகனல்பற்றினவுதிரம்
சுடர்பற்றினசுறவுக்கனதூணிபட்டுதிர்கணையின்
திடருற்றதுபரவைக்குழிதிரிவுற்றதுபுவனம். (௧௦௯)

எரிகின்றனவயில்வெங்கணையிருசேனையுமிரியத்
திரிகின்றனவிடைநின்றிலதிசைசென்றனசிதறிக்
கரிபொன்றினபரிமங்கினகவிசிந்தினகடல்போல்
சொரிகின்றனபொருசெம்புனறுலைகின்றனகொலையால். ௧௧௦)

புரிந்தோடினபொறிந்தோடினபொரிந்தோடினபுகைபோய்
எரிந்தோடினகரிந்தோடினவிடமோடினவலமே
இரிந்தோடினசரிந்தோடினசெறிந்தோடினதிசைமேல்
விரிந்தோடினகருங்கோளரிக்கிளையான்விடுசரமே. (௧௧௧)

நீரொத்தனநெருப்பொத்தனபொருப்பொத்தனநிமிரும்
காரொத்தனவுருமொத்தனகடலொத்தனகதிரோன்
தேரொத்தனவிடைமேலவன்சிரமொத்தனவுலகின்
வேரொத்தனவிறன்மொய்த்தனநிருதன்விடுசரமே. (௧௧௨)

ஏமத்தடங்கவசத்திகலகலத்தனவிருவோர்
பாமப்பெருந்தோண்மேலனவதனத்தனவயிரத்
தாமத்துணைக்குறங்கோடிருசரணத்தனதத்தம்
காமக்குலமடமங்கையர்கடைக்கண்ணெனக்கணைகள். (௧௧௩)

எந்நாளினினைத்தேவர்களைத்தானவனொன்னே
இன்னார்செருவிளைத்தானெனவிமையோரொடுத்தார்த்தார்
பொன்னார்சிலையிருகால்களுமொருகால்பொறையுயிரா
முந்நாளினிரண்டாம்பிறைமுளைத்தாமெனவளைத்தார். (௧௧௪)

வேகின்றனவுலகெங்கணும்விடுகின்றனவிசிகம்
போகின்றனசுடர்வெந்தனவிமையோர்களும்புலர்ந்தார்
ஆகின்றதொரழிகாலமீதாமன்றெனவயிர்த்தார்
நோகின்றனதிசையானைகள்செவிநாணொலிநுழைய. (௧௧௫)

மீனுக்கதுநெடுவானகம்வெயிலுக்கதுசுடரும்
மானுக்கதுமுழுவெண்மதிமழையுக்கதுவானம்
தானுக்கதுகுலமால்வரைதலையுக்கதுதகைசால்
ஊனுக்கவெவ்வுலகத்தினுமுளவாயினவுயிரும். (௧௧௬)

அக்காலையினயில்வெங்கணையையைந்துபுக்கழுந்தத்
திக்காசறவென்றான்மகனிளங்கோவுடல்செறித்தான்
கைக்கார்முகம்வளையச்சிலகதிர்வெங்கணைகவசம்
புக்காகமுங்கழன்றோடிடவிளங்கோளரிபொழிந்தான். (௧௧௭)

தெரிந்தான்சிலசுடர்வெங்கணைதேவேந்திரன்சினமா
இரிந்தோடிடத்தொடர்ந்தோடினவிமையோரையுமுன்னாள்
அரிந்தோடினவெரிந்தோடுவவவைகோத்தடலரக்கன்
சொரிந்தானவைநெடுமாருதிதோள்புக்கனதோன்றா. (௧௧௮)

குருதிப்புனல்சொரியக்குணங்குணிப்பில்லவன்குணபால்
பரிதிப்படிபொலிவுற்றதைவிளங்கோளரிபார்த்தான்
ஒருதிக்கினும்பெயராவகையவன்றேரினையுதிர்த்தான்
பொருதிக்கணம்வென்றானெனச்சரமாரிகள்பொழிந்தான். (௧௧௯)

அத்தேரழிந்திடநோக்கியவிமையோரொடுத்தார்த்தார்
முத்தேவருமுவந்தார்முதலுருமேறெனமுனிந்தான்
தத்தவொருதடந்தேரினைத்தொடர்ந்தான்சரந்தலைமேல்
பத்தேவினனவைபாய்தலுமிளங்கோளரிபதைத்தான். (௧௨௦)

பதைத்தானுடறரித்தான்சிலபகுவாயயிற்பகழி
விதைத்தானவைவிலக்காதமுன்விடைமேல்வருநெடியோன்
மதத்தானெனவருகாலனையொருகாலுறமருமத்
துதைத்தானெனத்தனித்தோர்கணையவனமார்பிடையுதைத்தான். (௧௨௧)

கவசத்தையுநெடுமார்பையுங்கடந்தக்கணைகழிய
அவசத்தொழிலடைந்தானதற்கிமையோரொடுத்தார்த்தார்
திவசத்தெழுசுடரோனெனத்தெளிகின்றதொர்கணையால்
துவசத்தையுந்துணித்தானவன்மணித்தோள்களைத்தொளைத்தான். (௧௨௨)

உள்ளாடியவுதிரப்புனலெழுதியனெடுமிழ்ந்தான்
தள்ளாடியவடமேருவிற்சலித்தானுடறரித்தான்
தொள்ளாயிரங்கடும்பொற்கணைதுரந்தானவைசுடர்போல்
விள்ளாநெடுங்கவசத்திடைநுழையாதுகவெகுண்டான். (௧௨௩)

மறித்தாயிரம்வடிவெங்கணைமருமந்தொளைமதியாக்
குறித்தாயிரம்பரித்தேரவன்றுரந்தானவைகுறியாத்
தறித்தானெடுஞ்சரத்தாலொருதனிநாயகற்கிளையான்
தெறித்தானடற்சிலைபொற்கணைசிலைநாணறத்தெறித்தான். (௧௨௪)

வில்லிங்கிதுநெடுமால்சிவனெனுமேலவர்தனுவே
கொல்லென்றுகொடயிர்த்தானெடுங்கவசத்தையுங்கொலையால்
செல்லுங்கடுங்கணையாவையுஞ்சிதையாமையுந்தெரிந்தான்
வெல்லுந்தரமல்லாமையுமறிந்தானகமெலிந்தான் (௧௨௫)

அத்தன்மையுமறிந்தானவன்சிறுதாதையுமணுகா
முத்தன்முகநோக்காவெனமொழிகேளெனமொழிந்தான்
எத்தன்மையுமிமையோர்களைவென்றானிகல்கண்டாய்
பித்தன்மகன்றளர்ந்தானினிப்பிழையானெனப்பகர்ந்தான். (௧௨௬)

கூற்றின்படிகொதிக்கின்றவக்கொலைவாளெயிற்றரக்கன்
ஏற்றுஞ்சிலைநெடுநாணொலியுலகேழினுமெய்தச்
சீற்றத்தலைத்தலைச்சென்றுறவிதுதீதெனத்தெரியாக்
காற்றின்படைதொடுத்தானவனதுவேகொடுகாத்தான். (௧௨௭)

அனலின்படைதொடுத்தானவனதுவேகொடுதடுத்தான்
புனலின்படைதொடுததார்க்கவுமதுவேகொடுபொறுத்தான்
கனலின்கதிரவனவெம்படைதுரந்தான்மனங்கரியான்
சினவெந்திறலிளங்கோளரியதுவேகொடுதீர்த்தான். (௧௨௮)

இதுகாத்திகொலென்னுவெடுத்திடிகப்படையெய்தான்
அதுகாப்பதற்கதுவேயுளதெனுமாதொடுத்தறுத்தான்
செதுகாபபடைதுரப்பேனெனநினைந்தான்றிசைமுகத்தான்
முதுமாப்படைதுரந்தானினிமுடிந்தாயெனமொழிந்தான். (௧௨௯)

வானின்றலைநின்றார்முழுமழுவாளிபுமலரோன்
றானும்முனிவருமபிறவறததோர்களுமிமையோர்
கோனும்பிறபிறதேவர்கள்குழுவும்மனங்குலைந்தார்
ஊனம்மினியுளதாகுமிவ்விளங்கோக்கெனவுலாத்தார். (௧௩௦)

ஊழிக்கடையிறுதித்தலையுலகியாவையுமுண்ணும்
ஆழிப்பெருங்கனறன்னொருசுடரென்னவுமாகாப்
பாழிச்சிலைகபரப்பித்தனிப்படர்கின்றதுபார்த்தான்
வாழித்தனிமுதனாயகற்கிளையானிதுமதித்தான். (௧௩௧)

மாட்டானினிமலரோன்படைமுற்போதுதன்வலத்தால்
வீட்டாவகைதடுத்தானலன்முடிந்தானெனவிட்டான்
காட்டாதினிக்கரந்தாலதுகருமம்மலதென்னாத்
தாட்டாமரைமலரோன்படைதொடுப்பேனெனச்சமைந்தான். (௧௩௨)

நன்றாகுகவுலகுக்கெனமுதலோன்மொழிநவின்றான்
பின்றாதவனுயிர்மேற்செலவொழிகென்பதும்பிடித்தான்
ஒன்றாதவம்முதலோன்படைதனைமாய்க்கெனவுரைத்தான்
நின்றானிதுநூரந்தானவனலம்வானவர்நினைந்தார். (௧௩௩)

தான்விட்டதுமுதலோன்படையெனின்மற்றிடைதருமோ
யான்விட்டதுமண்விட்டதுமறவோனுடலிறுமே
தேன்விட்டுகுமலரோன்படைதீர்ப்பாயெனத்தெரிந்தான்
ஊன்விட்டினுமறம்விட்டிலனெனவானவருவந்தார். (௧௩௪)

ஏருமேறுவந்தெதிர்ந்தாலதனெதிரோநெருப்புய்த்தால்
வருமாங்கதுதவிர்ந்தாலெனமறவோன்படைமாயத்
திருமாறனக்கிளையானபடையுலகியாவையுந்தீக்கும்
அருமாகனலெனநின்றதுவிசும்பெங்கணுமாகி. (௧௩௫)

படையங்கதுபடராவகைபகலோன்குலமருமான்
உடையென்றெடுத்தொடுக்கும்படியதனாலுறுகளிற்றை
இடையென்றமைப்பவன்போலமைத்திருப்பாயினியென்றான்
விடமொன்றுகொண்டோன்றீர்ந்ததுபோறீர்ந்ததுவேகம். (௧௩௬)

விண்ணோரதுகண்டார்வயவீரற்கினிமேன்மேல்
ஒண்ணாதனவுளவோவெனமனந்தேறினருவந்தார்
கண்ணார்நுதற்பெருமானிவற்கரிதோவெனக்கடைபார்த்
தெண்ணாவிதுபகர்நதிர்பொருள்கேண்மோவெனவிசைத்தான். (௧௩௭)

நாராயணநரரென்றிவருளராய்நமக்கெல்லாம்
வேராய்முழுமுதற்காரணப்பொருளாய்வினைகடந்தார்
ஆராயினுந்தெரியாததொர்நெடுமாயையினயிர்ப்பார்
பாராயணமறைநான்கையுங்கடந்தாரெனப்பகர்ந்தார் (௧௩௮)

அறத்தாறழிவுளதாமெனவறிவுந்தொடர்ந்தணுகாப்
புறத்தார்புகுந்தகத்தாரெனப்பிறந்தாரதுபுரப்பான்
மறத்தார்குலமுதல்வேரறமாய்ப்பானிவண்வந்தார்
இறத்தாலதுதெரிந்தியாவருந்தெரியாவகைதிரிவார். (௧௩௯)

உயிர்தோறுமுற்றுளன்றேத்திரத்தொருவன்னெனவுரைக்கும்
அயிராநிலையுடையானிவனவனிவ்வுலகனைத்தும்
தயிர்தோய்பிரையெனலாம்வகைகலந்தேறியதலைவன்
பயிராததொர்பொருளின்னதென்றுணர்வீரிதுபரமால். (௧௪௰)

நெடும்பாற்கடல்கிடந்தாரும்பண்டிவர்நாங்குறைநேர
விடும்பாக்கியமுடையார்களைத்தவத்தோடறவீட்டி
இடும்பாக்கியத்தறங்காப்பதற்கிசைந்தாரெனவெல்லாம்
அடும்பாக்கியமுடைச்செஞ்சடைமுதலோன்பணித்தமைந்தான். (௧௪௧)

அறிந்தேயிருந்தயர்ந்தேமவனெடுமாயையினயிர்ப்பால்
பிறிந்தேமினிமுழுதையமும்பெருமானுரைபிடித்தேம்
எறிந்தேம்பகைமுழுதும்மினியிருந்தேமிடர்களைந்தேம்
செறிந்தோர்வினைப்பகைவாவெனத்தொழுதார்நெடுந்தேவர். (௧௪௨)

மாயோனெடும்படைவாங்கியவடிவாளெயிற்றரக்கன்
நீயோவிதுதடுப்பாயெனின்னினக்காரெதிர்நிற்பார்
போயோவிசும்படைவாயிதுபிழையாதெனப்புகலாத்
தூயோன்மிசையுலகியாவையுந்தடுமாறிடத்துரந்தான். (௧௪௩)

சேமித்தனரிமையோர்தமைச்சிரத்தேந்தியகரத்தார்
ஆமித்தொழில்பிறர்யாவருமமைந்தார்பழுதடையாக்
காமித்ததுமுடிவிப்பதுபடர்கின்றதுகண்டான்
நாமத்தனியரிதானெனநினைந்தானெதிர்நடந்தான். (௧௪௪)

நீக்கின்றதிவ்வுலகேழையுமெனநண்ணலுந்தெளிந்தான்
நீக்குந்தரமல்லாமுழுமுதருனெனநினைந்தான்
மீச்சென்றிலதயல்சென்றதுவிலங்காவலங்கொடுமேல்
போய்த்தங்கதுகனன்மாண்டதுபுகைவீந்ததுபொதுவே. (௧௪௫)

ஏத்தாடினரிமையோர்களுங்கவியின்குலமெல்லாம்
கூத்தாடினவரமங்கையர்குனித்தாடினர்தவத்தோர்
காத்தாயுலகனைத்தும்மெனக்களித்தாடினர்கமலம்
பூத்தானுமம்மழுவாளியுமுழுவாய்கொடுபுகழ்ந்தார். (௧௪௬)

அவனன்னதுகண்டானிவனாரோவெனவயிர்த்தான்
இவனன்னதுமுதலேயுடையிறையோனெனவியவா
எவனென்னினுநன்றுகவினியெண்ணலெனென்னுச்
சிவனன்படைதொடுத்தாருயிர்முடிப்பேனெனத்தெளிந்தான். (௧௪௭)

பார்ப்பான்றருமுலகியாவையுமொருநாளொருபகலே
தீப்பான்படைதொடுப்பேனெனமனத்தோடுறத்தெளியா
மீப்பாவியவிமையோர்குலம்வெருவுற்றதிப்பொழுதே
மாய்ப்பானெனவுலகியாவையுமறுக்குற்றனமயங்கி. (௧௪௮)

தானேசிவன்றரப்பெற்றது தவநாள்பலவுழந்தே
[illegible]ரறியாதது தந்தேனெனச்சமைந்தான்
[illegible]னுயிர்கோடலுக்கையம்மிலையென்று
[illegible]மிதனாலெதிர்தடைசெய்தவர்மீளார் (௧௪௯)

[illegible]ன்மலர்புனல்சாந்தமொடவி தூபமும்வகுத்தான்
[illegible]னிவனுயிர்கொண்டணைநிமிர்வாயெனநெஞ்சால்
[illegible]னெடுஞ்சிலைநாண்டடந்தோண்மேலுறச்செலுத்தா
[illegible]பதோர்பொருளானுமோர்தடையில்லதைவிட்டான். (௧௫௦)

[illegible]மழுவுஞ்சுடுகணையுங்கனல்சுடரும்
[illegible]நமரவங்களுமசனிக்குலமெவையும்
[illegible]ன தருவங்களுங்கரும்பூதமும்பெரும்பேய்ச்
[illegible]ளுநிமிர்கின்றதிவ்வுலகெங்கணுந்தானாய். (௧௫௧)

[illegible]னலொருபாலதனுடனேதொடர்ந்துடற்றும்
[illegible]கொடுங்கடுங்காற்றதனயலேவரத்தொடக்கும்
[illegible]மைப்புறத்தாயுளபெரும்போர்க்கடலிழிந்தாங்
காழித்தலைக்கிடந்தாங்கெனநெடுந்தூங்கிருளடைய. (௧௫௨)

இரிந்தார்குலநெடுந்தேவர்களிருடிக்குலத்தெவரும்
பரிந்தாரதுபழுதாகிலதிறுவானெனும்பயத்தால்
நெரிந்தாங்கிரிகுரங்குற்றதுபகருந்துணைநெடிதோ
திரிந்தாரிருசுடரோடுலகொருமூன்றுடன்றிரிய. (௧௫௩)

பார்த்தானதுநெடுவீடணனுயிர்காமுறுபயத்தால்
வேர்த்தானிதுவிலக்குந்துணையுளதோமுதல்வீர
தீர்த்தாவெனவுரைத்தானதற்கிளங்கோளரிசிரித்தான்
போர்த்தாரடற்கவிவீரருமவன்றாணிழல்புகுந்தார். (௧௫௪)

அவயம்முனக்கவயம்மெனுமனைவோரையுமஞ்சேல்
கவயம்முமக்கெனதோளிணையெனக்கைத்தலங்கவித்தான்
உவயம்முறுமுலகின்பயனுணர்ந்தானினியொழியேன்
சிவனைம்முகமுடையான்படைதொடுப்பேனெனத்தெரிந்தான். (௧௫௫)

அப்பொற்படைமனத்தானினைந்தமைந்தானிகல்கழிப்பாய்
இப்பொற்படைதனைமற்றொருதொழில்செய்யலையென்றுத்
துப்பொப்பதோர்கணைகூட்டினன்றுரந்தானிடைதொடரா
எப்பொற்பெரும்படையும்புகவிழுங்குற்றதொரிமைப்பின். (௧௫௬)

விண்ணார்த்ததுமண்ணார்த்ததுமேலோர்மணிமுரசின்
பு[illegible]ண்ணார்த்ததுகடலார்த்ததுமழையார்த்ததுகலையோ
மற[illegible]ரார்த்ததுகவியார்த்ததுவிசயம்மெனவிசயப்
திற[illegible]ர்த்தனளறமார்த்ததுபிறரார்த்ததுபெரிதால். (௧௫௭)

இறுகாலையினுலகியாவையும்வீப்பானிகற்படையை
மறுகாவகைபுரிந்தானதுவாங்கும்படிவல்லான்
தெறுகாலனிற்கடியானுமற்றதுகண்டகந்திகைத்தான்
சிறுகாவயக்கவிவீரருமரியென்னுதறெரிந்தார். (௧௫௮)

தெய்வப்படைபழுதுற்றனவெனக்கூசுதறெளியா
வெய்வித்தகமுளதன்னதுபிழையாதெனவிளையாக்
கைவித்தகமதனுற்சிலகணைவித்தினனவையும்
மொய்வித்தகன்றடந்தோளினுறுதற்சூட்டினுமூழ்க (௧௫௯)

வெய்யோன்மகன்முதலாகியவிறலோர்மிகுதிறலோர்
கையோய்விலர்மலைமாரியினிருதக்கடல்கடப்பார்
உய்யாரெனவடிவாளிகள்சதகோடிகளுய்த்தான்
செய்யோனயனனிகின்றதன்சிறுதாதையைச்செறுத்தான். (௧௬௦)

வேறு.

முரட்டடந்தண்டுமேந்திமனிசனமுறைமைகுன்றப்
பிரட்டரிற்புகழ்ந்துபேதையடியரினிரந்துபின்சென்
றிரட்டுறுமுரசமென்னவிசைத்ததேயிசைக்கின்றாயைப்
புரட்டுவென்றலையையந்தோபழியெனவொழிவென்போலாம் (௧௬௧)

விழிபடமுதல்வரெல்லாம்வெதும்பினரொதுங்கிவீழ்ந்து
வழிபடவுலகமூன்றுமடிபடவந்ததேனும்
அழிபடைதாங்கலாற்றுமாடவர்யாண்டுமஃகாப்
பழிபடவந்தவாழ்வையாவரோநயக்கற்பாலார். (௧௬௨)

நீருளதனையுமுள்ளமீனெனநிருதரெல்லாம்
வேருளதனையும்வீவரிராவணனோடுமீளார்
ஊருளதொருவனின்றாய்நீயுளையுன்னோடெண்ண
யாருளரரக்கர்நிற்பாரரசுவீற்றிருக்கவையா. (௧௬௩)

முந்தைநாளுலகந்தந்தமூத்தவானோர்கட்கெல்லாம்
தந்தையார்தந்தையாரைச்செருவிடைச்சாயத்தள்ளிக்
கந்தனார்தந்தையாரைக்கயிலையோடொருகைக்கொண்ட
எந்தையாரரசுசெய்வதிப்பெரும்பலங்கொண்டேயோ. (௧௬௪)

பனிமலர்த்தவிசின்மேலோன்பார்ப்பனகுலத்துக்கெல்லாம்
தனிமுதற்றலைவனுவாயுன்னைவந்தமரர்தாழ்வர்
மனிசருக்கடிமைசெய்வாயிராவணன்செல்வமாள்வாய்
இனிதுநின்னெண்ணமென்தாயெம்மொடுமடங்கிற்றன்றே. (௧௬௫)

சொல்வித்தும்பழிதந்துங்கைமூக்கினைத்துமிதந்தோரால்
எல்வித்தும்படைக்கைநுங்கடமையனையெங்களோடும்
கொல்வித்துந்தோற்றுநின்றகூற்றினுர்குலத்தையெல்லாம்
வெல்வித்தும்வாழும்வாழ்வின்வெறுமையேவிழுமிதன்றோ. (௧௬௬)

எழுதியேரணிந்ததிண்டோளிராவணனிராமனம்பால்
புழுதியேபாயலாகப்புரண்டநாள்புரண்டுமேல்வீழ்ந்
தழுதியோநீயுங்கூடவார்த்தியோவவனேவாழ்த்தித்
தொழுதியோவென்னேசெய்யத்துணிந்தனைவிசயத்தோளாய். (௧௬௭)

ஊனுடைவுடம்புநீங்கிமருந்தினுலுயிர்வந்துய்யும்
மானுடரிலங்கைவேந்தைக்கொல்வரோநீயுமன்னன்
றனுடைச்செல்வந்துய்க்கத்தகுவையேசரத்தினேடும்
வானிடைப்புகுதியன்றேயான்பழிமறுக்கினென்றான். (௧௬௮)

அவ்வுரையமையக்கேட்டவீடணனலங்கன்மோலி
செவ்விதுதுளக்கிமூரன்முறுவலுந்தெரிவதாக்கி
வெவ்விதுபாவஞ்சாலத்தருமமேவிழுமிதைய
இவ்வுரைகேட்டியென்னுவினையனவிளம்பலுற்றான். (௧௬௯)

அறந்துணையாவதல்லாதாருளரமையநல்க
மறந்துணையாகமாயாப்பழியொடுவாழமாட்டேன்
துறந்திலென்மெய்ம்மைபொய்ம்மைநும்மையேதுறப்பதல்லால்
பிறந்திலெனிலங்கைவேந்தன்பின்னவன்பிழைத்தபோதே. (௧௭0)

உண்டிலெனறவம்பொய்ம்மையுணர்ந்திலென்வலியாலொன்றும்
கொண்டிலென்மாயவஞ்சங்குறித்திலென்யாருங்குற்றம்
கண்டிலவொன்புராலுண்டேனீயிருங்காண்டிரன்றே
பெண்டிரிற்றிறம்பினாைத்துறந்ததுபிழையிற்றேமோ. (௧௭௧)

மூவகையுலகந்தந்தமுதலவனெவர்க்குமூத்த
காவலன்றேவியன்றேகற்பினிற்பிறந்துளாளை
நோவனசெய்யநீதென்றுரைப்பநன்றுதைசீறிப்
போவெனப்போந்தேனின்றுநரகினிற்பொருந்துவேனே. (௧௭௨)

வெம்மையிற்றருமநோக்கீர்வேட்டதேவேட்டுவீயும்
உம்மையேபுகழும்பூண்கதறக்கமுமுமக்கேயாக
செம்மையிற்பொருந்திமேலோரொழுக்கினேடறத்தைத்தேறும்
எம்மையேபழியும்பூண்கநரகமுமெமக்கேயாக. (௧௭௩)

அறத்தினைப்பாவம்வெல்லாதென்னுமதறிந்துநானெத்
திறத்தினுமுறுதியெண்ணித்தேவர்க்குந்தேவைச்சேர்ந்தேன்
புறத்தினிற்புகழேயாகபழியொடும்புணர்கபோக்கில்
சிறப்பினிப்பெறுகதிர்கவென்றனன்சீற்றந்தீர்ந்தான். (௧௭௪)

பெறுஞ்சிறப்பெல்லாமென்கைப்பிறைமுகவாளியொன்றால்
இறுஞ்சிறப்பல்லாலப்பாலெங்கினிப்போர்வதென்றுத்
தெறுஞ்சினக்கலுழனன்னதொருகணைதெரிந்துசெம்பொன்
உறுஞ்சுடர்க்கழுத்தைநோக்கிநூக்கினுனுருமின்வெய்யோன். (௧௭௫)

அக்கணையசனியென்னவன்றெனவாலமுண்ட
முக்கணன்சூலமெனனமுடுகியமுடிவைநோக்கி
இக்கணத்திற்றனிற்றனென்கின்றவிடையேயெய்த
கைக்கணையொன்றால்வள்ளலக்கணைகண்டங்கண்டான். (௧௬௬)

கோலொன்றுதுணிதலோடுங்கூற்றுக்குங்கூற்றமன்ன
வேலொன்றுவாங்கிவிட்டான்வெயிலொன்றுவீழ்வதென்ன
நாலொன்றுமூன்றுமானபுவனங்கணடுங்கலோடும்
நூலொன்றுவரிவில்வல்லானதனையுநொறுக்கிவீழ்த்தான். (௧௬௭)

வேல்கொடுகொல்லலுற்றானென்பதோர்வெகுளிதோன்றக்
கால்கொடுகாலிற்கூடிக்கைக்கொடுகனகத்தண்டால்
கோல்கொளுமொருவனேடுநெடுங்கொடித்திண்டேர்பூண்ட
பால்கொளும்புரிவிபாரிற்பரப்பினனுயிர்ப்பாற. (௧௬௮)

அழிந்ததேர்மீதுநின்றானயிரகோடியம்பால்
பொழிந்தவன்றோளின்மீதுமிலக்குவன்புயத்துமேலும்
ஒழிந்தவருரத்தின்மேலுமுதிரநீர்வாரியோதம்
அழிந்தழிந்தோடநோக்கியண்டமுமிரியவார்த்தான். (௧௬௯)

ஆர்த்தவனனையபோழ்தினழிவிலாத்தேர்கொண்டன்றிப்
போர்த்தொழில்வெல்லலாகாதென்பதோர்பொருளையுன்னிப்
பார்த்தவரிமையாமுன்னம்விசும்பிடைப்பாய்ந்தானென்னும்
வார்த்தையைநிருவிப்போனனிராவணன்மருங்குசென்றான். (௧௭௦)

நிகும்பலைப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௩௦௬௬.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௨௭-வது இந்திரசித்துவதைப்படலம்.

விண்ணிடைக்கரந்தானென்பார்வஞ்சனைவிளைக்குமென்பார்
கண்ணிடைக்கரக்கநோக்கியையுறவுழக்குங்காலைப்
புண்ணிடையாக்கைச்செந்நீரிழிதரப்புக்குநின்ற
எண்ணுடைமகனைநோக்கியிராவணனினையசொன்னான். (௧)

தொடங்கியவேள்விமுற்றப்பெற்றிலாத்தொழிலுந்தோண்மேல்
அடங்கியவம்பிற்றேறவறிந்தனனயர்வில்யாக்கை
நடுங்கினைபோலச்சாலத்தளர்ந்தனைகலுழனண்ணப்
படங்குறையரவமொத்தாயுற்றதுபகர்தியென்றான். (௨)

சூழ்வினைமாயமெல்லாமும்பியேதுடைக்கச்சுற்றி
வேள்வியைச்சிதையநூறிவெகுளியாலெழுந்துவீங்கி
ஆள்வினையாற்றறன்றலமர்த்தொழிற்றொடங்கியார்க்கும்
தாழ்விலாப்படைகண்மூன்றுந்தொடுத்தனென்றறிந்துவிட்டான். (௩)

நிலஞ்செய்து விசும்புஞ்செய்து நெடியமால்படைநின்றானை
வலஞ்செய்து போகிற்றென்றான் மற்றினிவலியதுண்டோ
குலஞ்செய்தபாவத்தாலே கொடும்பகைதேடிக்கொண்டேம்
சலஞ்செயினுலகமூன்றுமிலக்குவன்முடிக்குந்தானே. (௪)

முட்டியசெருவின்முன்னமுதலவன்படையைமுன்பா
விட்டிலனுலகையஞ்சியாதலால்வென்றுமீண்டேன்
கிட்டியபோதுங்காத்தாரின்னமுங்கிளரவல்லார்
சுட்டியவலியினாலேகோறலைத்துணிந்துநின்றார். (௫)

ஆதலானஞ்சினேனென்றருளையாசைதானச்
சீதைபால்விடுதியாயினனையவர்சீற்றந்தீர்வர்
போதலும்புரிவர்செய்ததீமையும்பொறுப்பருன்மேல்
காதலாலுரைத்தேனென்றானுலகெலாங்கலக்கிவென்றான். (௬)

இயம்பலுமிலங்கைவேந்தனெயிற்றிள்நிலவுமெய்தப்
புயங்களுங்குலுங்கநக்கான்போர்க்கினியொழிதிபோலாம்
மயங்கினைமனிசன்றன்னையஞ்சினைவருந்தலைய
சயங்கொடுதருவெனின்றேமனிசனாத்தனுவொன்றாலே. (௭)

முன்னையோரிறந்தோரெல்லாமிப்பகைமுடிப்பரொன்றும்
பின்னையோர்நின்றாரெல்லாம்வென்றனர்பெயர்வரொன்றும்
உன்னைநீயவரைவென்றுதருதியென்றுணர்ந்துமன்றால்
என்னையேநோக்கியானிந்நெடும்பகைகொண்டதென்றான். (௮)

பேதைமையுரைத்தாய்மைந்தவுலகெலாம்பெயரப்போகக்
காதையென்புகழினோடுநிலைபெறவமரர்காண
மீதெழுமொக்குளன்னவாக்கையைவிடுவதல்லால்
சீதையைவிடுவதுண்டோவிருபதுதிண்டோளுண்டாய். (௯)

வென்றிலெனென்றபோதும்வேதமுள்ளளவும்யானும்
நின்றுளெனன்றேமற்றவ்விராமன்பேர்நிற்குமாயின்
பொன்றுதலொருகாலத்துந்தவிருமோபொதுமைத்தன்றே
இன்றுளார்நாளைமாள்வர்புகழுக்குமிறுதியுண்டோ. (௧௦)

விட்டனன்சனகிதன்னையென்னலும்விண்ணோர்நண்ணிக்
கட்டுவதல்லாலென்னையானெனக்கருதுவாரோ
பட்டனனென்றபோதுமெளிமையிற்படுகிலேன்யான்
எட்டுமோரிரண்டுமாயதிசைகளையெறிந்துவென்றேன். (௧௧)

சொல்லியென்பலவுநீநின்னிருக்கையைத்தொடர்ந்துதோளில்
புல்லியபகழிவாங்கிப்போர்த்தொழிற்சிரமம்போக்கி
எல்லியுங்கழித்தியென்னாவெழுந்தனனெயிற்றுப்பேழ்வாய்
வல்லியமுனிந்தாலன்னான்வருகதேர்தருகவென்றான். (௧௨)

எழுந்தனன்றன்னைநோக்கியிணையடியிறைஞ்சியெந்தாய்
ஒழிந்தருள்சீற்றஞ்சொன்னவுறுதியைப்பொறுத்தியானே
கழிந்தனெனென்றபின்னுநவைவராக்காண்டியென்னு
மொழிந்துதன்றெய்வத்தேர்போயேறினான்முடியலுற்றான். (௧௩)

படைக்கலம்விச்சைமற்றும்படைத்தனபலவுந்தன்பால்
அடைக்கலமென்னவீசனளித்தனதேர்மேலாக்கிக் [னைக்
கொடைத்தொழில்வேட்டோர்க்கெல்லாங் கொடுத்துப்பின்கொடியோன்றன்
கடைக்கணானோக்கிநோக்கிப்பரிவினாற்கலுழ்ந்துபோனான். (௧௪)

இலங்கையினிருதரெல்லாமெழுந்தனர்விளைவினெய்தி
விலங்கலந்தோளாய்நின்னைப்பிரிகிலம்விளிதுமென்றே
வலங்கொடுதொடர்ந்தார்தம்மைமன்னனைக்காமின்யாதும்
கலங்கலிரின்றேசென்றுமனிசனைக்கடப்பலென்றான். (௧௫)

வணங்குவார்வாழ்த்துவார்கள்வடிவினைநோக்கித்தம்வாய்
உணங்குவாருயிர்ப்பாருள்ளமுருகுவார்வெருவலுற்றுக்
கணங்குழைமகளிரீண்டியிளைத்தவர்கடைக்கணென்னும்
அணங்குறைநெடுவேல்பாயுமமர்கடந்தரிதிற்போனான். (௧௬)

ஏயினனின்னனாகவிலக்குவனெடுத்தவில்லன்
சேயிருவிசும்பைநோக்கிவீடணதீயோனப்பால்
போயினனாகல்வேண்டும்புரிந்திலனென்றுமென்பான்
ஆயிரம்புரவிபூண்டதேரின்பேரரவங்கேட்டான். (௧௭)

வேறு.

குன்றிடைநெரிதரவடவரையின்குவடுருள்குவதெனமுகடுதொறும்
பொன்றிணிகொடியினதிடியுருமின்னதிர்குரன்முரல்வதுபுனைமணியின்
மின்றிணிசுடரதுகடல்பருகும்வடவனல்வெளியுறவருவதெனச்
சென்றதுதிசைதிசையுலகிரியத்திரிபுவனமுமுறுதனியிரதம். (௧௮)

கடன்மறுகிடநிலைகுலையநெடுங்கரியிரிதரவெதிர்கவிகுலமும்
குடன்மறுகிடமலைகுலையநிலங்குழியொடுகிழிபடவுலகுலைய
இடமறுகியபொடிமுடுகியவாரிருளுளதெனவெழுமிகலரவின்
படமறுகிடவெதிர்விரவியதவ்விருள்பகலுறவருபகையிரதம். (௧௯)

ஆர்த்ததுநிருதர்சமனிசமுடன்றமரரும்வெருவினர்கவிகுலமும்
வேர்த்ததுவெருவலொடலம்வரலால்விடுகணைசிதறினனடுதொழிலோன்
தீர்த்தனுமவனெதிர்முடுகிநெடுந்திசைசெவிடெறிதரவிசைகெழுதிண்
போர்த்தொழில்புரிதலுமுலகுகடும்புகையொடுசிகையனல்பொதுளியதால். ()

வீடணனமலனைவிறல்கெழுபோர்விடலையையினியிடைவிடலுளதேல்
சூடலைதுறுமலர்வாகையெனத்தொழுதனனுரைசெயவழகனுமக்
கோடணைவரிசிலையுலகுலையக்குலவரைபிதிர்படநிலவரையின்
சேடனும்வெருவுறவுருமுறழத்தெறுகணைமுறைமுறைசிதறிடலும். (௨௧)

ஆயிரமளவினவனெ்முகவாயடிகணையவன்விடவிவன்விடவத்
தீயினுமெரிவனவுயிர்பருகச்சிதறினகவிகளொடினவிருதர்
போயினபோயினதிசைநிறையப்புரள்பவர்முடிவிலர்பொருதிறலோர்
ஏயினரொருவரையொருவர்குறிதெரிகணைபலபலவிருமழைபோல். (உ௨)

அற்றனவனல்விழிநிருதன்வழங்கடுசணையிடையிடையரியவிளங்
கொற்றவன்விடுகணைமுடுகியவவனுடல்பொதிகுருதிகள்பருகினகொண்
டிற்றனவொளிகிளர்கவசமிகந்துநுகிலதெறுகிலவறுமனுடல்
புற்றிடையரவினநுழையநெடும்பொருசரமவனவையுணர்கிலனால். (உ௩)

ஆயிடையிளையவன்விடமனையானவனிடிகவசமசழிவுபடத்
தூயினனயின்முகவிசிகநெடுந்தொளைபடவிழியனல்சொரியமுனிந்
தேயினனிருதனதெரிகணைதானிடனிலபடுவனவிடையிடைவந்
தோய்வுறுவனவதுதெரிவுறலாலூறினரிமையவருவகையினர். (உ௪)

வில்லினின்வெல்லுதலருமையெனுவெயிலினுமிழ்வதொரயில்விரைவில
செல்லெனமுடுகினனனையதுமுற்றிசைமுகன்மகன்முதலுதவியதால்
எல்லியும்வெளிபடவருவதுகண்டிளையவனெழுவகைமுனிவரர்தம்
சொல்லினும்வலியதொர்சுடுகணையாலுடலிருதுணிபடவிடறினனால். (உ௫)

ஆணியினிலையவன்விசிகநுழைந்தாயிரமுடல்புகவழிபடுசெஞ்
சோணிதநிலமுறவுலறிடவுந்தொடுகணைதொடுவனமிடல்கெழுதிண்
பாணிகள்கடுகினமுடுகிடலும்பகலவன்மருமகனெரிகணைவன்
றூணியையுருமுறழ்பகழிகளாற்றுணிபடமுறைமுறைசிதறினனால். (உ௬)

தேருளதெனினிவன்வலிதொலையாதெனுமிதுதெரிவுறவுணர்வுறுவான்
போருறுபுரவிகள்படுகிலதிண்பிணிதுணிகிலவதுபொருதிறலால்
சீரிதுபெரிதிதனிலைமையெனத்தெரிபவனொருதெறுசுடுகணையால்
சாரதிமலைபுரைதலைடைநெடுந்தரையிடையிடுதலுமுறைதெரிவான். (உ௭)

வேறு.

உய்வினையொருவன்றூண்டாலுலகத்தலிற்றவத்தைநண்ணி
ஐவினைநலியநைவானிவிற்குமுவன்மையாகி
மெய்வினையமைந்தகாமம்விற்கின்றவிரகிற்றோலாப்
பொய்வினைமகளிர்கற்பும்போன்றதப்பொலம்பொற்றிண்டேர். ()

துள்ளுவாம்புரவித்தேருமுறைமுறைதானேதூண்டி
அள்ளினன்பறிக்குந்தன்பேராகமேயாவமாக
வள்ளன்மேலநுமன்றன்மேன்மற்றையோர்மற்றிண்டோண்மேல்
உள்ளுறப்பகழிதூவியார்த்தனனெவருமுட்க. (உ௯)

வீரனென்பார்கட்கெல்லாமினிமற்றிவ்வீரவீரன்
பேரனென்பார்களாகப்பெற்றியிற்பெற்றித்தாமே
சூரனென்றுரைக்கற்பாலார்துஞ்சும்போதுணர்விற்சோரார்
தீரமென்றமரர்செப்பிச்சிந்தினர்தெய்வப்பொற்பூ. (௩0)

எய்தனபகழியெல்லாம்பறித்திவனென்மேலெய்யும
கைதடுமாறாதுள்ளமுயிரின்றுங்கலங்காதியாக்கை
மொய்கணைகோடிகோடிமொய்க்கவுமிமைப்பொன்றில்லான்
ஐயனுமிவனோடெஞ்சுமாண்டொழிலாற்றலென்றான். (௩௧)

தேரினைக்கடாவிவிண்மேற்செல்லினுஞ்செல்லுஞ்செய்யும்
போரினைக்கடந்துமாயம்புணர்க்கினும்புணர்க்கும்போயக்
காரினைக்கலந்துவஞ்சங்கருதினுங்கருதுங்காண்டி
வீரமெய்ப்பகலினல்லால்விள்கிலனிருளின்வெய்யோன். (௩௨)

என்றெடுத்திலங்கைவேந்தற்கிளையவனியம்பவின்னே
பொன்றுவதல்லாலப்பாலினியொருபோக்குமுண்டோ
சென்றுழிச்செல்லுமன்றேதெறுகணைவலியிற்றீர்ந்தான்
வென்றியிப்பொழுதேகோடுங்காணெனவிளம்பலுற்றான். (௩௩)

செம்புனற்சோரிச்செக்கர்திசையுறச்சேறலாலும்
அம்பெனத்துற்றகொற்றத்தாயிரங்கதிர்களாலும்
வெம்புபொற்றேரிற்றோன்றுஞ்சிறப்பினுமரக்கன்மெய்யோ
டும்பரிற்செல்கின்றானொத்துதித்தனனருக்கனுப்பால். (௩௪)

விடிந்ததுபொழுதும்வெய்யோன்விளங்கினனுலகமீதா
விடுஞ்சுடர்விளக்கமென்னவரக்கரினிருளும்வீயக்
கொடுஞ்சினமாயச்செய்கைவலியொடுங்குறைந்துகுன்ற,
முடிந்தனனரக்கனென்றுமுழங்கியதும்பர்முற்றும். (௩௫)

ஆரழியாதசூலத்தண்ணறனருளினீந்த
தேரழியாதபோதுஞ்சிலைகரத்திருந்தபோதும்
போரழியானிவ்வெய்யோன்புகழழியாதபொற்றோள்
வீரவிதாணையென்றான்வீடணன்விளைவதோர்வான. (௩௬)

பச்சைவெம்புரவிவீயாபல்லியற்சில்லிபாருள்
நிச்சயமற்றுநீங்காவென்பதுநினைந்துவில்லின்
விச்சையின்கணவனானான்வன்மையால்வயிரமிட்ட
அச்சினோடொழிவெவ்வேறாக்கினானாணிநீக்கி. (௩௭)

மணிநெடுந்தேரின்கட்டுவிட்டதுமறிதலோடும்
அணிநெடும்புரவியெல்லாமாற்றலவாயவன்றே
திணிநெடுமரமொன்றாழிவான்மழுத்தாக்கச்சிந்திப்
பணையொடுமுதலுநீங்கிப்பாங்குறைபறவைபோல, (௩௮)

அழிந்ததேர்த்தட்டினின்றுமாங்குளபடைகளள்ளிப்
பொழிந்தவையினையவீரன்கணைகளாற்றுணித்துப்போக்க
மொழிந்ததோரளவில்விண்ணைமுட்டிமூவுலகமூன்றும்
இழிந்தனவென்னவார்த்தான்கண்டிலரோசைகேட்டார். (௩௯)

மல்லின்மாமாரியன்னதோளினான்மழையின்வாய்த்த
கல்லின்மாமாரிபெற்றவரத்தினாற்சொரியுங்காலைச்
செல்லும்வான்றிசைகளோரார்சிரத்தினோடுடல்கள்சிந்தப்
புல்லினார்நிலத்தைநின்றவானரவீரர்போல்வார். (௪௦)

காண்கிலன்கல்லின்மாரியல்லதுகாளைவீரன்
சேண்கலந்தொளித்துநின்றசெய்கையாற்றிசைகளெங்கும்
மாண்கலந்தமைந்தமாயன்வடிவெனமுழுதும்வௌவ
ஏண்கலந்தமைந்தவாளியேவினானிடைவிடாமல். (௪௧)

மறைந்தனதிசைகளெல்லாமாறுபோய்மலையுமாற்றல்
குறைந்தனவிருண்டமேகக்குழாத்திடைக்குருதிக்கொண்மூ
மறைந்துளதென்னநின்றான்வடிவினையுலகமெல்லாம்
நிறைந்தவன்கண்டான்காணாவினையதோர்நினைவனானான். (௪௨)

சிலையறாதெனினுமற்றைத்திண்ணியோன்றிரண்டதிண்டோள்
மலையறாதொழியாதென்னவடிக்கணையொன்றுவாங்கிக்
கலையறாத்திங்களன்னவாளியாற்கையைக்கொய்தான்
விலையறாமணிப்பூணோடும்வில்லொடுநிலத்துவீழ. (௪௩)

பாகவான்பிறைபோல்வெவ்வாய்ச்சுடுகணைபடுதலோடும்
மோகவான்கொடுங்கால்பற்றமுற்றும்போய்முடிந்தநாளின்
மாகவான்றடக்கைமண்மேல்வீழ்ந்ததுமணிப்பூண்மின்ன
மேகமாகாயத்திட்டவில்லொடும்வீழ்ந்ததென்ன. (௪௪)

படித்தலஞ்சுமந்தநாகம்பாகவான்பிறையைப்பற்றிக்
கடித்ததுபோலக்கோலவிரல்களாலிறுகக்கட்டிப்
பிடித்தவெஞ்சிலையினோடும்பேரொழில்வீரன்பொற்றோள்
துடித்தனமரமுங்கல்லுந்துகள்படக்குரங்குந்துஞ்ச. (௪௫)

அந்தரமதனினின்றவானவருக்கன்வீழ்க
சந்திரன்வீழ்கமேருமால்வரைதகர்ந்துவீழ்க
இந்திரசித்தின்பொற்றோளிற்றிடைவீழ்ந்ததென்றால்
எந்திரமனையவாழ்க்கையினிச்சிலருகந்தெனென்றார். (௪௬)

மொய்யறமூர்த்தியன்னமொய்ம்பினானம்பினாலப்
பொய்யறச்சிறிதென்றெண்ணும்பெருமையான்புதல்வன்பூத்த
மையறக்கரியதென்னுமனத்தினான்வயிரமன்ன
கையறத்தலையற்றாற்போற்கலங்கினர்நிருதர்கண்டார். (௪௭)

அன்னதுநிகழும்வேலையார்த்தெழுந்தரியின்வெள்ளம்
பின்னெயிற்றரக்கர்சேனையாவருமீளாவண்ணம்
கொன்னகக்கரத்தாற்பல்லான்மரங்களான்மானக்குன்றால்
பொன்னெடுநாட்டையெல்லாம்புதுக்குடியேற்றிற்றன்றே. (௪௮)

காலங்கொண்டெழுந்தமேகக்கருமையான்செம்மைகாட்டும்
ஆலங்கொண்டிருண்டகண்டத்தமரர்கோனருளிற்பெற்ற
சூலங்கொண்டெறிவலென்னத்தோன்றினான்பகையிற்றேற்ற
மூலங்கொண்டுணராநின்னைமுடித்தன்றிமுடியேனென்றான். (௪௯)

காற்றென்னவுருமேறென்னக்கனலென்னக்கடைநாளுற்ற
கூற்றமோர்சூலங்கொண்டுகுறுகுவதென்னக்கொல்வான்
தோற்றினான்றனைக்காணாவினித்தலைதுணிக்குங்காலம்
ஏற்றதென்றயோத்திவேந்தற்கிளையவனினையசெய்தான். (௫௰)

மறைகளேதேறத்தக்கவேதியர்வணங்கற்பால
இறையவனிராமனேயந்நல்லறமூர்த்தியென்னின்
பிறையெயிற்றவனைக்கோறியென்றொருபிறைவாய்வாளி
நிறைவுறவாங்கிவிட்டானுலகெலாநிறுத்திநின்றான். (௫௧)

நேமியுங்குலிசவேலுநெற்றியினெருப்புக்கண்ணான்
நாமவேருனுமற்றைநான்முகன்படையுநாணத்
தீமுகங்கதுவவோடிச்சென்றவன்சிரத்தைத்தள்ளிப்
பூமழையமரர்சிந்தப்புகுந்ததப்பகழிப்புத்தேள். (௫௨)

அற்றவன்றலைமீதோங்கியண்டத்தையணுகாமுன்னம்
பற்றியசூலத்தோடுமுடலுறைபகழியோடும்
இற்றொருகாலக்காற்றான்மின்னொடுமிடியினோடும்
மற்றொருகாளமேகம்வீழ்ந்தெனவீழ்ந்ததியாக்கை. (௫௩)

விண்டலத்தியங்குதிங்களிரண்டெனமின்னுவீசும்
குண்டலத்துணைகளோடுங்கொந்தளக்குஞ்சிச்செங்கேழ்ச்
சண்டவெங்கதிரின்கற்றைத்தழையொடுமிரவிதாம
மண்டலம்வீழ்வதென்னவீழ்ந்ததுதலையுமண்மேல். (௫௪)

உயரிறப்புக்ககாலையுண்ணின்றவுணர்வினோடும்
செயிரறுபொறியுமந்தக்கரணமுஞ்சிந்துமாபோல்
அயிலெயிற்றரக்கருள்ளாராற்றலராகியான்ற
வெயிலுடையிலங்கைநோக்கியிரிந்தனர்படையும்விட்டார். (௫௫)

வில்லாளரானார்க்கெல்லாமேலவன்விளிதலோடும
செல்லாதவ்விலங்கைவேந்தற்கரசெனக்களித்ததேவர்
எல்லாருந்தூசுநீக்கியேறிடவார்த்தபோது
கொல்லாதவிரதத்தோர்தங்கடவுளர்கூட்டமொத்தார். (௫௬)

வரந்தருமுதல்வர்மற்றைமான்மறிக்கரத்துவள்ளல்
புரந்தரன்முதல்வராயநான்மறைப்புலவர்பாரில்
நிரந்தரந்தோன்றநின்றாரருளினானிறைந்தநெஞ்சர்
கரந்திலரவனையாக்கைகண்டனகுரங்குக்கண்ணால். (௫௭)

அறந்தலைநின்றார்க்கில்லையழிவெனுமறிஞர்வார்த்தை
சிறந்ததுசரங்கள்பாயச்சிந்தியசிரத்தவாகிப்
பறந்தலைதனின்மற்றைப்பாதகவரக்கன்கொல்ல
இறந்தனகவிகளெல்லாமெழுந்தனவிமையோரேத்த. (௫௮)

ஆக்கையைநீத்துவீழ்ந்தவரக்கன்செந்தலையையங்கை
தூக்கினனுள்ளங்கூர்ந்தவாலிசேய்தூசுசெல்ல
மேக்குயரமார்வெள்ளமள்ளினர்தொடர்ந்துவீசும்
பூக்கிளர்பந்தனீழலநுமன்மேலிளவல்போனான். (௫௯)

நீங்கியதோளன்றேய்ந்துமெலிகின்றபழியன்மீதுற்
றோங்கியமுடியன்றிங்கட்கொளிர்கின்றமுகத்தனுள்ளால்
வாங்கியதுயரன்மீப்போய்வளர்கின்றபுகழன்வந்துற்
றேங்கியவுவகையாளனிந்திரனினையசொன்னான். (௬0)

எல்லிவாழ்மதியினுற்றகறையெனவிரண்டுமென்றோள்
புல்லியவடுவும்போகாவென்றகம்புலம்புகின்றேன்
வில்லியர்திலகனல்கத்துவக்குறுவெம்மைதீர்ந்தேன்
செல்வமும்பெறுதற்குண்டேகுறையினிச்சிறுமையாதோ. (௬௧)

தென்றலையாழிதொட்டார்சேயருள்சிறுவன்செம்மல்
வென்றலைத்தென்னையார்த்துப்போர்த்தொழில்கடந்தவெய்யோன்
றன்றலையெடுப்பக்கண்டுதானவர்தலைகள்சாய
என்றலையெடுத்தேனின்னந்தனிக்குடையெடுப்பனென்றான். (௬௨)

வரதன்போய்மறுகாநின்றமன்னன்மாமாயத்தோனைச்
சரதம்போர்வென்றுமீளத்தருமமேதாங்குமென்பான்
விரதம்பூண்டுயிரினோடுந்தன்னுடைமீட்சிபார்க்கும்
பரதன்போலிருந்தான்றம்பிவருகின்றபரிசைப்பார்த்தான். (௬௩)

வன்புலங்கடந்துமீளுந்தம்பிமேல்வைத்தமாலைத்
தன்புலநயனமென்னுந்தாமரைசொரியுந்தாரை
அன்புகொலழுகணீர்கொலாநந்தவாரியேகொல்.
என்புறவுருகிச்சோருங்கருணைகொல்யார்தேர்வார். (௬௪)

விழுந்திழிகண்ணினீருமுவகையுங்களிப்பும்வீங்க
எழுந்தெதிர்நின்றவீரனிணையடிமுன்னரிட்டான்
கொழுந்துறுசுடரின்கற்றைக்குழாங்கொளவெயிற்றினீட்டம்
அழுந்துறக்கடித்தபேழ்வாய்த்தலையடியுறையொன்றாக. (௬௫)

தலையினைநோக்குந்தம்பிகொற்றவைதழீஇயபொற்றோள்
மலையினைநோக்குநின்றமாருதிவலியைநோக்கும்
சிலையினைநோக்குந்தேவர்செய்கையைநோக்குஞ்செய்த
கொலையினைநோக்குமொன்றுமுரைத்திலன்களிப்புக்கொண்டான்.

காளமேகத்திற்செக்கர்கலந்தெனக்கரியகுன்றின்
நாள்வெயில்பரந்ததென்னநம்பிதன்றம்பிமார்பில்
தோளுறுமுதிரச்செங்கேழ்ச்சுவடுதன்னுருவிற்றேன்றத்
தாளின்மேல்வணங்கினனைத்தழுவினன்றழீஇய்த்தொன்றில்லான்.

தூக்கியதூணிவாங்கித்தோளொடுமார்பிற்சுற்றி
வீக்கியகவசப்பாசமிழித்ததுவிரகினீக்கித்
தாக்கியபகழிகூர்வாய்தடிந்தபுண்டழும்புமின்றிப்
போக்கினன்றழுவிப்பல்காற்பொற்றடந்தோளினேற்றி. (௬௮)

ஆடவர்திலகனின்னலன்றிகலநுமனென்னும்
சேடனலன்றுமற்றேர்தெய்வத்தின்சிறப்புமன்று
வீடணன்றந்தவென்றியீதெனவிளம்பிமெய்ம்மை
ஏடவிழலங்கன்மார்பனிருந்தனனிராமனிப்பால். (௬௯)

இந்திரசித்துவதைப்படலம்-முற்றிற்று. ஆ-திருவிருத்தம்-௩௧௫.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

---

## உஅ-வது - இராவணன்சோகப்படலம்.

ஓதரோதனவேலைகடந்தராய்ப்
பூதரோதரம்புக்கெனப்போர்த்துறு
சீதரோதக்குருதித்திரையொரீஇத்
தூதரோதவெங்காலிற்றுனேந்துளார். (௧)

அன்றிலங்கரும்பேடைகளாமென்ன
முன்றிலெங்குமரக்கியர்மொய்த்தழ
இன்றிலங்கையழிந்ததென்றேங்குவார்
சென்றிலங்கையிற்றுதையைச்சேர்ந்துளார், (௨)

பல்லும்வாயுமனமுந்தம்பாதமும்
கல்லுயிர்ப்பொறையோடுநடுங்குவார்
இல்லையாயினனுன்மகனின்றெனச்
சொல்லினர்பயஞ்சுற்றத்துளங்குவார். (௩)

மாடிருந்தனர்மாதவர்வானவர்
ஈடினுண்ணிடையார்மற்றும்யாவரும்
வீடுமென்றிவ்வுலகெனவிம்முவார்
ஓடியெங்கணுமஞ்சியொளித்தனர். (௪)

சுடர்க்கொழும்புகைதீவிழிதூண்டிடத்
தடக்கைவாளுருவித்தருந்துத்தை
மிடற்றுவீசலுறுவிழுந்தானரோ
கடற்பெருந்திரைபோற்கரஞ்சோரவே. (௫)

வாய்ப்பிறந்தமுயிர்ப்பின்வளர்ந்தம்வன்
காய்ப்புறுந்தொறுங்கண்ணிடைக்காந்தியும்
போய்ப்பிறந்திவ்வுலகைப்பொதியும்வெந்
தீப்பிறந்துளதன்றெனச்செய்ததால். (௬)

படம்பிறக்கியபாந்தளும்பாரும்பேர்ந்
திடம்பிறங்கிவலம்பெயர்ந்திடுற
உடம்பிறங்கக்கிடந்துழைத்தோங்குதி
விடம்பிறந்தகடலெனவெம்பினன். (௭)

திருகுவெஞ்சினத்தீவிகர்சீற்றமும்
பெருகுகாதலுந்துன்பும்பிறழ்ந்திட
இருபதென்னுமெரிபுரைகண்களும்
உருகுசெம்பெனவோடியதூற்றுநீர். (௮)

கடித்தபற்குலங்கற்குலங்கண்ணற
இடித்தகாலத்துருமெனவெங்கணும்
அடித்தகைத்தலமம்மலையாழிநீர்
வெடித்தவாய்தொறும்பொங்கினமீச்செல. (௯)

மைந்தவோவெனுமாமகனேயெனும்
எந்தையேயெனுமின்னுயிரேயெனும்
முந்தினேனுனையானுளெனோவெனும்
வெந்தபுண்ணிடைவேல்பட்டவெம்மையான். (௧௦)

புரந்தரன்பகைபோயிற்றன்றோவெனும்
அரந்தைவானவரார்த்தனரோவெனும்
கரந்தைசூடியும்பாற்கடற்கள்வனும்
நிரந்தவான்பகைநீங்கினரோவெனும். (௧௧)

நீறுபூசியுநேமியுநீங்கினர்
மாறுகுன்றொடுவேலைமறைந்துளார்
ஊறுநீங்கினராயுவணத்தினோ
டேறுமேறியுலாவுவரொன்னுமால். (௧௨)

வானமானமும்வானவர்வீட்டமும்
போனபோனதிசையிடைப்புக்கனர்
தானமானவைசார்கிலர்சாருவ
தூனமானுடர்வென்றிகொண்டோவெனும். (௧௩)

எழுமிருக்குமினைக்குமிரக்குமுற்
றழுமரற்றுமயர்க்கும்வியர்க்கும்போய்
விழும்விழிக்குமுகிழ்க்குந்தன்மேனியால்
உழுநிலத்தையுருளும்புரளுமால். (௧௪)

கெட்டதூதர்கிளத்தினவாறொரு
கட்டமானுடன்கொல்லவென்காதலன்
பட்டொழிந்தனனோவெனும்பன்முறை
விட்டழைக்குமுழைக்கும்வெதும்புமால். (கரு)

ஐயனேயெனுமோர்சிரம்யானினம்
செய்வெனேயரசென்னுமங்கோர்சிரம்
கையனேனுனைக்காட்டிக்கொடுத்தநான்
உய்வெனேயென்றுரைக்குமங்கோர்சிரம். (கசு)

எழுவிற்கோலமெழுதியதோள்களால்
தழுவிக்கொள்ளலையோவெனுமோர்தலை
உழுவைப்போத்தையுழையுயிருண்பதே
செழுவிற்சேவகனேயெனுமோர்சிரம். (கஎ)

நீலங்காட்டியகண்டனுநேமியும்
மேலுங்காட்டினெறிந்தபடையெலாம்
தோலுங்காட்டித்துரந்தனைமீண்டநின்
ஓலங்காட்டிலையோவெனுமோர்தலை. (கஅ)

துஞ்சினாய்கொறனைபிரிந்தேனெனும்
வஞ்சமோவெனும்வாரலையோவெனும்
நெஞ்சுநோவநெடுந்தனியேகிடந்
தஞ்சினேனென்றரற்றுமங்கோர்தலை. (ககூ)

காகமாடுகளத்திடைக்காண்பெனே
பாகசாதனன்மௌலியொடும்பறித்
தோகைமாதவர்வைத்தனவுச்சியில்
வாகைநாண்மலரொன்னுமற்றோர்தலை. (உ0)

கூற்றமுன்னெதிர்வந்துயிர்கொள்வதோ
ரூற்றந்தானுடைத்தன்றெனையும்மொளித்
தேற்றவெவ்வுலகுற்றனையெல்லையில்
ஆற்றலாயென்றழைக்குமங்கோர்தலை. (உக)

சேலியற்கணியக்கர்தந்தேவிமார்
மேலினித்தவிர்கிற்பர்கொல்வீரநின்
கோலவிற்குரல்கேட்டுக்குலுங்கித்தந்
தாலியைத்தொடலென்னுமற்றோர்தலை. (உஉ)

இன்னவாறழைத்தேங்குகின்றனெமூந்
துன்னுமாத்திரத்தோடினனூழிநாள்
பொன்னின்வானன்னபோர்க்களம்புக்கனன்
நன்மகன்றனதாக்கையைநாடுவான். (உங)

தேவரோமுதலாயினசேவகர்
எவரும்முடனேதொடர்ந்தேகினார்
மூவகைப்பெருலகுமுறைமையும்
யாவையாகுமின்றென்னவிரங்குவார். (௨௪)

அழுதவாற்சிலவன்பினர்போன்றடி
தொழுதவாற்சிலதூங்கினவாற்சில
உழுதவானைப்பிணம்புக்கொளித்தவால்
கழுதும்புள்ளுமரக்கனைக்காண்டலும். (௨௫)

கோடிகோடிகுதிரையினீட்டமும்
ஆடல்வென்றியரக்கர்தாக்கையும்
ஓடையானையுந்தேருமுழக்கினான்
நாடினான்றன்மகனுடனுளெலாம். (௨௬)

மெய்கிடந்தவிழிவழிநீர்விழ
நெய்கிடந்தகனல்புரைநெஞ்சினான்
மொய்கிடந்தசிலையொடுமூரிமாக்
கைகிடந்ததுகண்டனன்கண்களால். (௨௭)

பொங்குதோள்வளையும்பொழிபுட்டிலோ
டங்கதங்களுமம்புமலங்கிட
வெங்களுகமெனப்பொலிமேயதைச்
செங்கையாலெடுத்தான்சிரஞ்சேர்த்தினான். (௨௮)

கற்றின்மார்பிற்றழுவுங்கழுத்தினில்
சுற்றுஞ்சென்னியிற்சூஞ்சுடர்க்கணோ
டொற்றுமோக்குமுருகுமுளைக்குமால்
முற்றுநாளில்விடுநெடுமூச்சினான். (௨௯)

கைகண்டான்பின்கருங்கடல்கண்டன
மெய்கண்டானதன்மேல்விழுந்தானரோ
பெய்கண்டாரையருவிப்பெருந்திரை
மொய்கொண்டார்திரைவேலையைமூட்டவே. (௩௰)

அப்புமாரியழுந்தியமார்பைத்தன்
அப்புமாரியழுதிழியாக்கையின்
அப்புமாரிலணைக்குமாற்றுமால்
அப்புமானுற்றதியாவருற்றாரரோ. (௩௧)

பறிக்குமார்பிற்பகழியைப்பன்முறை
முறிக்குமூர்ச்சிக்குமோக்குமயங்குமால்
எறிக்கும்வெங்கதிரோடுலகேழையும்
கறிக்கும்வாயினிட்டின்றெனக்கருதுவான். (௩௨)

தேவரோடுமுனிவருஞ்சிரியோர்
ஏவரோடுமுடனறிகின்றிலர்
மூவரோடுமுலகொருமூன்றொடும்
போவதேகொன்முனிவெனும்பொம்மலர்ன். (௩௩)

கண்டிலன்றலைகாந்தியமானுடன்
கொண்டிறந்தனனென்பதுங்கொண்டவன்
புண்டிறந்தனநெஞ்சன்பொருமலன்
விண்டிறந்திடவிம்மியாற்றினான். (௩௪)

வேறு.

நிலையுமாதிரத்துநின்றயானையுநெற்றிக்கண்ணன்
மலையுமேயெளியவேநான்மறிதற்குமறிநதமைந்தன்
தலையுமாருயிருங்கொண்டாரவருடலோடுந்தங்கப்
புலையனேனின்னுமாவிசுமக்கின்றேன்போலும்போலும். (௩௫)

எரியுணவளகைமூதூரிந்திரனிருக்கையெல்லாம்
பொரியுணவுலகமூன்றும்பொதுவறப்புரந்தேனபோலாம்
அரியுணுமலங்கன்மௌலியென்மகனிழந்தயாக்கை
நரியுணக்கண்டேனாணியுணுமுணவுநன்றால் (௩௬)

பூண்டொருபகைமேற்புக்கென்புத்திரனோடும்போனார்
மீண்டிலர்விளிந்துவீழ்ந்தார்விரதியிருவரோடும்
ஆண்டுளகுரங்கினோடுமமர்க்களததாருமினாலும்
மாண்டிலரினிவேறுண்டோவிராவணன்வீரவாழ்க்கை (௩௭)

கந்தர்ப்பரியக்கர்சித்தரக்கர்தங்கன்னிமார்கள்
செந்தொக்குஞ்சொல்லினாருன்றேவியர்திருவினல்லார்
வந்துற்றெங்கணவன்றன்னைக்காட்டென்றுமருங்குவீழ்ந்தால்
அந்தொக்கவரற்றவோநானாகூற்றையுமாடல்கொண்டேன். (௩௮)

சினத்தொடுங்கொற்றமுற்றியிந்திரன்செல்வமேவி
நினைத்ததுமுடித்துநின்றேனேரிழையொருத்திநீரால்
எனக்குநீசெய்யத்தக்ககடனெலாமேங்கியேங்கி
உனக்குநான்செய்வதென்னினென்னினாருலகினுள்ளார். (௩௯)

என்பனபலவும்பன்னியெடுத்தழைத்திரங்கியேங்கி
அன்பினான்மகனைத்தாங்கியரக்கியராற்றிவீழப்
பொன்புனைநகரம்புக்கான்கண்டவர்புலம்பும்பூசல்
ஒன்பதுதிக்குமற்றையொருதிக்குமுற்றதன்றே. (௪௦)

கண்களைச்சூல்கின்றாருங்கழுத்தினைத்தடிக்கின்றாரும்
புண்படத்திறந்துமார்பினீருளைப்போக்குவாரும்
பண்கள்புக்குலவுநாவையுயிரொடுபறிக்கின்றாரும்
எண்களிற்பெரியரந்தவிருந்துயர்பொறுக்கலாதார். (௪௧)

மாதிரங்கடந்ததோளான்மைந்தன்றன்மகுடச்சென்னி
போதலைப்புரிந்தயாக்கைபொறுத்தனன்போகக்கண்ட
ஓதநீர்வேலையன்னகண்களாலுகுத்தவெள்ளக்
காதனீரோடியாடற்கருங்கடன்மடுத்ததன்றே. (சஉ)

ஆவயினினியகாதலரக்கியர்முதல்வராய
தேவியர்குழாங்கள்சுற்றிச்சிரத்தின்மேற்றளிர்க்கைசேர்த்தி
ஓவியம்வீழ்ந்துவீழ்ந்துபுரள்வனவொப்பவொல்லை
கோவியல்கோயில்புக்கான்குருதிநீர்க்குமிழிக்கண்ணன். (சங)

கருங்குழற்கற்றைப்பாரங்காருடக்கமலப்பூவால்
குரும்பையைப்புடைக்கின்றாள்போற்கைகளான்மூலைமேற்கொட்டி
அருங்கலச்சும்மைதாங்கவகலல்குலன்றிச்சற்றே
மருங்குலுமுண்டுண்டென்னமயன்மகண்மறுகிவந்தாள். (சச)

தலையின்மேற்சுமந்தகையடணலின்மேன்மிதிக்கின்றாள்போல்
நிலையின்மேற்பதைக்குந்தாளாணசத்தானிறைந்தநெஞ்சள்
கொலையின்மேற்குறித்தவேடன்கூர்ங்கணையுயிரைக்கூட
மலையின்மேன்மயில்வீழ்ந்தென்னமைந்தன்மேன்மறுகிவீழ்ந்தாள். (சரு)

உயிர்த்திலளுணர்வுமில்லளுயிரிலள்கொல்லென்றெண்ணப்
பெயர்த்திலள்யாக்கையொன்றும்பேசலள்பிறிதொன்றேனும்
வியர்த்திலளொடிதுபோதுவிம்மலண்மெல்லமெல்ல
அயர்த்தவளரிதிற்றேறிவாய்திறந்தரற்றலுற்றாள். (சசு)

கலையினூற்றிங்களென்னவளர்கின்றகாலத்தேயுன்
சிலையினுலரியைவெல்லச்காண்பதோர்தவமுஞ்செய்தேன்
தலையிலாயாக்கைகாணவெத்தவஞ்செய்தேனந்தோ
நிலையிலாவாழ்வையின்னுநினைவெனோநினைவிலாதேன் (சஎ)

ஐயனேயழகனேயென்னரும்பெறன்மருந்தேயாழிக்
கையனேமழுவனேயென்றவர்வலிகடந்தகாலை
மொய்யனேமுளரியன்னநின்முகங்கண்டிலாதேன்
உய்வெனோயுலகமூன்றிற்கொருவனேசெருவலோனே (சஅ)

தாளரிச்சதங்கையார்க்கும்பருவத்தேதடக்கைதன்னால்
கோள்ரியிரண்டுபற்றிக்கொணர்ந்தனைகொணர்ந்துகோபம்
மூளுறப்பொருத்திமாடமுன்றிலின்முறையினோடி
மீளிருவிளையாட்டின்னுங்காண்பெனோவிதியிலாதேன். (சகூ)

அம்புலியம்மவாவென்றழைத்தலுமவிர்வெண்டிங்கள்
நம்பவுன்றுதையாணையஞ்சிநின்மருங்குநண்ண
வம்புறமறுவைப்பற்றிமுயலெனவாங்கும்வாட்கை
எம்பெருங்களிறேகாணவேசற்றேனெழுந்திராயே. (ருo)

இயக்கியராக்கிமார்கள்விஞ்சையரோழைமாதர்
முயற்கறைமலராத்திங்கண்முகத்தியர்முருகவின்னை
நயக்குநரவருணீயுநளிர்முகங்காட்டிநல்காய்
அயர்த்தனையுறங்குவாயோவமர்பொருதலசினையோ. (௫௧)

முக்கணான்முதலினோரையுலகொருமூன்றினோடும்
புக்கபோரெல்லாம்வென்றநின்றவென்புதல்வன்போலாம்
மக்களிலொருவன்கொல்லமாள்வதேமானமேரு
உக்கமென்காலால்வேரோடொடிதலுமுளதேயம்மா. (௫௨)

பஞ்செரியுற்றதென்னவரக்கர்தம்பரவையெல்லாம்
வெஞ்சினமனிசர்கொல்லவிளிந்ததேமீண்டதில்லை
அஞ்சினெனஞ்சினேனச்சீதையென்றமுதாற்செய்த
நஞ்சினாலிலங்கைவேந்தனுனையித்தகையனன்றோ. (௫௩)

என்றழைத்தேங்கநோக்கியித்துயரெமர்கட்கெல்லாம்
பொன்றழைத்தனையவல்குற்சீதையாற்புகுந்துவந்த
வன்றழைக்கல்லினெஞ்சின்வஞ்சகத்தாளைவாளால்
கொன்றிழைத்திடுவெனென்னாவோடினனரக்கர்கோமான். (௫௪)

ஓடுகின்றானைநோக்கியுயர்பெரும்பழியினுச்சி
சூடுகின்றானென்றஞ்சிமகோதரன்றுணிந்தநெஞ்சன்
மாடுசென்றடியின்வீழ்ந்தாவணங்கினின்புகழ்க்குமன்ன
கேடுவந்துற்றதென்னாவினையணகிளத்தலுற்றான். (௫௫)

மங்கையைக்குலத்துளாளைத்தவத்தியைமுனிந்துவாளின்
சங்கையொன்றின்றிக்கொன்றாற்குலத்துக்கேதக்கதன்று
கங்கையஞ்சென்னியானுங்கண்ணனுங்கமலத்தோனும்
செங்கையுங்கொட்டியுன்னைச்சிரிப்பராற்சிறியையென்னா. (௫௬)

நீருளதனையுநீண்டநெருப்புளதனையுஞ்சூழ்ந்த
பாருளதனையுங்காயப்பரப்புளதனையுங்காலின்
பேருளதனையும்பேராப்பெரும்பழிபிடித்திபோலாம்
போருளதனையும்வென்றபுகழுளதனையுமுள்ளாய். (௫௭)

தெள்ளருங்காலகேயர்சிரத்தொடுந்திசைக்கையானை
வெள்ளியமருப்புச்சிந்தவீசியவீரவொள்வாள்
வள்ளியமருங்குற்செவ்வாய்மாதர்மேல்வைத்தபோது
கொள்ளுமோதானவ்வாவிநாணத்தாற்குறைவதல்லால். (௫௮)

நிலத்தியல்பன்றுவானநெறியன்றபுறத்துநின்ற
தலத்தியல்பன்றுமேலோர்தருமமேயன்றுதக்க
புலத்தியன்மரபுவந்துபுண்ணியவிரதம்பூண்டாய்
வலத்தியல்பன்றுமாயாப்பழிகொளமறுகுவாயே. (௫௯)

இன்றுநீயிவளைவாளாலெறிந்துபோய்மனிசன்றன்னை
வென்றுமீண்டிலங்கைமூதூரெய்தினைவெதும்புவாயோ
பொன்றினள்சீதையென்றுபுரவலபுதல்வன்றன்னைக்
கொன்றவற்செருவிற்சாலக்கூசினைகொல்லவென்றான். (௬0)

என்னலுமெடுத்தகூர்வாளிருநிலத்திட்டுமீண்ட
மன்னவன்மைந்தன்றன்னைமாற்றலர்வலியாற்கொண்ட
சின்னமுமவர்கடந்தஞ்சிரமுங்கொண்டன்றிச்சேர்கேன்
துன்னெறித்தைலத்தோணிவளர்த்துமினென்னச்சொன்னான், (௬௧)

இராவணன்சோகப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம் ௩௧௬௬.
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்,

---

## ௨௯-வது- படைகாட்சிப்படலம்.

அத்தொழிலவருஞ்செய்தாராயிடையனைத்துத்திக்கும்
பொத்தியவிருதர்தானைகொணரியபோயதூதர்
ஒத்தனரணுகிவந்துவணங்கினாரிலங்கையுன்னார்
பத்தியினடைந்ததானைக்கிடமிலைபணியென்னென்றார். (௧)

ஏம்பலுற்றெழுந்தமன்னனெவ்வழியெய்திற்றென்னக்
கூம்பலுற்றுயர்ந்தகையரொருவழிகூறலாமோ
வாம்புனற்பரவையேழுமிறுதியின்வளர்ந்ததென்னத்
தாம்பொடித்தெழுந்ததானைக்குலகிடந்தானில்லென்றார். (௨)

மண்ணுறநடந்ததானைவளர்ந்தமாத்தூளிமண்ட
விண்ணுறநடக்கின்றாருமிதித்தனரோகமேன்மேல்
கண்ணுறலரியர்காணுக்கற்பத்தின்முடிவிற்கார்போல்
எண்ணுறவாயசேனையெய்தினவிலங்கைநோக்கி. (௩)

வாட்டனின்வயங்கமின்னுமழையதினிருளமாட்டா
ஈட்டியமுரசினார்ப்பைவிடிப்பொடுமுழக்கமாட்டா
மீட்டினியுவமையில்லைவேலைமீச்சென்றவென்னின்
தீட்டியபடையுமாவும்யானையுந்தேருஞ்செல்லா. (௪)

உலகினுக்குலகுபோய்ப்போயொன்றினொன்றுதங்கலுற்ற
தொலைவருந்தானைமேன்மேலெழுந்ததுதொடர்ந்துசுற்ற
நிலவினுக்கிறையுமீனுநீங்கினர்நிமரின்றான்
அலரியுமுந்துசெல்லுமாறுநீத்தஞ்சியப்பால். (௫)

மேற்படவிசும்பைமூடிமேருவின்விளங்கிநீண்ட
நாற்பெருவாயிலூடுமிலங்கையூர்நடந்ததானை
கார்த்தடங்கடலைமற்றோரிடைக்கிடைகாலன்றானே
சேர்ப்பதுபோன்றதியாண்டுஞ்சுமைபொறுதுலகமென்ன. (௬)

நெருக்குடைவாயிலூடுபுகுமெனினெடிதுகாலம்
இருக்குமத்துணையேயென்றுமதிலினுக்கும்பரொய்தி
அரக்கரதிலங்கையுற்றவண்டங்களனைத்தினுள்ள
சருக்கிளர்மேகமெல்லாமொருங்குடன்கலந்தாலென்ன (௭)

அதுபொழுதரக்கர்கோனுமாசிலத்தாணிபுக்கான்
பொதுவுறநோக்கலுற்றுனொருநெறிபோகப்போக
விதிமுறைகாண்டெனென்னும்வேட்கையால்வேலையேழும்
கதுமெனவொருங்குநோக்கும்பேதையர்காதல்கொண்டான். (௮)

மாதிரமொன்றினின்றுமாறொருதிசைமேன்மண்டி
ஓதநீர்செல்வதன்னதானையையுணர்வுகூட்டி
வேதவேதாந்தங்கூறும்பொருள்ளைவிரிக்கின்றார்போல்
தூதுவரணிகடோறும்வரன்முறைகாட்டிச்சொன்னார். (௯)

வேறு.

சாகத்தீவினினுறைபவர்தானவர்சமைத்த
யாகத்திற்பிறந்தியைந்தவர்தேவரையெல்லாம்
மோகத்திற்புகமுடித்தவர்மாயையின்முதல்வர்
மேகத்தைததொடுமெய்யினரிவரொனவிரித்தார். (௧௰)

குசையின்றீவினினுறைபவர்கூற்றிற்கும்விதிக்கும்
வசையுமேன்மையும்வளர்ப்பவர்வானநாடுறைவோர்
இசையுஞ்செல்வமுமிருக்கையுமிழந்ததிங்கிவரால்
விசையந்தோளனநின்றவரிவர்நெடுவிறலோய். (௧௧)

இலவத்தீவினினுறைபவரிவர்கள்பண்டிமையாப்
புலவர்க்கிந்திரன்பொன்னகரழிதரப்பொருதார்
நிலவைச்செஞ்சடைவைத்தவன்வரந்தரநிமிர்ந்தார்
உலவைக்காட்டுறுதீயெனவெகுளிபெற்றுடையார், (௧௨)

அன்றிற்றீவினினுறைபவரிவர்பண்டையமரர்க்
கென்றைக்கும்மிருந்துறைவிடமென்றிடமேருக்
குன்றைக்கொண்டுபோய்க்குணகடலிடவுற்றிக்குலத்தோர்ச்
சென்றித்தன்மையைத்தவிருமென்றிரந்திடத்தீர்ந்தார். (௧௩)

பவளத்தீவினினுறைபவர்வெள்ளிபண்பழிந்தோர்
குவளைக்கண்ணியாமிராக்கதக்கன்னியைக்கூட
அவளிற்றோன்றினராயிருகோடியர்நொய்தின்
திவளப்பாற்கடல்வறடரத்தேக்கினர்சிறுநாள். (௧௪)

கந்தமாதனமென்பதிக்கருங்கடற்கப்பால்
மந்தமாருதமூர்வதோர்கிரியினில்வாழ்வார்
அந்தநாளினிலுலகாலத்தொடும்பிறந்தார்
இந்தவாளெயிற்றரக்கரொண்ணிறந்தவரிறைவ. (௧௫)

மலயமென்பதுபொதியினில்லாதினிமறவோர்
நிலயமன்னதுசாகரத்தீவிடைநிற்கும்
குலையுமெவ்வுலகெனக்கொண்டுநான்முகன்கூறி
உலைவிலீரிதினுறையுமென்றிரந்திடவுறைந்தார். (௧௬)

முக்கரக்கையர்மூவிலைவேலினர்மூசண்டி
சக்கரத்தினர்சாபத்தரிந்நின்றதலைவர்
நக்கரக்கடனுலொடுமூன்றிற்குநாதர்
புக்கரப்பெருந்தீவிடையுறைபவர்புகழோய். (௧௭)

மறலியைப்பண்டுதன்பெருந்தாய்சொலவலியால்
புறநிலைப்பெருஞ்சக்கரமால்வரைப்பொருப்பின்
விறல்கெடச்சிறையிட்டயனிரந்திடவிட்டார்
இறலியம்பெருந்தீவிடையுற்றவரிவர்கள். (௧௮)

வேதாளக்கரத்தீவர்பண்டிவ்விடம்விரிவு
போதாபுக்கும்கெழுவகையாய்நின்றபுவனம்
பூதாளத்துறைவீரொனநான்முகன்பணிப்ப
நாதரபுக்கிருந்தவருணக்கரிதினிடந்தார். (௧௯)

நிருதிதன்குலப்புதல்வர்நின்குலத்துக்குநேரோ
பரிதிதேவர்கட்கெனத்தக்கபண்பினர்யானைக்
குருதிபெற்றிலராழ்கடலேழையுங்குடிப்பார்
இருணிறத்தவரொருவரோழ்மலையினையெடுப்பார். (௨௦)

பாரணைத்தவெம்பன்றியையன்பிறைற்பார்த்த
காரணத்தினிறுதியாய்பயந்தவெங்கழலோர்
பூரணத்தடந்திசைதொறுமிந்திரன்புலரா
வாரணத்தினைநிறுத்தியதிவர்வரவஞ்சி. (௨௧)

மறக்கண்வெஞ்சினமலையெனவிந்நின்றவயவர்
இறக்கங்கீழிலாப்பாதலத்துறைகின்றவிகலோர்
அறக்கண்டுஞ்சலனுயினன்னனந்தலையநந்தன்
உறக்கந்தீர்ந்தனனுறைவிடமிவர்தொடர்ந்தொருக்க. (௨௨)

காளியைப்பண்டுகண்ணுதல்காட்டியகாலை
மூளமுற்றியசினக்கடுந்தீயிடைமுளைத்தோர்
கூளிகட்குநல்லுடன்பிறந்தவர்பெருங்குழுவாய்
வாளிமைக்கவும்வாளெயிறிமைக்கவும்வருவார். (௨௩)

பாவந்தோன்றியநாண்முதற்றோன்றியபழையோர்
தீவந்தோன்றியமுறைத்துணையெனத்தெறுகண்ணர்
கோவந்தோன்றிடிற்றுயையுமுயிருணுங்கொடியோர்
சாவந்தோன்றிடவடதிசைமேல்வந்துசார்வார். (௨௪)

சிற்றநாறவைம்முகத்தவனுலகெலாந்தீப்பான்
ஏற்றநாண்மற்றவ்வெரியொடுந்தோன்றினரிவரால்
கூற்றமாகியகொம்பினைம்பாலுடைக்கொடுமை
ஊற்றமாகியபண்டுதித்துளரொன்பருவரால். (௨௫)

காலன்மார்பிடைச்சிவன்கழல்படப்பண்டுகான்ற
வேலையேழன்னகுருதியிற்றோன்றியவீரர்
சூலமேந்தியுநின்றனரிந்நின்றதொகையார்
ஆலகாலத்தினமுதின்முன்பிறந்தபோரரக்கர். (௨௬)

வடவைத்தீயிடைவாசுகிகான்றமாகடுவை
இடவத்தீயிடையெழுந்தவரிவரினமழையைத்
தடவித்தீதிமிர்குஞ்சியரிவநிவர்தனித்தேர்
கடவத்தீந்தவெம்புரத்திடைத்தோன்றியகழலோர். (௨௭)

இனையரின்னவரொன்பதொன்றிந்திரற்கேயும்
நினையவுங்குறித்துரைக்கவுமரிதிவர்நின்றந்த
வினையமும்பெருந்தவங்களும்வரங்களும்விளம்பின்
அனையபேருகமாயிரத்தளவினுமடங்கா. (௨௮)

ஒருவரோசென்றவ்வுறுதிறற்குரங்கையுமுரவோர்
இருவரொன்றவர்தம்மையுமுன்கையோடெற்றி
வருவர்மாறினிப்பகர்வதென்வானவர்க்கரிய
திருவவென்றனர்தூதுவரிராவணன்செப்பும். (௨௯)

எத்துணைத்திதற்கெண்ணெனத்தொகைவகுத்தியன்ற
இத்திறத்தினையறைதியொன்றுரைசெயவவர்கள்
ஒத்தவெள்ளமோரேழுநூறுமெனவுரைப்பார்
பித்தரிப்படைக்கெண்சிறிதென்றனர்பெயர்ந்தார். (௩0)

படைப்பெருங்குலத்தலைவரைக்கொணருதிரொன்பால்
கிடைத்துநானவர்க்குற்றுளபொருளெலாங்கிளத்தி
அடுத்தநல்லுரைவிளம்பினனளவளாயமைவுற்
றுடைத்தபூசனைவரன்முறையியற்றவென்றுரைத்தான். (௩௧)

தூதர்கூறிடத்திசைதொறுந்திசைதொறுந்தொடர்ந்த
ஓதவேலையினாயகரெவரும்வந்துற்றார்
போதுதூவினர்வணங்கினரிராவணன்பொலந்தாள்
மோதுமௌலியர்பேரொலிவிசும்பிடைமுட்ட. (௩௨)

அனையர்யாவருமருகுசென்றடிமுறைவணங்கி
வினையின்மேனியரினிதினங்கிருந்ததோர்வேலை
நினையுநல்வரவாகெனவரன்முறைநிரப்பி
மனையுமக்களும்வலியர்கொலென்றனன்மறவோன். (௩௩)

பெரியசினபுயம்யாமுளந்தவரம்பெரிதால்
உரியவேண்டியபொருளெலாமுடிப்பதற்கொன்றே
இரியதேவரைக்கண்டனம்பகைபிறிதில்லை
அரியதென்னமக்கென்றனரவன்கருத்தறிவார். (௩௪)

மாதரார்களுமைந்தருமுன்மருங்கிருந்தார்
பேதுறுதவரில்லைநீவருந்தினைபெரிதும்
யாதுகாரணமருளெனவினைபவரிசைத்தார்
சீதைகாதலிற்புதந்துளபரிசெலாந்தெரித்தான். (௩௫)

கும்பகன்னனோடிந்திரசித்தையுங்குலத்தின்
வெம்புவெஞ்சினத்தரக்கர்தங்குழுவையும்வென்றார்
அம்பினாற்சிலமனிசரோடன்றநம்மாற்றல்
நம்பசேனையும்வானரமேயெனநக்கார். (௩௬)

உலகைச்சேடன்றனுச்சியின்றெடுக்கவன்றோரேம்
மலையைவேரொடும்வாங்கவன்றங்கையால்வாரி
அலைகொள்வேலையையிறைக்கவன்றழைத்ததுமலரோ
டிலைகள்கோதுமக்குரங்கின்மேலேவக்கொலெம்மை. (௩௭)

என்னக்கையெறிந்திடியுருமேறெனநக்க
பின்னும்வெள்ளெயிற்றரக்கரையங்கையால்விலக்கி
வன்னியென்பவன்புக்கரத்தீவுக்குமன்னன்
அன்னமானுடரார்வலியாவதென்றறைந்தான். (௩௮)

மற்றவாசகங்கேட்டலுமாலியவான்வந்
துற்றதன்மையுமனித்தராஅற்றமுமுடனும்
கொற்றவானரத்தலைவர்தம்வலிமையுங்கூறு
கிற்றுங்கேட்டிரோவென்றன்னகிளத்துவான்றுணிந்தான், (௩௯)

ஆழியன்னனீரதிரன்றேகடலேழும்
ஊழிகாலெனக்கடப்பவன்வாலியென்போனை
ஏழுதுன்றையுமெடுக்குறுமிடுக்கனையிந்நாள்
பாழிமார்பகம்பிளந்துயிர்குடித்ததோர்பகழி (௪0)

கரியமால்வரைகர்கரதூட்டணர்கதிர்வேற்
றிரிசிராவவர்திரைக்கடலெனப்பெருஞ்சேனை
ஒருவிலாழிலொருநாழிகைப்போதிடையுலந்தார்
பரியதோளுடைவீரமாரீசனும்பட்டான். (௪௧)

இங்குவந்துநீர்விறுயதென்னெறிதிரைப்பரவை
அங்குவெந்திலதோசிறிகறிந்ததுமிலிரோ
கங்கைசூடினன்கடுஞ்சிலையொடித்தவக்காலம்
உங்கள்வான்செவிபுகுந்திலதோமுழங்கோதை. (௪௨)

ஆயிரம்பெருவெள்ளமுண்டிலங்கையினளவில்
தீயின்வெய்யபோரரக்கர்தஞ்சேனையச்சேனை
போயதந்தகன்புரம்புக்குநிறைந்ததுபோலாம்
ஏயுமும்மைநூறம்மவந்தெய்தவிலிரண்டால். (௪௩)

கொற்றவெஞ்சினக்கும்பகன்னனுநுங்கள்கோமான்
பெற்றமக்களும்பிரகத்தன்முதலினர்பிறரும்
மற்றைவீரருமிந்திரசித்தொடுமடிந்தார்
இற்றைநாள்வரையிவனுமற்றியானுமேயிருந்தேம். (௪௪)

மூலத்தானையொன்றுண்டதுமும்மைநூறமைந்த
கூலச்சேனையின்வெள்ளமற்றதற்கின்றுகுறித்த
காலச்செய்கைநீர்வந்திலிரோற்பொலங்கழலோர்
சீலச்செய்கையைச்சேனையின்செய்கையைத்தெரிக்கின். (௪௫)

ஒருகுரங்குவந்திலங்கையைமலங்கெரியூட்டித்
திருகுவெஞ்சினத்தக்கனைநிலத்தொடுந்தேய்த்துப்
பொருதுதூதுரைத்தேகியதரக்கியர்புலம்பக்
கருகுசேனைமாக்கடலையுங்கடலையுங்கடந்து. (௪௬)

கண்டிலீர்கொலாங்கடலினைமலைகொடுகட்டி
மண்டுபோர்செயவானரரியற்றியமார்க்கம்
உண்டுவெள்ளமோரெழுபதுமருந்தொருநொடியின்
கொண்டுவந்ததுமேருவுக்கப்புறங்குதித்து. (௪௭)

இஃதுவியற்கையோர்சீதையென்றிருந்தவத்தியைந்தாள்
பொதுவியற்கைதீர்கற்புடைப்பத்தினிபொருட்டால்
விதிவிளைத்ததவ்வில்லியர்வெல்கநீர்வெல்க
முதுமொழிப்பதஞ்சொல்லினெனென்றவன்முடித்தான். (௪௮)

வன்னிமன்னனைநோக்கிநீயிவரெலாமடிய
என்னகாரணமிகல்செயாதிகழ்ந்ததென்றிசைத்தான்
புன்மைநோக்கினெனுணினென்பொருகிலெனென்றான்
அன்னதேயினியமையுமெங்கடன்மையதன்றே. (௪௯)

மூதுணர்ந்தவிம்முதுமகன்கூறியமுயற்சி
சீதையென்பவடனைவிட்டம்மனிசரைச்சேர்தல்
ஆதியின்றலைசெயத்தக்கதினிச்செய்வதழிவால்
காதலிந்திரசித்தையாம்யாண்டினிக்காண்டும். (௫௦)

விட்டமாதரையீயினும்வெஞ்சமம்விரும்பிப்
பட்டவீரரைப்பெறுகிலம்பெறுவதுபழியால்
மூட்டிமற்றவர்குலத்தொடுமுடிக்குவதல்லால்
கட்டமர்த்தொழிலொழிதலோவினிச்செயுங்கடமை. (௫௧)

என்றெழுந்தனரிராக்கதரிருத்தியோமே
சென்றுமற்றவர்சில்லுடற்குருதியுட்டேக்கி
வென்றுமீளுதும்வெள்குதுமேன்மிடலில்லாப்
புன்றொழிற்குலமாதுமென்றுரைத்தனர்போனார். (௫௨)

படைகாட்சிப்படலம் - முற்றிற்று ஆ திருவிருத்தம் - ௩௨௪அ.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்,

## ௩0-வது- மூலபலவதைப்படலம்.

வானரப்பெருஞ்சேனையையாறொருவழிசென்
றூனறக்குறைத்துயிருண்பனீவிர்போயொருங்கே
மானுடப்பெயரிருவரைமடித்திரொன்றமைத்தான்
தானவப்பெருங்கிரிகளைவாள்கொடுதடிந்தான். (க)

எனவுரைத்தலுமெழுந்துதம்மூர்திபோயேறிக்
கனைகடற்பெருஞ்சேனையைக்கலந்ததுகாணு
வினையமற்றிலைமூலமாத்தானையைவிரைவோ
டினையமுற்செலவேவுகென்றிராவணனிசைத்தான். (௨)

ஏவியப்பெருஞ்சேனையைத்தானும்வேட்டெழுந்தான்
தேவர்மெய்ப்புகழ்தேய்த்தவன்சில்லியந்தேர்மேல்
காவன்மூவலகையுலகமுமுனிவருங்கலங்கப்
பூவைவண்ணத்தன்சேனைமேலொருபுறம்போனான். (௩)

எழுகசேனையென்றியானைமேலணிமுரசெற்றி
வழுவில்வள்ளுவர்துறைதொறும்விளித்தலும்வல்லைக்
குழுவியீண்டியதென்பராற்குவலயமுழுதும்
தழுவிமண்ணையும்விசும்பையுந்தடவுமாத்தானை. (௪)

அடங்கும்வேலைசளண்டத்தினகத்தகன்மலையும்
அடங்குமன்னுயிரனைத்துமவ்வரைப்பிடையவைபோல்
அடங்குமேமற்றிப்பெரும்படையிரும்படையாக்கை
அடங்குமாயவன்குறளுருத்தன்மையினன்றேல். (௫)

அறத்தைத்தின்றருங்கருணையைப்பருகிவேறமைந்த
மறத்தைப்பூண்டுவெம்பாவததைமணம்புணர்மணாளர்
நிறத்தீக்காரன்னநெஞ்சினர்நெருப்புக்குநெருப்பாப்
புறத்துப்பொங்கியபங்கியர்காலனும்புகழ்வார். (௬)

நீண்டதாள்களால்வேலையைப்புறஞ்செலநீக்கி
வேண்டுமீனொடுமகரங்கள்வாயிட்டுவிழுங்கித்
தூண்டுவானுருமேற்றினைச்செவிதொறுந்தூக்கி
மூண்டவான்மழையுரித்துடுத்துலாய்நடைமுயல்வார். (எ)

மால்வரைக்குலம்பரலெனமழைக்குலஞ்சிலம்பக்
கால்வரைப்பெரும்பாம்புகொண்டசைத்தவெங்கழலார்
மேல்வரைப்படர்கலுழன்வெங்காற்றினும்வெய்யோர்
நால்வரைக்கொணர்நதுடன்பிணித்தாலன்ன நடையார். (௯)

உண்ணுந்தன்மையவூன்பிழைத்துளவெனினுடனே
மண்ணினின்றமால்யானையைவாயிடும்பசியர்
தண்ணெனீர்முறைதப்பிடிற்றடக்கையாற்றடவி
விண்ணின்மேகத்தைவாரிவாய்பிழிந்திடும்விடாயர். (௲)

உறைந்தமந்தரமுதலியகிரிகளையுருவ
வெறிந்துவேனிலைகாண்பவரிந்துவால்யாக்கை
சொறிந்துதீர்வுறுதினவினர்மலைகளைச்சுற்றி
அறைந்துகற்றமாத்தண்டினரசனியினார்ப்பர். (௧௦)

சூலம்வாங்கிடிற்சுடர்மழுவேந்திடிற்சுடர்வாள்
கோலும்வெஞ்சிலைபிடித்திடிற்கொற்றவேல்கொள்ளின்
சாலவன்றண்டுபிடித்திடிற்சக்கரந்தாங்கின்
காலன்மால்சிவன்குமரனென்றிவரையுங்கடப்பார். (௧௧)

ஒருவரோவல்லரோருலகத்தினையுண்ண
இருவர்வேண்டுவதேழுலகத்தையுமிறுக்கின்
திரிவரோவுடன்றிரிதருநெடுநிலஞ்செவ்வே
வருவரோற்கணைகடல்களுந்தொடர்ந்துபின்வருமால். (௧௨)

மேகமெத்தனையத்தனைமால்கரிவிரிந்த
நாகமெத்தனையத்தனைதேர்நனிநாளாப்
போகமுற்றினவெத்தனையத்தனைபுரவி
ஆகமேலனவெத்தனையத்தனையனிகம். (௧௩)

இன்னதன்மையர்யானைதேரிவுளியென்றிவற்றின்
பன்னுபல்லணம்பருமமற்றுறுபபொருபலவும்
பொன்னுநன்னெடுமணியுங்கொண்டல்லதுபுனைந்த
சின்னமுள்ளனவல்லனமெய்ம்முற்றுந்தெரிந்தால். (௧௪)

இப்பெரும்படையெடுத்திரைத்தேகமேலெழுந்து
துப்புதிர்த்தன்னதூளியின்படலைமீதார்ப்பத்
தப்பில்கார்நிறந்தவிர்ந்ததக்கரிமதந்தழுவ
உப்புநீங்கியதோநங்குநீர்வீங்கலையுவரி. (௧௫)

மலையும்வேலையுமற்றுளபொருள்களும்வானோர்
நிலையுமப்புறத்துலகங்கள்யாவையுநிரம்ப
உலைவுறுவகையுண்டுபண்டுமிழ்தருவேதத்
தலைவன்வாயொத்தவிலங்கையின்வாயில்கருவி. (௧௬)

கடம்பொருமதக்களிறுதேர்பரிமிடைசட்டறன்
படம்பொருமையினனந்தலையநந்தனும்பதைத்தான்
விடம்பொருதிரியமரர்போற்குரக்கினமிதிக்கும்
இடம்பெருமையினிரிந்துபோய்வடதிசையிறுத்த. (௧எ)

ஆழிமால்வரைவேலிசுற்றுறவகுத்தமைத்த
ஏழுவேலையுமிடுவலையரக்கரோயினமா
வாழிகாலனும்விதியும்வெவ்வினையுமேமள்ளர்
தோழமாமதிலிலங்கைமால்வேட்டமேற்றொடர்ந்தான். (௧அ)

ஆர்த்தவோசையோவாழியினிலங்குதேரதிர்ப்போ
கார்த்திண்மாகரிமுழக்கமோவாசியின்கலிப்போ
போர்த்தபல்லியத்தரவமோநெருக்கினுற்புழுங்கி
வேர்த்தவண்டத்தைவெடித்திடப்பொலிந்ததுமேன்மேல். (௧௯)

வழங்குபல்படைமீனதுமதமலைக்கராத்து
முழங்குகின்றவாம்பரிமூரிதிரையதுமுரசம்
தழங்குபேரொலிக்கலியதுதறுகண்மாநிருதப்
புழுங்குவெஞ்சினச்சுறவதுநிறைபடைப்புணரி. (௨௦)

தசும்பிற்பொங்கியதிரள்புயத்திராக்கதர்தானை
பசும்பொற்றிண்டலமிதித்தலிற்கரிபடுமதத்தின்
அசும்பிற்சேறுபட்டளறுபட்டழுந்துபட்டழியும்
விசும்பிற்சேறலிற்கிடந்ததவ்விலங்கன்மேலிலங்கை. (௨௧)

படியைப்பார்த்தனர்பரவையைப்பார்த்தனர்படர்வான்
முடியைப்பார்த்தனர்பார்த்தனர்நெடுந்திசைமுழுதும்
விடியப்பார்ப்பதோர்வெள்ளிடைகண்டிலர்மிடைந்த
கொடியைப்பார்த்தனர்வேர்த்தனர்வானவர்குலைந்தார். (௨௨)

உலகினுமல்லாவுருவெலாமிராக்கதருருவா
அலகில்பல்படைபிடித்தமர்க்கெழுந்தவோவன்றேல்
விலகுநீர்த்திரைவேலையோரேழும்போய்விதியால்
புலைகொள்வல்லுருப்பொடித்தனவோவெனப்புகன்றார். (௨௩)

நடுங்கிநஞ்சடைகண்டனைவானவர்நம்ப
ஒடுங்கியாங்கரந்துறைவிடமறிகிலமுயிரைப்
பிடுங்கியுண்குவர்யாரிவர்பெருமைபண்டறிந்தார்
முடிந்ததெம்வலியென்றனரோடுவான்முயல்வார். (௨௪)

ஒருவனைக்கொல்லவாயிரமிராமர்வந்தொருங்கே
இருபதிற்றிரண்டாண்டுநின்றமர்செய்தாலென்னும்
நிருதனைக்கொல்வதிடம்பெற்றுரிடையினின்றன்றே
பொருவதிப்படைகண்டுதம்முயிர்பொறுத்தன்றே. (௨௫)

என்றிறைஞ்சலுமிருண்மிடற்றிறைவனுமினிநீர்
ஒன்றுமஞ்சலிர்வஞ்சனையரக்கரையொருங்கே
கொன்றுதீருமக்கொற்றவனிக்குலமெல்லாம்
பொன்றுவிப்பதோர்விதிதந்ததாமெனப்புகன்றான். (௨௬)

புற்றினின்றுபல்லரவினம்புறப்படப்பொருமி
இற்றதெம்வலியெனவிரைத்திரிதருமெலிபோல்
மற்றவ்வானரப்பெரும்படைபயத்தொடுமறுகிக்
கொற்றவீரரைப்பார்த்திலதிரிந்ததுகுலைவால். (௨௭)

அணையின்மேற்சென்றசிலசிலவாழியைநீந்தப்
புணைகட்டினசிலசிலநீந்தினபோன
துணைகளோடும்புக்கழுந்தினசிலசிலதோன்றாப்
பணைகளேறினமலைமுழைபுக்கனபலவால். (௨௮)

அடைத்தபேரணையளித்ததுநமக்குயிரழிவான்
உடைத்துப்போதுமாலவர்தொடராமலென்றுரைத்த
புடைத்துச்செல்குவர்விசும்பினுமென்றனபோக்கென்
படைத்துத்திக்கெலாம்பரந்தனரென்றனபயத்தால். (௨௯)

அரியின்வேந்தனுமநுமனுமங்கதனவனும்
பிரியகிற்றிலரிறைவனைநின்றனர்பின்றார்
இரியலுற்றனர்மற்றையோர்யாவருமெதிநீர்
விரியும்வேலையுங்கடந்துநோக்கினன்வீரன். (௩௦)

இக்கொடும்படையெங்குளதியம்புதியென்றான்
மெய்க்கடுந்திறல்வீடணன்விளம்புவான்வீர
திக்கனைத்தினுமேழுமாத்தீவினுந்தீயோர்
புக்கழைத்திடப்புகுந்துளதிராக்கதப்புணரி. (௩௧)

ஏழெனப்படுங்கீழுளதலத்தினின்றேறி
ஊழிமுற்றியகடலெனப்புகுந்ததுமுளதால்
தாழின்மற்றவன்மூலமாத்தானைமுன்வருவ
வாழிவேறினிப்புறத்திலையரக்கராய்வருவார். (௩௨)

ஈண்டிவ்வண்டத்தினிராக்கதரொனும்பெயரொல்லாம்
மூண்டுவந்ததுதீவினைமுன்னின்றமுடுக
மாண்டுவீழுமின்றென்கின்றதென்மதிவிதியார்
தூண்டுகின்றனரொன்றடிதொழுதனன்சொன்னான். (௩௩)

கேட்டவண்ணலுமுறுவலுஞ்சீற்றமுங்கிளரக்
காட்டுகின்றனென்காணுதியொருகணத்தென்னா
ஓட்டின்மேற்கொண்டதானையைப்பயந்துடைத்தரவோய்
மீட்டிகொல்லெனவங்கதனோடினன்விரைந்தான். (௩௪)

சென்றுதானையையற்றனன்சிறிதிறைகெடுவீர்
நின்றுகேட்டுப்பினீக்குமினெனச்சொல்லிநேர்வான்
ஒன்றுகேட்கிலமென்றனகுரக்கினமுனையால்
வென்றிவெந்திறற்படைப்பெருந்தலைவர்கண்மீண்டார். (௩௫)

மீண்டுவேலையின்வடகரையாண்டொருவெற்பின்
ஈண்டினார்களையென்குறித்திரிவுற்றதென்றான்
ஆண்டநாயககண்டிலைபோலுநீயவனை
மாண்டுசெய்வதென்னென்றனைகூறினர்மறுப்பார். (௩௬)

ஒருவனிந்திரசித்தெனவுளனவனுளநாள்
செருவிலுற்றனகொற்றவமறத்தியோதெரியின்
பொருவின்மற்றையீர்நிற்றிர்பின்யாரொடும்பொருவீர்
இருவர்விற்பிடித்தியாவரைத்தடுத்துநின்றெய்வார். (௩௭)

புரங்கடந்தவப்புனிதனேமுதலியபுலவோர்
வரங்கடந்துலகளிப்பவர்யாவருமாட்டார்
கரந்தடங்கினரவர்மற்றிவ்வரக்கரைக்கடப்பார்
குரங்குகொண்டுவந்தமர்செய்யுமானுடர்கொல்லாம். (௩௮)

ஊழியாயிரகோடிநின்றுருத்திரனோடும்
ஆழியானுமற்றமரரும்புரந்தரனவனும்
சூழுமோடினரொருவனைக்கொன்றுதந்தோளான்
வீழுமாசெயவல்லரேல்வென்றிபின்னன்றே. (௩௯)

என்னப்பாமற்றிவ்வெழுபதுவெள்ளமுமொருவன்
இன்னப்போதுமோதேவரின்வலியமோசிறியேம்
முன்னிப்பாரினைப்படைப்பவனுளெலாமுறையிட்
பின்னிப்பார்த்துநின்றுறைபிடக்குறையுமிவ்யூகம். (௪௦)

நாயகன்றலைபத்துளகையுநாலைந்தென்
ேறுயுநெஞ்சினமொருவன்மற்றவன்வந்திங்குற்றார்
ஆயிரங்கையனைஞ்ஞூறுதலையினனாய
பாயும்வேலையிற்கூலத்துமணலினும்பலரால். (௪௧)

தம்பகன்னனென்றுளன்மற்றிங்கொருவன்கைக்கொண்ட
அம்புதாங்கவுமிடுக்கிலானவன்செய்ததறிதி
உம்பரன்றியேயுணர்வுடையார்பிறருளரோ
நம்பிநீயுமுன்னருமையையறிந்திலைநடந்தாய். (௪௨)

அநுமனாற்றலுமரசன்றனாற்றலுமிருவர்
தநுவினாற்றலுந்தம்முயிர்தாங்கவுஞ்சாலா
கனியுங்காய்களுமுணவுளமுழையுளகரக்க
மனிசராவினென்னிராக்கதராவினென்வையம். (௪௩)

தாமுளாரலரோபுகழ்திருவொடுந்தரிப்பார்
யாமுளேமெனினெங்கிளையுள்ளதெம்பெரும
போமினீரொன்றுவிடைதரத்தக்கனைபுரப்போய்
சாமினீரொன்றறருமன்றென்றனர்தளர்ந்தார். (௪௪)

வேறு.

சாம்பனைவதனநோக்கிவாலிசேயறிவுசான்றோய்
பாம்பணையமலன்மற்றிவ்விராமனென்றெமக்குப்பண்டே
எம்பல்வந்துற்றகாலத்தியம்பினையல்லையோநீ
ஆம்பலின்பகைஞன்றன்னுடைந்திரமமைந்தோனன்றாய். (௪௫)

தேற்றுவாய்தெரிந்தசொல்லாற்றெருட்டுவாய்தெளிவிலோரை
ஆற்றுவாயல்லைநீயுமஞ்சினைபோலுமாவி
போற்றுவாயென்றபோதுபுகழென்னும்புலமையென்னும்
கூற்றின்வாயுற்றால்வீரங்குறைவதோவிறைமைகொண்டோய். (௪௬)

அஞ்சினும்பழியும்பூண்டாமாயினல்யாண்டுமாவி
துஞ்சுமாறனறிவாழவொண்ணுமோநாண்மேற்றோன்றின்
நஞ்சுவாயிட்டாலன்னதமுதன்றேநம்மையம்மா
தஞ்சமென்றுணர்ந்தவீரர்தனிமையிற்சாதனன்றே. (௪௭)

தானவரோடுமற்றைச்சக்கரத்தலைவரோடும்
வானவர்செய்யமாட்டாமறிகடல்கடைந்தவாலி
ஆனவனம்பொன்றாலேயுலந்தமையயர்ந்ததென்னீ
மீனறல்வேலைபட்டதுணர்ந்திலைபோலுமேலோய் (௪௮)

எத்தனையரக்கரேனுந்தருமமாண்டில்லையன்றே
அத்தனையறத்தைவெல்லும்பாவமென்றறிந்ததுண்டோ
பித்தரைப்போலநீயுமிவரொடும்பெயர்ந்ததன்மை
ஒத்திலதென்னச்சொன்னானவனிவையுரைப்பானான் (௪௯)

நாணத்தாற்சிறிதுபோழ்துநல்கினனிருந்தபின்னர்த்
தூணொத்ததிரடோள்வீரதோன்றியவரக்கர்தோற்றம்
காணத்தானிற்கத்தானக்கறைமிடற்றவற்குமாமே
கோணற்பூவுண்ணும்வாழ்க்கைக்குரங்கின்மேற்குற்றமுண்டோ. (௫௰)

தேவருமவுணர்தாமுஞ்செருப்பண்டுசெய்தகாலை
ஏவரோயென்றாற்காணப்பட்டிலரிருக்கையான்ற
மூவகையுலகினுள்ளாரிவர்துணையாற்றன்முற்றும்
பாவகருளரோகூற்றையஞ்சினாற்பழியுமுண்டோ. (௫௧)

மாலியைக்கண்டேன்பண்டைமாலியவானைக்கண்டேன்
காலநேமியையுங்கண்டேனிரணியன்றனையுங்கண்டேன்
ஆலமாவிடமுங்கண்டேன்மதுவினையநுசனோடு
வேலையைக்கலக்கக்கண்டேனிவர்க்குளமிடுக்குமுண்டோ (௫௨)

வலியிதன்மேலேபெற்றவரத்தினர்மாயம்வல்லர்
ஒலிகடன்மணலின்மிக்ககணக்கினருளரனோக்கின்
கலியினுங்கொடியர்கற்றபடைக்கலக்கரத்தரென்றால்
மெலிகுவதன்றியுண்டோவிணையவர்மெலிவுகண்டால் (௫௩)

ஆகினுமையவுண்டாமார்க்கேனுமமரினஞ்சிய
போர்கினும்பேர்ந்ததன்மைபழிதருநரகிற்றள்ளும்
ஏகுதுமீளவினனுமியம்புவதுளதாலெய்தி
மேகமேயனையான்கண்முனெங்ஙனம்விழித்துநிற்றும் (௫௪)

என்றெடுத்தெண்கின்றானைக்கிறையவனியம்பலோம்ம்
வன்றிறற்குலிசமோச்சிவரைசிறகரிந்தவெள்ளிக
குன்றிடைநீலக்கொண்மூவமர்ந்தெனமதத்தினகுன்றம்
நின்றவனருளுமைந்தன்மகனிவைநிகழ்த்தலுற்றான். (௫௫)

எடுத்தலுஞ்சாய்தருனுமிறத்தலுமெதிர்ந்தோர்தம்மைப்
படுத்தலும்வீரவாழ்க்கைபற்றினர்க்குற்றமேனாள்
அடுத்தவேயஃதுநிற்கவன்றியுமொன்றுகூறற்
கெடுத்ததுகேட்டிமீட்டிங்கிருத்திநீகருதிநோக்கி. (௫௬)

ஒன்றுநீயஞ்சலையாமெலாமொருங்குசென்று
நின்றுமொனரியற்றலாற்றாநேமியோன்றனைநேர்ந்து
கொன்றுபோர்கடக்குமாயிற்கொள்ளுதுமவென்றியன்றேல்
பொன்றுதுமவனோடென்றான்போதலையழகிதன்றே. (௫௭)

ஈண்டியதானைநீங்கநின்றதென்யாமேயென்று
பூண்டவெம்பழியினோடும்போந்தனம்போதலென்னோ
மீண்டனர்தலைவரெல்லாமங்கதனோடும்வீரன்
மூண்டவெம்பகையைநோக்கித்தம்பிக்குமொழிவதானான். (௫௮)

அத்தநீயுணர்தியன்றேயரக்கர்தானவரோதான்
எத்தனையுளரொன்றாலும்யான்சிலையெடுத்தபோது
தொத்துறுகனலின்வீழ்ந்தபஞ்செனத்தொலையுந்தன்மை
ஒத்ததோரிடையூறுண்டென்றுணர்விடையுதிப்பதன்றால். (௫௯)

காக்குநரின்மைகண்டாற்கலக்கத்தாற்கவியின்சேனை
போக்கறப்போகித்தத்தமுறைவிடம்புகுதலுண்டால்
தாக்கியிப்படையைமுற்றுந்தலைதுமிப்பளவுந்தாங்கி
நீக்குதிநிருதராவநெருங்குவார்நெருங்காவண்ணம். (௬௦)

இப்புறத்தினையசேனையேவியாண்டிருந்ததீயோன்
அப்புறத்தமைந்தசூழ்ச்சியறிந்தனையலைவந்தால்
தப்பறக்கொன்றுநீக்கினவனையார்தடுக்கத்தக்கார்
வெப்புறுகின்றதுள்ளம்வீரநீயன்றியில்லோர். (௬௧)

மாருதியோடுநீயும்வானரக்கோனும்வல்லே
பேருதிர்சேனை காக்கவென்னுடைத்தனிமைபேணிச்
சோருதியென்னின்வெம்போர்தோற்றுநாமென்னச்சொன்னான்
வீரன்மற்றிதனைக்கேட்டானிளையனவிளம்பலுற்றான். (௬௨)

அன்னதேகருமமையவன்றியுமனைவேநின்றால்
என்னுனக்குதவிசெய்வதிதுபடையென்றபோது
சென்னியிற்சுமந்தகையர்தேவனைப்போலேயாமும்
பொன்னுடைவரிவிலாற்றல்புறநின்றுகாண்டும்போகி. (௬௩)

என்றவனேகலுற்றகாலையினாமனெந்தாய்
புன்றொழிற்குரங்கெனுந்தென்றோளின்மேலேறிப்புக்கால்
நன்றெனக்கருதாநின்றேனல்லதுநாயினேனும்
பின்றனிநின்றபோதுமடித்தொழில்பிழைப்பதன்றால். (௬௪)

ஐயநிற்கியலாதுண்டேயிராவணனயலேவந்துற்
றெய்யும்விற்கரத்துவீரனிளையவன்றன்னோடேற்றால்
மொய்யமர்க்களத்துநின்னைத்துணைபெறுதொழியின்முன்ப
செய்யுமாவெற்றியுண்டோசேனையுஞ்சிந்துமன்றே. (௬௫)

ஏரைக்கொண்டமைந்தகுஞ்சியிந்திரசித்தென்பான்றன்
போரைக்கொண்டிருந்துமுன்னாளிளையவனதனைப்போக்கிற்
றாரைக்கொண்டுனாலன்றேவென்றதங்கலனையின்று
வீரர்க்கும்வீரநின்னைப்பிரிகிலன்வெல்லுமென்பேன். (௬௬)

சேனையைக்காத்தென்பின்னைத்திருநகர்தீர்ந்துபோந்த
யானையைக்காத்துமற்றையிறைவனைக்காத்தெண்டீர்ந்த
வானையித்தலத்தினோடுமறையொடுவளர்த்தியென்றான்
ஏனைமற்றுரைத்திலாதானிளவல்பிணைமூர்ந்துசென்றான். (௬௭)

வீடணநீயுமற்றுன்றம்பியோடேகிவெம்மை
கூடினர்செய்யுமாயந்தெரிந்தனகூறிக்கொற்றம்
நீடுறுதானைதன்னைத்தாங்கினையில்லாயென்னின்
கோடுளதாகுமென்றானவனதுதலைமேற்கொண்டான். (௬௮)

சூரியன்சேயுஞ்செல்வன்சொற்றதேயென்னுஞ்சொல்லன்
ஆரியன்பின்புபோனானைவருமதுவேநல்ல
காரியமென்னக்கொண்டார்கடற்படைகாத்துநின்றார்
வீரியன்பின்னர்ச்செய்தசெயலெலாம்விரிக்கலுற்றாம். (௬௯)

வில்லினைத்தொழுதுவாங்கியேற்றினான்மெய்ந்நாண்மேருக்
கல்லெனச்சிறந்ததேனுங்கருணையங்கடலேயன்ன
எல்லொளிமார்பிற்றீராக்கவசமிட்டிழையாவேதச்
சொல்லெனத்துணையவாளித்தூணியும்புறத்துத்தூக்கி. (௭௦)

ஓசனை நூற்றின் வட்டமிடையறு துற்றசேனைத்
தூசிவந்தண்ணறனைப்போக்கறவளைந்துசுற்றி
வீசினபடையுமம்புமிடைதலும்விண்ணோராக்கை
கூசினர்பொடியாரோனுங்குமிழ்த்தனரோமக்கூட்டம். (௭௧)

கண்ணனேயெளியேயிட்டகவசமேகடலேயன்ன
வண்ணனேயறத்தின்வாழ்வேமறையவர்வலியேமாறு
தொண்ணுமேரீயலாதாரொருவர்க்கிப்படைமேலூன்ற
எண்ணமுமுடித்தியென்றுவேத்தினரிமையோரெல்லாம். (௭௨)

முனிவரோமுதல்வராயவறத்துறைமுற்றினோர்கள்
தனிமையுமரக்கர்தானைப்பெருமையுந்தரிக்கிலாதார்
பனிவருங்கண்ணர்விம்மிப்பதைக்கின்றநெஞ்சர்பாவத்
தனைவருந்தோற்கவண்ணல்வெல்கவென்றுசிசொன்னார். (௭௩)

வேறு.

மற்றும்வேறறத்துணின்றவானநாடனைத்துளோர்
கொற்றவில்லிவெல்கவஞ்சமாயர்வீககுவலயத்
துற்றதீமைதீர்கவின்றுடென்றுகூறினார்நிலம்
அற்றவெம்படைக்கைநீசரின்னவின்னசொல்லினார். (௭௪)

இரிந்துசேனைசிந்தியாருமின்றியேயுநின்றநம்
விரிந்ததானைகண்டியாதுமஞ்சலின்றிவெஞ்சரம்
தெரிந்தசேவகன்றிறம்பலின்றிநின்றசெய்கையால்
புரிந்தநன்மைவென்றிமேலுநன்றுமாலிபொய்க்குமோ. (௭௫)

புரங்களெய்தபுங்கவற்குமுண்டுதேர்பொருந்தினார்
பரந்ததேவர்மாயனம்மைமேவராறுத்தபண்டைநாள்
விரைந்துபுள்ளின்மீதுவிண்ணினோர்களோடுமேவினான்
கரந்திலன்றனித்தொருத்தனேரும்வந்துகாலினால். (௭௬)

தேருமாவும்யானையோடுசீயம்யாளியாதியா
மேருமானுமெய்யநின்றவேலையேழின்மேலவா
வாரும்வாருமென்றழைக்குமானுடற்குமண்ணிடைப்
பேருமாறுநம்முழைப்பிழைக்குமாறுமெங்ஙனே. (௭௭)

என்றுசென்றிரைத்தடர்த்தொரீயவேறடர்ந்தகைக்
குன்றுவந்துசூழ்வளைந்தபோறறுடர்ந்துகூடலும்
நன்றிதென்றுஞாலமேழுநாகமேழுமானுதன்
வென்றிவில்லைவேதநாதனுணெறிந்தவேலைவாய். (௭௮)

கதம்புலர்ந்தசிந்தைவஞ்சகாவல்யானைமாலொடு
மதம்புலர்ந்தநின்றவீரர்வாய்புலர்ந்தமாவெலாம்
பதம்புலர்ந்தவேகமாகவாளரக்கர்பண்புசால்
விதம்புலர்ந்தவென்னின்வென்றலின்றுசொல்லவேண்டுமோ. (௭௯)

வெறிந்திரிந்துவாசியோடுசியமாவுமீளியும்
செறிந்தமைந்தசில்லிபுல்லுமாளியோடுதேரெலாம்
முறிந்தெழுந்தணிந்தயானைவீசுமூசுபாகரைப்
பிறிந்திரிந்துசிந்தவந்தொராகுலம்பிறந்ததே. (அ0)

இந்நிமித்தமிப்படைக்கிடந்துடித்தடுத்ததோர்
துந்நிமித்தமென்றுகொண்டுவானுளோர்கடுள்ளினார்
அந்நிமித்தமுற்றபோதரக்கர்மேலரங்குதன்
மின்னிமிர்த்ததன்னவாளிவேதநாதன்வீசினான். (அக)

ஆளிமேலுமாளின்மேலுமானைமேலுமாடன்மா
மீளிமேலும்வீரர்மேலும்வீரர்தேரின்மேலும்வெவ்
வாளிமேலும்வில்லின்மேலுமண்ணின்மேல்வளர்ந்தமாத்
தூளிமேலுமேறவேறுவேறுவாளிதூவினான். (அஉ)

மலைவிழுந்தவாவிழுந்தமானவானைமள்ளர்செந்
தலைவிழுந்தவாவிழுந்ததாய்வாசிதாளுறும்
சிலைவிழுந்தவாவிழுந்ததிண்பதாகைதிங்களின்
கலைவிழுந்தவாவிழுந்தவெள்ளெயிற்றகாடெலாம். (அ௩)

வாடைநாலுபாலும்வீசமாகமேகமாலைவெங்
கோடைமாரிபோலும்வாளிகூடவோடையானையும்
ஆடன்மாவும்வீரர்தேருமாளுமாள்வதாயவால்
பாடுபேருமாறுகண்டுகண்செல்பண்புமில்லையால். (அச)

விழித்தகண்கள்கைகண்மெய்கள்விற்கள்வேல்கள்காரினின்
தெழித்தவாய்கள்செல்லலுற்றதாள்கடோள்கள்செல்லினைப்
பழித்தவாளிசிந்தநின்றுபட்டதன்றிமிட்டதோல்
கழித்தவாயுதங்களொன்றுசெய்ததில்லைகண்டிரோ. (அ௫)

தொடுத்தவாளியோடுவிற்றுணிந்துவீழமுன்றுணிந்
தெடுத்தவாள்களோடுதோள்களற்றுவீழமற்றுடன்
கடுத்ததாள்கள்கண்டமாகுமெங்ஙனேகலந்துடன்
தடுத்தவீரர்தாமுமொன்றுசெய்யுமாசலத்தினால். (அ௬)

குரந்துணிந்தகண்சிதர்ந்தபல்லணங்குலைந்தபே
ருரந்துணிந்தவீழ்வதன்றிவாவியோடவொண்ணுமே
சரந்துணிந்தவொன்றைநூறுசென்றுசென்றதள்ளலால்
வரந்துணிந்துவந்தவீரர்போரினுந்துவாசியே. (அஎ)

ஊரவுன்னின்முன்புபட்டுயர்ந்தவெம்பிணங்களால்
பேரவொல்வதன்றுபேரினாயிரம்பெருஞ்சரம்
ஆரவொன்றுநூறுகூறுபட்டுருந்துயக்கலால்
தேர்களொன்றுவந்தபாவியென்னசெய்கைசெய்யுமே. (அஅ)

எட்டுவன்றிசைக்கணின்றயாரும்வல்லயாவரும்
கிட்டினுய்ந்துபோகிலார்களென்னநின்றகேள்வியால்
முட்டும்வெங்கண்மானயானையம்புபாயமுன்னமே
பட்டுவந்தபோல்விழுந்ததென்னதன்மைபன்னுமே. (௯)

ஏவிகொண்டபுண்டரீகமன்னகண்ணன்வாளியொன்
றேவினுண்டைநூறுகோடிகொல்லுமென்னவெண்ணுவான்
பூவினண்டர்கோனுமெண்மயங்குமன்னபோரில்வந்
தாவிகொண்டகாலனூர்கமிப்புமன்னதாகுமே. (௧௦)

கொடிக்குலங்கடேரின்மேலயானைமேலகோடைநாள்
இடிக்குலங்கள்வீழவெந்தகாடுபோலெரிந்தவால்
முடிக்குலங்கள்கோடிகோடிசிந்திவேவமுற்றுறு
வடிக்குலங்கொள்வாளியோடவாயினோடுதீயினால். (௧௧)

அற்றவேலும்வாளுமாதியாயுதங்கண்மீதெழுந்
துற்றவேகமுந்தவோடியோதவேலையூடுறத்
துற்றவெம்மைகைம்மிகச்சுறுக்கொளச்சுவைத்தலால்
வற்றுநீர்வறந்துமீன்மறிந்துமண்செறிந்தவால். (௧௨)

போரரிந்தமன்றுரந்தபுங்கவாளிபொங்கினோர்
ஊரெரிந்தநாடுரந்ததென்னமின்னியோடலால்
நீரெரிந்தவண்ணமேநெருப்பெரிந்தநீணெடுந்
தேரெரிந்தவீரர்தஞ்சிரம்பொடிந்துசிந்தவே. (௧௩)

பிடித்தவாள்கள்வேல்களோடுதோள்கள்பேரராவெனத்
துடித்தயானைமீதிருந்துபோர்தொடங்குசூரர்தம்
மடித்தவாயசெந்தலைக்குலம்புரண்டவானின்மின்
இடித்தவாயினிற்றமாமலைக்குலங்களென்னவே. (௧௪)

கோரவாளிசீறுமீளிகூளியோடுஞாளியும்
போரவாளினோடுதோள்கணூறுகோடிபொன்றுமால்
நாரவாளிஞாலவாளிநாகவாளிநாந்தகப்
பாரவாளிவீரவாளியேகவாளிபாயவே. (௧௫)

ஆழிபெற்றதேரழுந்துமாளழுந்துமாளொடச்
சூழிபெற்றமாவழுந்தும்வாசியுஞ்சரிக்குமால்
பூழிபெற்றவெங்களங்குழம்பிடப்பொழிந்துபே
ரூழிபெற்றவேலையன்னசோரிநீரினுள்ளரோ. (௧௬)

அற்றுமேலெழுந்தவன்சிரங்கடம்மையண்மிமேல்
ஒற்றுமென்னவங்குமிங்கும்விண்ணுளோரொதுங்குவார்
சுற்றும்வீழ்தலைக்குலங்கள்சொல்லுகல்லின்மாரிபோல்
எற்றுமென்றுபாரினெங்குமேய்ந்துளாரிரங்குவார். (௧௭)

மழைத்தமேகம்வீழ்வதென்னவானமானவாடையில்
சுழித்துவீழ்வதென்னமண்ணின்மீதுமீதுதுன்னுமால்
அழித்தொடுங்குகாலமாரியன்னவாளியோளியால்
விழித்தெழுந்தவானினூடுமொய்த்தபொய்யர்மெய்யெலாம். (௬௯)

வேறு.

தெய்வநெடும்படைக்கலங்கள்விடுவர்சிலர்சுடுகணைகள்சிலையிற்கோலி
எய்வர்சிலரெறிவர்சிலரெற்றுவர்சுற்றுவர்மலைகள்பலவுமேந்திப்
பெய்வர்சிலர்பிடித்துமெனக்கடுத்துறுவர்படைக்கலங்கள்பெருகுவாயால்
வைவர்சிலர்தெழிப்பர்சிலர்வருவர்சிலர்திரிவர்சிலர்வயவர்மன்னோ. (௯௯)

ஆர்ப்பர்பலரடர்ப்பர்பலரடுத்தடுத்துப்படைக்கலங்களள்ளியள்ளித்
தூர்ப்பர்பலர்சூவிலைவேறுரப்பர்பலர்காப்பர்பலர்சுடுதீத்தோன்றப்
பார்ப்பர்பலர்நெடுவரைகள்பறிப்பர்பலர்பகலோனைப்பற்றிச்சுற்றும்
கார்ப்பருவமேகமெனவேகநெடும்படையரக்கர்கணிப்பிலாதார். (௧௦௦)

எறிந்தனவுமெய்தனவுமெடுத்தனவும்பிடித்தனவும்படைகளெல்லாம்
முறிந்தனவெங்கணைகள்படமுற்றினசுற்றினதேருமரிமாவும்
நெறிந்தனகுஞ்சிகளோடுநெடுந்தலைகளுருண்டனபேரிருள்னீங்கிப்
பிறிந்தனன்வெய்யவனென்னப்பெயர்ந்தனன்மீதுயர்ந்ததடம்பெரியதோளான்

சொல்லறுக்கும்வலியரக்கர்தொடுகவசந்தொளைபடுக்குந்துணிக்கும்யாக்கை
வில்லறுக்குந்தலையறுக்குமிடலறுக்குமடலறுக்குமேன்மேல்வீசும்
கல்லறுக்குமரமறுக்குங்கரமறுக்குஞ்செய்யமள்ளர்கமலத்தோடு
நெல்லறுக்குந்திருநாடனெடுஞ்சரமென்றுலெவர்க்குநிற்கலாமே. (௧௦௨)

காலிழந்தவாலிழந்தகழுத்திழந்தகையிழந்தபருமக்கட்டின்
மேலிழந்தமருப்பிழந்தவிழுந்தனவெங்குநவல்லால்வேறுவேறு
மாலிழந்தமழையனையமதமிழந்தவலியிழந்தமலைபோல்வந்த
தோலிழந்ததொழிலொன்றுஞ்சொல்லினரில்லைநெடுஞ்சுரர்களெல்லாம் (௧௦௩)

வேறு.

ஒருவில்லியையொருகாலையினுலகேழையுமுடற்றும்
பெருவில்லிகண்முடிவில்லவர்சரமாமழைபெய்வார்
பொருவில்லியல்கணைமாரிகள்பொடியாம்வகைபொழியத்
திருவில்லிகடலைபோய்நெடுமலைபோலுடல்சிதைவார். (௧௦௪)

நூறாயிரமதயானையின்வலியோரென நுவல்வோர்
மாறாயினரொருகோல்படமலைபோலுடன்மறிவார்
ஆறாயிரருளராகுவரழிசெம்புனலவைபுக்
கேறாதெறிகடல்பாய்வனசினமால்கரியினமால். (௧௦௫)

வேல்செல்வனசதகோடிகள்விண்மேனிமிர்விசிகக்
கோல்செல்வனசதகோடிகள்கொலைசெய்வனமலையைத்
தோல்செல்வனசதகோடிகடுரக்கந்தொடரிரதக்
கால்செல்வனசதகோடிகளொருவன்னவைகடிவான். (௧௦௬)

மழுவற்றுகும்வளையற்றுகுமலையற்றுகும்வயிரத்
தெழுவற்றுகுமயிலற்றுகுமிலையற்றுகுமெறிவேல்
பழுவற்றுகுமதவெங்கரிபரியற்றுகுமிரதக்
குழுவற்றுகுமொருவன்கணைதொடைபெற்றதொர்குறியால். (௧0௭)

ஒருகாலையினுலகத்துறுமுயிர்யாவையுமுண்ணும்
வருகாலனுமவன்றூதருமன்றுனுமவ்வரைப்பின்
இருகாலுடையவர்யாவருந்திரிந்தாரிளைத்திருந்தார்
அருகாயிரமுயிர்கொண்டுதமாறேகலரயர்த்தார். (௧0௮)

அடுக்குற்றனமதயானையுமழிதேர்களும்பரியும்
தொடுக்குற்றனவிசும்பூடுறச்சுமந்தோங்கினவெனினும்
மிடுக்குற்றனகவந்தக்குலமெழுந்தாடலினெல்லாம்
நடுக்குற்றனபிணக்குன்றுகளுயிர்நண்ணினவென்ன. (௧0௯)

பட்டாருடல்படுசெம்புனறிருமேனியிற்படலால்
கட்டார்சிலைக்கருஞாயிறுபுனைவான்கடையுகநாள்
சுட்டாசறுத்துலகுண்ணுமச்சுடரோனெனப்பொலிந்தான்
ஒட்டாருடற்குருதிக்குளித்தெழுந்தானையுமொத்தான். (௧௧0)

தீயொத்தனவுருமொத்தனசரஞ்சிந்திடத்திசைபோய்
மாயத்தவர்படுகின்றனரெனவும்மறங்குறையார்
காயத்திடையுயிருண்டிடவுடன்மொய்த்தெழுகளியால்
ஈயொத்தனிருதக்குலநறவொத்தனனிறைவன். (௧௧௧)

மொய்த்தாரையொரிமைப்பின்றலைமுடுகத்தொடுசிலையால்
தைத்தானவர்கழற்றிண்பசுங்காயொத்தனர்சரத்தால்
கைத்தார்நெடுந்தேருங்கடுங்களிறுங்களத்தழுந்தக்
குய்த்தாரழிகுழம்பாம்வகைபுரிந்தான்சரக்குழுவால். (௧௧௨)

பிரிந்தார்பலரிரிந்தார்பலர்பிழைத்தார்பலருழைத்தார்
புரிந்தார்பலர்நெரிந்தார்பலர்புரண்டார்பலருருண்டார்
எரிந்தார்பலர்கரிந்தார்பலரொழுந்தார்பலர்விழுந்தார்
சொரிந்தார்குடருணிந்தார்தலைகிடந்தாரொதிர்தொடர்ந்தார். (௧௧௩)

மணிகுண்டலவலயங்குழைமகரஞ்சுடர்மகுடம்
அணிகண்டிகைகவசங்கழறிலகம்முதலகலம்
துணிவுண்டவருடல்சிந்தினசுடர்கின்றனதொடரும்
திணிகொண்டலினிடைமின்குலமிளிர்கின்றனசிவண. (௧௧௪)

முன்னேயுளன்பின்னேயுளன்முகத்தேயுளனகத்தின்
றன்னேயுளன்மருங்கேயுளன்றலைமேலுளன்மலைமேல்
கொன்னேயுளனிலத்தேயுளன்விசும்பேயுளன்கொடியோர்
என்னேயொருநடுப்பென்றிடவிருஞ்சாரிகைதிரிந்தான். (௧௧௫)

என்னேரினனென்னேரினனென்றியாவருமெண்ணப்
பொன்னேர்தருவரிவிற் கரத்தொருகோளரிபொருவான்
ஒன்னார்நெடும்படைப்போர்க்கடலுறையின்றுளதெனினும்
அன்னேரவருடனேதிரிநிழலேயெனலானான். (௧௧௬)

பள்ளம்படுகடலேழினும்படியேழினும்பகையின்
வெள்ளம்பலவுளவென்னினும்வினையம்பலதெரியக்
கள்ளம்படுநெடுமாயையிற்கரந்தானுடற்பிறந்தார்
உள்ளுன்றியும்புறத்தேயுமுற்றுளனுமெனவுற்றான். (௧௧௭)

நானாவிதப்பெருஞ்சாரிகைதிரிகின்றதுநவில்வார்
போனானிடைபுகுந்தானெனப்புலன்கொள்கிலர்மறந்தார்
தானாவதுமுணர்ந்தானுணர்ந்தலகெஞ்சணுந்தானே
ஆனான்வினைதுறந்தானெனவிமையோர்களுமயிர்த்தார் (௧௧௮)

சண்டக்கடுநெடுங்காற்றிடைதணிந்தெற்றிடத்தரைமேல்
கண்டப்படுமலைபோனெடுமரம்போற்கடுந்தொழிலோர்
துண்டப்படக்கடுஞ்சாரிகைதிரிந்தான்சரந்துரந்தான்
அண்டத்தினையளந்தானெனக்கிளர்ந்தானிமிர்ந்தகன்றான். (௧௧௯)

களியானையுநெடுந்தேர்களுங்கடும்பாய்பரிக்கணனும்
தெளியாளியுமுரட்சீயமுஞ்சினவீரர்தந்திரமும்
வெளிவானகமிலதாம்வகைவிழுந்தோங்கியபிழம்பால்
நளிமாமலைமலைதாயெனநடந்தான்கடற்கிடந்தான். (௧௨௦)

வேறு.

அம்பரங்கடொடுங்கொடியாடையும்
அம்பரங்களொடுங்களியானையும்
அம்பரங்கவழுந்தினசோரியின்
அம்பரங்கமருங்கலமாழ்ந்தென. (௧௨௧)

தம்மனத்தர்மலைத்தலைதானற
வெம்மையுற்றெழுந்தேறுவமீளுவ
தெம்முனைச்செருமங்கைதன்செங்கையால்
அம்மனைக்குலமாடுவபோன்றவே. (௧௨௨)

கேடகங்கணவன்கையொடுங்கிளர்
கேடகங்கடுணிந்துகிடந்தன
கேடகங்கிளர்கின்றகளத்தநன்
கேடகங்கண்மறிந்துகிடந்தவே. (௧௨௩)

அங்கதங்களத்தற்றழிதாரொடும்
அங்கதங்களத்தற்றழிவுற்றவால்
புங்கவன்கணைப்புட்டில்பொருந்திய
புங்கவன்கணைப்புற்றரவம்பொர. (௧௨௪)

கயிறுசேர்கழற்கார்நிறக்கண்டகர்
எயிறுவாளிபடத்துணிந்தியானையின்
வயிறுதோறுமறைவனவானிடைப்
புயலெறும்புகும்வெண்பிறைபோன்றவால். (௧௨௫)

வென்றிவீரொயிறும்விடாமதக்
குன்றின்வெள்ளைமருப்புங்குவிந்தன
என்றுமென்றுமெழுந்தவிளம்பிறை
ஒன்றிமாநிலத்துக்கவுமொத்தவால். (௧௨௬)

ஒவில்காலநதியுதிரப்புனல்
பாவிவேலையுலகுபரத்தலால்
தீவுதோறுமினிதுறைசெய்கையர்
ஈவிலாதநெடுமலையேறினார். (௧௨௭)

விண்ணிறைந்தனமெய்யுயிர்வேலையும்
புண்ணிறைந்தபுனலினிறைந்தன
மண்ணிறைந்தனபேருடல்வானவர்
கண்ணிறைந்தனவிற்றொழிற்கல்வியே. (௧௨௮)

செறுத்தவீரர்பெரும்படைசிந்தின
பொறுத்தசோரிபுகக்கடல்புக்கன
இறுத்தநீரிற்செறிந்தனவெங்கணும்
அறுத்துமீனமுலர்ந்தவநந்தமால். (௧௨௯)

ஒல்வதேயிவ்வொருவனிவ்வோதத்தைக்
கொல்வதேநின்றுகுன்றன்னயாமெலாம்
வல்லதேதுமிலாமையின்வன்பலை
மெல்வதேயெனமாலிவிளம்பினான். (௧௩0)

கோல்விழுந்தழுந்தாமுனங்கூடியாம்
மேல்விழுந்திடினும்மிவன்வீயுமால்
கால்விழுந்தமழையன்னகாட்சியீர்
மால்விழுந்தளிபோலமயங்குவீர். (௧௩௧)

ஆயிரம்பெருவெள்ளமரைபடத்
தேயநிற்பதுபின்பினியென்செயப்
பாயுமுற்றுடனேயெனப்பன்னினான்
நாயகற்கொருதவியைநல்குவான். (௧௩௨)

உற்றுருத்தெழுவெள்ளமுடன்றெழாச்
சுற்றுமுற்றும்வளைந்தனதூவின
ஒற்றைமால்வரைமேலுயர்தாரைகள்
பற்றிமேகம்பொழிந்தெனப்பல்படை. (௧௩௩)

குறித்தெறிந்தனவெய்தனகூறுறத்
தறித்துத்தேருங்களிறுந்தரைப்பட
மறித்துவாசிதுணித்தவர்மாப்படை
தெறித்துச்சிந்தச்சரமழைசிந்தினான். (௬௩௫)

வாய்விளித்தெழுபஃறலைவாளியில்
போய்விளித்தகுருதிகள்பொங்குவ
பேய்விளிப்பநடிப்பனபெட்புறும்
தீவிளிப்புறுதீபநிகர்த்தவால். (௬௩௬)

நெய்கொள்சோரிநிறைந்தநெடுங்கடல்
ஐயவாடையளன்னசெஞ்சாந்தினள்
வையமங்கைபொலிந்தனண்மங்கலச்
செய்யகோலம்புனைந்தனசெய்கையாள். (௬௩௭)

உப்புத்தேனுநெய்யொண்டயிர்பால்கரும்
பப்புத்தானென்றுரைப்பனவாழிகள்
துப்புப்போற்குருதிப்புனல்சுற்றலால்
தப்பிற்றவ்வுணாயின்றோர்தனுவினே. (௬௩௮)

ஒன்றுமேதொடைக்கோலொருகோடிகள்
சென்றுபாய்வனதிங்களிளம்பிறை
அன்றுபோலெனவாகியதச்சிலை
என்றுவாழ்வதெதிர்ந்தவிராக்கதர். (௬௩௯)

வேறு.

எடுத்தவரிளைத்தவரொறிந்தவர்செறிந்தவர்மறங்கொடெதிரோ
தடுத்தவர்சலித்தவர்சரிந்தவர்பிரிந்தவர்தனிக்களிறுபோல்
கடுத்தவர்கலித்தவர்கறுத்தவர்செறுத்தவர்கலந்துசரமேல்
தொடுத்தவர்துணிந்தவர்தொடர்ந்திலர்கிடந்தனர்துரந்தகணையால். (௬௩௯)

தொடுப்பதுசுடர்ப்பகழியாயிரநிமிர்ந்தவைதுரந்ததுறைபோய்ப்
படுப்பதுவயப்படைஞராயிரரையன்றுபதினாயிரவரைக்
கடுப்பதுகருத்துமதுகட்புலமனங்கருதல்கல்வியிலவே
அடுப்பதுபடப்பெறுவதன்றியவைசெய்வதொருநன்றியுளதோ. (௬௪௦)

தூசியொடுநெற்றியிருகையினொடுபேரணிகடைக்குழைதொகுத்
தூசிநுழையாவகைகரத்தணிவகுக்குமவையுண்ணுமுயிரை
ஆசைகளையுற்றுருவமப்புறமுமோடுமதனிப்புறமுளார்
ஈசனெதிருற்றுருவதல்லதிகன்முற்றுவதொர்கொற்றமெவனோ. (௬௪௧)

ஊனகுவடிக்கணைகளூழியனலொத்தன்வுலந்தவுலவைக்
கானகநிகர்த்தனரரக்கர்மலையொத்தனகளித்தமதமா
மானவன்வயப்பகழிவீசுவலையொத்தனவளைப்புனலுள்வாழ்
மீனகுலமொத்தனகடற்படையினைத்தொடும்விளிந்தவிதலால். (௬௪௨)

ஊழியிறுதிக்கடுமாருதமுமொத்தனனிராமனுடனே
பூழியெனவுக்குதிருமால்வரைகளொத்தனரரக்கர்பொருதோர்
ஏழுலகுமுற்றுயிர்கள்யாவையுமுருக்கியிறுதிக்கணின்வரும்
ஆழியையுமொத்தனனிராமனுயிரொத்தனரலைக்குநிருதர். (௧௬௩)

மூலமுதலாயிடையுமாயிறுதியாயவையுமுற்றமுயலும்
காலமெனலாயினனிராமனவ்வரக்கர்கடைநாளில்விளியும்
கூலமில்சராசரமனைத்தினையுமொத்தனர்குரைக்கடலெழும்
ஆலமெனலாயினனவ்வீரனவர்மீனமெனலாயினர்களால். (௧௬௪)

வஞ்சவினைசெய்துநெடுமன்றில்வளனுண்டுகரிபொய்க்குமறமா
நெஞ்சமுடையோர்கள்குலமொத்தனரரக்கரறனுக்குநெடியோன்
நஞ்சநெடுநீரினையுமொத்தனனடுத்ததனைநக்குநரையும்
பஞ்சமுறநாள்வருமையோர்களையுமொத்தனரவ்வீரர்படுவார். (௧௬௫)

வெள்ளமொருநூற்றொடிருநூறுபடும்வேலையினிலங்கைவெளியும்
பள்ளமொடுமேடுதெரியாதவகைசோர்குருதிபம்பியெழலும்
உள்ளுமதிளின்புறமுமொன்றுதெரியாதலறியோடினர்களால்
கள்ளநெடுமாவிழியரக்கியர்கலக்கமொடுகால்கள்குலைவார். (௧௬௬)

நீங்கினர்நெருங்கினர்முருங்கினருலந்துதிரநீளவெதிரோ
வீங்கினபெரும்பிணம்விசும்புறவசும்புபடுசோரிவிரிவுற்
றோங்கினநெடும்பரவையொத்திசையவெத்திசையுமுற்றெதிர்வுறத்
தாங்கினர்படைத்தலைவர்நூறுசதகோடியர்தடுத்தலரியார். (௧௬௭)

தேருமதமாவும்வயமாவும்வரையாளியொடுசியமுதலா
ஊருமவையாவையுநடாயினர்கடாயினர்களுந்தினர்களால்
காருமுருமேறுமெரியேறுநிகர்வெம்படையொடம்புகடிதின்
தூரும்வகைதூயினர்துரந்தனர்களெய்தனர்தொடர்ந்தனர்களால். (௧௬௮)

வம்மினடவம்மினெதிர்வந்துறுமதாருயிர்வரங்கள்பிறவும்
தம்மினெனவின்னனமொழிந்தெதிர்பொழிந்தனதடுப்பரியவாம்
வெம்மினெனவெம்பகழிவேலையெனவேயினனவ்வெய்யவினையோர்
தம்மினமனைத்தையுமுனைக்கெதிர்தடுத்தனதனித்தனியரோ. (௧௬௯)

அக்கணையையக்கணமறுத்தனர்செறுத்திகலரக்கரடையப்
புக்கணையலுற்றனர்மறைத்தனர்புயற்கதிகம்வாளிபொழிவார்
திக்கணைவகுத்தனரொனச்செலநெருக்கினர்செருக்கின்மிகையால்
முக்கணனையுற்றடிவணங்கியிமையோரிதுமொழிந்தனர்களால். (௧௭௦)

படைத்தலைவருற்றொருவர்மும்மடியிராவணனெனும்படிமையோர்
கிடைத்தனரவர்க்கொருகணக்கிலர்வளைந்தனர்கிளர்ந்துலகெலாம்
அடைத்தனரழித்தனர்தெழித்தனர்தனித்தனனிராமனவரோ
துடைத்தனரொம்வெற்றியெனவுற்றனரினிச்செயல்பணித்திசுடரோய். (௧௭௧)

எய்தகணையெய்துவதன்முன்பிடையிறுத்திவர்களேமூலகமும்
பொய்தகணமாமுகிலெனப்புடைவளைத்தனரடர்த்தனர்கள்போல்
வைதகலினல்லதுமறப்படைகொடிப்படைகடக்கும்வலிதான்
செய்யதிருமாலினொடுனக்குமரிதென்றனர்திகைத்துவிழுவார். (௧௫௨)

அஞ்சியயரன்மினவனொத்துணையராயிடினுமத்துணையரும்
பஞ்சியனலுற்றவெனவெந்தழிவரிந்தவுரைபண்டுமுளதால்
நஞ்சமமுதத்தைநனிவென்றிடினுநல்லறநடக்குமதனை
வஞ்சவினையக்கருமம்வெல்லினுமிராமனையம்மாயர்கடவார். (௧௫௩)

அரக்கருளராகிலரவ்வீடணனலாலுலகினுவியுடையார்
இரக்கமுளதாகியதுநல்லறமெழுந்துவளர்கின்றதினிநீர்
கரக்கமுழைதேடியுழல்கின்றிலிர்களின்றொருகடும்பகலிலே
குரக்குமுதனுபகனையாளுடையகோளுழுவைகொல்லுமிவனை. (௧௫௪)

என்றுரையரன்பகரநான்முகனுமன்னபொருளேயிசைதலும்
நின்றுநிலைபாறினர்கள்வானவர்கண்மானவனுநேமியெனலாம்
வென்றிநெடுவாளிமழைமாரியினுமேலனதுரந்துவிரைவில்
கொன்றுகுலமால்வரைகண்மானுதலைமாமலைகுவித்தனனரோ. (௧௫௫)

வேறு.

மகரமறிகடலின்வளையும்வயநிருதர்
சிகரமனையவுடல்சிதறியிறுவருயிர்
பகரவரியபதம்விரவவமரர்பழ
நகரமிடமருகநவையர்நலிவுபட. (௧௫௬)

பாறுபடுசிறகுகழுமுபகழிபட
நீறுபடுமிரதநிரையினுடறவிர
ஏறுபடர்படரவிரவிசுடர்நலிய
மாறுபடவுலகின்மலைகளளறுபட. (௧௫௭)

உகளுபுரவிநிரைதுணியவுறுகழல்கள்
தகளியுறுவலியதலைகளறுதலைவர்
துகளினுடல்கள்விழவுயிர்கள்சுரருலகின்
மகளிர்வனமுலைகடழுவியகமகிழ. (௧௫௮)

மலையுமறிகடலும்வனமுமுறுநிலமும்
உலைவிலமரருறையுலகுமுயிர்களொடு
தலையுமுடலுமிடைதழுவுதவழ்குருதி
அலையுமரியதொருதிசையுமிலதருகு. (௧௫௯)

இனையசெருநிகழுமளவினெதிர்பொருத
வினையபடைமுதல்வரொவருமுடன்விளிய
அனையபடைநெளியவமரர்சொரிமலர்கள்
நனையவிசையினெழுதுவலைமழைநலிய. (௧௬௦)

இரியலுறுபடையைநிருதரிடைவிலகி
எரிகள்சொரியுநெடுவிழியரிழுதையர்கள்
திரிகதிரிகவெனவுரறுதெழிகுரலர்
கரிகள்பரிகளரிகடிதினெதிர்கடவ. (௧௬௧)

தினகரனையனையகொடிகடிசையடைவ
சினவுபொருபரிகள்செறிவவணுகவுயர்
அநகனெடுமமரின்முடுகியெதிரவொளிர்
கனகவரைபொருவுகதிர்கொண்மணியிரதம். (௧௬௨)

உலகுசெவிடுபடமழைகளுதிரவுயர்
அலகின்மலைநிலையவமரர்தலையதிர
இலகுதொடுபடைகளிடியொடுருமனைய
விலகியதுதிமிரம்வளையும்வகைவிளைய. (௧௬௩)

அழகிதழகிதெனவழகனுவகையொடு
பழகுமதிதியவையெதிர்கொள்பரிசுபட
விழைகுமெதிரவெதிரொரிகொள்விரிபகழி
மழைகள்மழைசொரியவமரர்மலர்சொரிய. (௧௬௪)

சிவனும்பனுமெழுதிகிரியமரர்பதி
யவனுமமரர்குலமெவருமுனிவரொடு
கவனமுதல்கரணமிடுவர்கழுகினமும்
நமனும்வரிசிலையுமறனுநடனவில. (௧௬௫)

தேவர்திரிபுவனநிலையர்செருவிதனை
ஏவரறிவுறுவரிறுதிமுதலுணரின்
மூவர்தலைபொதிர்களெறிவரறமுதல்வ
பூவைநிறவவெனவேதமுறைபுகழ்வர். (௧௬௬)

அருகுகடிரியவலகின்மலைநிலைய
உருகுசுடர்களிடைதிரியவுரனுடைய
இருகையொருகளிறுதிரியவிடுகுயவர்
திரிகையெனவுலகமுழுதுமுறைதிரிய. (௧௬௭)

எய்யுமொருபகழியேழுகடலுமிடு
வெய்யகளிறுபரியாளொடிரதம்விழ
ஒய்யெனொருகதியினோடவுணரமரர்
கைகளெனவவுணர்கால்கள்கதிநிலைய. (௧௬அ)

அண்ணல்விடுபகழியானையிரதமயல்
பண்ணுபுரவிபடைவீரர்தொகுபகுதி
புண்ணினிடுகுறிகள்புள்ளியெனவிரவி
எண்ணுமனையவெல்லையிலநுழைய. (௧௬௯)

வேறு.

சுருக்கமுற்றதுபடைசுருக்கத்தாலினிக்
கரக்குமற்றொருபுறத்தென்னுங்கற்பினால்
அரக்கருக்கன்றுசெல்வரியதாம்வகை
சரத்திடுநெடுமதில்சமைத்திட்டானரோ. (௧௭0)

மாலியைமாலியவானைமால்வரை
போலுயர்கைட்டனைமதுவைப்போன்றுள
சாலிகையாக்கையர்தனைப்பில்வெஞ்சர
வேலியைக்கடந்திலருலகைவென்றுளார். (௧௭௧)

மாண்டவர்மாண்டிடமற்றுளோரொலாம்
மீண்டனரொருதிசையேழுவேலையும்
மூண்டுறமுருங்கியவூழிகாலத்தில்
தூண்டுறுசுடர்சுடச்சுருங்கித்தொக்கபோல். (௧௭௨)

புரஞ்சுடுகடவுள்வெண்புள்ளின்பாகனவ்
வரஞ்சுடுகுலிசவேலமரர்வேந்தனே
டுரஞ்சுடுகிற்கிலரொருவனூழுடை
வரஞ்சுடும்வலிசுடும்வாழுநாள்சுடும். (௧௭௩)

ஆயிரவெள்ளமுண்டொருவனூழிசூழ்
மாயிருஞாலத்தைமதிக்கும்வன்மையோர்
ஏயினபெரும்படையிதனையோர்விலால்
ஏயெனுமாத்திரத்தெய்துகொன்றனன். (௧௭௪)

இடைபடும்படாதனவிமைப்பிலோர்படை
புடைபடும்வலங்கொடுவிலங்கிப்போகுமால்
படைபடுங்கோடியோர்பகழியாற்பழி
கடைபடுமரக்கர்தம்பிறவிக்கட்டமால். (௧௭௫)

பண்டுலகளித்தவனோடும்பண்ணமை
குண்டையின்பாகனும்பிறருங்கூடினார்
அண்டர்கள்விசும்பினின்றார்க்கின்றொருழைக்
கண்டிலமிவனெடுமாயக்கள்வனால். (௧௭௬)

கொன்றனனினியொருகோடிகோடிமேற்
றன்றெனிற்பதுமமன்றாயின்வெள்ளமா
நின்றதுநின்றினிநினைவதென்பிற
ஒன்றெனநினைகெனவன்னியோதினான். (௧௭௭)

விழித்துமோவிராவணன்முகத்துமீண்டியாம்
பழித்துமோநம்மைநாம்படுதலஞ்சினால்
அழித்துமேபிறப்புறுநெறிசென்றண்மூவாம்
கழித்துமிவ்யாக்கையைப்புகழைக்கண்ணுற. (௧௭௮)

இடுக்கினிப்பேர்த்துணையெண்ணுவேமெனின்
தடுத்தகூர்வாளியின்றுணைநீங்கலா
எடுத்தொருமுகத்தினாலெய்தியாமினிக்
கொடுத்துநம்முயிரையென்றொருமைகூறினான். (கஎகூ)

இளக்கருநெடுவரையீர்க்குமாறெலாம்
அளக்கரிற்பாய்ந்தெனப்பதங்கமாரழல்
விளக்கினில்வீழ்ந்தெனவிதிகொடுந்தலால்
வளைத்திரைத்தடர்த்தனர்மலையின்மேனியார். (கஅ0)

மழுவெழுத்தண்டுகோல்வளையநாஞ்சில்வாள்
எழுவயிற்குந்தம்வேலீட்டிதோமரம்
கழுமுழுக்கற்பணமுதலகைப்படை
தொழுவினிற்புலியனானுடலிற்றூவினார். (கஅக)

காந்தருப்பம்மெனுங்கடவுண்மாப்படை
வேந்தருக்கரசனும்வில்லினூக்கினான்
பாந்தளுக்கரசெனப்பறவைக்கேறெனப்
போந்துருத்தனநெருப்பனையபோர்க்கணை. (கஅஉ)

மூன்றுகண்ணமைந்தனவைம்முகத்தன
ஆன்றனநெய்கனல்புனலுமாடின
வான்றொடநிமிர்வனவாளிமாமழை
தோன்றினபுரஞ்சுடுமொருவன்றோற்றத்த. (கஅங)

ஐயிருகோடியரக்கர்வேந்தர்கள்
மொய்வலிவீரர்களொழியமுற்றுற
எய்யெனுமாத்திரத்தவிந்ததென்பரால்
செய்தவத்திராவணன்மூலச்சேனையே. (கஅச)

மாப்பெருந்தீவுகளேழுமாதிரம்
பரப்பரும்பாதலத்துள்ளும்பல்வகை
காப்பருமலைகளும்பிறவுங்காப்பவர்
யாப்புறுகாதலரிராவணற்கவர். (கஅரு)

மாத்தடமேருவைமறைத்தவானவற்
கோத்தனமார்பிடைவணியுங்கொள்கையார்
பூத்தவிசுவந்தவன்புகன்றுபொய்யறு
நாத்தழும்பேறியவரத்தர்நண்ணினார். (கஅசு)

நம்முளீண்டொருவரைவெல்லுநன்கெனின்
வெம்முனையிராவணன்றனையும்வெல்லுமால்
இம்மெனவுடனெடுத்தெழுந்துசேறுமோ
செம்மையிற்றனித்தனிச்செய்துமோசெரு. (கஅஎ)

வேறு.

எல்லைமெல்லைமொன் றிவளைத்திநெடியோனை
வல்லைம்வல்லபோர்வலிமுற்றிமலையேமேல்
வெல்லைம்வெல்லைமென்றனன்வன்னிமிடலோரும்
தொல்லோர்சொல்லோனென்றெனவஃதே துணிவுற்றார் (௧அஅ)

அன்னார்தாமுமார்கலியேழுமுடனார்த்தார்
மின்னார்வானம்வீறுறமென்றால்விளிசங்கம்
கொன்னேயூதித்தோள்புடைகொட்டிக்கொடிசார்ந்தார்
என்னும்வையமென்பமிம்வானந்திசையெல்லாம் (௧அக)

ஆர்த்தாரன்னாரன்னகணத்தேயவராற்றல்
தீர்த்தானுந்தன்வெஞ்சிலைநாணைத்தெறிவுற்றான்
பேர்த்தான்பொற்றோண்முற்றுமளந்தான்பிறழ்சங்கம்
ஆர்த்தாலொத்ததவ்வொலியெல்லாவுலகுக்கும் (௧௯௦)

வேறு.

பல்லாயிரகோடியர்பல்வகைநூல்
வல்லாரவைமெய்ம்மைவழங்கவலார்
எல்லாவுலகங்களுமேறியபோர்
வில்லாளர்களெண்ணலின்மேதகையார் (௧௯௧)

வென்றேருலகங்களைவிண்ணவரோ
டொன்றாவுறுதானவரோதமெலாம்
கொன்றார்நிமிர்கூற்றெனவெவ்வுயிரும்
தின்றாரெதிர்சென்றுசெறிந்தனரால் (௧௯௨)

வளைத்தார்மதயானையைவன்றொழுவில்
தளைத்தாரெனவந்துதனித்தனியே
உளைத்தாருருமேறெனவொன்றலபோர்
விளைத்தாரிமையோர்கள்வெதும்பினரால் (௧௯௩)

விட்டேயவழங்கியவெம்பகையில்
சுட்டேயநிமிர்ந்தசுடர்ச்சுடரும்
கட்டேயுமொருங்குகலந்தெழலால்
உட்டேயுறவெந்தனவேழுலகும். (௧௯௪)

தேரார்ப்பொலிவீரர்தெழிப்பொலியும்
தாரார்ப்பொலியுங்கழலுக்கொலியும்
போராற்சிலைநாணிபுடைப்பொலியும்
காரார்ப்பொலியுங்கடலார்ப்பொலியும் (௧௯௫)

எல்லாருமிராவணனேயனையார்
வெல்லாவுலகில்லவர்மெய்வலியார்
தொல்லார்படைவந்துதொடர்ந்ததெனு
நல்லானுமுருத்தெதிர்நண்ணினனால் (௧௯௬)

ஊழிக்கனல்போல்பவருந்தினபோர்
ஆழிப்படையம்பொடுமற்றகலப்
பாழிக்கடைநாள்விடுபன்மழைபோல்
வாழிச்சுடர்வாளிவழங்கினனால். (௧௯௭)

சூரோடுதடிந்தசுடர்க்கணைதந்
தாரோடகலங்கடடித்திடலும்
தேரோடுவிழுந்தனர்செங்கதிரோன்.
ஊரோடுமறிந்தனனொத்தரவோர். (௧௯௮)

கொல்லோடுசுடர்க்கணைகூற்றினரும்
பல்லோடுதொடர்ந்தனபாய்தலினால்
செல்லோடெழுமாமுகில்சிந்தினபோல்
வில்லோடும்விழுந்தமிடற்கரமே. (௧௯௯)

செம்போர்நிரத்திரையாழியின்வாய்
வெம்போரரவக்குலமேனிமிரும்
கொம்போடுவிழுந்தனவொத்தகுன்றந்
தம்போடுவிழுந்தவடற்கரமே. (௨௦௦)

முன்னோடுதிரத்திரைமுதலைகைப்
பின்னோடிவளைந்தபெருங்கடல்வாய்
மின்னோடும்விழுந்தனமேகமெனப்
பொன்னோடைநெடுங்கிரிபுக்கனவால். (௨௦௧)

மறவெற்றியரக்கர்வலக்கையொடும்
நறவைக்குருதிக்கடல்வீழ்நகைவாள்
சுறவொத்தனமீதுதுடித்தெழலால்
இறவொத்தனவாவுமினப்பரியே. (௨௦௨)

தாமச்சுடர்வாளிதடிந்தகலப்
பாமக்குருதிப்படிகின்றபடைச்
சேமப்படர்கேடகமால்கடல்சேர்
ஆமைக்குலமொத்தனவத்தனையால். (௨௦௩)

காம்போடுபதாகைகள்காருதிரப்
பாம்போடுகடற்படிவுற்றனவால்
வாம்போர்நெடுவாடைமலைந்தகலக்
கூம்போடுயர்பாய்கள்குறைந்தனபோல். (௨௦௪)

மண்டப்படுசோரியின்வாரியின்வீழ்
கண்டத்தகரத்தொகைகவ்வியதால்
முண்டக்கிளர்தண்டனமுட்டொகுவன்
றண்டச்சுறவொத்தஅடித்தனவால். (௨௦௫)

தெளிவுற்றபளிங்குறுசில்லிகொடேர்
விளிவுற்றுறவேறுறவீழ்வனவும்
அளிமுற்றியசோரியின்வாரியினும்
ஒளிமுற்றியதிங்களையொத்துளவால். (௨௦௬)

நிலைகோடலில்வென்றியரக்கரைநேர்
கொலைகோடனமன்குறிகோளுறுமே
சிலைகோடியதோறுசிரத்திரள்வன்
மலைகோடியின்மேலுமறிந்திறுமால். (௨௦௭)

திண்மார்பின்மிசைச்செறிசாலிகையின்
கண்வாளிகடைச்சிறைகாணநுழைந்
தெண்வாயுறமொய்த்தனவின்னறையுற்
றுண்வாய்வரிவண்டினமொத்தனவால். (௨௦௮)

பாருகுகளத்தொருவன்பகலின்
கூறுகியநாலிலொர்கூறிடையே
நூறுகியயோசனைநூழில்களம்
மாறுதழல்சாரிகைவந்தனனால் (௨௦௯)

நின்றாருடனின்றுநிமிர்ந்தயலே
சென்றாரெதிர்சென்றுதிரிந்திடலால்
தன்றாதையையோர்வுறுதன்மகனோர்
கொன்றானவனேயிவனென்றுகொளா. (௨௧௦)

இங்கேயுளனிங்குளனிங்குளனென்
றங்கேயுணர்கின்றவலந்தலையால்
வெங்கோபநெடுஞ்சரம்வெம்படைவிட்
டெங்கேனும்வழங்குநரெய்குவரால். (௨௧௧)

ஒருவன்னெனவுன்னுமுணர்ச்சியிலோர்
இரவன்றிதுவோர்பகலெய்தினரால்
கரவன்றிநிராமர்கணக்கிலரால்
பரவைம்மணலிற்பலரென்பர்களால். (௨௧௨)

ஒருவன்னொருவன்மலைபோலுயர்வோன்
ஒருவன்படைவெள்ளமொராயிரமே
ஒருவன்னொருவன்னுயிருண்டதலால்
ஒருவன்னுயிருண்டதுமுள்ளதுவே. (௨௧௩)

தேர்மேலுளர்மாவொடுசெந்தறுகட்
கார்மேலுளர்மாகடன்மேலுளரிப்
பார்மேலுளரும்பர்பரந்துளரால்
போர்மேலரிராமர்புகுந்தடர்வார். (௨௧௪)

என்னும்படியெங்கணுமெங்கணுமாய்த்
அன்னுந்திரியுந்தொடருஞ்சுழலும்
பின்னும்மருகும்மெதிரும்பிரியான்
மன்னன்மகன்வீரர்மயங்கினரால். (௨௧௫)

வேறு.

படுமதகரிபரிசிந்தினபனிவரையிரதமவிந்தன
விடுதிசைசெவிடுபிளந்தனவிரிகடலளறதெழுந்தன
அடுபுலிநிருதர்தமங்கையரலர்விழியருவிகள்சிந்தின
கடுமணிநெடியதெனுஞ்சிலைகணகணகணெனுந்தொறும் (௨௧௬)

வேறு.

ஊனேறுபடைக்கைவீரரொதிரொதிருருந்தோறும்
கூனேறுசிலையுந்தானுங்குதிக்கின்றகடுப்பின்கோட்பால்
வானேறினர்கடேருமலைகின்றவயவர்தேரும்
தானேறிவந்ததேரோயாக்கினன்றனியேறன்னான். (௨௧௭)

காயிருஞ்சிலையொன்றேனுங்கணைப்புட்டிலொன்றதேனும்
ஆயெழும்பகழிமாரிமழைத்துளித்தொகையின்மேல
ஆயிரங்கைகள்செய்தசெய்தனவமலன்செங்கை
ஆயிரங்கையுங்கூடியிரண்டுகையாயவன்றே. (௨௧௮)

பொய்யொருமுகத்தானாகிமனிசனும்புணர்ப்பிதென்றல்
மெய்யுறவுணர்ந்தேம்வெள்ளமாயிரமிடைந்தசேனை
செய்யுறுவினையமெல்லாமொருமுகந்தெரிவதுண்டே
ஐயிருநூறுகோடியநந்தமாமுகங்களம்மா. (௨௧௯)

கண்ணுதற்புத்தேடானுநான்முகக்கடவுடானும்
எண்ணுதுந்தொடரவெய்தகோலெனவெண்ணலுற்றார்
பண்ணையால்வகுக்கமாட்டார்தனித்தனிப்பார்க்கலுற்றார்
ஒண்ணுமேகணிக்கவென்றாருவகையினுயர்ந்ததோளார். (௨௨௦)

வெள்ளமீரைந்துநூறேவிடுகணையவற்றின்மெய்ம்மை
உள்ளவாறுளதாமென்றோருரைக்கணக்குணர்துமேனும்
கொள்ளையாருருவைநூறுகொண்டனகொண்டலன்ன
வள்ளலேவழங்கினானோவென்றனர்மற்றைவானோர் (௨௨௧)

குடைக்கெலாங்கொடிகட்கெல்லாங்கொண்டனர்குவிந்தகொற்றப்
படைக்கெலாம்பகழிக்கெல்லாம்யானைதேர்பரிமாவாதிக்
கடைக்கெலாந்துரந்தவாளிகணிதத்திற்களவைகாட்டி
அடைக்கலாமறிஞர்யாரோவென்றனர்முனிவரப்பால். (௨௨௨)

கண்டத்துங்கீழுமீதுங்கபாலத்துங்கடக்கலுற்ற
சண்டப்போரரக்கர்தம்மைத்தொடர்ந்துகோல்புணருந்தன்மை
பிண்டத்தின்கருவாகுந்தன்பேருருப்பிரமன்றந்த
அண்டத்தைநிறையப்பெய்துகுலுக்கியதனையவான. (௨௨௩)

கோடியையிரண்டுதொக்கபடைக்கலமள்ளர்கூட்டம்
ஓடியோர்பாகமாகவுயிரிழந்துலத்தலோடும்
வீடின்றிழிவதென்னேவிண்ணவர்படைகள்வீசி
மூடுதுமிவனையென்னுயாவருமுடுகிமொய்த்தார் (௨௨௪)

விண்டுவின்படையேயாதிவெய்யவன்படையீறாக
கொண்டொருங்குடனேவிட்டார்குலுங்கியதமரர்கூட்டம்
அண்டமுங்கீழ்மேலாவதாக்கினவதனையண்ணல்
கண்டொருமுறுவல்காட்டியவற்றினையவற்றாற்காத்தான். (௨௨௫)

தானவைதொடுத்தபோதுதப்பரிதுலகந்தானே
பூநனிவடவைத்தீயிறபுக்கெனப்பொரிந்துபோமென்
றூனதுதெரிந்தவண்ணலளப்பருங்கோடியம்பால்
ஏனையர்தலைகளெல்லாமிடியுண்டமலையினிட்டான். (௨௨௬)

ஆயிரவெள்ளத்தோருமடுகளத்தவிந்துவீழ்ந்தார்
மாயிருஞாலத்தாடன்வன்பெரும்பொறையைநீங்கி
மீயுயர்ந்தெழுந்தாளன்றேவீங்கொலிவேலைநின்றும்
போயொருங்கண்டத்தோடுங்கோடியோசனைகள்பொங்கி. (௨௨௭)

நினைந்தனமுடிந்தேமென்னுவானவர்துயரநீத்தார்
புனைந்தனென்வாகையென்னுவிந்திரனுவகைபூத்தான்
வனைந்தனவல்லவேதம்வாழ்வுபெற்றுயர்ந்தமாதோ
அநந்தனுந்தலைகளேந்தியயர்வுயிர்த்தல்லறீர்ந்தான். (௨௨௮)

தாய்படைத்துடையசெல்வமீகெனத்தம்பிக்கீந்து
வேய்படைத்துடையகானம்விண்ணவர்தவத்தின்மேவித்
தோய்படைத்தொழிலால்யார்க்குந்துயர்துடைத்தானைநோக்கி
வாய்படைத்துயர்ந்தோரெல்லாம்வாழ்த்தினர்வணக்கஞ்செய்தார். (௨௨௯)

தீமொய்த்தவனையசெங்கணரக்கரைமுழுதுஞ்சிந்திப்
பூமொய்த்தகரத்தராகிவிண்ணவர்போற்றநின்றான்
பேய்மொய்த்தநரிகளீண்டிப்பெரும்பிணம்பிறங்கத்தோன்றும்
ஈமத்துட்டமியனின்றகறைமிடற்றிறைவனொத்தான். (௨௩0)

அண்டமதளவவீந்தவரக்கரொவ்வுயிருமாகக்
கொண்டதோருருவந்தன்னுலிறுதிநாள்வந்துகூட
மண்டுநோண்மறித்துங்காட்டமன்னுயிரனைத்தும்வாரி
உண்டவன்றனேயானதன்னொருமூர்த்தியொத்தான். (௨௩௧)

ஆகுலந்துறந்ததேவரள்ளினர்சொரிந்தவெள்ளச்
சேகறுமலருஞ்சாந்துஞ்செருத்தொழில்வருத்தந்தீர்க்க
மாகொலைசெய்தவள்ளல்வாளமர்க்களத்தைக்கைவிட்
டேகினனிளவலோடுமிராவணனேற்றகைம்மேல். (௨௩௨)

மூலபலவதைப்படலம்-முற்றிற்று-ஆ திருவிருத்தம்-௨௪௮0

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

இவ்வழியியன்றவெல்லாமியம்பினுமிரிந்துபோன
தெவ்வழியாற்றல்வெற்றிச்சேனையின்செயலுஞ்சென்ற
வெவ்வழியரக்கர்கோமான்செய்கையுமிளையவீரன
எவ்வமிலாற்றற்போருமுற்றதுமியம்பலுற்றும். (௧)

பெரும்படைத்தலைவர்போன்றயாமெலாம்பிரிந்துபோனும்
விரும்பினும்வாழ்க்கையென்றல்யாரிடைவிலக்கற்பாலார்
வரும்பழிதுடைத்துமாண்டுவைகுதும்வானினென்று
இருங்கடல்பெயர்ந்ததென்னத்தானையுமீண்டதிப்பால். (௨)

வேறு.

சில்லியாயிரஞ்சில்லுளைப்பரியொடுஞ்சேர்ந்த
எல்லவன்கதிர்மண்டிலமாறுகொண்டிமைக்கும்
செல்லுந்தேர்மிசைத்தோன்றினன்றேவரைத்தொலைத்த
வில்லும்வெங்கணைப்புட்டிலுங்கொற்றமும்விளங்க. (௩)

அரக்கர்சேனையோராயிரவெள்ளத்தையமரில்
தரக்கமானுடர்தம்மையென்றொருபுடைதுரந்து
வெருக்கொள்வானரச்சேனைமேற்றன்செல்வான்விரும்பி
இருக்குந்தேரொடும்போயவனிராவணனெதிர்ந்தான். (௪)

நூறுகோடிதேர்நொறிற்பரிநூறிருகோடி
யாறுபோன்மதமாகளிறையிருகோடி
வேறுதேர்களுஞ்பதாதியுமிவற்றிவற்றிரட்டி
ஏறுகோளரியேறனனுடனன்றுசென்ற. (௫)

மூன்றுவைப்பினுமப்புறத்துலகினுமுனையின்
ஏன்றுகொள்ளுறும்வீரர்கள்வம்மினென்றிசைக்கும்
ஆன்றபேரியுமதிர்குரற்சங்கமுமசனி
ஈன்றகாளமுமேழொடேழுலகமுமிசைப்ப. (௬)

அனையவாகியவரக்கர்க்குமரக்கனையவுணர்
வினையைவானவர்வெவ்வினைப்பயத்தினைவீரர்
நினையுநெஞ்சையுஞ்சுடுவதோர்நெருப்பினைநிமிர்ந்து
கனையும்விண்ணையுங்குடிப்பதோர்கடலினைக்கண்டார். (௭)

கண்டுகைகளோடணிவகுத்துருமுறழ்கற்கள்
கொண்டுகூற்றமுநடுக்குறத்தோள்புடைகொட்டி
அண்டகோடிகளடுக்கழிந்தலைவுறவார்த்தார்
மண்டுபோரிடைமடிவதேநலனென்றுவலித்தார். (௮)

அரக்கர்சேனையமாருயிர்வழங்குவானமைந்த
குரக்குவேலையுமொன்றொடொன்றெதிரெதிர்கோத்த
நெருக்கிநேர்ந்தனநெருப்பிடைபொடித்தனநெருப்பின்
உருக்குசெம்பென்னவம்பரத்தோடினகுதிரம். (௯)

அற்றவன்றலையறுகுறையெழுந்தெழுந்தண்டத்
தொற்றவானகழுதயமண்டிலமெனவொளிரச்
சுற்றுமேகத்தைச்சுற்றியகுருதிநீர்துளிப்ப
முற்றும்வையகம்போர்க்களமாமென்றுமுயல. (௧௦)

தூவியம்பெடையரியினமறிதரச்சூழி
தூவியம்பெடைசோர்ந்தனசொரியுடல்சரிப்ப
மேவியம்படைபடப்படர்குருதியின்வீழ்ந்த
மேவியம்படைக்கடலிடைக்குடரொடுமிதப்ப. (௧௧)

கண்டிறந்தனகணவர்தம்முகத்தவர்முறுவல்
கண்டிறந்தனமடைந்தையருயிரொடுங்கலந்தார்
பண்டிறந்தனபழம்புணர்க்கன்புகப்பன்னிப்
பண்டிறந்தனபுலம்பொலிசிலம்பொலிபணிப்ப. (௧௨)

ஏழுமேழுமென்றிசைக்கின்றவுலகங்கள்யாவும்
ஊழிபேர்வதேயொப்பதோருலைவுறவுடற்ற
நூழில்வெஞ்சமநோக்கியவிராவணனுவன்றன்
தாழினென்படைதருக்கறுமென்பதோர்தன்மை. (௧௩)

மாமுங்கல்லுமேவில்லொடுவாண்மழுச்சூலம்
அரமுங்கல்லும்வென்முதலியவயிற்படையடக்கச்
சிரமுங்கல்லெனச்சிந்தலிற்சிதைந்ததென்சேனை
உரமுங்கல்வியுமுடையவன்செருநின்றதொருபால். (௧௪)

அழலுங்கட்களிறணியொடுந்துணிபடுமாவி
சுழலும்பல்படைத்தொகுதியுமன்னதேசுடர்த்தேர்
கழலுஞ்சோரிநீராற்றொடுகடலிடைக்கரக்கும்
குழலுநூலும்போன்மருமனுந்தானுமக்குமரன். (௧௫)

வில்லுங்கூற்றுவற்குண்டெனத்திரிகின்றவீரன்
கொல்லுங்கூற்றறக்குறைக்குமிந்நிறைப்பெருங்குழுவை
ஒல்லுங்கோளரியுருமன்னகுரங்கினதுகிரும்
பல்லுங்கூர்க்கின்றகூர்க்கிலவரக்கர்தம்படைகள். (௧௬)

கண்டுநின்றிறைப்போதினிக்காலத்தைக்கழிப்பின்
உண்டுகைவிடுங்கூற்றுவனிருதர்பேருயிரை
மண்டுவெஞ்செருநாளொருகணத்திடைமலைந்தே
கொன்றுமீள்கவென்கொற்றமென்றிராவணன்கொதித்தான். (௧௭)

ஊர்ந்தபோல்வனவுருமுறழ்திறலனவுருவிப்
பூதரங்களைப்பிளப்பனவண்டத்தைப்பொதுப்ப
மாதிரங்களையளப்பனமாற்றருங்கூற்றின்
தூதுபோல்வனசுடுகணைமுறைமுறைதுரந்தான். (௧௮)

ஆளிபோன்றுளனெதிர்ந்தபோதமர்க்களத்தெதிர்ந்த
ஞாளிபோன்றுளனென்பதென்னள்ளிருளடைந்த
காளிபோன்றனனிராவணன்வெள்ளிடைக்கரந்த
பூளைபோன்றதப்பொருசினத்தரிகடம்புணரி. (௧௯)

இரியல்போகின்றசேனையையிலக்குவன்விலக்கி
அரிகளஞ்சன்மினஞ்சன்மினென்றருள்வழங்கித்
திரியுமாருதிதோளெனுந்தேரிடைச்சென்றான்
எரியும்வெஞ்சினத்திராவணனெதிர்புகுந்தேற்றான். (௨௦)

ஏற்றுக்கோட்டுமிராவணனெரிமுகப்பகழி
நூற்றுக்கோடியின்மேற்செலச்சிலைகொண்டுநூக்கக்
காற்றுக்கோடியபஞ்செனத்திசைதொறுங்கரக்க
வேற்றுக்கோல்கொடுவிலக்கினனிலக்குவன்விசையால். (௨௧)

விலக்கினான்றடந்தோளினுமார்பினும்விசிகம்
உலக்கவுய்த்தனனிராவணனைந்தொடைந்துருவக்
கலக்கமுற்றிலாவுள்ளத்தனிலக்குவன்கனன்றான்
அலக்கணெய்துவித்தானன்றவ்வரக்கனையம்பால். (௨௨)

காக்கலாகலாக்கடுப்பினிற்றொடுப்பனகணைகள்
நூக்கினானவைநொறுக்கினனரக்கனுநூழில்
ஆக்கும்வெஞ்சமத்தரிதிவன்றனைவெல்வதம்பால்
நீக்கியென்னினிச்செய்வதென்றிராவணனினைந்தான். (௨௩)

கடவுண்மாப்படைதொடுக்கின்மற்றவைமுற்றுங்கடக்க
விடவுமாற்றவும்வல்லனேயாரையும்வெல்லும்
தடவுமான்மற்றைக்கூற்றையுந்தமையனைப்போலச்
சுடவுமாற்றுமெவ்வுலகையுமெவனுக்குந்தோலான் (௨௪)

மோகமொன்றுண்டுமுதலவன்வகுத்ததுமுன்னாள்
ஆகமற்றதுகொற்றமுன்சிவன்றனையழிப்ப
தேகமுற்றியவிஞ்சையையிவன்வயினேவிக்
காகமுற்றுழல்களத்தினிற்கிடத்துவென்கடிதின் (௨௫)

என்பதுன்னியவ்விஞ்சையைமனத்திடையெண்ணி
முன்பன்மேல்வரத்துரந்தனனதுகண்டுமுடுகி
அன்பின்வீடணனுழியான்படையினினறுத்தி
என்பதோதினனிலக்குவனதுதொடுத்தெய்தான். (௨௬)

வீடணன்சொலவிண்டுவின்படைக்கலம்விட்டு
மூடுவெஞ்சினமோகத்தைநீக்கலுமுனிந்தான்
மாடுநின்றவனுபாயங்கள்வகுத்திடவந்த
கேடுநந்தமக்கென்பதுமனக்கொண்டுகிளர்ந்தான். (௨௭)

மயன்கொடுத்ததுமகளுடன்வயங்கனல்வேள்வி
அயன்படைத்துளதாழியுங்குலிசமுமனைய
துயர்ந்தகொற்றமுமூழியுங்கடந்துளதுருவிச்
சயந்தனைப்பொருதம்பியையுயிர்கொள்வான்சமைந்தான். (௨௮)

விட்டபோதினினொருவனைவீட்டியேமீளும்
பட்டபோதினான்முகனாயினும்படுக்கும்
வட்டவேலதுவலங்கொண்டுவாங்கினன்வணங்கி
எட்டநிற்கலாத்தம்பிமேல்வல்விசைத்தெறிந்தான். (௨௯)

எறிந்தகாலையில்வீடணனதனிலையெல்லாம்
அறிந்தசிந்தையனையவீதென்னுயிரழிக்கும்
பிறிந்துசெய்யலாம்பொருளிலையென்றலும்பெரியோன்
எறிந்துபோக்குவலஞ்சலையென்றிடைவந்தான் (௩௦)

எய்தவாளியுமேயினபடைக்கலம்யாவும்
செய்தமாதவத்தொருவனைச்சிறுதொழிற்றீயோர்
வைதவைவினொத்தழிந்தனவீடணன்மாண்டான்
உய்தலில்லையென்றும்பருந்தம்மனமுலைந்தார். (௩௧)

தோற்பெனென்னினும்புகழ்நிற்குந்தருமமுந்தொடரும்
ஆர்ப்பநல்லவரடைக்கலம்புகுந்தவனுலப்பப்
பார்ப்பதென்பிறபழிவந்துதொடர்வதன்முன்னம்
ஏற்பெனென்றனிமார்பினென்றிலக்குவனெதிர்ந்தான். (௩௨)

இலக்குவற்குமுன்வீடணன்புகுமிருவரையும்
விலக்கியங்கதன்மேற்செலுமவனையும்விலக்கிக்
கலக்குமவானரக்காவலனநுமன்முன்கடுகும்
அலக்கணன்னதையின்னதென்றுரைசெயலாமே. (௩௩)

முன்னினொலாம்பின்னுறக்காலினுமுடுகி
நின்னில்யானதுவிலக்குவெனென்றுரைநேரா
மின்னும்வேலினைவிண்ணவர்கண்புடைத்திரங்கப்
பொன்னின்மார்பிடையேற்றனன்முதுகிடைப்போன. (௩௪)

எங்குநீங்குதிநீயெனவீடணனெழுந்தான்
சிங்கவேறன்னசீற்றத்தனிராவணன்றேரில்
பொங்குபாய்பரிசாரதியொடும்படப்புடைத்தான்
சங்கவானவர்தலையெடுத்திடநெடுந்தண்டால் (௩௫)

செய்விசும்பினினிமிர்ந்துநின்றிராவணன்சீறிப்
பாய்கடுங்கணைபத்தவனுடற்புகப்பாய்ச்சி
ஆயிரஞ்சரமநுமன்றனுடலிடையழுத்திப்
பாயினன்செருமுடிந்ததென்றிலங்கையூர்புகுவான் (௩௬)

தேடிச்சேர்ந்தவென்பொருட்டினுலகுடைச்செல்வன்
வாடிப்போயினனீயினிவஞ்சனைமதியால்
ஓடிப்போகுவதெங்கடாவுன்னொடுமுடனே
வீடிப்போவெனென்றரக்கன்மேல்வீடணன்விரைந்தான். (௩௭)

வென்றியென்வயமானதுவீடணப்பசுவைக்
கொன்றினிப்பயனில்லையென்றிராவணன்கொண்டான்
நின்றிலனொன்றுநேர்கிலன்முனிவெலாநீத்தான்
பொன்றிணிந்தவன்மதிலுடையிலங்கையூர்புகுந்தான். (௩௮)

அரக்கனேகினன்வீடணன்வாய்திறந்தரற்றி
இரக்கந்தானெனவிளக்குவனிணையடித்தலத்தில்
கரக்கலாகலாக்காதலின்வீழ்ந்தனன்கலுழ்ந்தான்
குரக்குவெள்ளமுந்தலைவருந்துயரிடைக்குளித்தார். (௩௯)

பொன்னிரும்புறுகாளிமைப்பொருப்பினிற்பொன்ற
என்னிருந்துநானிறப்பெனிக்கணத்தெனையாளும்
மன்னிருந்தினிவாழ்கிலனென்றவன்மறுக
நின்னிலென்கின்றசாம்பவனுரையொன்றுநிகழ்த்தும் (௪௦)

அநுமனிற்கயாமாருயிர்க்கிரங்குதலறிவோ
நினையுமத்துணைமாத்திரத்துலகெலாநிமிர்வான்
வினையினன்மருந்தளிக்கின்றானுயிர்க்கின்றான்வீரன்
தினையுமல்லலுற்றழுங்கன்மினென்றிடர்தீர்த்தான. (௪௧)

மருத்தின்காதலன்மார்பிடையம்பெலாம்வாங்கி
இருத்தியோகடிதேகலையிளவலையிஞ்ஞான்
வருத்தங்காணுமோமன்னவனென்னலுமன்னன்
கருத்தையுன்னியமாருதியுலகெலாங்கடந்தான். (௪௨)

வேறு.

உத்தரதிசையையொல்லையுலகெலாங்கடக்கப்பாய்ந்து
மெய்த்தகுமருந்துதன்னைவேரொடுங்கொணர்ந்தவீரன்
பொய்த்தலில்குறிகடானேபொதுவறநோக்கிப்பொன்போல்
வைத்ததுவாங்கிக்கொண்டுவருதலில்வருத்தமுண்டோ. (௪௩)

தந்தனன்மருந்துதன்னைத்தாக்குதன்முன்னம்வேகம்
வந்ததுமாண்டோர்க்கெல்லாமுயிர்தரும்வலத்ததென்றால்
நொந்தனோவுதீர்க்கச்சிறியதோநொடித்தன்முன்னம்
இந்திரனுலகமார்ப்பவெழுந்தனனிளையவீரன் (௪௪)

எழுந்துநின்றநுமன்றன்னையிருகையாற்றழுவியெந்தாய்
விழுந்திலனன்றேமற்றவ்வீடணனென்னவிம்மித்
தொழுந்துணையவனைநோக்கித்துணுக்கமுந்துயருநீத்தான்
கொழுந்தியுமீண்டாள்பட்டானரக்கனென்றுவகைகொண்டான். (௪௫)

தருமமென்றறிஞர்சொல்லுந்தனிப்பொருடன்னையின்னே
கருமமென்றநுமனுக்கிக்காட்டியதன்மைகண்டால்
அருமையென்னிராமற்கம்மாவறம்வெல்லும்பாவந்தோற்கும்
இருமையுநோக்கினென்னுவிராமன்பாலெழுந்துபோனார். (௪௬)

வேலேற்றுப்படலம்முற்றிற்று ஆ திருவிருத்தம் ௩௫௨௬.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௩௨-வது-வானரர்களங்காண்படலம்.

ஒன்றலபலவென்றேங்குமுயர்பிணத்தும்பரொன்றும்
குன்றுகள்பலவுஞ்சோரிக்குரைகடலனைத்துந்தாவிச்
சென்றடைந்திராமன்றன்னைத்திருவடிவணக்கஞ்செய்தார்
வென்றியின்றலைவர்க்கண்டவிராமனென்விளைந்ததென்றான். (௧)

உற்றதுமுழுதுநோக்கியொளிவறவுணர்வினூன்றச்
சொற்றனன்சாம்பன்வீரனநுமனைத்தொடர்ந்துபுல்லிப்
பெற்றனெனுன்னையென்னேபெருதனபெரியோயென்று
மற்றிடையூறுசெல்லாவாயுளையாதியென்றான். (௨)

புயல்பொழியருவிக்கண்ணன்பொருமலன்பொங்குகின்றான்
உயிர்புறத்தொழியநின்றவுடம்பன்னவுருவத்தம்பி
துயர்தமக்குதவிமீளாத்துறக்கம்பெற்றுயர்ந்ததொல்லைத்
தயரதற்கண்டாலொத்தான்றம்முனைத்தொழுதுசார்வான். (௩)

இளவலைநோக்கியையவிரவிதன்குலத்துக்கேற்ற
வளவிதமடைந்தாற்றுங்கிமன்னுயிர்கொடுக்கும்வண்மை
துளவியருங்கலாய்நீயன்னதுதுணிந்தாயென்றால்
அளவிவதன்றுசெய்தற்கடுப்பதேயாகுமன்றே. (௪)

புறவொன்றின்பொருட்டின்யாக்கைபுண்ணுறவரிந்தபுத்தேள்
அறவனுநின்னையயகர்க்கிலனப்பானினற
பிறவினியுளைப்பதென்னேபேரருளாளரொன்பார்
கறவையுங்கன்றுமொப்பார்தமர்க்கிடர்காண்கினென்றான். (௫)

சாலிகைமுதலவானபோர்ப்பரந்தாங்கிற்றெல்லாம்
நீனிறஞாயிறன்னநெடியவன்முறையினீக்கிக்
கோல்சொரிதனுவுங்கொற்றவநுமன்கைக்கொடுத்துக்கொண்டல்
மேனிறைகுன்றமொன்றின்மெய்ம்மெலிவாற்றலுற்றான். (௬)

ஆயவெங்கவியின்வேர்துமளப்பருந்தானையோடும்
மேயினனிராமன்பாதம்விதிமுறைவணங்கிவீந்த
தியவர்பெருமைநோக்கிநடுக்கமுந்திகைப்புமுற்றார்
ஓய்வுறுமனத்தரொன்றமுணர்ந்திலர்நாணமுற்றார் (௭)

மூண்டெழுசேனைவெள்ளமூலமொருமூன்றின்மேலும்
நீண்டுளதானையையவெங்கணனிமிர்ந்ததென்னத்
ஆண்டிரண்டனையதிண்டோட்சூரியனசிறுவன்சொல்லக்
காண்டிரவ்வரக்கர்வேந்தன்றன்னெடுங்களத்தையென்றான். (௮)

தொழுதனர்தலைவரெல்லாந்தோன்றியகாதறூண்ட
எழுகெனவிரைவிற்சென்றாரிராவணனிளவலோடும்
கழுகொடுபருந்தும்பாறும்பேய்களுங்கணங்கண்மற்றும்
குழுவினகளத்தைக்கண்ணினோக்கினார்துணுக்கங்கொண்டார். (௯)

ஏங்கினார்நடுக்கமுற்றாரிளைத்திளைத்துள்ளமேற
வீங்கினார்வெருவலுற்றார்விம்மினாருள்ளம்வெம்ப
ஓங்கினார்மெள்ளமெள்ளவுயிர்நிலைத்துவகையூறப்
பாங்கினாருற்றதன்மையாரறிந்தறையற்பாலார். (௧௰)

ஆயிரம்பருவங்கண்டாற்காட்சிக்கோர்கரையிற்றன்றால்
மேயினதுறைகடோறும்விம்மினர்நிற்பதல்லால்
பாய்திரைப்பரவையேழுங்காண்குறுபதகரொன்ன
நீதெரிந்துரைத்தியென்றார்வீடணனெறியிற்சொன்னான். (௧௧)

வேறு.

காகப்பந்தர்ச்செங்களமெங்குஞ்செறிகால
யோகத்தம்பிற்பொன்றினவேனுமுடலொன்றி
மேகச்சங்கந்தொக்கெனவீழும்வெளியின்மை
நாகக்குன்றினின்றமைகாணீர்நமராங்காள். (௧௨)

வென்றிச்செங்கண்வெம்மையரக்கர்மிசையூர்வ
ஒன்றுக்கொன்றுற்றம்புதலைப்பட்டுயிர்நுங்கப்
பொன்றிச்சிங்கநாகவடுக்கல்பொலிகின்ற
குன்றிற்றுஞ்சுந்தன்மைநிகர்க்குங்குறிகாணீர். (௧௩)

அளியிற்பொங்குங்கங்கமுதற்பல்குலமார்ப்பக்
களியிற்பட்டார்வாண்முகமென்னுங்கரையில்ல
புளினத்திட்டைக்கண்ணகல்வாரிக்கடல்பூத்த
நளினக்கானேயொத்தனகாண்மின்னமராங்காள். (௧௪)

பூவாய்வாளிச்செல்லெறிகாலைப்பரிபொன்றக்
கோவாய்வன்பாய்வெண்கொடிதிண்காலொடுகூட
மாவாய்திண்டேர்மண்டுபுலாணீர்மறிவேலை
நாவாய்மானச்செல்வனகாண்மின்னமராங்காள். (௧௫)

ஒழுகிப்பாயும்மும்மதவேழமுயிரோடும்
எழகிற்கில்லாசெம்புனல்வெள்ளத்திடையிற்ற
பழகிற்கில்லாப்பஃறிரைதூங்கும்படர்வேலை
முழுகித்தோன்றுமீனரசொக்கும்முறைநோக்கீர். (௧௬)

கடக்காடென்னப்பொங்குகவந்தத்தொடுகைகள்
தொடக்காநிற்கும்பேயிலயத்தின்றொழிலைபேண
மடக்கோவில்லாவார்படிமக்கூத்தமைவிப்பான்
நடக்கால்காட்டுங்கண்ணுளரொக்குந்நமரங்காள். (௧௭)

மழுவிற்கூர்வாள்வன்பலிபிக்கின்வயவீரர்
குழுவிற்கொண்டந்நாடிதொடக்கப்பொறிகூட்டித்
தழுவிக்கொள்ளக்கள்ளமனப்பேயவைதள்ளி
நழுவிச்செல்லும்மியல்பினகாண்மின்னமரங்காள். (௧௮)

பொன்னினோடைமின்பிறழ்நெற்றிப்புகர்வேழம்
பின்னும்முன்னுந்நின்றுறழ்வீழப்பிணைவுற்ற
தன்னினேராமெய்யிருபாலுந்தலைபெற்ற
என்னுந்தன்மைக்கேய்வனபல்வேறிவைகாணீர். (௧௯)

நாமத்திண்போர்முற்றியகோபந்நகைநாறும்
பாமத்தொன்னீரன்னநிறத்தோர்பகுவாய்கள்
தூமத்தோடும்வெங்கனலின்னுஞ்சுடர்கின்ற
ஓமக்குண்டமொப்பனபல்வேறவைகாணீர். (௨௦)

மின்னும்மோடையாடல்வயப்போர்மிடல்வேழக்
கன்னம்மூலத்தூற்றனவெண்சாமரைகாணீர்
மன்னர்ம்மாளத்தாமரைமானும்வதனத்த
அன்னம்பூவிற்றுஞ்சுவவொக்கின்றவைபாரீர். (௨௧)

ஒளிமழுற்றுற்றுயர்வேழத்தொளிர்வெண்கோ
டாளினமுற்றுச்செம்புனல்வெள்ளத்தவைகாணீர்
கோளினமுற்றுச்செக்கருண்மேகக்குழுவின்கண்
நாளினமுற்றுவெண்பிறைபோலுந்நமரங்காள். (௨௨)

கொடியும்வில்லுங்கோலொடுவேலுங்குவிதேரும்
துடியின்பாதக்குன்றின்மிசைத்தோல்விசியின்கட்
டொடியின்வெய்யோர்கண்ணெறிசெல்லவுடன்வெந்த
தடியுண்டோடிக்கூளிதடிக்கின்றனகாணீர். (௨௩)

சகரம்முந்நீர்செம்புனலாகத்தடுமாறி
மகரந்நன்மீன்வந்தனகாணுமனமுட்கிச்
சிகரம்மன்னயானைகொலென்றுசிலநாணி
நகரந்நோக்கிச்செல்வன்காண்மின்னமரங்காள். (௨௪)

விண்ணிற்பட்டார்வெற்புறழ்காயம்பலமேன்மேல்
மண்ணிற்செல்வார்மேனியின்வீழமடிவுற்றார்
எண்ணிற்றீராரன்னவைதிருமிடலில்லார்
கண்ணிற்றோன்றார்விம்மியுளைக்கும்படிகாணீர். (௨௫)

அச்சிற்றின்டோரணையின்மாமேலகல்வானின்
மொய்ச்சுச்சென்றார்மொய்குருதித்தாரைகண்மூட
உச்சிச்சென்றானாயினும்வெய்யோனுதயத்தின்
குச்சிச்சென்றொளித்துளானுங்குறிகாணீர். (௨௬)

காறோய்மேனிக்கண்டகர்கண்டப்படுகாலை
ஆறோவெனனவிண்படர்செஞ்சோரியதாகி
வேறோர்நின்றவெண்மதிசெங்கேழ்நிறம்விம்மி
மாறோர்வெய்யோன்மண்டிலமொக்கின்றதுகாணீர். (௨௭)

வேறு.

வினையமண்ணனையவளர்ந்தெழுந்தகொழுங்குருதிமகரவேலை
தானனைவுற்றெழும்பறவைச்சிறைதெளித்தபுதுமழையின்றுள்ளிதாங்கி
மீனனையநறும்போதும்விரையரும்புங்கறைவண்டுநிறம்வேறெய்திக்
கானனமுங்கடிபொழிலுமுறியீன்றபோன்றொளிர்வகாண்மின்காண்மின். ௨௮

வரைபொருதமால்யானைவளைமருப்புக்கிளைமுத்துமணியும்வாரித் [ப
திரைபொருதுபுறங்குவிப்பத்திறங்கொள்பணைமாமுருட்டிச் சிறைப்புள்ளார்ப்
றுரைகொடியும்வெண்குடையுஞ்சாமரையுமெனச்சுமந்துபிணத்தினோன்மைக்
கரைபொருதகடன்மடுக்குங்கடுங்குருதிப்பேர்யாறுகாண்மின்காண்மின். ௨௯

கைக்குன்றப்பெருங்கரையநிருதர்புயக்கற்செறிந்தபதணங்காப்ப
மொய்க்கின்றபரித்திரையமுரட்கரியின்கோண்மாவமுளரிக்கானின்
மெய்க்கின்றவாண்முகத்தவிழுக்குடரின்பாசடையநிணமேற்செற்ற
உய்க்கின்றவுதிரநீரகன்குளங்களுலப்பிறந்தவவையுங்காண்மின். (௩௦)

நெடும்படைவாணுஞ்சிலுழநிணச்சேற்றினுதிரநீர்நிறைந்தகாப்பின்
கடும்பகடுபடிகிடந்தகரும்பரம்பினினமள்ளர்பரந்தகையில்
படுங்கமலமலர்நாறுமுடிபரந்தபெருங்கிடக்கைபரந்தபண்ணை
தடம்பணையினறும்பழனந்தழுவியதேயெனப்பொலியுந்தகையுங்காண்மின். ()

வெளிறீர்த்தவரைபுரையுமிடலரக்கருடல்விழவும்வீரன்வில்லின்
ஒளிறீர்த்தமுழுநெடுநாணுருமேறுபல்படவுமுலகங்கீண்டு
நளிறீர்த்தநாகபுரம்புக்கிழந்தவழிதோறுநதியினோடிக்
களிறீர்த்துப்புகமண்டுங்கடுங்குருதித்தடஞ்சுழிகளவையுங்காண்மின்.] (௩௨)

கைத்தலமுங்காத்திரமுங்கடுங்கழுத்துநெடும்புயமுமுரமுங்கண்டித்
தெய்த்திலபோய்த்திசைதொறுமிருநிலத்தைக்கிழிந்திழிந்தவென்னினல்லான்
மைக்களிற்றின்வயமாவின்வாணிருதர்பேருடலினமற்றிவ்வாளி
தைத்துளவாநின்றவெனவொன்றேயுங்காண்பரியதகையுங்காண்மின். (௩௩)

வேறு.

குமுதநாறுமுகத்தனகூற்றன
சமிதரோடுமடிந்தனசார்தரும்
திமிதலாவணவின்னனவித்திறம்
அமுதின்வந்தனவையிருகோடியால். (௩௪)

ஏறுநான்முகன்வேள்வியெழுந்தன
ஊறுமாரியுமோங்கலையோதமும்
மாறுமாயினுமாமதமாய்வரும்
ஆறுமாறலவாறிருகோடியால். (ருரு)

உயிர்வறந்தமுதிரம்வறந்துதம்
மயிர்வறந்துமதமறவாதன
புயலவன்றிசைப்போர்மதயானையின்
இயல்பரம்பரையேழிருகோடியால். (ருசு)

கொடாதுநிற்றலிற்கொற்றநெடுந்திசை
ஈடாதுநிற்பனநாட்டமிமைப்பில
வடாதுதிக்கின்மதவரையின்வழிக்
கடாமுகத்தமுளரிக்கணக்கவால். (ருஎ)

வானவர்க்கிறைவன்றிறைதந்தன
ஆனவர்க்கமதாயிரகோடியும்
தானவர்க்கிறைவன்றிறைதந்தன
ஏனவர்க்கங்கணக்கிலவிவ்வெலாம். (ருஅ)

பாற்கடல்பண்டமுதுபயந்தநாள்
ஆர்த்தெழுந்தனவாயிரமாயிரம்
மாற்கணப்பரியிங்கிவைமாறுவை
மேற்கின்வேலைவருணனைவென்றவால். (ருகூ)

இருதிக்கிழவன்னிழந்தேகின
அரிவயப்பரியாயிரமாயிரம்
விரிசினத்திகல்விஞ்சையர்வேந்தனைப்
பொருதுபற்றியதாமரைபோலுமால். (சா0)

என்றுகாட்டினுங்காணினுமீதிறை
குன்றுகாணுறுகோளிலதாதலான்
நின்றுகாணுதநேமியினுறைை
சென்றுகாண்டுமென்றேகினர்செவ்வியோர். (சாக)

[illegible]யற்றெழுதாங்கவன்பாங்கரும்
போரியற்கைகினேந்தெழும்பொம்மலார்
பேருயிர்ப்பொடிருந்தனர்பின்னுறும்
காரியத்தினிலைமைகழறுவாம். (சாஉ)

வானரர்களங்காண்படலம்முற்றிற்று- ஆ திருவிருத்தம்-ருருசுஅ

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

அலக்கணெய்தியமராழிந்திட
உலக்கவானரவீரரையோட்டியவ்
விலக்குவன்றனைவீட்டியிராவணன்
துலக்கமெய்தினன்றோமில்களிப்பினே. (௧)

பொருந்துபொற்பெருங்கோயிலிற்போர்த்தொழில்
வருந்தினர்க்குத்தம்மன்பினின்வந்தவர்க்
கருந்துதற்கமைவாயினவாக்கிநல்
விருந்தமைக்கமிகுகின்றவேட்கையான். (௨)

வானநாட்டைவருகெனவல்விரைந்
தேனைநாட்டவரோடும்வந்தெய்தலும்
மானநாட்டந்தபோகமமைதிர்மற்
றூனநாட்டினிழத்திருயிரென்றான். (௩)

நறவுமூனுநகையறநல்லன
பிறவுமாடையுஞ்சாந்தமும்பெய்மலர்த்
திறமுநானப்புனலொடுசேக்கையும்
புறமுமுள்ளுநிறையப்புகுந்தவால். (௪)

நானநெய்ந்நன்குளைத்துநறும்புன
லானகோதறவாட்டியமுதொடும்
பானமூட்டியமுதுபரப்புவான்
வானநாட்டியர்யாவரும்வந்தனர். (௫)

பாடுவார்கள்பயிலிடம்பாவகத்
தாடுவார்களளியினன்புறக்
கூடுவார்கண்முதலுங்குறைவறத்
தேடினானெனப்பண்ணையிற்சேர்ந்ததால். (௬)

அரசராதியடியவரந்தமா
வரைசெய்மேனியிராக்கதர்வந்துளார்
விரைவிலிந்திரபோகம்விழைதரக்
கரைசெலாதபெருவளங்கண்ணினார். (௭)

இன்னதன்மையமைத்தவிராக்கதர்
மன்னன்மாடுவந்தெய்திவணங்கினார்
அன்னசேனைகளப்பட்டவாறெலாம்
துன்னுதூதர்செவியிடைச்சொல்லுவார். (௮)

நடுங்குகின்றவுடலினர்நாவுலர்ந்
தொடுங்குகின்றவுயிர்ப்பினருள்ளழிந்
திடுங்குகின்றவிழியினரோங்கிமேல்
அடங்குகின்றவுரையரறைகுவார். (௯)

வேறு.

இன்றியார்விருந்திங்சுஞ்பாரிகன்முகத்திமையோர்தந்த
வென்றியாயேவச்சென்றவாயிரவெள்ளச்சேனை
நின்றதுபுறத்ததாகவிராமன்றனெடுங்கைச்சாபம்
ஒன்றினாலிரண்டுமூன்றுகடிகையினுலந்ததென்றார். (௧௦

வலிக்கடன்வானுளோரைக்கொண்டுநீவகுத்தபோகம்
கலிக்கடனளிப்பலென்றுநிருதர்க்குக்கருதினாயேல்
பலிக்கடனமைக்கற்பாலையல்லதுன்குலத்துப்பல்லோர்
ஒலிக்கடலுலகத்தில்லையூருளாருளரோவுள்ளார். (௧௧

ஈட்டருமுவகையீட்டியிருந்தவனுரைத்தமாற்றம்
கேட்டலும்வெகுளியோடுநடுக்கமுமிழிவுங்கிட்ட
ஊட்டரக்கனையசெங்கணெருப்புகவுயிர்ப்புவீங்கத்
தீட்டியபடிவமென்னத்தோன்றினன்றிசைக்குநெஞ்சன். (௧௨

என்னினும்வலியராயவிராக்கதர்யாண்டும்யாரும்
உன்னினுமுலப்பிலாதாருவரியின்மணலினீள்வார்
பின்னொருபேருமின்றிமாண்டனனென்றுபேசும்
வின்னிலையிதுவோபொய்ம்மைவிளம்பினிர்போலுமென்றான். (௧௩

கேட்டயலிருந்தமாலியீதொருகிழமைத்தாமோ
ஓட்டுறுதூதர்பொய்யேயுரைப்பரோவுலகம்யாவும்
வீட்டுவதிமைப்பினன்றேவீங்கெரிவிரிந்தவெல்லாம்
மாட்டுவானொருவனன்றேயிறுதியின்மனத்தாலைய. (௧௪

அளப்பருமுலகம்யாவுமமைத்துக்காத்தழிக்கின்றான்றன்
உளப்பெருந்தகைமைதன்னாலொருவனென்றண்மைவேதம்
கிளப்பதுங்கேட்டுமன்றேயவனராக்கிடந்துமேனாள்
முளைத்தபேரிராமனென்றவீடணன்மொழிபொய்த்தாமோ (௧௫

ஒன்றிடினதனையுண்ணுமுலகத்தைவிறகென்றூத
நின்றனவெல்லாம்பெய்தாலுடனுங்குநெருப்புங்காண்டும்
குன்றொடுமானும்புல்லும்பல்லுயிர்க்குழுவுங்கொல்லும்
வன்றிறற்காற்றுங்காண்டும்வலிக்கொருவரம்புமுண்டோ. (௧௬

பட்டதுமுண்டேயுன்னையிந்திரன்செல்வம்பற்று
விட்டதுமெய்யேயையமீட்டொருவினையுமில்லைக்
கெட்டதுன்பொருட்டினாலேயின்னுடைக்கேளெல்லாம்
தெட்டதுசெய்தியென்றானதற்கவன்சீற்றஞ்செய்தான்.

இலக்குவன்றன்னைவேலாலெறிந்துவெங்கூற்றுக்கீந்தேன்
அலக்கணிற்றலைவரெல்லாமழுந்தினரதனைக்கண்டால்
உலக்குமாலிராமன்பின்னையுயிர்ப்பொறையுகவானுற்ற
மலக்கமுண்டாகினாகவாகையென்வயத்ததென்றான். (௧௮

ஆண்டதுகேட்டுநின்றதூதவாயமெய்யே
மீண்டதவ்விளவலாவிமாருதிமருந்துமேனி
தீண்டவுந்தாழ்ந்ததில்லையாவருஞ்செங்கணானைப்
பூண்டனர்தழுவிப்புக்கார்போதுதிகாணினென்றார். (௧௯)

தேறலனுதலானேமறுகுறுஞ்சிந்தைதேற
ஏறினன்கனகத்தாளக்கோபுரத்தும்பரெய்தி
ஊறினசேனைவெள்ளமுலந்தனபெருமையெல்லாம்
காறினவுள்ளநோவக்கண்களிற்றெரியக்கண்டான். (௨0)

கொய்தலைப்பூசற்பட்டோர்குலத்தியர்குவளைபோடு
நெய்தலைவென்றவாட்கண்குமுதத்தினீர்மைகாட்டிக்
கைதலையுற்றபூசல்கடலெலாநிமிருங்காலைச்
செய்தலையுற்றவோசைச்செயலதுசெவியிற்கேட்டான். (௨௧)

கண்ணுநீர்கடந்தயானைப்பெரும்பிணமேந்தியாணர்
மண்ணுநீரளவுங்கல்லிநெடுமலைமறித்துமண்டும்
புண்ணுநீராறும்பல்பேய்புதப்புனல்குடையும்பொம்மற்
கண்ணுநீராறுமாறுக்கருங்கடன்மடுக்கக்கண்டான். (௨௨)

துமிழிநீரோடுஞ்சோரிகனலொடுங்கொழிக்குங்கண்ணன்
தமிழ்நெறிவழக்கமன்னதனிச்சிலைவழக்கிற்சாய்ந்தார்
அமிழ்பெருங்குருதிவெள்ளமாற்றுவாய்முகத்திற்றேக்கி
உமிழ்வதேயொக்கும்வேலையோதம்வந்துடற்றக்கண்டான். (௨௩)

முற்றியற்சிலைவலாளன்மொய்க்கணைதுமிப்பவாவி
பெற்றியல்பெற்றிபெற்றுமென்னவாளரக்கர்யாக்கை
சிற்றியற்குறுங்காலோரிக்குரல்கொளையிசையாப்பல்பேய்
கற்றியல்பாணிகொட்டக்களிநடம்பயிலக்கண்டான். (௨௪)

விண்களிற்சென்றவன்றேட்கணவனாயலகைவெய்ய
புண்களிற்கைகணீட்டிப்புதுபிணநகவர்வநோக்கி
மண்களிற்றொடர்ந்துவாளிற்பிடித்தவள்ளுகிரின்மானக்
கண்களைச்சூன்றுதீக்குமரக்கியர்குழுவுங்கண்டான். (௨௫)

விண்பிளந்தொல்கவார்க்கும்வானரவீக்கங்கண்டான்
மண்பிளந்தழுந்தவாடுங்கவந்தததின்வருக்கங்கண்டான்
கண்பிளந்தகலநோக்கும்வானவர்களிப்புக்கண்டான்
புண்பிளந்தனையநெஞ்சன்கோபுரத்திழிந்துபோந்தான். (௨௬)

நகைபிறக்கின்றவாயனுக்கொடுகடைவாய்நக்கிப்
புகைபிறக்கின்றமூக்கனபொறிபறக்கின்றகண்ணன்
மிகைபிறக்கின்றநெஞ்சன்வெஞ்சினத்திமேல்வீங்கச்
சிகைபிறக்கின்றசொல்லனரசியலிருக்கைசேர்ந்தான். (௨௭)

இராவணன்களங்காண்படலம்முற்றிற்றுஆ திருவிருத்தம் ௩௯௬
கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

பூதரமனையமேனிப்புகைநிறப்புருவச்செங்கண்
மோதரனென்னுநாமத்தொருவனைமுறையினோக்கி
யாதுளவிறநிலாதஇலங்கையூரிருந்தசேனை
ஆதையுமெழுகென்றானைமணிமுரசறைகவென்றான். (௧)

எற்றியமுரசங்கேளாவேழிருநூற்றுக்கோடி
கொற்றவர்நிருதர்சேனைசூழீஇயதுகொடித்திண்டேரும்
சுற்றுறுதொளைக்கைம்மாவுந்துரசமும்பிறவுந்தொக்க
வற்றியகடல்களென்னவிலங்கையூர்வறளிற்றாக. (௨)

ஈசனைஇமையாமுக்கணொருவனையிருமைக்கேற்ற
பூசனைமுறையிற்செய்துதிருமறைபுகன்றதானம்
வீசினனியற்றிமற்றும்வேட்டவர்வேட்டவெல்லாம்
ஆசறநல்கியொல்காப்போர்த்தொழிற்கமைவதானான். (௩)

வேறு.

அருவியஞ்சனக்குன்றிடையாயிரமருக்கர்
உருவினோடுதித்தெழுந்தனராமெனவொளிரக்
கருவிநான்முகன்வேள்வியிற்படைத்ததுங்கட்டிச்
செருவினிந்திரன்றீர்ந்தபொற்கவசமுஞ்சேர்த்தான், (௪)

வாள்வலம்படமர்தரஞ்சூழ்ந்தமாசுணத்தின்
தாள்வலந்தொளிர்தமனியக்கச்சொடுஞ்சார்த்திக்
கோள்வலந்தனகுவிந்துளவாயன்னகொள்கை
மீளவில்கிம்புரிமணிக்கடிசூத்திரம்வீக்கி. (௫)

மறைவிரித்தன்னமாடுறுமானமாக்கருளன்
சிறைவிரித்தன்னகொய்சகமருங்குறச்சேர்த்தி
முறைவிரித்தன்னமுறுக்கியகச்சொடுமுறையில்
பிறைவிரித்தன்னவெள்ளெயிற்றரவமும்பிணித்து. (௬)

மழைக்குலத்தொடுவானவல்லேறெலாம்வாங்கி
இழைத்தொடுத்தனவனையவாமுடைமணியார்த்து
முழைக்கிடந்தபல்லரியினமுழங்குபேரரவம்
தழைக்குமின்னொளிப்பொன்முகைச்சதங்கையுஞ்சார்த்தி (௭)

உருமிடித்துழியயர்வுறுமறக்கம்வானுலகின்
இருநிலத்திடையெவ்வுலகத்திடையாரும்
புரிதரப்படும்பொலன்கழலலங்குறப்பூட்டிச்
சரியுடைச்சுடர்ச்சார்வலஞ்சார்வுறச்சார்த்தி. (௮)

நாலஞ்சாகியகரங்களினணந்தலையநந்தன்
ஆலஞ்சார்மிடற்றருங்கறைகிடந்தெனவலங்கும்
கோலஞ்சார்நெடுங்கோதையும்புட்டிலுங்கட்டித்
தாலஞ்சார்ந்தமாசுணமெனக்கங்கணந்தழுவ. (௯)

கடல்கடைந்தமால்வரையினைச்சுற்றியகயிற்றின்
அடல்கடந்ததோளலங்குபொன்வலயங்களிலங்க
உடல்கடந்தநாளொளியவனுதித்தபோற்கதிரின்
சுடர்தயங்குறுகுண்டலஞ்செவியிடைத்தூக்கி. (௧௦)

உதையக்குன்றத்தோடொத்ததினுலாவுறுகதிரின்
துதையுங்குங்குமத்தோளொடுதோளிடைதொடரப்
புதையிருட்பகைக்குண்டலமணையவைபொலியச்
சிதைவிறங்களுமீனும்போன்முத்தினந்திகழ. (௧௧)

வேலைவாய்வந்துவெய்யவரனைவரும்விடியும்
காலையுற்றனராமெனமுடிக்குலங்காலும்
மாலைபத்தின்மேன்மதியமுநாளிடைப்பலவாய்
மூலமுற்றியவனையமுத்தக்குடைநிழற்ற. (௧௨)

பகுத்தபல்வளக்குன்றினின்முழைபன்னபகுவாய்
வகுத்தவான்கடைத்திசைதொறும்வளையெயிற்றீட்டம்
மிகுத்தநீலவான்மேகஞ்சூழ்விசும்பிடைத்தசும்பூ
டுகுத்தசெக்கரிற்பிறைக்குலமுளைத்தனவொக்க. (௧௩)

ஒத்ததன்மையினொளிர்வனதரளத்தினொக்கத்
தத்துகின்றனவீரபட்டத்தொகைதகைந்த
முத்தவோடையமுரட்டிசைமும்மதயானை
பத்துநெற்றியிற்சுற்றினபோலெழில்படைப்ப. (௧௪)

புலவிமங்கையர்பூஞ்சிலம்பரற்றடிபோக்கித்
தலைமைகண்ணினதாழ்கிலாமணிமுடித்தலங்கள்
உலகமொன்றினைவிளக்குறுகதிரினையோட்டி
அலகிலெவ்வுலகத்தினும்வயங்கிருளகற்ற. (௧௫)

நாகர்நானிலநான்முகனொடனயந்த
ஆகமூன்றையும்வென்றுகொண்டமரர்முன்பணிந்த
வாகைமாலையின்மருங்குறவரிவண்டொடளவித்
தோகையனனவர்விழிதொடர்தும்பையுஞ்சூடி. (௧௬)

அகழிவேலையைக்காலத்தையளக்கர்நுண்மணலை
நிகழுமாதிகழ்விஞ்சையைநினைப்பதென்னின்ற
இகழ்வில்பூதங்களிறப்பினுமிறுதிசெல்லாத
புகழெனச்சரந்தொலைவிலாத்தூணியும்பூட்டி. (௧௭)

வருகதேரெனவந்ததுவையமும்வானும்
உரகதேயமுமொருங்குடனிவரினுமுச்சி
சொருகுபூவன்னசுமையதுதுரகமின்றெனினும்
நிருதர்கோமகனினைந்துழிச்செல்வதோரிமையின். (௧௮)

ஆயிரம்பரியமுதொரீவக்கவுமருக்கன்
பாய்வயப்பசுங்குதிரையின்வழியவும்படர்நீர்
வாய்மடுக்குமாவடவையின்வயிற்றின்வன்காற்றி
னுயகற்குவந்துதித்தவும்பூண்டதநலத்தால். (௧௯)

பாரிற்செல்வதுவிசும்பிடைப்படர்வதுபரந்த
நீரிற்செல்வதுநெருப்பினுஞ்செல்வதுநிமிர்ந்த
போரிற்செல்வதுபொன்னெடுமுகட்டிடைவிரிஞ்சன்
ஊரிற்செல்வதெவ்வுலகமுஞ்செல்வதோரிமைப்பின். (௨0)

எண்டிசைப்பெருங்களிற்றிடைமணியெனவிசைக்கும்
சண்டையாயிரகோடியிற்றொகையதுகதிர்சூழ்
மண்டிலங்களேமேருவிற்குவித்தெனவயங்கும
அண்டம்விற்குநன்காசினங்குயிற்றியதடங்க. (௨௧)

முனிவர்வானவர்முதலினரண்டத்துமுதல்வர்
எனைவரன்னவரீந்தவுமிகலினிட்டனவும
வினையும்வெய்யனபடைக்கலவேலையென்றிசைக்கும்
சுனையினுண்மணற்றொகையனசுமந்ததுதொக்க. (௨௨)

கண்ணனேமியுங்கண்ணுதல்கணிச்சியுங்கமலத்
தண்ணல்குண்டிகைக்கலசமுமழியினுமழியாத்
திண்மையான்றதுதேவருமுணர்வருஞ்செய்கைத்
துண்மையாமெனப்பெரியதுவென்றியினுறையுள். (௨௩)

அனையதேரினைவரன்முறையருச்சனையாற்றி
இனையதென்பதோர்கணக்கிலாமறையவரொவர்க்கும்
வினையினன்னிதிமுதலியவளப்பரும்வெறுக்கை
நினையநீண்டதோர்பெருங்கொடையருங்கடனேர்ந்தான். ௨௪

ஏறினான்றொழுதிந்திரன்முதலியவிமையோர்
தேறினார்களுந்தியங்கினார்மயங்கினார்திகைத்தார்
வேறுநாஞ்சொலும்வினையிலைமெய்யிலைம்புலனும்
ஆறினார்களுமஞ்சினாருலகெலாமனுங்க. (௨௫)

மன்றலங்குழற்சனகிதன்மலர்க்கையான்வயிறு
கொன்றலந்தலையொடுநெடுங்கண்கணீர்குளித்தல்
அன்றியத்தொழின்மயனமகளுழத்திடலமரில்
இன்றிரண்டினொன்றாக்குவென்றலைப்படியென்றான். (௨௬)

பலகளந்தலைமௌலியோடியங்குறப்பஃறோள்
அலகளந்தறியாநெடும்படைகளோடலங்க
விலகளந்தருகடற்றனைவிசும்பொடுவிம்ம
உலகளந்தவன்வளர்ந்தனனுமெனவுயர்ந்தான். (௨௭)

விசும்புவிண்டிருகூறுறக்குலவரைவெடிப்பப்
பசும்புண்விண்டெனப்புடைபடப்பகலவன்பசும்பொற்
றசும்புமின்றிடைந்திரிந்திடமதிதகையமுதின்
அசும்புசிந்திநொந்துலைவுறத்தோள்புடைத்தார்த்தான். (௨௮)

கணித்துவெஞ்சமமென்பதோருவகையினலத்தால்
திணித்தடங்கிரியிடிந்திடச்சிலையைநாணெறித்தான்
மணிக்கொடுங்குழைவானவர்தானவர்மகளிர்
துணுக்கமுற்றனர்மங்கலநாண்களைத்தொட்டார். (௨௯)

சரித்துமண்டலந்தூங்குநீர்சரிப்புறவீங்க
இரைத்துப்பல்லுயிர்யாவையுநடுக்கமுற்றிரியப்
பரித்திலன்புவிபடர்சுடர்மணித்தலைபலவும்
விரித்தெழுந்தனனநந்தனமீதெனப்பொலிமெய்யன். (௩0)

தோன்றினன்வந்தசுரர்களோடசுரரோதொடங்கி
மூன்றுநாட்டினுமுள்ளவர்யாரொடுமுடிய
ஊன்றினன்செருவென்றுயிருமிழ்தரவுதிரம்
கான்றநாட்டங்கள்வடவனறகிருமடிகனல. (௩௧)

உலகிற்றோன்றியமறுக்கமுமிமைப்பிலருலைவும்
மலையும்வானமும்வையமுமறுகுறுமறுக்கும்
அலைகொள்வேலைகளஞ்சினசலிக்கின்றவயர்வும்
தலைவனேமுதற்றண்டலிலோரொலாங்கண்டார். (௩௨)

பீறிற்றுமண்டமென்பதோராகுலம்பிறக்க
வேறிட்டோர்பெருங்கம்பலைபம்பிமேல்வீங்க
மாறிப்பல்பொருண்மயக்குறுகாலத்துமறுக்கம்
ஏறிற்றுற்றுளதென்னைகொலாமெனவெழுந்தார். (௩௩)

கடர்கள்யாவையுங்கனமலைக்குலங்களுங்காரும்
திடர்கொண்மேருவும்விசும்பிடைச்செல்வனசிவண
அடர்கொள்சேனையுமரக்கனுந்தேரும்வந்தார்க்கும்
குடர்கொள்பேரொலிக்கம்பலையென்பதுங்கொண்டார். (௩௪)

எழுந்துவந்தனனிராவணனிராக்கதத்தானைக்
கொழுந்துமுந்துவந்துற்றதுகொற்றவகுலுங்குற்
றழுந்துகின்றதுநம்பலமமரருமஞ்சி
விழுந்துசிந்தினரொன்றனன்வீடணன்விரைவான். (௩௫)

வேறு.

தொழுங்கையொடுவாய்குழறிமெய்ம்முறைதுளங்க
விழுந்தகவிசேனையிடுபூசன்மிகவிண்ணோர்
அழுந்தஞருணர்ந்தமளியாடரவினந்நாள்
எழுந்தபடியேகடிதெழுந்தனனிராமன். (௩௬)

கடக்களிறெனத்தகைய கண்ணனொருகாலன்
விடக்கயிறெனப்பிறழும்வாள்வலன்விசித்தான்
மடக்கொடி துயர்க்குநெடுவானினுறைவோர்தம்
இடர்க்கடலினுக்குமுடிவின்றெனவிசைத்தான். (கள)

தன்னகவசத்துலகுதங்கவொருதன்னின்
பின்னகவசத்தபொருளில்லைபெரியோனை
மன்னகவசத்துறவரிந்ததெனின்மாதோ
இன்னகவசத்தையுமொரீசனெனலாமால். (கஅ)

புட்டிலொடுகோதைகள்புழுங்கியெரிகூற்றின்
அட்டிலெனலாயமலரங்கையினிலங்கக்
கட்டியுலகிற்பொருளெனக்கணையில்வாளி
வட்டில்புறம்வைத்தவையலங்குறவரிந்தான். (கக)

மூண்டசெருவின்றளவின்முற்றுமினிவெற்றி
ஆண்டகையதுண்மையினியச்சமகல்வுற்றீர்
பூண்டமணியாழிவயமாவிமிர்பொலந்தேர்
ஈண்டுவிடுவீரமரரொன்றயுனிசைத்தான். (ச0)

தேவரதுகேட்டி துசெயற்குரியதென்று
ஏவல்புரியிந்திரவெனத்தொழுதிசைத்தார்
மூவுலகும்வந்தொருகணத்தின்மிசைமுற்றிக்
கோவில்புகுதற்பொருவிறேர்கொணர்தியென்றான். (சக)

வந்ததனைவானவர்வணங்கிவலியோய்நீ
எந்தைதரவந்தனையெமக்குதவுகிற்பாய்
தந்துதவுவென்றியெனநின்றுதகைமென்பூச்
சிந்தினர்கண்மாதலிகடாவினனிசென்றான். (சஉ)

மாதலிகொணர்ந்தநன்மகோததிவளாவும்
பூதலமெழுந்துபடர்தன்மையபொலன்றேர்
சீதமதிமண்டிலமுமேனையுளவுந்திண்
பாதமெனநின்றதுபடர்ந்ததுவிசும்பின். (சா)

குலக்கிரிகளேழின்வலிகொண்டுயர்கொடிஞ்சும்
அலக்குமுயர்பாரும்வலியாழியுநலச்சும்
கலக்கறவகுத்ததுகதத்தரவமெட்டின்
வலக்கயிறுகட்டியதுமுட்டியதுவானை. (சச)

யாண்டினொடுநாளிருதுதிங்களிவையென்று
மீண்டனவுமேலனவுமீட்டிவிரிதட்டில்
பூண்டுளதுதாரகைமணிப்பொருவில்கோவை
நீண்டபுனைதாரினதுநின்றுளதுகுன்றின். (சடு)

மாதிரமனைத்தையுமணிச்சுவர்களாகக்
கோதறவகுத்ததுமழைக்குழுவையெல்லாம்
மீதுறுபதாகையெனவீசியதுமெய்ம்மைப்
பூதமவையைந்தின்வலியிற்பொலிவதம்மா. (சகூ)

மரத்தொடுமருந்துலகில்யாவுமுளவாரித்
தரத்தொடுதொடுத்தகொடிதங்கியதுசங்கக்
கரத்தொடுதொடுத்தகடன்மீதுமிமிர்காலத்
துரத்தொடுதொடுத்தகதழோசையதனோசை. (சஎ)

பண்டரிதனுந்தியயன்வந்தபழமூர்த்தைப்
புண்டரிகமொட்டனையமொட்டினதுபூதம்
உண்டவைவயிற்றிடையொடுக்கியுமிழ்கிற்போன்
அண்டசமணிச்சயனமொப்பதகலத்தின். (சஅ)

வேதமொருநாலுமுறைவேள்விகளும்வெவ்வே
றோதுமலையேழுமலையேழுமுலகேழும்
பூதமவையைந்துமெரிமூன்றுநனிபொய்தீர்
மாதவமுமாவுதியுமைம்புலனுமற்றும். (சகூ)

அருங்கரணமைந்துசுடரைந்துமறைநாலும்
ஒருங்கரணமூன்றுமுழல்வாயுவொருபத்தும்
பெரும்பகலுநீளிரவுமென்றிவைபிணிக்கும்
பொரும்பரிகளாகினனிபூண்டதுபொலன்றேர். (ருO)

வினைப்பகைவிசைக்கொடுவிசும்புருவிமான
மனத்தின்விசைபெற்றுளதுவந்ததெனவானோ
டனைத்துலகமுந்தொழவடைந்ததமலன்பால்
நினைப்புமிடைபிற்படநிமிர்ந்துயர்நெடுந்தேர். (ருக)

அலரிதனியாழிபுனைதேரிதெனினன்றால்
உலகின்முடிவிற்பெரியவூழொளியதன்றால்
நிலைகொணெடுமேருகிரியன்றுநெடிதம்மா
தலைவரொருமூவர்தனிமானமதுதானே. (ருஉ)

என்னையிதுநம்மையிடையெய்தலெனவெண்ணு
மன்னவர்தமன்னன்மகன்மாதலியைவந்தாய்
பொன்னினொளிதேரிதுகொடார்புகறியென்றான்
அன்னவனுமன்னதனையாகவுரைசெய்தான். (ருங)

முப்புரமெரித்தவனுநான்முகனுமுன்னாள்
அப்பகலியற்றியுளதாயிரமருக்கர்க்
கொப்புடையதூழிதிரிகாலுமுலைவில்லா
இப்பொருவிறேர்வருவதிந்திரனதெந்தாய். (ருச)

நீருமுளதேயிதனினீரிலெழுகிற்கும்
பாருமுளதேயிதினிரட்டியவைபண்பின்
பேருமொருகாலேயிருகாலேயிடைபோராத்
தேருமுளதேயிதுவலாலுலகுசெய்தோய். (ருரு)

கண்ணுமனமுந்நெடியகாலுமிவைகண்டால்
உண்ணும்விசையாலுணர்வுபிற்படரவோடும்
விண்ணுநிலனும்மெனும்விசேடமில்தஃதே
எண்ணினெடுநீரினுநெருப்பிடையுமெந்தாய். (ருசு)

அண்டமிதுபோல்வனவளப்பிலவடுக்கிக்
கொண்டுபெயருங்குறுகுநீளுமிவைகோளுற்
றுண்டவன்வயிற்றினையுமொக்குமுறுகிற்கின்
புண்டரிகனின்சரமெனக்கடிதுபோமால். (ருஎ)

தேவருமுனித்தலைவருஞ்சிவனுமேனுள்
மூவுலகளித்தமுதலும்முதல்வமுன்னின்
றேவினர்சுரர்க்கிறைவனீந்துளதிதென்று
மாவின்மனமொப்பவுணர்மாதலிவலித்தான். (ருஅ)

ஐயனதுகேட்டிதவரக்கர்தனிமாயச்
செய்கைகொலெனச்சிறிதுசிந்தையுணினைந்தான்
மெய்யவனுரைத்ததெனவேண்டியிடைபூண்ட
மொய்யரிவயப்பரிமொழிந்தமுதுவேதம். (ருகூ)

இல்லையினியையமெனவெண்ணியவிராமன்
நல்லவினைநீயுனதுநாமநவில்கென்ன
வல்லதனையூர்வதொருமாதலியெனப்பேர்
சொல்லுவனெனத்தொழுதுநெஞ்சினொடுசொன்னான். (சுO)

மாருதியைநோக்கியிளவாளரியைநோக்கி
நீர்கருதுகின்றதைநிகழ்த்துமெனநின்றான்
ஆரியன்வணங்கியவரையமிலைமெய்யே
தேரிதுபுரந்தரனதென்றனர்தெரிந்தார். (சுக)

விழுந்துபுரடவினைகுலத்தொடும்வெதும்பத்
தொழுந்தகையநல்வினைகணத்தினொடுதுள்ள
அழுந்துதுயரத்தமரரந்தணரழுந்தா
தெழுந்துகளையேறவினிதேறினனிராமன். (சுஉ)

தேரோறுபடலம்முற்றிற்று- ஆ திருவிருத்தம்- ௩சுஎ.

---

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.



ஆழியந்தடந்தேர்வீரனேறலுமமலைச்சில்லி
பூழியிற்சுரித்ததன்மைநோக்கியபுலவரெல்லாம்
ஊழிவெங்காற்றின்வெய்யகலுழனையொன்றுஞ்சொல்லார்
வாழியவநுமன்றோளேயேத்தினார்மலருந்தூவி. (௧)

எழுகதேர்சுமக்கவெல்லாவலியும்புக்கின்றேபொன்றி
விழுகபோரரக்கன்வெல்கவேந்தர்தம்வேந்தன்விம்மி
அழுகபோரரக்கிமாரொன்றார்த்தனரமரராழி
முழுகிமீதெழுந்ததென்னச்சென்றதுமூரித்திண்டேர். (௨)

அன்னதுகண்ணிற்கண்டவரக்கனுமமரரீந்தார்
இந்நெடுந்தேரொன்றெண்ணிவாய்மடித்தெயிறுதின்றான்
பின்னதுகிடக்கவென்னாத்தன்னுடைப்பெருந்திண்டேரை
மின்னகுவரிவிற்செங்கையிராமன்மேல்விடுதியென்றான். (௩)

இரிந்தனகவிகளெல்லாமிமையவரிரதமீந்தார்
அரிந்தமன்வெல்லுமென்பதையுறவில்லென்றஞ்சா
திரிந்தனமராமுங்கல்லுஞ்சிந்தினதிசையொடண்டம்
பிரிந்தனகொல்லென்றெண்ணப்பிறந்ததுமுழக்கின்பெற்றி. (௪)

வார்ப்பொலிமுரசினோதைவயவர்வாய்ப்புடையினோதை
போர்த்தொழின்முரசமற்றுமுற்றியபொம்மலோதை
பார்த்திலர்யாரும்பார்வீழ்ந்தடங்கினரிருவராடற்
றேர்க்குரலோதைபொங்கிச்செவிமுற்றுஞ்செவிடுசெல்ல. (௫)

மாதலிவதனநோக்கிமன்னவர்மன்னன்மைந்தன்
காதலகருமமொன்றுகேட்டியாற்களித்தசிந்தை
ஏதிலன்மிகுதியெல்லாமியற்றியபின்றையென்றன்
சோதனைநோக்கிச்செய்திதுடிப்பிலையென்னச்சொன்னான். (௬)

வள்ளனின்கருத்துமாவின்சிந்தையுமாற்றலார்தம்
உள்ளமுமிகையுமுற்றகுற்றமுமுறுதிதானும்
கள்ளமில்காலப்பாடுங்கருமமுங்கருதேனாகின்
தெள்ளிதென்விஞ்சையென்றானமலனுஞ்செவ்விதென்றான். (௭)

தோன்றினனிராமனெந்தாய்புரந்தரன்றுரகத்தேர்மேல்
ஏன்றிருவிருக்கும்வெம்போரெய்தியதிடையேயானோர்
சான்றெனநிற்றல்குற்றந்தருதியால்விடையீண்டென்றான்
வான்றொடர்குன்றமன்னமகோதரனிலங்கைமன்னை. (௮)

அம்புயமனையகண்ணன்றன்னையானரியினேறு
தம்பியைத்தொலைத்தாலென்னத்தொலைக்குவென்றொடர்ந்துநின்ற
தம்பியைத்தடுத்தியாயிற்றந்தனைவென்றியென்றான்
வெம்பிகலரக்கனஃதேசெய்வெனென்றவனின்மீண்டான். (௯)

மீண்டவனிளவனின்றபாணியின்விலகாமுன்னம்
ஆண்டகைதெய்வத்திண்டேரணுகியதணுகுங்காலை
மூண்டெழுவெகுளிபொங்கமகோதரன்முனிந்துமுட்டத்
தூண்டுதிதேரையென்றான்சாரதிதொழுதுசொல்வான். (௧0)

எண்ணருங்கோடிவெங்கணிராவணரோயுமீண்டு
நண்ணினபோதுமீண்டுநடப்பரோகிடப்பதல்லால்
அண்ணறன்றோற்றங்கண்டவையநீகமலமன்ன
கண்ணனையொழியவப்பாற்சேறலேகருமமென்றான். (௧௧)

என்றலுமெயிற்றுப்பேழ்வாய்மடித்தடாவெடுத்துநின்னைத்
தின்றனனென்னினுண்டாம்பழியெனச்சீற்றந்தீர்ந்தான்
குன்றனதோற்றத்தான்றன்கொடிநெடுந்தேரினேரே
சென்றதவ்விராமன்றிண்டேர்விளைந்ததுதிமிலத்திண்போர். (௧௨)

பொற்றடந்தேருமாவும்பூட்கையும்புலவுவாழ்க்கைக்
கற்றடந்திண்டோளாளுநெருங்கியகடல்களெல்லாம்
வற்றியவிராமன்வாளிவடவனல்பருகவன்றாள்
ஒற்றைவன்றடந்தேரோட்டிமகோதரனொருவன்சென்றான். (௧௩)

அசனியேறிருந்தகொற்றக்கொடியின்மேலரவத்தேர்மேல்
குசைவிடுபாகன்றன்மேற்கொற்றவன்குவவுத்தோண்மேல்
விசையுறுபகழிமாரிமாரியின்மும்மைவீசித்
திசைமுகங்கிழியவார்த்தான்றீர்த்தனுமுறுவல்செய்தான். (௧௪)

வில்லொன்றாற்கவசமொன்றால்விறற்கரமோரோவொன்றாலக்
கல்லொன்றுதோளுந்தாளுமொவ்வொன்றாற்கழுத்துமொன்றால்
செல்லொன்றுகணையாலையன்சிந்தினன்செப்பிவந்த
சொல்லொன்றாய்ச்செய்கையொன்றாய்த்துணிந்தனனரக்கன்றுஞ்சி. (௧௫)

மோதரன்முடிந்தவண்ணமூவகையுலகுமுற்றும்
மாதிரத்தோடும்வென்றவன்றொழிலரக்கனின்றான்
சேதனனுண்ணக்கண்டான்செலவிடுசெலவிடென்றான்
சூதனுமுடுகித்தூண்டச்சென்றதுதுரகத்திண்டேர். (௧௬)

பனிப்படாநின்றதென்னப்பரக்கின்றசேனைபாறித்
தனிப்படானென்னினுள்ளந்தாழ்கிலனென்னுந்தன்மை
துனிப்படாநின்றவீரனவனென்றுநோக்காவண்ணம்.
குனிப்படாநின்றவில்லாலொல்லெனநூறிக்கொன்றான். (௧௭)

அடல்வலியரக்கர்க்கப்போதண்டங்களழுந்தமண்டும்
கடல்களும்வற்றவெற்றிக்கால்கிளர்ந்துடற்றுங்காலை
வடவரைமுதலவானமலைக்குலஞ்சலிப்பமானச்
சுடர்மணிவலயஞ்சிந்தத்துடித்தனவிடத்தபொற்றோள். (௧௮)

வேறு.

உதிரவாரிசொரிந்ததுலகெலாம்
அதிரவானமிடித்ததருவரை
பிதிரவீழ்ந்ததசனியொளிபெருக்
கதிரவன்றனையூருங்கலந்ததால். (கக)

வாவும்வாசிநடுங்கினவாங்கலில்
ஏவும்வெஞ்சிலைநாணிடையிற்றன
நாவும்வாயும்புலர்ந்தன்நாண்மலர்ப்
பூவின்மாலைபுலால்வெறிபூத்தவால். (உ0)

இழுகுவீணைகொடேந்துபதாகைமேல்
கழுகுங்காகமுமொய்த்தனகண்ணினீர்
ஒழுகநின்றனவோடியவாடன்மாத்
தொழுவினின்றனபோன்றனசூழிமா. (உக)

இன்னவாகியிமையவர்க்கின்பஞ்செய்
துன்னிமித்தங்கடோன்றினதோன்றவும்
அன்னவொன்றுமுணர்ந்திலனாற்றுமோ
என்னைவெல்லமனித்தனென்றெண்ணுவான். (உஉ)

வீங்குதேர்செலும்வேகத்தின்வெங்கதிர்
ஓங்குநாளினொதுங்குமுலகெனத்
தாங்கலாற்றகிலார்தடுமாற்றத்தால்
நீங்கினாரிருபாலுநெருங்கினார். (உங)

கருமமுங்கடைகாண்குறுஞானமும்
அருமைசேருமவிஞ்சையும்விஞ்சையும்
பெருமைசாநெடும்பாவமும்பேர்கிலாத்
தருமமும்மெனச்சென்றெதிர்தாக்கினார். (உச)

சிரமொராயிரந்தாங்கியசேடனும்
உரவுகொற்றத்துவணத்தரசனும்
பொரவெதிர்ந்தனர்போலப்பொலிந்தனர்
இரவுநன்பகலும்மெனலாயினார். (உரு)

வென்றியந்திசையானைவெகுண்டன
ஒன்றையொன்றுமுனிந்தவுமொத்தனர்
அன்றியுந்நரசிங்கமுமாடகக்
குன்றமன்னவனும்பொருங்கொள்கையார். (உசு)

துவனிவில்லின்பொருட்டொருசொல்லைநாள்
எவனவில்வலியென்றிமையோர்தொழப்
புவனமூன்றும்பொலன்கழலாற்சென்றும்
அவனுமச்சிவனும்மெனலாயினார். (உஎ)

கண்டசங்கரநான்முகர்கைத்தலம்
விண்டசங்கத்தொல்லண்டம்வெடிபட
அண்டசங்கத்தமரர்தமார்ப்பெலாம்
உண்டசங்கமிராவணனூதினன். (உஅ)

சொன்னசங்கினதோசைதுளங்குற
என்னசங்கென்றிமையவரேங்குற
அன்னசங்கைப்பொருமையினாரியன்
றன்னவெண்சங்குதானுமுழங்கிற்றால். (உகூ)

ஐயனேம்படைதாமுமடித்தொழில்
செய்யவந்தயனின்றனதேவரில்
மெய்யனன்னவைகண்டிலன்வேதங்கள்
பொய்யிறன்னைப்புலன்றெரியாமைபோல். (௩0)

ஆசையும்விசும்பும்மலையாழியும்
தேசமும்மலையுந்நெடுந்தேவரும்
கூசவண்டங்குலுங்கக்குலங்கொடார்
வாசவன்சங்கைமாதலிவாய்வைத்தான். (௩க)

அமிலவாளியரக்கன்றுரப்பன
விமலவாயனவீழ்வதன்முன்னமே
கமலவானகநாடியர்கட்கணை
அமலன்மேனியிற்றைத்தவநந்தமால். (௩உ)

சென்றதேரொரிரண்டினுஞ்சேர்த்திய
குன்றிவெங்கட்குதிரைகுதிப்பன
ஒன்றையொன்றுற்றெரியுகநோக்குவ
தின்றுதிர்வனபோலுஞ்சினத்தன. (௩௩)

கொடியின்மேலுறைவீணையுங்கொற்றமா
இடியினேறுமுறையினிடித்தன
படியும்விண்ணும்பரவையும்பண்பற
முடியுமென்பதொர்மூரிமுழக்கின. (௩ச)

எழுவேலையுமார்ப்பெடுத்தென்னலாம்
விழிவெங்கணிராவணன்வில்லொலி
ஆழிநாதன்சிலையொலியண்டம்விண்
டேழிபோர்வுறுமாமழையொத்ததால். (௩ரு)

ஆங்குநின்றவருமனையாதியர்
வீங்குவெஞ்சினவீரர்விழுந்தனர்
எங்குநின்றதலாலொன்றிழைத்திலர்
வாங்குசிந்தையர்செய்கைமறந்துளார். (௩௬)

சேணவந்தரகோக்கலுந்திண்சிரம்
பூணமுந்தினசிந்தினபூமழை
காணவந்தகடவுளர்கையெலாம்
ஆணவந்துணையாருளராவரோ. (௩௭)

ஆவதென்னைகொலாமென்றறிகிலர்
ஏவர்வெல்வரொன்றெண்ணலரோங்குவார்
போவர்மீள்வர்பதைப்பர்பொருமலால்
தேவர்தங்கடஞ்செய்கைமறந்துளார். (௩௮)

நீண்டமின்னெனுவானிடுநீலவில்
பூண்டிரண்டெதிர்நின்றனபோன்றன
ஆண்டவில்லிதன்வில்லுமரக்கன்றன்
தீண்டவல்லரில்லாதசிலையுமே. (௩௯)

அரக்கனன்றெடுத்தார்க்கின்றவார்ப்பும்போர்
உரப்புமோர்விற்றெழிப்புமுண்டேகொலாம்
குரைக்கும்வேலையுமேகக்குழாங்களும்
இரைத்திடிக்கின்றதின்றுமொலிநில. (௪௦)

மண்ணிற்செல்வனசெல்லினுமாசற
எண்ணிற்குன்மழையல்லவிராவணன்
கண்ணிற்சிந்தினதீக்கடுவேகத்தின்
விண்ணிற்செல்வனமீண்டின்றுவீழ்வன. (௪௧)

இக்கணத்துமெறிப்பதடித்தெனச்
செக்கர்மேகத்துதிக்குநெருப்பென
பக்கம்வீசுபடைச்சுடர்பஃறிசை
புக்கபோதப்பொடிப்பனபோக்கில. (௪௨)

மால்கலங்கலில்சிந்தையன்மாதிரம்
நால்கலங்கநகுந்தொறுநாவொடும்
கால்கலங்குவர்தேவர்கணமழைச்
சூல்கலங்கும்விலங்கறுளங்குமால். (௪௩)

சுற்றம்விற்கொடுகொல்லுதல்கோளிலாச்
சிற்றையாளனைத்தேவர்தந்தேரொடும்
பற்றிவானிற்சுழற்றிப்படியின்மேல்
எற்றுவென்னென்றிரைக்குமிரங்குமால். (௪௪)

தடித்துவைத்தன்னவெங்கணைதாக்கற
அடித்துவைத்ததுமானுடற்கேவலி
ஒடித்துத்தேரையுதிர்த்தொருவில்லொடும்
பிடித்துக்கொள்வென்சிறையெனப்பேருமால். (௪௫)

வேறு.

பதைக்கின்றதோர்மனமும்மிடைபடர்கின்றதோர்சினமும்
விதைக்கின்றனபொறிபொங்கினவிழியும்முடைவெய்யோன்
குதைக்குன்றெனநிமிர்வெஞ்சிலைகுழையக்கடுங்கொடுங்கால்
உதைக்கின்றனசுடர்வெங்கணையுருமேறெனவெய்தான். (சகூ)

உருமொப்பனவனலொப்பனவூற்றந்தருகூற்றின்
மருமத்தினுநுழைகிற்பனமழையொப்பனவானோர்
நிருமித்தனபடைபற்றறநிமிர்வுற்றனவமுதப்
பெருமத்தினைமுறைசுற்றியபெரும்பாமபினும்பெரிய. (சஎ)

துண்டப்படநெடுமேருவைத்துணித்துள்ளிறைதூங்கா
தண்டத்தையும்பொதுத்தேகுமென்றிமையோர்களுமயிர்த்தார்
கண்டத்தெறுகணைக்காற்றினைக்கருணைக்கடல்கனகச்
சண்டச்சரமழைகொண்டவையிடையேயறத்தடுத்தான். (சஅ)

உடையான்முயன்றுறுகாரியமுறுதீவினையுடற்ற
இடையூறுறச்சிதைந்தாங்கெனச்சரஞ்சிந்தினவிறலும்
தொடையூறினகணைமாரிகடொகைதீர்ந்தனதுரந்தான்
கடையூறுறுகணமாமழைகால்வீழ்ந்தெனக்கடிவான். (சகூ)

விண்போர்த்தனதிசைபோர்த்தனமலைபோர்த்தனவிமையோர்
கண்போர்த்தனகடல்போர்த்தனபடிபோர்த்தனகலையோர்
எண்போர்த்தனவெரிபோர்த்தனவிருள்போர்த்தனவென்னே
திண்போர்த்தொழிலென்றுனையினுரிபோர்த்தவன்திகைத்தான். (ருo)

அல்லாநெடும்பெருந்தேவருமறைவாணருமஞ்சி
எல்லாருந்தங்கரங்கொண்டிருகண்பொத்தினரிருந்தார்
செல்லாயிரம்விழுங்காலுகும்விலங்கொத்ததுசேனை
வில்லாளனுமதுகண்டவைவிலக்குந்தொழில்வேட்டான். (ருக)

செந்தீவினைமறையாளனுக்கொருவன்சிறுவிலைநாள்
முந்தீந்ததொருணவின்பயனென்னலாயினமுதல்வன்
வந்தீந்தனவடிவெங்கணையனையான்வகுத்தமைத்த
வெந்தீவினைப்பயனொத்தனவரக்கன்சொரிவிசிகம். (ருஉ)

நூறுயிரவடிவெங்கணைநொடியொன்றினின்விடுவோன்
ஆறுவிறன்மறவோனவைதனிநாயகனறுப்பான்
கூறுயினகனல்சிந்துவகுடிக்கப்புனல்குறுகிச்
சேருவனபொடியர்வனதிடராவணகடலால். (ருங)

வில்லாற்சரந்தொடுக்கின்றவற்றிடையேமிடல்வெம்போர்
வல்லான்மழுவெழுத்தோமரமணித்தண்டிருப்புலக்கை
தொல்லாரயில்வாள்சக்கரஞ்சூலம்மிவைதொடக்கத்
தெல்லாநெடுங்கரத்தாலெடுத்தெறிந்தான்செருவறிந்தான். (ருச)

வேலாயிரமழுவாயிரமெழுவாயிரம்விசிகக்
கோலாயிரம்பிறவாயிரமொருகோல்படக்குறையும்
காலாயினகனலாயினவுருமாயினகனியச்
சூலாயினமழையன்னவன்றொடைபல்வகைதொடுக்க. (௫௫)

ஒத்துச்செருவிளைக்கின்றதொரளவின்றலையுடனே
பத்துச்சிலையெடுத்தான்கணைதொடுத்தான்பலமுகிலாத்
தொத்துப்படநெடுந்தாரைகள்சொரிந்தாலெனத்தூர்ந்தான்
குத்துக்கொடுநெடுங்கோல்படிகளிறுமெனக்கொதித்தான். (௫௬)

ஈசன்விடுசரமாரியுமெரிசிந்துறுதறுகண்
நீசன்விடுகணைமாரியுமிடையெங்கணுநெருங்கத்
தேசம்முதலியபூதமுஞ்செருக்கண்டனசெருக்கிக்
கூசிம்மயிர்பொடிப்புற்றனவெனலாயனகுலைய. (௫௭)

வேறு.

மந்தரமலையெனமருந்துமாருதி
தந்தவப்பொருப்பெனப்புரங்கடாமெனக்
கந்தருப்பநகர்விசும்பிற்கண்டெனு
அந்தரத்தெழுந்ததவ்வரக்கன்றேரரோ. (௫௮)

எழுந்துயர்தேர்மிசையிலங்கைகாவலன்
பொழிந்தனன்சரமழையுருவிப்போதலால்
ஒழிந்ததுமொழிகிலதென்னவொல்லெனக்
கழிந்ததுகவிக்குலமிராமன்காணவே. (௫௯)

முழவிடுதோளொடுமுடிகொள்பஃறலை
விழவிடுவெனினிவிசும்புசேமமா
மழவிடையனையநம்படைஞர்மாண்டனர்
எழவிடுதேரெனவிராமன்கூறினன். (௬௰)

அந்துசெய்குவெனெனவறிந்தமாதலி
உந்தினன்றேரொனுமூழிக்காற்றினை
இந்துமண்டிலத்தின்மேலிரவிமண்டிலம்
வந்தெனவந்ததம்மானத்தேரரோ. (௬௧)

இரிந்தனமழைக்குலமிழுகித்திக்கெலாம்
முரிந்தனவுடுக்குலமுதிர்ந்துசிந்தின
தெரிந்தனநெடுவரைகுடுமிதேர்முறை
திரிந்தனசாரிகைதேருந்தேருமே. (௬௨)

வலம்வருமிடம்வருமறுகிவாரொடு
நிலம்வருமிடம்வலநிமிரும்வேலையும்
அலம்வருங்குலவரையனைத்துமண்டமும்
சலம்வருங்குலான்மகன்றிகிரித்தன்மைபோல். (௬௩)

எழும்புகழிறைவன்றோரரக்கன்றேரிதென்
றழுந்தருள்பொழுதினெவ்வுலகுஞ்சேர்வன
தழும்பியதேவருந்தெரிவுதந்திலர்
பிழம்பினதிரிவனவென்னும்பெற்றியால். (௬௪)

உக்கலாவுடுக்களுமுருள்கடாக்கலின்
நெக்கலாமலைகளுநெருப்புச்சிந்தலின்
வட்கலாத்திசைகளுமுதிரம்வாய்வழிக்
கக்கலாவுயிர்களுமில்லைக்காண்பன. (௬௫)

இந்திரனுலகத்தாரொன்பரொன்றவர்
சந்திரனுலகத்தாரொன்பர்தாமரை
யந்தணனுலகத்தாரொன்பரல்லரால்
மந்தரமலையினரொன்பர்வானவர். (௬௬)

பாற்கடனடுவணரொன்பர்பல்வகை
மாற்கடலேழுக்கும்வரம்பிலாரொன்பர்
மேற்கடலாரொன்பர்கிழக்குளாரொன்பர்
ஆர்ப்பிடையிதுவென்பரறியுந்தேவரும். (௬௭)

மீண்டனவோவென்பர்விசும்பைவிண்டுகக்
கீண்டனவோவென்பர்கீழவோவென்பர்
பூண்டனபுரவியோபுதியகாற்றென்பர்
மாண்டனவுலகமென்றுரைக்கும்வாயினர். (௬௮)

ஏழுடைக்கடலினுந்தீவோரேழினும்
ஏழுடைமலையினுமுலகமேழினும்
சூழுடையண்டத்தின்சுவர்களெல்லையா
வூழியிற்காற்றெனத்திரிந்தவோய்வில. (௬௯)

உடைக்கடலேழினுமுலகமேழினும்
இடைப்படுதீவினுமலையோரேழினும்
அடைக்கலப்பொருளெனவரக்கன்வீசிய
படைக்கலமழைபடுதுளியின்பான்மைய. (௭0)

ஒறுத்துலகனைத்தையுமுழலுமோட்டிடை
இறுத்திலவிராவணனெறிந்தவெய்தன
அறுத்ததுந்தடுத்ததுமன்றியாரியன்
செறுத்தொருதொழிலிடைசெய்ததில்லையால். (௭௧)

விலங்கலும்வேலையுமேலுங்கீழரும்
அலங்கொளிதிரிதருமுலகனைத்தையும்
கலங்குறத்திரிவதோரூழிகாலக்காற்
றிலங்கையையெய்தினபகலோரேழினே. (௭௨)

உய்த்துலகனைத்தையுமுழன்றசாரிகை
மொய்த்துயர்கடலிடைமணலின்மும்மைய
வித்தகர்கடவியவிசயத்தேர்ப்பரி
எய்த்திலவுயிர்த்திலவிரண்டுபோலவும். (எ௩)

இந்திரன்றேரின்மீதுயர்ந்தவெந்தொழில்
உந்தரும்பெருவலியுருமினேற்றினைச்
சந்திரனனையதோர்சரத்தினூற்றனா
சிந்தினனிராவணனெரியுஞ்சிந்தையான். (எ௪)

சாய்ந்தவல்லுருமுபோயரவத்தாழ்கடல்
பாய்ந்தவெங்கனலெனமுழங்கிப்பாய்தலும்
காய்ந்தபேரிருப்பின்வன்கட்டிகாலுறத்
தோய்ந்தநீராமெனச்சுருங்கிற்றுழியே. (எ௫)

எழுத்தெனச்சிதைவிலாவிராமன்றேர்ப்பரிக்
குழுக்களைக்கூர்ங்கணைக்குப்பையாக்கினோர்
வழுத்தகுமாதலிவயிரமார்பிடை
அழுத்தினன்கொடுஞ்சரமாறுடாறரோ. (எ௬)

மண்டிலவரிசிலைவானவில்லொடும்
துண்டவெண்பிறையெனத்தோன்றத்தூவிய
உண்டவெங்கடுங்கணையொருங்குமூடலால்
கண்டிலரிராமனையிமைப்பில்கண்ணினூர். (எஎ)

தோற்றனனேயினியென்னுந்தோற்றத்தால்
ஆற்றலரமருமச்சமெய்தினூர்
வேற்றலரார்த்தனர்மேலுங்கீழரும்
காற்றியக்கற்றதுகலங்கிற்றண்டமே. (எஅ)

அங்கியுந்தன்னொளியடங்கிற்றூர்கலி
பொங்கலதிர்த்தனவிசும்பிற்போகில
வெங்கதிர்தண்கதிர்விலகிமீண்டன
மங்குலுநெடுமழைவறந்துசாய்ந்தவால். (எ௯)

திசைநிலைக்கடகரிசெருக்குச்சிந்தின
அசைவிலவேலைகளார்க்கவஞ்சின
விசையொடுவிசாகத்தைநெருக்கியேறினன்
குசனெனமேருவுங்குலுக்கமுற்றதே. (அ௦)

வானரத்தலைவனுமிளையமைந்தனும்
ஏனைத்தலைவனைக்காண்கிலேமெனக்
கானகக்கரியெனக்கலங்கினூர்கடல்
மீனெனக்கலங்கினூர்வீரர்வேறுளார். (அ௧)

நீணிறநிருதர்கோனெய்தநீதியிற்
சால்புடைமாதலிமார்பிற்றைத்தவெங்
கோலினமிலக்குவன்கோலமார்பின
வேலினும்வெம்மையைவிளைத்தவீரற்கும். (அஉ)

எய்தனசரமெலாமிமைப்பின்மூன்றறக்
கொய்தனனகற்றிவெங்கோலின்கோவையால்
நெய்தனவிசும்பினைநிரப்பிநேர்ந்தெனச்
செய்தனனிராகவனமரர்தேறினார். (அங)

வேறு.

தூணுடைநிணபுணைகரம்வைதொறுமக்
கோணுடைமலைநிகர்சிலையிடைகுறையச்
சேணிடைநிமிர்கணைசிதறினனுணர்வோ
னூணுடையுயிர்தொறுமுறைவுறுமொருவன். (அச)

கயில்விரிவுறவரிகவசமுமுருவிப்
பயில்விரிகுருதிகள்பருகிடவெயிலோ
டயில்விரிசுடுகணைகடவினனறிவின்
துயில்வுழியுணர்தருசுடரொளியொருவன். (அரு)

திசையுறுதுகிலதுசெறிமழைசிதறும்
விசையுறுமுகிழதுவிரிதருசிரனோ
டிசையுறுகருவியினிதுறுகொடியைத்
தசையுறுகணைகொடுதரையுறவிடலும். (அசு)

படையுகவிமையவர்பருவரல்கெடவந்
திடையுறுசிறைதிசையிமூகுறவிறைவன்
அடையுறுகொடிமிசையணுகினனளவில்
கடையுகமுடிவெழுகடல்புரைகலுழன். (அஎ)

பண்ணவனுயர்கொடியினையொருப்ரவைக்
கண்ணகனுலகினைவலம்வருகலுழனை
நண்ணலுமிமையவர்நமதுறுகருமம்
எண்ணலமுனிவினனிவறினனெனவே. (அஅ)

ஆயதொரமைவினினறிவினினமைவான்
நாயகனொருவனைநலிகிலதுணரான்
ஏயினனிருளுறுதாமதமெனுமத்
தீவினைதருபடைதெறுதொழின்மறவோன். (அகூ)

தீமுகமுடையனசிலமுகமுதிரம்
தோய்முகமுடையனசுரர்முகமுடைய
பேய்முகமுடையனபலமுகனுழையும்
வாய்முகம்வரியரவனையனவருவ. (கூ0)

ஒருதிசைமுதல்கடையொருதிசையளவும்
இருதிசையெயிறுறவருவனவெரியக்
கருதியகருதியபுரிவனகனலும்
பரிதியைமதியொடுபருகுவபகழி. (கக)

இருளொருதிசையொருதிசைவெயிலெரியின்
சுருளொருதிசையொருதிசைமழைதொடரும்
உருளொருதிசையொருதிசையுருமுடலும்
மருளொருதிசையொருதிசைசிலைவருடம். (கஉ)

இனையனநிகழ்வுறவெழுவகையுலகும்
கனையிருள்கதுவிடவுயிரிடைகதற
வினையுறுதொழிலிடைவிரவலும்விமலன்
நினைவுறுதகைமையினெறியுறுமுறையின். (கங)

கண்ணுதலொருவனதடுபடைகருதிப்
பண்ணவன்விடுதலுமதுநனிபருக
எண்ணுறுகனவிறலுணர்வெனவிமையில்
துண்ணெனுநிலைமையினெறிபடைதொலைய. (கச)

வேறு.

விரிந்ததன்படைமெய்கண்டபொய்யெனவீய
எரிந்தகண்ணினனெயிற்றினைக்கடித்தனனெரியின்
தெரிந்தவெங்கணைகங்கவெஞ்சிறையன்னதிறத்த
அரிந்தமன்றிருமேனிமேலழுத்தினின்றார்த்தான். (கரு)

ஆர்த்துவெஞ்சினத்தாசுரப்படைக்கலமமரர்
வார்த்தையுண்டதின்னுயிர்களான்மறலியின்வயிற்றைத்
தூர்த்ததிந்திரன்வலந்தனைத்தொலைத்ததுதொடுத்துத்
தீர்த்தன்மேற்செலத்துரந்தனனுலகங்கடிரிய. (கசு)

ஆசுரப்பெரும்படைக்கலமமரரையமரில்
ஏசுவிப்பதெவ்வுலகமுமெவரையும்வென்று
வீசுவெற்பிறத்துரந்தவெம்படையெனவிசையின்
பூசுரர்க்கொருகடவுண்மேற்சென்றதுபோலாம். (கஎ)

நூங்குகின்றதிவ்வுலகையோர்நொடிவரையென்ன
எங்குநின்றுநின்றலமருமமரர்கண்டிமைப்ப
மங்குல்வல்லுருமேற்றின்மேலெரிமடுத்தென்ன
அங்கிதன்னெடும்படைதொடுத்திராகவனறுத்தான். (கஅ)

கூற்றுக்கோடினுங்கோடலகடலெலாங்குடிப்ப
நீற்றுக்குப்பையின்மேருவைநூறுவநெடிய
காற்றுப்பின்செலச்செல்வனவுலகெலாங்கடப்ப
தூற்றுக்கோடியம்பெய்தனனிராவணனொடியின் (ககூ)

என்னகைக்கடுப்போவென்பர்சிற்சிலரிவையும்
மன்னுமாயமேயம்பலவாமென்பரம்புக்
கின்னமுண்டுகொலிடமென்பர்சிற்சிலரிகற்போர்
முன்னமித்தனைமுயன்றிலனுமெனமொழிவார். (௧௦௦)

மறைமுதற்றனிநாயகன்வாளியைமறைத்த
சிறையுடைக்கொடுஞ்சரமெலாமிமையொன்றிற்றீய
அறைசிகைப்பெருந்தலைநின்றும்புங்கத்தினளவும்
பிறைமுகத்தடங்கடுங்கொடுஞ்சரங்களாற்பிளந்தான். (௧௦௧)

அயன்படைத்தபேரண்டத்தினருந்தவமாற்றிப்
பயன்படைத்தவர்யாரினும்படைத்தவன்பல்போர்
வியன்படைக்கலந்தொடுப்பெனினியென்றுவிரைந்தான்
மயன்படைக்கலந்தொடுத்தனன்றயரதன்மகன்மேல். (௧௦௨)

விட்டனன்விடுப்படைக்கலம்வேறொருலகைச்
சுட்டனன்னெனத்துணுக்கமுற்றமரருஞ்சுருண்டார்
கெட்டனம்மெனவானரத்தலைவருங்கிழிந்தார்
சிட்டர்தந்தனித்தேவனுமதனிலைதெரிந்தான். (௧௦௩)

பாந்தடப்பஃறலைப்பரந்தகன்றவிசிடைப்பார்மேல்
மாந்தர்க்கில்லையால்வாழ்வெனவருகின்றவதனைக்
காந்தர்ப்பம்மெனுங்கடுங்கொடும்படையினாற்கடந்தான்
ஏந்தற்பன்மணியெறும்வலித்திரள்புயத்திராமன். (௧௦௪)

தாருகன்பண்டுதேவரைத்தகர்த்ததுதனிமா
மேருமந்தரம்புரைவதுவெயிலன்னவொளிய
தோருகந்தனையுலகின்றுருட்டினுமுருளாச்
சிருகந்ததுமுகந்ததுதானவர்சிரங்கள். (௧௦௫)

பண்டுநான்முகன்படைத்ததுகனகனிப்பாரைத்
தொண்டுகொண்டதுமதுவெனுமௌணன்முன்றொட்ட
துண்டதென்வயினதுதுரந்துயிருண்பெனென்றோர்
தண்டுகொண்டெறிந்தானைத்தொடைந்துடைத்தலையான். (௧௦௬)

பசும்புனற்பெரும்பரவைபண்டுண்டவன்பணிப்புற்
றசும்புபாய்கின்றதருக்கனிலொளிர்கின்றதண்டம்
தசும்புபோலுடைந்தொழியுமென்றிமையவர்தளர
விசும்புபாழ்படவந்ததுமந்தரம்வெருவ. (௧௦௭)

கண்டுதாமரைக்கட்வுண்மாக்கதையெனக்கதையா
அண்டர்நாயகனுயிரத்தளவினுமடங்காப்
புண்டரீகத்தின்மொட்டன்னபுகர்முகம்விட்டான்
உண்டைநூறுடனூறுபட்டுளதெனவுதிர்த்தான். (௧௦௮)

சேயைநின்றவன்சிலைவலங்காட்டினன்றீராப்
பேயையென்பலதுரப்பதிங்கிவன்பிழையாமல்
ஆயதன்பெருங்கிளையொடும்படையொடுமவிய
மாயையின்படைதொடுப்பெனென்றிராவணன்வலித்தான். (கoக)

பூசனைத்தொழில்புரிந்துதான்முறைமையிற்போற்றும்
ஈசனைத்தொழுதிருடியுஞ்சந்தமுமெண்ணி
ஆசையெட்டினுமந்தரப்பரப்பினுமடங்கா
வீசனிற்செலவில்லிடைத்தொடைகொண்டுவிட்டான். (கக0)

மாலையபொத்தியவயப்படைவிடுதலும்வரம்பில்
காயமத்தனையுங்நெடுங்காயங்கள்கதுவ
ஆயுவுற்றெழுந்தாரெனவார்த்தனரமரில்
தூயகொற்றவர்சுடுசரத்தாலமர்துணிந்தார் (கக‌க)

இந்திரற்கொருபகைஞனுமவற்கிளையோனும்
தந்திரப்பெருந்தலைவருந்தலைத்தலையோரும்
மந்திரச்சுற்றத்தவரொடுவரம்பிலர்பிறரும்
அந்தரத்தினைமறைத்தனர்மழையுகவார்ப்பார் (ககஉ)

குடப்பெருஞ்செவிக்குன்றமுமற்றுளகுழுவும்
படைத்தமூலமாத்தானையுமுதலியபட்ட
விடைத்தெழுந்தனயானைதேர்பரிமுதல்வெவ்வே
றடைத்தவூர்திகளனைத்தும்வந்தவ்வழியடைய. (ககங)

ஆயிரம்பெருவெள்ளமென்றறிஞரேயறைந்த
காய்சினப்பெருங்கடற்படைகளப்பட்டவெல்லாம்
ஈசனிற்பெற்றவரத்தினலெய்தியவென்னத்
தேசமுற்றவுஞ்செறிந்தனதிசைகளுந்திசைப்ப. (ககச)

சென்றவெங்கணுந்தேவருமுனிவருஞ்சிந்த
வென்றதெங்களைப்போலும்யாம்விள்வதுமுளதே
இன்றுகாட்டுதுமெய்துமினெய்துமினென்னுக்
கொன்றகொற்றவர்தம்பெயர்குறித்தறைகூவும் (ககரு)

பாரிடந்துகொண்டெழுந்தனபாம்பெனும்படியப்
பாரிடந்துணைந்தெழுந்தனமலையன்னபடிய
பேரிடங்கதுவரிதினிவிசும்பெனப்பிறந்த
பேரிடங்கரிற்கொடுங்குழையணிந்தனபேய்கள். (ககசு)

தாமசத்தினிற்பிறந்தவரறந்தெறுந்தகையர்
தாமசத்தினிற்செல்கிலாச்சதுமுகத்தவற்குத்
தாமசத்திரஞ்செய்பவர்பரிந்தனர்தளரத்
தாமசத்திரஞ்சித்திரம்பொருந்தினர்தயங்க. (ககஎ)

தாமவிந் தமீதெழுந்தவர்க்கிரட்டியின்றகையார்
தாமவிந் துவின்பிளவெனத்தயங்கும்வாளெயிற்றர்
தாமவிஞ்சையர் கடற்பெருந்தகையினர்தரளத்
தாமவிஞ்சையர் துவன்றினர்திசைதொறுந்தருக்கி. (கக௮)

தாமடங்கலுமுடங்குளையாளியுந்தருவார்
தாமடங்கலுநெடுந்திசையுலகொடுதசைவார்
தாமடங்கலுங்கடலுமொத்தார்தருந்தகையார்
தாமடங்கலுங்கொடுஞ்சுடர்ப்படைகளுந்தரித்தார். (கக௯)

இனையதன்மையைநோக்கியவிந்திரைகொழுநன்
வினையமற்றிதுமாயமோவிதியதுவிளைவோ
வனையும்வார்கழலரக்கர்தம்வரத்தினோமற்றோ
நினைதியாமெனிற்பகரொணமாதலிசிரப்பும். (கஉ0)

இருப்புக்கம்மியற்கிழைநுழையூசியொன்றியற்றி
விருப்புக்கோடியால்விலக்கெனும்பதடியின்விட்டான்
கருப்புக்கார்மழைவண்ணவக்கடுந்திசைக்களிற்றின்
மருப்புக்கல்லியமார்பவன்மீளுமாயை (கஉக)

வீக்குவானயில்வெள்ளெயிற்றரவின்வெவ்விடத்தை
மாய்க்குமாநெடுமந்திரந்தந்ததோர்வலியின்
நோய்க்குநோய்தருவினைக்குநின்பெரும்பெயர்நொடியின்
நீக்குவாய்நின்னைநினைக்குவார்பிறப்பென்னநீங்கும். (கஉஉ)

வரத்தினுயினுமாயையினுயினும்வலியோன்
உரத்தினுயினுமுண்மையினுயினுமோடத்
துரத்தியாலெனஞானமாக்கடுங்கணைதுரந்தான்
சிரத்தினுன்மறையிறைஞ்சவுந்தொடரவுஞ்சேயோன். (கஉ௩)

துறத்தலாற்றுறுஞானமாக்கடுங்கணைதொடர
அறத்தலாதுசெல்லாதநல்லறிவுவந்தணுகப்
பறத்தலாற்றுறுபேதைமைபிணிப்புறத்தம்மை
மறத்தலாற்றந்தமாயையின்மாயந்ததம்மாயை. (கஉ௪)

வேறு.

நீலங்கொண்டார்கண்டனுநேமிப்படையோனும்
மூலங்கொண்டார்கண்டகராவிமுடிவிக்கும்
காலங்கொண்டார்கண்டனமுன்னேகழிவிக்கும்
சூலங்கொண்டானண்டனையெல்லாந்தொலைகொண்டான். (கஉ௫)

கண்டாகுலமுற்றுயிரமார்க்கின்றதுகண்ணின்
கண்டாகுலமுற்றும்பரயிர்க்கின்றதுவீரர்
கண்டாகுலமுற்றுஞ்சுடுமென்றக்கழல்வெய்யோன்
கண்டாகுதன்முன்செல்லவிசைத்துள்ளதுகண்டான். (கஉ௬)

எரியாநிற்கும்மெஃகிலைமூன்றும்மெரியஞ்சத்
திரியாநிற்குந்தேவரையோட்டத்திரளோடும்
இரியாநிற்கும்மெவ்வுலகுந்தன்னொளியேயாய்
விரியாநிற்குஞ்சிற்கிலதார்க்கும்விழிசெல்லா. (௧௨௭)

செல்வாயென்னச்செல்லவிடுத்தானிதுதீர்த்தற்
கொல்வாய்நீயேவேறொருவர்க்கும்முடையாதால்
வல்வாய்வெங்கட்சூலமெனுங்காலனைவள்ளால்
வெல்வாய்வெல்வாயென்றனர்வானோர்மெலிகின்றார். (௧௨௮)

துணையும்வேகத்தாலுருமேறுந்துண்ணென்ன
வணையுங்காலிற்செல்வினைதன்னைமறவாதே
நினையுஞ்ஞானக்கண்ணுடையார்மேனினையாதார்
வினையம்போலச்சிந்தினன்வீரன்சரம்வெய்ய. (௧௨௯)

எய்யும்மெய்யுந்தேவருடைத்திண்படையெல்லாம்
பொய்யுந்துய்யும்மொத்தவைசிந்தும்புவிதந்தான்
வையுஞ்சாபமொப்பெனவொப்பில்வலிகண்டான்
ஐயனின்றான்செய்வகையொன்றும்மறிகில்லான். (௧௩0)

மறந்தான்செய்கைமாறெதிர்செய்யும்வகையெல்லாம்
துறந்தானென்றாவும்பர்துணுக்கந்தொடர்வுற்றார்
அறந்தானஞ்சிக்கால்குலையத்தானறியாதே
பிறந்தானின்றான்வந்ததுசூலம்பிறரஞ்ச. (௧௩௧)

சங்காரத்தாற்கண்டையொலிப்பத்தழல்சிந்தப்
பொங்காரத்தான்மார்பெதிரோடிப்புகலோடும்
வெங்காரத்தான்முற்றுமுனிந்தான்வெகுளிப்பே
ருங்காரத்தானுக்கதுபன்னூறுதிராக. (௧௩௨)

ஆர்ப்பாரானாரச்சமுமற்றாரலர்மாரி
தூர்ப்பாரானார்துள்ளல்புரிந்தார்தொழுகின்றார்
தீர்ப்பாய்நீயேதீயெனநீயேவருதீமை
பேர்ப்பாய்நீயேயென்றனர்வானோருயிர்பெற்றார் (௧௩௩)

வென்றேமென்றேயுள்ளம்வியந்தான்விடுசூலம்
பொன்றானென்னிற்போதலதென்னும்பொருள்கொண்டான்
ஒன்றாவுங்காரத்திடையுக்கோடுதல்காணா
நின்றானந்நாள்வீடணனார்சொன்னினைவுற்றான். (௧௩௪)

சிவனோவல்லனான்முகனல்லன்றிருமாலாம்
அவனோவல்லன்மெய்வரமெல்லாமடுகின்றான்
தவனோவென்னிற்செய்துமுடிக்குந்தரனல்லன்
இவனோதானவ்வேதமுதற்காரணனென்றான். (௧௩௫)

ஆரோனுந்தானுருகயானென்றனியாண்மை
பேரோனின்றென்வென்றிமுடிப்பென்புகழ்பெற்றேன்
நேரோசெல்லுங்கொல்லுமெனிற்றானியிர்வென்றி
வேரோமிற்கும்மீள்கிலனென்றுவிடலுற்றான். (கநசு)

நிருதித்திக்கின்னின்றவன்வென்றிப்படைநெஞ்சில்
கருதத்தன்பால்வந்ததவன்கைக்கொடுகாலன்
விருதைச்சிந்தும்வில்லினினுந்திச்செலவிட்டான்
குருதிச்செங்கண்டீயுகஞாலங்குலைவெய்த. (கநஎ)

வையந்துஞ்சும்வன்பிடர்நாகமனமஞ்சப்
பையுங்கோடிப்பஃறலையோடுமளவில்லா
மெய்யும்வாயும்பெற்றனமேருக்கிரிசால
நொய்தென்றேதுந்தன்மையவானநுழைகிற்ப. (கநஅ)

வாய்வாய்தோறும்மாகடல்போலும்விடவாரி
போய்வார்கின்றவெங்கனல்கண்ணிற்பொழிகின்ற
தீவாயெங்கும்வெள்ளிடையின்றிமிடைகின்ற
பேய்வாயெங்கும்வெள்ளெயிறெங்கும்பிறழ்கின்ற (கநகூ)

கடித்தேதீராகண்ணகன்ஞாலங்கடலோடும்
குடித்தேதீரும்மென்றுயிரெல்லாங்குலைகின்ற
முடித்தானன்றேவெங்கணரக்கன்முழுமுற்றும்
பொடித்தானுகும்மிப்பொழுதென்னப்புகைகின்ற. (கச0)

அவ்வாறுற்றவாட்டரவங்காலகல்வரையால்
கவ்வாநின்றமால்வரைமுற்றும்மவைகண்டான்
எவ்வாய்தோறும்மெய்தினவென்றுவெதிரெய்தான்
தவ்வாமெய்ம்மைக்காருடமென்னும்படைதன்னை. (கசக)

எவணைத்தன்மைத்தேகினநாகத்தினமென்னப்
பவணத்தன்னவெஞ்சிறைவேகத்தொழில்பம்பச்
சுவணக்கோலத்துண்டநகத்தோர்சிறைவெம்போர்
உவணப்புள்ளேயாயினவாறேருலகெல்லாம். (கசஉ)

வேறு.

அளக்கரும்புள்ளினமரவவாரழல்
துளக்கரும்வாய்தொறுமெரியத்தொட்டன
இளக்கருமிலங்கைதீயிடுதுமீண்டென
விளக்கினமெடுத்தனபோன்றவிண்ணெலாம். (கசந)

குயின்றனசுடர்மணிகனலின்குப்பையின்
பயின்றனசுடர்தரப்பதுமராளங்கள்
வயினெறுறுங்கவர்ந்தெனப்பணியைவாய்களால்
அயின்றனபுள்ளினமுகிரினள்ளின. (கசச)

எவ்வகையுரகமுமிரியல்போயின
நொவ்வியதுற்றெனநொடிப்பதென்னினி
அவ்வயினரனணியடலராவுமே
கவ்வையினுழந்தனசிறையின்காற்றினே. (௧௬௫)

ஆயிடையரக்கனுமழன்றநெஞ்சினன்
தீயிடைபொடித்தெழுமுயிர்ப்பன்சிற்றத்தன்
மாயிருஞாலமும்விசும்பும்வைப்பறத்
தூயினன்சுடுசரமுருமின்றோற்றத்த. (௧௬௬)

அங்கவெங்கடுங்கணையயிலின்வாய்தொறும்
வெங்கணைபடப்படவிசையின்மீண்டன
புங்கமேதலையெனப்புக்கபோதுமால்
அங்கவாளரக்கனதுரத்திற்றோன்றல. (௧௬௭)

ஒக்கநின்றெதிரம்ருழக்குங்காலையில்
முக்கணன்றடவரையெடுத்தமொய்ம்பற்கு
நெக்கனவிஞ்சைகணிலையிற்றீர்ந்தன
மிக்கனவிராமற்குவலியும்வேகமும் (௧௬௮)

வேதியர்வேதத்துமெய்யன்வெய்யவர்க்
காதியனனுகியவற்றநோக்கினன்
சாதியின்மிர்ந்ததோர்தலையைத்தள்ளினன்
பாதியின்பிறைமுகப்பகழியொன்றினால். (௧௬௯)

மேருவின்கொடுமுடிவீசுகாலெறி
போரிடையொடிந்துபோய்ப்புணரிபுக்கென
ஆரியன்சரம்படவரக்கன்வன்றலை
நீரிடைவிழுந்ததுநேர்கொடொன்றுபோய். (௧௭௦)

குதித்தனர்பாரிடைக்குன்றுகூட்டற
மிதித்தனர்வடகமுந்துசும்வீசினர்
துதித்தனர்பாடினராடித்துள்ளினர்
மதித்தனரிராமனைவானுளோரெலாம். (௧௭௧)

இறந்ததோருயிருடன்றருமத்தீட்டினால்
பிறந்துளதாமெனப்பெயர்த்துமோர்தலை
மறந்திலதெழுந்ததுமடித்தவாயொடும்
சிறந்ததுதவமலாற்செயலுண்டாகுமோ. (௧௭௨)

கொய்ததுகொய்திலதென்னுங்கோணெறி
ஐததுதெரிகுவதமரர்க்காயினும்
செய்ததுதெரிந்ததில்சிலைக்கைத்தேவனை
வைததுதெழித்ததுமழையினார்ப்பது. (௧௭௩)

இடந்ததுகிரிக்குவடென்னவெங்கணும்
படர்ந்ததுகுறைகடல்பருகும்பண்பது
விடந்தருவிழியதுமுழுகிவேலையில்
கிடந்ததுமார்த்ததுமழையின்கேழது. (கருச)

விழுத்தினன்றலையெனவெகுளிமீக்கொள
வழுத்தினவுயிர்களின்முதலில்வைத்தபே
ரெழுத்தின்வன்றோள்களினெழாடேழுகோல்
அழுத்தினனசனியேறயிர்க்குமார்பினன். (கருரு)

தலையறிற்றருவதோர்தவமுமுண்டென
நிலையுறநோக்கியநேமியோன்மகன்
கலையறுதிங்களின்வளைவுகாட்டிய
சிலையுளுகையையுநிலத்திற்சேர்த்தினன். (கருசு)

கொற்றவன்சரம்படக்குறைந்துபோனன்கை
பற்றியேகிடந்ததுசிலையைப்பாங்குற
மற்றோர்கைப்பிடித்ததுபோலவவ்விய
தற்றகைப்பிறந்ததையாரதோர்குவார். (கருஎ)

பொன்கையிற்றார்தியான்வலியைப்போக்கென
முன்கையிற்றுறுமயிர்முள்ளிற்றுள்ளுற
மின்கையிற்கொண்டனவில்லைவிட்டிலா
வன்கையைத்தன்கையின்வலியின்வாங்கினன் (கருஅ)

விளங்கொளிவயிரவாளரக்கன்வீசிய
தளங்கிளர்தடக்கைதன்மார்பிற்றாக்கலும்
உளங்கிளர்பெருவலியுலைவின்மாதலி
துளங்கினன்வாய்வழியுதிரந்தூவுவான். (கருகூ)

மாமரத்தார்கையால்வருந்துவானையோர்
தோமரத்தாலுயிர்தொலைப்பத்தூண்டினன்
தாமரத்தாற்பொராத்தகைகொள்வாட்படை
காமரத்தாற்சிவன்கரத்துவாங்கினன். (கசுo)

வேறு.

மாண்டதின்றெடுமாதலிவாழ்வென
றூண்டவெந்தழல்சிந்திமுடுகலும்
மாண்டவில்லியோனாம்முகவெங்கணை
தூண்டினன்றுகளாயதுதோமரம். (கசுக)

ஓய்வதன்றதொருதலைநூறுறப்
போயகன்றுபுரளப்பொருகணை
ஆயிரந்தொடுத்தானறிவின்றனி
நாயகன்கைக்கடுமைநடத்துவான். (கசுஉ)

நீர்த்தரங்கங்கடோறுநிலந்தொறும்
சீர்த்தமால்வரைதோறுந்திசைதொறும்
பார்த்தபார்த்தவிடந்தொறும்பஃறலை
ஆர்த்துவீழ்ந்தவசனியினார்ப்பென. (௧௬௩)

தகர்ந்துமால்வரைசாய்வுறத்தாக்கின
மிகுந்தவாவிசையாற்றலைவீழ்ந்தன
புகுந்தமாமகரக்குலம்போக்கற
முகந்தவாரிப்புனலினைமுற்றுற. (௧௬௪)

பொழுதுநீட்டித்தபுண்ணியம்போனபின்
பழுதுசெல்லுமன்றேமற்றைப்பண்பெலாம்
தொழுதுசூழ்வனமுன்னின்றுதோன்றிடக்
கழுதுசூன்றவிராவணன்கண்ணெலாம். (௧௬௫)

வாளும்வேலுமுலக்கையும்வச்சிரக்
கோளுந்தண்டிமழுவெனுங்கூற்றமும்
தோளின்பத்திகடோறுஞ்சுமந்தன
மீளிமொய்ம்பனுருமெனவீசினான். (௧௬௬)

அனையசிந்திடவாண்டகைவீரனும்
வினையமென்னினியாதுகொல்வெல்லுமா
றினைவெனென்னநிசாசரன்மேனியைப்
புனைவென்வாளியினாலென்றுபொங்கினான். (௧௬௭)

மஞ்சரங்கியமார்பினுந்தோளினும்
நஞ்சரங்கியகண்ணினுநாவினும்
வஞ்சன்மேனியைவார்கணையட்டிய
பஞ்சரம்மெனலாம்படிபண்ணினான். (௧௬௮)

வாய்நிறைந்தனகண்கண்மறைந்தன
மீயமேனியினெங்குமிடைந்தன
தோய்வுறுங்கணைசெம்புனறோய்ந்தில
போய்நிறைந்தனவண்டப்புறமெலாம். (௧௬௯)

மயிரின்காலெறுறும்வார்கணைமாரிபுக்
குயிருந்தீயவுருவினவோடலும்
செயிருஞ்சீற்றமுநிற்கத்திறநிரீந்
தயர்வுதோன்றத்துளங்கியழுங்கினான். (௧௭௦)

வயிரிநீர்நின்றெதிர்மகரம்படச்
சோரிசோரவுணர்வுதுளங்கினான்
தேரின்மேலிருந்தான்பண்டுதேவர்தம்
ஊரின்மேலும்பவனியுலாவுவான். (௧௭௧)

ஆர்த்துக்கொண்டெழுந்தும்பர்களாடினார்
வேர்த்துத்தீவினைவெம்பிவிழுந்தது
போர்த்துப்பொய்த்தனனென்றுபொலன்கொடேர்
பேர்த்துச்சாரதிபோயினன்பின்றுவான். (௧௭௨)

கைதுறந்தபடையினன்கண்ணகன்
மெய்துறந்தவுணர்வினன்வீழ்தலும்
எய்திறந்தவிர்ந்தானிமையோர்களை
உய்திறந்துணிந்தானறமுன்னுவான். (௧௭௩)

தேறினாற்பின்னையாதுஞ்செயற்கரி
ஆறுதானுற்றபோழ்தேயுயிர்தனை
நூறுவாயெனமாதலிநூக்கினான்
ஏறுசேவகனும்மிதியம்பினான். (௧௭௪)

படைதுறந்துமயங்கியபண்பினோன்
இடைதெறும்படிபார்த்திகனீதியின்
நடைதுறந்துயிர்கோடனன்மையோ
கடைதுறந்தபோரென்னக்கருதென்றான். (௧௭௫)

கூவிரஞ்செறிபொற்கொடித்தேரொடும்
போவரஞ்சினரன்னதொர்போழ்தினின்
ஏவரஞ்சலிலாதவொண்ணுடைத்
தேவரஞ்சவிராவணன்றேறினான். (௧௭௬)

உறக்கநீங்கியுணர்ச்சியுற்றானென
மறக்கண்வஞ்சனிராமனைவான்றனிச்
சிறக்குந்தேரொடுங்கண்டிலன்சீற்றத்தீப்
பிறக்கநோக்கினன்பின்றுறநோக்கினான். (௧௭௭)

தேர்திரித்தனைதேவருங்காணவே
வீரவிற்கையிராமற்குவெண்ணகை
பேரவுய்த்தனையேபிழைத்தாயெனாச்
சாரதிப்பெயரோனைச்சலிப்புறா. (௧௭௮)

தஞ்சநானுனைத்தேற்றத்தரிக்கிலா
வஞ்சர்பெருஞ்செல்வத்துவைகினை
அஞ்சினானெனச்செய்தனையாதலான்
உய்ஞ்சுபோதிகொலாமென்றுருத்தெழா. (௧௭௯)

வாள்கடைக்கணுற்றோச்சலும்வஞ்சவன்
தாள்கடைக்கணியாத்தலைதாழ்குறு
மூள்கடைக்குறுதீயெனநின்முனி
வாள்கடைத்தன்றறிவிப்பதுண்டெனா. (௧௮௦)

ஆண்டொழிற்றுணிவோய்ந்தனையாங்கிறை
நீண்டுதிற்பினையேநெடியோயுயிர்
மாண்டொழித்தியனையதுமாற்றுவான்
மீண்டதித்தொழிலெம்வினைமெய்ம்மையால். (௧௮௧)

ஓய்வுமூற்றமுநோக்கியுயிர்ப்பொறைச்
சாய்வுநீக்குதல்சாரதிதன்மைத்தால்
மாய்வுநிச்சயம்வந்துழிவாளினால்
காய்வுதக்கதன்றாற்கடைகாண்டியால். (௧௮௨)

என்றிறைஞ்சலுமெண்ணியிரங்கினான்
வென்றியந்தடந்தேரினைமீட்டெனச்
சென்றெதிர்ந்ததத்தேருமத்தேர்த்திசை
நின்றவஞ்சனிராமனைநேர்வுறா. (௧௮௩)

கூற்றின்வெங்கணைகோடியின்கோடிகள்
தூற்றினான்வலிமும்முறைதோன்றினான்
வேற்றொருர்வாளரக்கன்னெனவெம்மையால்
ஆற்றினான்செருக்கண்டவரஞ்சினார். (௧௮௪)

எல்லுண்டாகினெருப்புண்டெனுமிதச்
சொல்லுண்டாமதுபோலிவன்றோளிடை
வில்லுண்டாகின்வெலற்கரிதாமெனாச்
செல்லுண்டாலன்னதோர்கணைசிந்தியா. (௧௮௫)

நாரணன்படையாகநயப்புறாப்
பாரணங்கினைத்தாங்குறுபல்வகை
வாரணங்களைவென்றவன்வார்சிலை
ஆரணங்கையிருதுணியாக்கினான். (௧௮௬)

அயன்படைத்தவில்லாயிரம்பேரினான்
வியன்படைக்கலத்தாலற்றுவீழ்தலும்
உயர்ந்துயர்ந்துகுனித்தனரும்பரார்
பயன்படைத்தனம்பஃறவத்தாலென்றார். (௧௮௭)

மாறிமாறிவரிசிலைவாங்கினான்
நூறினூற்றினோடையிருநூறவை
வேறுவேறுதிசையுறவெங்கணை
நூறிநூறியிராமனொறுக்கினான். (௧௮௮)

இருப்புலக்கைகோறண்டுவேலீட்டிவாள்
நெருப்புலக்கவருநெடுங்கப்பணம்
திருப்புலக்கவுய்த்தான்றிசையானையின்
மருப்புலக்கவழங்கியமார்பினான். (௧௮௯)

அவையனைத்துமறுத்தகல்வேலையைக்
குவையனைத்துமெனக்குவித்தான்குவித்
திவையனைத்துமிவனேவெல்லாவெனு
நவையனைத்துந்துறந்தவனுடினன். (கக0)

கண்ணினுண்மணியூடுகெழிந்தன
எண்ணினுண்மணலிற்பலவெங்கணை
புண்ணினுண்ணுழைந்தோடியபுந்தியோர்
எண்ணமெண்ணிலதென்செயப்பாற்றெனு. (கககக)

நாரநன்மலர்மேல்வந்தநான்முகன்
பாரவெம்படைவாங்கியிப்பாதகன்
மார்பினெய்வெனென்றெண்ணிவலித்தனன்
ஆரியன்னவனுவியகற்றுவான். (கககஉ)

முந்திவந்துலகீன்றமுதற்பெயர்
அந்தணன்படைவாங்கியருச்சியாச்
சுந்தரன்சிலைநாணிற்றொடுப்புறு
மந்தரம்புரைதோளுறவாங்கினன். (கககங)

புரஞ்சுடப்பண்டமைத்ததுபொற்பணை
மரந்தொளைத்ததுவாலியைமாய்த்தது
அரஞ்சுடச்சுடரம்பதவ்வாற்றலான்
உரஞ்சுடச்சுடரோன்மகனுந்தினன். (கககச)

காலும்வெங்கனலுங்கடைகாண்கிலா
மாலுங்கொண்டவடிக்கணைமாமுக
நாலுங்கொண்டுநடந்ததுநான்முகன்
மூலமந்திரந்தன்னொடுமூட்டலால். (கககரு)

ஆழிமால்வரைக்கப்புறத்தப்புறம்
பாழிமாகடலும்வெளிபாய்ந்ததால்
ஊழிஞாயிறுமின்மினியொப்புறும்
வாழிவெஞ்சுடர்பேரிருள்வாரவே. (கககசு)

அக்கணத்தினயனின்றவாண்டகை
சக்கரப்படையோடுந்தழீஇச்சென்று
புக்கதக்கொடியோனுரம்பூமியும்
திக்கனைத்தும்விசும்புந்திரிந்தவே. (கககஎ)

வேறு.

முக்கோடிவாழ்நாளுமுயன்றுடையபெருந்தவமுமுதல்வர்தாமே
எக்கோடியாராலும்வெலப்படாயெனக்கொடுத்தவரமுமேனை
திக்கோடுமுலகனைத்துஞ்செருக்கடந்தபெருவலியுந்தின்று
புக்கோடியுயிர்பருகிப்புறம்போயிற்றிராகவன்றன்புனிதவாளி. (கககஅ)

ஆர்க்கின்றவானவருமுனிவருமஞ்சணருமாசிகூறித்
தூர்க்கின்றமலர்மாரிதொடரப்போய்ப்பாற்கடலுட்டீராடித்
தேர்க்குன்றவிராவணன்றன்செழுங்குருதிப்பெரும்பரவைத்திரைமேற்சென்று
கார்க்குன்றமனையான்றன்கடுங்கணைப்புட்டிலினடுவட்கரந்ததம்மா. (கககூ)

கார்நின்றமழைநின்றவுருமதிர்ப்பவெனக்கணித்தோள்கொட்டியார்த்துத்
தார்நின்றமலைநின்றமணிக்குலமும்பணிக்குலமுந்தகர்ந்துசிந்தப்
போர்நின்றவிழிநின்றுபொறிநின்றபுகையோடுங்குருதிபொங்கத்
தேர்நின்றுநெடுநிலத்துச்சிரமுங்கீழ்ப்படவிழுந்தான்சிகரம்போல்வான். உ00

வெம்மடங்கல்வெகுண்டனையசினமடங்கமனமடங்கவினையம்வீயத்
தெம்மடங்கப்பொருதடங்காச்செயலடங்கமயலடங்கவாற்றறேயத்
தம்மடங்குமுனிவரையுந்தலையடங்கநிலையடங்கச்சாய்த்தநாளின்
மும்மடங்குபொலிந்தனவம்முறைதுறந்தானுயிர்துறந்தமுகங்களம்மா. (உ0க)

பூதலத்ததாக்குவாயாகவினிப்பொலந்தேரையென்றபோதின்
மாதலிப்பேரவன்கடவமாநிலத்தினப்பொழுதேவருதலோடும்
மீதரத்தப்பெருந்தாரைவிசும்பளப்பக்கிடந்தான்றன்மேனிமுற்றும்
காதலித்தவுருவாகியறம்வளர்க்குங்கண்ணுளன்றெரியக்காண்பான். (உ0உ)

தேரினைநீகொடுவிசும்பிற்செல்கென்னமாதலியைச்செலுத்திப்பின்னர்ப்
பாரிடமீதினினணுகித்தம்பியொடும்படைத்தலைவர்பலருஞ்சுற்றப்
போரிடைமீண்டொருவருக்கும்புறங்கொடாப்போர்வீரன்பொருதுவீழ்ந்த
சீரினையேமனமுவப்பவுருமுற்றுந்திருவாளன்றெரியக்கண்டான். (உ0ங)

புலைமேலுஞ்செலற்கொத்துப்போதுநின்றசெல்வத்தின்புன்மைத்தன்மை
நிலைமேலுமினியுண்டோநீர்மேலைக்கோலமெனநிலைமைத்தன்றே
தலைமேலுந்தோண்மேலுந்தடமுதுகிற்படர்புயத்துந்தாவியேறி
மலைமேனின்றுடினபோலாடினவால்வானரங்கள்வரம்பிலாத. (உ0ச)

தோடுழுதநறுந்தொடையற்றொகையுழுதகளிவண்டின்சுழியத்தொங்கல்
பாடுழுதபடர்வெரிநின்பணியுழுதவணிநிகர்ப்பப்பணைக்கையானைக்
கோடுழுதநெடுந்தழும்புக்குவைதழுவியெழுமேகக்குழுவின்கோவைக்
காடுழுதகொழும்பிறையிற்கறைகழன்றுகிடந்தனபோற்கிடக்கக்கண்டான். ()

வேறு.

தளரியல்பொருட்டின்வந்தசீற்றத்தன்தருக்கினோன்றன்
கிளரியலுருவினோடுங்கிழியுறக்கிளர்ந்துதோன்றும்
வளரியதிலகமேவுசெம்மையைமருவிநின்ற
மூளரியங்கண்ணன்மூரன்முறுவலன்மொழிவதானான். (உ0சு)

வென்றியானுலகமூன்றுமெய்ம்மையான்மேவினாலும்
பொன்றியானன்றுதோளைப்பொலிவுறநோக்கும்பொற்பும்
குன்றியாசுற்றநன்றேயிவனெதிர்குறித்தபோரில்
பின்றியான்முதுகிற்பட்டதழும்புளபிழைப்பிதம்மா. (உ0எ)

கார்த்தவீரியனென்பானுற்கட்டுண்டானென்னக்கற்கும்
வார்த்தையுண்டதனைக்கேட்டுநாணுறுமனத்தினேற்குப்
போர்த்தலைப்பிறகிட்டேற்றபுண்ணுடைத்தழும்புபோலாம்
ஏற்றமுங்காணலுற்றதீசனுரிருக்கைகிற்க. (உ0அ)

மாண்டொழிந்துலகினிற்கும்வயங்கிசைவயங்கமாட்டா
ஆண்டொழிலுகந்ததெவ்வர்முறுவலென்புகழையுண்ணத்
தூண்டொழிறொடர்ந்ததோளிற்றுருயிர்க்குதவத்தோற்ற
ஆண்டொழிலோரிற்பெற்றவெற்றியுமவத்தமென்முன். (உ0க)

அவ்வுரைக்கிறுதிநோக்கிவீடணனருவிக்கண்ணன்
வெவ்வுயிர்ப்போடுநீண்டவிம்மலன்வெதும்புநெஞ்சன்
செவ்வியிற்றொடர்ந்தவல்லசெப்பலைசெல்வவென்று
எவ்வுயிர்ப்பொறையுநல்கியிரங்கினின்றினையசொன்னன். (உக0)

ஆயிரந்தோளினுனும்வாலியுமரிதினைய
மேயினவென்றிவிண்ணோர்சாபத்தின்விளைந்தமெய்ம்மை
தாயினுந்தொழத்தக்காண்மேற்றங்கியகாதற்றன்மை
நோயுகின்முனிவுமல்லால்வெல்வரோறுவலற்பாலார். (உகக)

நாடுளதனையுமுற்றநலிந்தநாளரிமுன்னுக
மாடுளதனையுமுற்றும்வவ்வினனெல்லையானைக்
கோடுளதனையும்புக்குக்கொடும்புறத்தழுந்துபுண்கோட்
பாடுளதிவன்மேற்றேவர்படைக்கலம்பட்டென்செய்யும். (உகஉ)

அப்பணையனைத்துமார்புக்கணியெனக்கிடந்தவீரக்
கைப்பணைமுழங்கமேனுளமரிடைக்கிடைத்தகாலன்
துப்பணைவயிரவாளிவிசையினுங்காலின்றேன்றல்
வெப்பணைகுத்தினுலும்வெரிகிடைப்போயவன்றே. (உகங)

அவ்வடுவென்றியிந்தவண்டத்தும்புறத்துமான்ற
தெவ்வடுபடைகளஞ்சாதிவன்வயிற்செல்லிற்றேவ
வெவ்விடமீசன்றன்னைவிழுங்கினும்பறவைவேந்தை
அவ்விடநாகமெல்லாமணுகினுமணுகலாற்ற. (உகச)

வென்றியாய்பிறிதுமுண்டேவேலைசூழ்ஞாலமெல்லாம்
பன்றியாயெயிற்றிற்கொண்டபரம்பரன்முதலபல்லோர்
என்றியாமிடுக்கண்டீர்வதென்கின்றரிவனினுன்னல்
பொன்றியானென்றபோதும்புலப்படார்பொய்கொலென்பார். (உகரு)

அன்னதோவென்னுவீரனையமுநாணுநீங்கித்
தன்னதோளிணையைநோக்கிவீடணதக்கதன்றால்
என்னதோவிறந்துளார்மேல்வயிர்த்தனீயிவனுக்கீண்டச்
சொன்னதோர்விதியினுலேகடன்செயத்துணிதியென்றுன். (உகசு)

அவ்வகையருளிவள்ளலனைத்துலகங்களோடும்
எவ்வகையுள்ளதேவர்யாவருமிறைத்துப்பொங்கிக்
கவ்வையிற்றீர்ந்தார்வந்துவீழ்கின்றார்தம்மைக்காணச்
செவ்வையினவர்முன்சென்றான்வீடணனிதனைச்செய்தான். (உகஎ)

போழ்ந்தெனவரக்கன்செய்தபுன்றொழில்பொறையிற்றாமால்
வாழ்ந்தநீயிவனுக்கேற்றவழிக்கடன்வகுத்தியென்னத்
தாழ்ந்ததோர்கருணைதன்னாற்றலைமகனருளத்தள்ளி
வீழ்ந்தனனவன்மேல்வீழ்ந்தமலையின்மேல்மலைவீழ்ந்தென்ன (உகஅ)

ஏவருமுலகத்தெல்லாவுயிர்களுமிரங்குநெஞ்சின்
தேவருமுனிவர்தாமுஞ்சிந்தையினிரக்கங்கூரத்
தாவரும்பொறையினன்றன்னறிவினாற்றகைக்கநின்ற
ஆவலுந்துயருந்தீரவரற்றினன்பகுவாயார. (உகக)

வேறு.

உண்ணாதேயுயிருண்ணாதொருநஞ்சுசனகியெனும்பெருநஞ்சுன்னைக்
கண்ணாலேநோக்கவேபோக்கியதேயுயிர்நீயுங்களிப்பட்டாயே
எண்ணாதேனெண்ணியசொலின்றினித்தானெண்ணுதியோவெண்ணிலாற்றல்
அண்ணாவேயண்ணாவேயசுரர்கடம்பிரளயமேயமரர்கூற்றே. (உஉ0)

ஓராசையொருவன்மேலுயிராசைக்குலமகண்மேலுடையகாதல்
தீராசைபழியென்றேனென்னைமுனிந்தமுனிவாறித்தேறினையோ
போராசைப்பட்டெழுந்தகுலமுற்றும்பொன்றவுந்தான்பொங்கிநின்ற
பேராசைபேர்ந்ததோபேர்ந்தாசைக்கரியிரியப்பொருவம்போர்ந்தோய். (உஉக)

அன்றெரியின்விழுவேதவதியிவள்காணுலகுக்கோரன்னையென்று
குன்றனையநெடுந்தோளாய்கூறினேனதுமனத்துட்கொள்ளாதேயே
உன்றனதுகுலமடங்கவுருத்தமரிற்படக்கண்டுமுறவாகாதே
பொன்றினையேயிராகவன்றன்புயவலியின்றறிந்துதான்போகின்றாயே. (உஉஉ)

மன்றன்மாமலரானும்வடிமழுவாட்படையானும்வரங்களீந்த
ஒன்றலாதனவுடையமுடியோடும்பொடியாகியுதிர்ந்துபோன
அன்றுதானுணர்ந்திலையேயானுலுமவனுட்டையணுகிநின்ற
இன்றுதானறிந்ததேயிராமனார்யாவருக்குமிறைவராதல். (உஉங)

வீரநாடற்றாயோவிரிஞ்சனும்யாவருக்குமேலாமுன்பன்
பேரநாடற்றாயோபிறைசூடிபிஞ்ஞகனறன்புரம்பெற்றாயோ
ஆரணுவுன்னுயிரையஞ்சாதேகொண்டகன்றாரதெலாநிற்க
மாரனார்வலியாட்டந்தவிர்ந்தாரோகுளிர்ந்தானேமதியமென்பான். (உஉச)

கொல்லா... மத்துனைனைக்கொன்றானென்றதுகுறித்துக்கொடுமைசூழ்ந்து
பல்ல... மறைக்குங்கொடும்பாவிநெடும்பாரப்பகைதீர்ந்தாளே
நல்லாரு... நரகத்தார்துறக்கத்தார்நம்பீநம்மோ
டெல்லாரு... ஞரோயார்முகத்தேவிழிக்கின்றாயெளியையானுய். (உஉரு)

போர்மகளைக்கலைமகளைப்புகழ்மகளைத்தழுவியவர்பொருமைகூரச்
சீர்மகளைத்திருமகளைத்தேவர்க்குந்தம்மோயைத்தெய்வக்கற்பின்
பேர்மகளைத்தழுவுவானுயிர்கொடுத்துப்பழிகொண்டபித்தாபின்னைப்
பார்மகளைத்தழுவினையேதிசையானைப்பணையிறுத்தபரிதிமார்பால். (௨௨௬)

என்றேங்கியரற்றுவான்றனையெடுத்துச்சாம்பவனுமெண்கின்வேந்தன்
குன்றோங்குநெடுந்தோளாய்விதிநிலைமைமதியாதகொள்கைத்தாகிச்
சென்றேயுமுணர்வினையோதேராதேவருந்துதியோவென்னத்தேற்றி
நின்றானப்புறத்தரக்கனிலைகேட்டாண்மயன்பயந்தநெடுங்கட்பாவை. (௨௨௭)

வேறு.

அநந்தநூறாயிரமரக்கர்மங்கையர்
புனைந்தபூங்குழல்விரித்தரற்றும்பூசலார்
இனந்தொடர்ந்துடன்வரவெய்தினாளரோ
நினைந்ததுமறந்ததுமிலாதநெஞ்சினாள். (௨௨௮)

இரக்கமுந்தருமமுந்துணைக்கொண்டின்னுயிர்
புரக்குநன்குலத்துவந்தொருவன்பூண்டதோர்
பரக்கழியாமெனப்பரந்துநீண்டதால்
அரக்கியர்வாய்திறந்தரற்றுமோதையே. (௨௨௯)

நூபுரம்புலம்பிடச்சிலம்புநொந்தழக்
கோபுரந்தொறும்புறங்குறுகினார்சிலர்
ஆபுரந்தரன்பகையற்றதாமெனா
மாபுரந்தவிர்ந்தனர்வழிச்சென்றார்சிலர். (௨௩௦)

அழைப்பொலிமுழக்கெனவலங்கமின்னிடை
குழைப்பொலிநல்லணிக்குலங்கள்வில்லிட
உழைப்பொலியுண்கணீர்த்தாரைமீதுக
மழைப்பெருங்குலமெனவீழ்ந்துமாழ்கினார். (௨௩௧)

தலைமிசைத்தாங்கியகரத்தர்தாரைநீர்
முலைமிசைத்தாங்கியமுகத்தர்மொய்த்துவந்
தலைமிசைக்கடலின்வீழன்னம்போலவன்
மலைமிசைத்தோளின்மேல்விழுந்துமாழ்கினார். (௨௩௨)

தழுவினர்தழுவினர்தலையுந்தாள்களும்
எழுவுயர்புயங்களுமார்புமெங்கணும்
குழுவினர்முறைமுறைக்கூறுகூறகொண்
டழுதிலருயிர்த்திலராவிநீத்திலார். (௨௩௩)

வருத்தமேதெனினதுபுலவிவைகலும்
பொருத்தமேவாழ்வெனப்போதுபோக்குவார்
ஒருத்தர்மேலொருத்தர்வீழ்ந்துயிரிற்புல்லினார்
திருத்தமேயெனவவன்சிகரத்தோள்கண்மேல். (௨௩௪)

இயக்கியரரக்கியருரகரேழையர்
மயக்கலில்சித்தியர்விஞ்சைமங்கையர்
முயக்கியமுறைகெடமுயங்கினார்கடந்
துயக்கிலாவனபுகொண்டெவருஞ்சோரவே. (௧௩௫)

அறந்தொலைவுறமணத்தடைத்தசீதையை
மறந்திலையேவினுமெமக்குவாய்மலர்
திறந்திலைவிழித்திலையருளுஞ்செய்கிலை
இறந்தனையோவெனவிரங்கியேங்கினார். (௨௩௬)

தரங்கநீர்வேலையிற்றடித்துவீழ்ந்தென
உரங்கிளர்மதுகையானுருவினுற்றனள்
மரங்களுமலைகளுமுருகவாய்திறந்
திரங்கினண்மயன்மகளினையபன்னினாள். (௨௩௭)

வேறு.

அன்னேயோவன்னேயோவாகொடியேற்கடுத்ததுவுமரக்கர்வேந்தன்
பின்னேயோவிறப்பதுமுன்பிடித்திருந்தகருத்திதுவும்பெற்றிலேனோ
முன்னேயோவிழுந்தவுடன்முடித்தலையோபடித்தலையமுகங்காட்டாயோ
என்னேயோவென்னேயோவிராவணனார்முடிந்தபரிசிதுவோபாவம். (௨௩௮)

வெள்ளெருக்கமலர்முடியான்வெற்பெடுத்ததிடோளின்மேலுங்கீழும்
எள்ளிருக்குமிடனின்றியுயிரிருக்குமிடனாடியிழைத்தவாறோ
கள்ளிருக்குமலர்க்கூந்தற்சானகியைக்கடுஞ்சிறையில்வைத்தகாதல்
உள்ளிருக்குமெனக்கருதியுடல்பிளந்துதடவியதோவொருவன்வாளி. (௨௩௯)

ஆரம்போர்பொருமார்பையகன்முழைகளெனத்திறந்திவ்வுலகிற்கப்பால்
தூரம்போயினவொருவன்சிலைதுரந்தசரங்களேபோரிற்றோற்றும்
வீரம்போயுரங்குறைந்துவரங்குறைந்துவீழ்ந்தானேவேறேகெட்டேன்
ஓரம்போவுயிர்பருகிற்றிராவணனைமானுடனாருற்றமீதோ. (௨௪0)

காந்தையருக்கணியானசானகியார்பேரழகுமவர்தங்கற்பும்
ஏந்துபுயத்திராவணனார்காதலுஞ்சூர்ப்பநகையிழந்தமூக்கும்
வேந்தர்பிரான்றயரதனார்பணியாலேவெங்கானம்விரதம்பூண்டு
போந்ததுவுங்கடைமுறையப்புரந்தரனார்பெருந்தவமாய்ப்போயவம்மா (௨௪௧)

தேவர்க்குந்திசைக்கரிக்குஞ்சிவனார்க்குமயனார்க்குஞ்செங்கண்மாற்கும்
ஏவர்க்கும்வலியானுக்கென்றுண்டாமிறுதியெனவேமாப்புற்றேன்
ஆவற்குநீயுழந்தவருந்தவத்தின்பெருங்கடற்கும்வரமென்றுன்ற
காவற்[illegible]யாரோர்மானுடனாருளவொன்னக்கருதினேனோ. (௨௪௨)

அணைக[illegible]மைவுற்றகோடிமூன்றாயுவும்பேரறிஞரோனும்
உணைகன[illegible]னாப்பரியபேராற்றல்போராற்றற்குலப்போவில்லைத்
திணைகன[illegible]ப்பரியவரமென்னும்பாற்கடலைச்சீதையென்னும்
பிணைகடையிட்டழிப்பதனையறிந்தேனோதவப்பயனின்பெருமைபார்ப்பேன். ()

ஆரூருலகியற்கையறிதக்காருலகேழுமேழுமஞ்சும்
வீரனுருடறுறந்துவிண்புக்கார்கண்புக்கவேழவில்லால
நாரநாண்மலர்க்கணையானுளெல்லாந்தோளெல்லாமையவெய்யும்
மாரனூர்தனியிலக்கைமனித்தனூழித்தாரோவலத்தினுலே. (உசச)

வேறு.

ஆராவமுதாயலைகடலிற்கண்வளரும்
நாராயணனென்றிருப்பேனிராமனை நான்
ஓராதேகொண்டகன்றாயுத்தமனூர்தேவிதனைப்
பாராயோவின்னுடையமார்பகலம்பட்டவெலாம். (உசரு)

வேறு.

என்றழைத்தனளேங்கியெழுந்தவன்
பொன்றழைத்தபொருவருமார்பினைத்
தன்றழைக்கைகளாற்றழுவித்தனி
நின்றழைத்துயிர்த்தாளுயிர்நீங்கினாள். (உசசு)

வானமங்கையரும்மற்றுமற்றுயர்
தானமங்கையருந்தவப்பாலவர்
ஆனமங்கையரும்மருங்கற்புடை
மானமங்கையர்தாமும்வழுத்தினர். (உசஎ)

பின்னவ்வீடணன்பேரொழிற்றம்முனூர்
வன்னிகூவிவரன்முறையான்மறை
சொன்னவீமம்விதிமுறையாற்றெருகுத்
தின்னனெஞ்சினொடைஞ்சலித்தேற்றினான். (உசஅ)

இந்தனத்தகில்சந்தனமிட்டுமேல்
அந்தமானத்தழகுறத்தானமைத்
தெந்தவோசையுங்கீழுறவார்த்திடை
மூந்துசங்கொலியெங்குமுழங்குற. (உசகூ)

கொற்றவெண்குடையோடுகொடிமிடைந்
தற்றவீமவிதியினுடம்படிஇச்
சுற்றுமாதர்தொடர்ந்துடன்சூழ்வர
மற்றவீரன்விதியின்வழங்கினான். (உருo)

கடன்கொள்செய்கைமுடித்துக்கணவனோ
டுடைந்துபோனமயன்மகளுக்குடன்
அடங்கவெங்கனலிக்கழுதாக்கினான்
குடங்கொணீரினுங்கண்சோர்குமிழியான். (உருக)

மற்றையோர்க்கும்வரன்முறையால்வருத்
தற்றதிக்கொடுத்துண்குறுநீருகுத்
தெற்றையோர்க்குமிவனலதில்லெனு
வெற்றிவீரன்குரைகழன்மேவினான். (உருஉ)

வந்துதாழ்ந்ததுணைவனைவள்ளலும்
சிந்தைவெந்துயர்தீருதிதெள்ளியோய்
முந்தையோர்தம்முறைமையிதாமெனு
அந்தமில்லிடர்ப்பாசமகற்றினன். (௨௫௩)

இராவணன்வதைப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௩௧௧0.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

## ௩௯-வது. மீட்சிப்படலம்.

வருந்தனீதிமனுநெறியாவையும்
பொருந்துகேள்விப்புலமையினேயென
அருந்தவப்பயனாலடைந்தாற்கறைந்
திருந்தவத்திளையோற்கிதியம்பினன். (௧)

சோதியான்மகன்றோன்றலநுமன்மற்
றேதில்வானரவீரரொடேகிநீ
ஆதிநாயகனுக்கியநூன்முறை
நீதியானைநெடுமுடிசூடுவாய். (௨)

என்றுகூறியிளவலொடியாரையும்
வென்றிவீரன்விடையருள்வேலையின்
நின்றதேவர்நெடுந்திசையோரொடும்
சென்றுதத்தமசெய்கைபுரிந்தனர். (௩)

சூழ்கடற்புனலும்பலதோயமும்
நீண்முடித்தொகையும்பிறநீர்மையும்
பாழிதுற்றரிபற்றியபீடமும்
தாழ்வில்கொற்றத்தமரர்கடந்தனர். (௪)

வாசநாண்மலரோன்சொலமான்முகன்
காசுமாநிதியுங்கொடுகங்கைசூ
டீசனேமுதலோர்வியந்தேத்திடத்
தேசுலாமணிமண்டபஞ்செய்தனன். (௫)

மெய்கொள்வேதவிதிமுறைவிண்ணுளோர்
தெய்வநீர்ப்புனலாட்டிருத்திட
ஐயனாணையினாலிளங்கோளரி
[illegible]ன்மகுடங்கவித்தானரோ. (௬)

[illegible]ரியனுன்றுகதிரினைச்சூடியோ
[illegible]ணித்தவிசிற்பொலிந்தென்னவே
[illegible]வற்றியிலங்கையர்வேந்தனீ
[illegible]ப்பொலிந்தான்றமரார்த்தெழ. (௭)

தேவர்பூமழைசித்தர்முதலினோர்
மேவுகாதல்விரைமலர்வேறிலர்
மூவரோடுமுனிவர்மற்றியாவரும்
நாவினாசிநறைமலர்தூவினார். (௮)

முடிபுனைந்தநிருதர்முதலவன்
அடிவணங்கியிளவலையாண்டையக்
நெடியகாதலினோற்குயர்நீர்மைசெய்
திடிகொள்சொல்லனவற்கியம்பினான். (௯)

விலங்கணுணமிடைதருதோளினாய்
இலங்கைமாநகர்யான்வருமெல்லைநீ
கலங்கலாநெடுங்காவலியற்றென
அலங்கல்வீரனடியிணையெய்தினான். (௧௦)

குரக்குவீரனரசிளங்கோளரி
அரக்கர்கோமகனோடிதாழலும்
பொருக்கெனப்புகல்புக்கவற்புல்லியத்
திருக்கொண்மார்பனினையனசெப்பினான். (௧௧)

உருமைமூவுலகுந்தொழவும்பர்தம்
பெருமைநீதியறன்வழிபேர்கிலா
திருமையேயரசாளுதியீறிலாத்
தருமசீலவென்றான்மறைதந்துளான். (௧௨)

பன்னுநீதிகள்பற்பலகூறிமற்
றன்னடைந்தவரோடுயர்கீர்த்தியோய்
மன்னிவாழ்கென்றுரைத்தடன்மாருதி
தன்னைநோக்கினன்றூயர்சொனோக்கினான். (௧௩)

இப்புறத்தினவெய்துறுகாலையில்
அப்புறத்தனையுன்னியநுமனைத்
துப்புறச்செய்யவாய்மணித்தோகைபால்
செப்புதிப்படிபோயெனச்செப்பினான். (௧௪)

வணங்கியந்தமின்மாருதிவாரணம்
அணங்குதண்கடிகாவுசென்றண்மினான்
உணங்குகொம்புக்குயிர்வருநீரெனச்
சுணங்குதோய்முலையாட்கிவைசொல்லினான். (௧௫)

பாடினான்றிருநாமங்கள்பன்முறை
கூடிசாரியிற்குப்புற்றுக்கூத்தினை
னாடியங்கையிரண்டுமலங்குறச்
சூடிநின்றனன்குன்றன்னதோளினான். (௧௬)

ஏழைசோபனமேந்திழைசோபனம்
வாழிசோபனமங்கலஞ்சோபனம்
ஆழியானவரக்கனையாரியச்
சூழியானைதுகைத்ததுசோபனம். (௧௭)

தலைகிடந்தனதாரணிதாங்கிய
மலைகிடந்தனபொன்மணித்தோணியா
அலைகிடந்தனவாழிகிடந்தன
நிலைகிடந்தவுடனிலத்தேயென்றான். (௧௮)

அண்ணலானையின்வீடணனாம்றக்
கண்ணலாதவன்காதலொடூர்தலால்
பெண்ணலாதுபிழைத்துளதாகுமென்
றெண்ணலாவதோர்பேரிலதாலென்றான். (௧௯)

ஒருகலைத்தனிவெண்மதிநாளொடும்
வருகலைக்குவருவதுமாறுறப்
பொருகலைக்குலம்பூத்ததுபோன்றனள்
பருகலுற்றவமுதன்னபான்மையாள். (௨௰)

ஆம்பல்வாயுமுகமுமலர்ந்திடத்
தேம்புநுண்ணிடைநோவத்திரண்முலை
ஏம்பலாசைக்கிரட்டிவந்தெய்தினாள்
பாம்புகான்றபனிமதிப்பான்மையாள். (௨௧)

புந்தியோபேருவகைப்பொருமலோ
உந்தியோங்குமொளிவளைத்தோள்கொலோ
சிந்தியோடுகலையுடைத்தேர்கொலோ
முந்தியோங்கியதியாதுமுலைகொலோ. (௨௨)

குனித்தகோலப்புருவங்கள்கொம்மைவேர்
பனித்தகொங்கைமழலைப்பனிமொழி
நுனிப்பதொன்றுநுவல்வதொன்றாயினள்
கனித்தவின்களிகள்ளின்னகாட்டுமோ. (௨௩)

அனையளாகியநுமனைநோக்கினாள்
இனையதின்னதியம்புவதென்பதோர்
நினைவிலாதுநெடிதிருந்தாளெனடு
மனை[illegible]ன்மாசுதுடைத்தமனத்தினாள். (௨௪)

[illegible]கொன்றியம்புவலென்பது
[illegible]தவுவகையின்விம்மலோ
[illegible]க்குமென்றேவெனச்சொல்லினான்
[illegible]னநுகைகவிகழ்த்தினாள். (௨௫)

மேக்குவீங்கியவெள்ளவுவகையால்
ஏக்கமுற்றொன்றியம்புவதியாதென
நோக்கிநோக்கியரிதென்றொர்ந்துளேன்
பாக்கியம்பெரும்பித்தும்பயக்குமோ. (உ௬)

முன்னைநீக்குவென்மொய்சிறையென்றநீ
பின்னைநீக்கியுவகையும்பேசினை
என்னபேற்றினையீகுவதென்பதை
உன்னிநோக்கியுமைமறந்தோவினேன். (உ௭)

உலகமூன்றுமுதவற்கொருதனி
விலையிலாமையுமுன்னினென்மேலவை
நிலையிலாமைநினைந்தனனின்னையென்
தலையினாற்றொழவுந்தகுந்தன்மையோய். (உ௮)

ஆதலாலொன்றுதவுதலாற்றலேன்
யாதுசெய்வதென்றெண்ணியிருந்தனென்
வேதநன்மணிவேடகஞ்செய்தன்ன
ஆதவென்னினிச்செய்திறஞ்சொல்லென்றாள். (உ௯)

எனக்களிக்கும்வரமெம்பிராட்டிநின்
மனக்களிக்குமற்றுன்னையம்மானவன்
றனக்களிக்கும்பணியினுந்தக்கதோ
புனக்களிக்குலமாமயில்போன்றுளாய். (௩0)

எனவுரைத்துத்திரிசடையாளெம்மோய்
மனவினிற்சுடர்மாமுகமாட்சியா
டனையொழித்திவ்வரக்கியர்தங்களை
வினையினிற்சுடவேண்டுவல்யானென்றான். (௩௧)

உரையலாவுரையுன்னையுரைத்துராய்
விரையவோடிவிழுங்குவலென்றுளார்
வரைசெய்மேனியைவள்ளுகிராற்பிளந்
திரைசெய்வேன்மறலிக்கினியென்னுமால். (௩உ)

குடர்குறைத்துக்குருதிகுடித்தவர்
உடர்முருக்கியிட்டுண்குவெனென்றலும்
அடலரக்கியரன்னைநின்பாதமே
விடலமெய்ச்சரணென்றுவிளம்பலும். (௩௩)

அன்னையஞ்சன்மினஞ்சன்மினீரொரு
மன்னுமாருதிமாமுகநோக்கிவே
றென்னதீமையிவரிழைத்தாரவன்
சொன்னசொல்லினதல்லதுனுய்மையோய். (௩௪)

யானிழைத்தவினையினிவ்விடர்
தானெடுத்ததுதாயினுமன்பிேனாய்
கூனியிற்கொடியாரலரோயிவர்
போனவப்பொருள்போற்றலைபுந்தியோய். (௩௫)

எனக்குநீயருளிவ்வரந்தீவினை
தனக்குவாழ்விடமாயசழக்கியர்
மனக்குநோய்செயலென்றனண்மாமதி
தனக்குமாமறுத்தந்தமுகத்தினாள். (௩௬)

என்றபோதினிறைஞ்சினனெம்பிரான்
றன்றுணைப்பெருந்தேவிதயாவெனா
நின்றகாலைநெடியவன்வீடணை
சென்றுதாநமதேவியைச்சீரொடும். (௩௭)

என்னுங்காலையிருளும்வெயிலுங்கார்
மின்னுமோவியியற்கையவீடணன்
உன்னுங்காலைக்கொணர்தியென்றோதவப்
பொன்னின்காற்றளிர்சூடினன்போந்துளான். (௩௮)

வேறு.

வேண்டிற்றுமுடிந்ததன்றேவேதியர்தேவனின்னைக்
காண்டற்குவிரும்புகின்றானும்பருங்காணவந்தார்
பூண்டக்கோலம்வல்லைபுனைந்தனைவருத்தம்போக்கி
ஈண்டுக்கொண்டணைதியென்றானெழுந்தருளிறைவியென்றான். (௩௯)

யானிவணிருந்ததன்மையிமையவர்குழுவுமெங்கள்
கோனுமம்முனிவர்தங்கள்கூட்டமுங்குலத்துக்கேற்ற
வானுயர்கற்பின்மாதரீட்டமுங்காண்டன்மாட்சி
மேனினைகோலங்கோடல்விழுமியதன்றுவீர. (௪௦)

என்றனளிறைவிகேட்டவிராக்கதர்க்கிறைவனீலக்
குன்றனதோளினான்றன்பணியினிற்குறிப்பிதென்றான்
நன்றெனநங்கைநேர்ந்தாளயகக்கோலங்கொள்ளச்
சென்றனர்வானநாட்டுத்திலோத்தமைமுதலோர்சேர. (௪௧)

மேனகையரம்பைமற்றையுருப்பசிவேறுமுள்ள
வானகநாட்டுமாதர்யாருமஞ்சனத்துக்கேற்ற
நானநெய்யூட்டப்பட்டநவையில்கலவைதாங்கிப்
போ[illegible]ந்தையன்மருங்குறநெருங்கிப்புக்கார். (௪௨)

கா[illegible]ண்மைக்கெல்லாங்கற்பினுக்கணியைப்பொற்பின்
ஆ[illegible]ன்வந்தவமுதினையறத்தின்றாயைச்
சேனு[illegible]யையெல்லாமுறைசெய்தசெல்வனென்ன
வேண[illegible]ரம்பைமெல்லவிரன்முறைசுகிர்ந்துவிட்டாள். (௪௩)

பாகடர்ந்தமுதுபில்கும்பவளவாய்த்தரளப்பத்தி
சேகறவிளக்கினானந்திட்டிமண்சேர்ந்தகாசை
வேகடஞ்செய்யுமாபோன்மஞ்சனவிதியின்வேய்ந்த
தோகைதங்கலங்கண்மானவாட்டினரும்பர்மாதர். (சச)

உருவிளைபவளவல்லிபானுவையுண்டதென்ன
மருவிளைகலவையூட்டிக்குங்குமமுலையின்மாட்டிக்
கருவிளைமலரின்காட்சிக்காசறுதூசுகாமர்
திருவிளையலகுற்கேற்பமேகலைதழுவச்சேர்த்தார். (சரு)

சந்திரன்றேவிமாரிற்றகையுறுதரளப்பைம்பூண்
இந்திரன்றேவிக்கேற்பவியைவனபூட்டியாணர்
சிந்துரப்பவளச்செவ்வாய்த்தேம்பசும்பாகுதீற்றி
மந்திரத்தயினீரால்வலஞ்செய்துகாப்புமிட்டார். (சசா)

மண்டிலமதியினுப்பண்மானிருந்தென்னமானம்
கொண்டனரோத்திவானமடந்தையர்தொடர்ந்துகூட
மண்டிவானரருமோடவரக்கரும்புறஞ்சூழ்ந்தோட
அண்டர்நாயகன்பாலண்ணல்வீடணனருளிற்சென்றான். (சஎ)

வேறு.

இப்புறத்திமையவர்முனிவரோமையர்
துப்புறச்சிவந்தவாய்விஞ்சைத்தோகையர்
முப்புறத்துலகினுமெண்ணின்முற்றினோர்
ஒப்புறக்குவிந்தனரோகைகூறுவார். (சஅ)

அருங்குலக்கற்பினுக்கணியையண்மினூர்
மருங்குபின்முன்செலவழியின்றென்னலாய்
நெருங்கினர்நெருங்குழிநிருதரோச்சலால்
கருங்கடன்முழக்கெனப்பிறந்தகம்பலை. (சகூ)

அவ்வழியிராமனுமலர்ந்ததாமரைச்
செவ்விவாண்முகங்கொடுசெயிர்த்துநோக்குறா
இவ்வொலியாவதென்றியம்பவற்றெனுக்
கவ்வையின்முனிவார்கழறினூரரோ. (ருo)

முனிவரர்வாசகங்கேட்புறுதமுன்
நனியிதழ்துடித்திடநகைத்துவீடணன்
றனையெழநோக்கிநீதகாதுசெய்தியோ
புனிதநூல்கற்றுணர்புந்தியோயென்றான். (ருக)

கடுந்திறலமர்க்களங்காணுமாசையால்
நெடுந்திசைத்தேவருநின்றயாவரும்
அடைந்தனருவகையினடைகின்றார்களைக்
கடிந்திடயார்சொனூர்கருதுநூல்வலாய். (ருஉ)

வேறு.

பரசுடைக்கடவுணேமிப்பண்ணவன்பதுமத்தண்ண
லரசுடைத்தெரிவைமாராயின்றியேயமைவதுண்டே
கரைசெயற்கரியதேவரேனையோர்கரந்துகாண்பான்
விரசுறின்விலக்குவாரோவேறுளோர்க்கென்கொல்வீர. (ருஉ)

ஆதலானரக்கர்கோவேயடுப்பதன்றுனக்குமின்னே
சாதுகைமாந்தர்தம்மைத்தடுப்பதென்றருளிச்செங்கண்
வேதநாயகன்முனிற்பவெய்துயிர்த்தலக்கணெய்திக்
கோதிலாமனனுமெய்யுங்குலைந்தனன்குணங்கடேயோன். (ருச)

அருந்ததியனையநங்கையமர்க்களமணுகியாடற்
பருந்தொடுகழுகும்பேயும்பசிப்பிணிதீருமாறு
விருந்திடுவில்லின்செல்வன்விழாவணிவிரும்பிநோக்கிக்
கருந்தடங்கணுநெஞ்சுங்களித்திடவினையசொன்னாள். (ருரு)

வேறு.

சீலமுங்காட்டியென்கணவன்சேவகக்
கோலமுங்காட்டியென்குலமுங்காட்டியிஞ்
ஞாலமுங்காட்டியகவிக்குநாளருக்
காலமுங்காட்டுமேகொல்லென்கற்பென்றாள். (ருசு)

எச்சிலேனுடலுயிரோகிற்றேயினி
நச்சிலையென்னுமோர்நவையிலாளெதிர்
பச்சிலைவண்ணமும்பவளவாயுமாய்க்
கைச்சிலையேந்திநின்றதனைக்கண்ணுற்றாள். (ருஎ)

மானமீதரம்பையர்சூழவந்துளாள்
போனபேருயிரினைக்கண்டபொய்யுட
ரூனதுகவர்வுறுந்தன்மைத்தாமென
ஆனனங்காட்டுறவவனியெய்தினாள். (ருஅ)

பிறப்பினுந்துணைவனைப்பிறவிப்பேரிடர்
அறப்பினுந்துணைவனைத்தொழுதுநானினி
மறப்பினுநன்றிதுமாறுவேறவிழ்ந்
திறப்பினுநன்றெனவேக்கநீங்கினாள். (ருகூ)

கற்பினுக்கரசினைப்பெண்மைக்காப்பினைப்
பொற்பினுக்கழகினைப்புகழின்வாழ்க்கையைத்
தற்பிரிந்தருள்புரிதருமம்போலியை
[illegible]தலைவனுமமையநோக்கினான். (சுo)

[illegible]துணைமுலைமுன்றிற்றூங்கிய
[illegible]நெடுங்கணீராறுவார்வுற
[illegible]மயிலினைக்கற்பின்வாழ்வினைப்
[illegible]ராவெனமுனிந்துபார்ப்புறு. (சுக)

ஊண்டிறமுவந்தனையொழுக்கம்பாழ்பட
மாண்டிலமுறைதிறம்பரக்கன்மாநகர்
ஆண்டுறைந்தடங்கினையச்சந்தீர்ந்திவண்
மீண்டதென்னிவனெனவிரும்புமென்பதோ. (௬௨)

உன்னைமீட்பான்பொருட்டுவரிதூர்த்தொளிர்
மின்னைவீட்டுறுபடையரக்கர்வேரறப்
பின்னைமீட்டுறுபகைகடந்திலேன்பிழை
என்னைமீட்பான்பொருட்டிலங்கையெய்தினேன். (௬௩)

மருந்தினுமுரியமன்னுயிரின்வான்றசை
அருந்தினையேநறவமையவுண்டியே
இருந்தனையேவினியெமக்குமேற்பன
விருந்துளவோவுரைவெம்மைநீங்கினாய். (௬௪)

கலத்தினிற்பிறந்தமாமணியிற்காந்துறு
நலத்தினிற்பிறந்ததுநடந்தநன்மைசால்
குலத்தினிற்பிறந்திலைகோளில்கீடம்போல்
நிலத்தினிற்பிறந்தமைநிரப்பினையரோ. (௫௬)

பெண்மையும்பெருமையும்பிறப்புங்கற்பெனும்
திண்மையுமொழுக்கமுந்தெளிவுஞ்சீர்மையும்
உண்மையுநீயெனுமொருத்திதோன்றலால்
வண்மையின்மன்னவன்புகழின்மாய்ந்ததால். (௬௬)

அடர்ப்பனாம்புலன்களையொழுக்கமாணியாச்
சடப்பரந்தகைவதோர்தகைவின்மாதவம்
படைப்பர்வந்திடையொருபழிவந்தாலது
துடைப்பர்தம்முயிரொடுங்குலத்திற்றோகைமார். (௬௭)

யாதியானியம்புவதுணர்வையீடறச்
சேதியாநின்றதுன்னொழுக்கஞ்செய்வது
சாதியாலன்றெனிற்றக்கதோர்நெறி
போதியாலென்றனன்புலவர்புந்தியான். (௬௮)

முனைவருமமருமற்றுமுற்றிய
நினைவருமகளிருநிருதரொன்றுளார்
எனைவரும்வானரத்தெவரும்வேறுளார்
அனைவரும்வாய்திறந்தரற்றினாரரோ. (௬௯)

கண்ணினையுதிரமும்புனலுங்கான்றுக
மண்ணினைநோக்கியமலரின்வைகுவாள்
புண்ணினைக்கோலுறுத்தனையபொம்மலால்
உண்ணினைப்போவிநின்றுயிர்ப்புவீங்கினாள். (௭௦)

பருந்தடர்சுரத்திடைப்பருகுநீர்நசை
வருந்தருந்துயரினன்மாளலுற்றமான்
இருந்தடங்கண்டதினெய்துருவகைப்
பெருந்தடையுற்றெனப்பேதுற்றாளரோ. (௭௧)

உய்த்துநின்றுலகினைநோக்கியோரடி
முற்றுறுநெடுங்கணீராலிமொய்த்துக்
இற்றதுபோலும்யானிருந்துபெற்றபே
றற்றதாலென்றவமின்றென்றோதுவாள். (௭௨)

மாருதிவந்தனைக்கண்டுவள்ளனீ
சாருதியீண்டெனச்சமையச்சொல்லினன்
யாரினுமேன்மையானிசைத்ததில்லையோ
சோருமென்னிலையவன்றூதுமல்லனோ. (௭௩)

எத்தவமெந்நலமென்னகற்புநான்
இத்தனைகாலமுழந்தவிவ்வெலாம்
பித்தெனலாயவம்பிழைத்தவாலன்றே
உத்தமநீமனத்துணர்ந்திலாமையால். (௭௪)

பார்க்கெலாம்பத்தினிபதுமத்தானுக்கும்
பேர்க்கலாஞ்சிந்தையளல்லள்பேதையேன்
ஆர்க்கெலாங்கண்ணவனன்றென்றாலது
தீர்க்கலாந்தகையதோதெய்வந்தேறுமோ. (௭௫)

பங்கயத்தொருவனும்விடையின்பாகனும்
சங்குகைத்தாங்கியதருமமூர்த்தியும்
அங்கையினெல்லிபோலனைத்துநோக்கினும்
மங்கையர்மனநிலையுணரவல்லரோ. (௭௬)

ஆதலிற்புறத்தினியாருக்காகவென்
கோதறுதவத்தினைக்கூறிக்காட்டுகேன்
சாதலிற்சிறந்ததொன்றில்லைத்தக்கதே
வேதநின்பணியதுவிதியுமென்றனள். (௭௭)

இளையவன்றனையழைத்திடுதீயென
வளையொலிமுன்கையாள்வாயிற்கூறினாள்
உளைவுறுமனத்தவனுலகம்யாவுக்கும்
களைகணைத்தொழவவன்கண்ணிற்கூறினான். (௭௮)

ஏங்கியபொருமலனிழிகணீரினன்
வாங்கியவுயிரினனனையமைந்தனும்
ஆங்கெரிவிதிமுறையமைவித்தானதன்
பாங்குறநடந்தனள்பதுமப்போதினாள். (௭௯)

தீயிடையருகுறச்சென்றுதேவர்க்கும்
தாய்தனிக்குறுகலுந்தரிக்கிலாமையால்
வாய்திறந்தரற்றினமறைகணான்கொடும்
ஓய்வினல்லறமுமற்றுயிர்கள்யாவையும். (௮௰)

வலம்வருமளவையின்மறுகிவான்முதல்
உலகமுமுயிர்களுமோலமிட்டன
அலமரலுற்றனவலறியையவிச்
சலமிதுதக்கிலதென்னச்சாற்றின. (௮௧)

இந்திரன்றேவியர்முதலவேழையர்
அந்தரவானினின்றரற்றுகின்றவர்
செந்தளிர்க்கைகளாற்சேயரிப்பெருஞ்
சுந்தரக்கண்களையெற்றித்துள்ளினார். (௮௨)

நடுங்கினர்நான்முகன்முதலநாயகர்
படங்குறைந்ததுபடிசுமந்தபாம்புவாய்
விடம்பிறந்துளதெனவெதும்பிற்றுல
கிடந்திரிந்ததுசுடர்க்கடல்களேங்கின. (௮௩)

கனத்தினாற்கடந்தபூண்முலையகைவளை
மனத்தினால்வாக்கினான்மறுவுற்றேனெனின்
சினத்தினாற்சுடுதியாற்றீச்செல்வாவென்றாள்
புனத்துழாய்க்கணவற்கும்வணக்கம்போக்கினாள். (௮௪)

நீந்தரும்புனலிடைநிவந்ததாமரை
ஏய்ந்ததன்கோயிலேயெய்துவாளெனப்
பாய்ந்தனள்பாய்தலும்பாலின்பஞ்செனத்
தீந்ததவ்வெரியவள்கற்பின்றீயினால். (௮௫)

அழுந்தினணங்கைமற்றங்கையாற்சுமந்
தெழுந்தனனங்கிவெந்தெரியுமேனியான்
தொழுங்கரத்துணையினன்சுருதிஞானத்தின்
கொழுந்தினைப்பூசலிட்டரற்றுங்கொள்கையான். (௮௬)

ஊடினசீற்றத்தாலுதித்தவேர்களும்
வாடினவில்லையாலுணர்த்துமாறுண்டோ
பாடியவண்டொடும்பனித்ததேனொடும்
சூடினமலர்கணீர்தோய்ந்தபோன்றவால். (௮௭)

திரிந்தனவுலகமுஞ்செவ்வைநின்றன
பரிந்தவருயிரெலாம்பயத்தினீங்கின
அருந்ததிமுதலியமகளிராடுதல்
புரிந்தனர்நாணமும்பொறையுநீங்கினார். (௮௮)

கனிந்தயர்கற்பெனுங்கடவுட்டீயினால்
நினைந்திலையென்வலிநீக்கினுயென
அனிந்தனையங்கியேயர்கிலென்னையும்
முனிந்தனையாமெனமுறையிட்டானரோ. (அகூ)

இன்னதோர்காலையினிராமன்யாவரா நீ
என்னை நீயியம்பியதெரியுட்டோன்றியிப்
புன்மைசாலொருத்தியைச்சுடாதுபோற்றினாய்
அன்னதார்சொல்லவீதறைதியாலென்றான். (கூ0)

அங்கியானென்னையிவ்வன்னைகற்பெனும்
பொங்குவெந்திச்சுடப்பொறுக்கிலாமையால்
இங்கணைந்தேனெனுமியற்கைநோக்கியும்
சங்கியாநிற்றியோவெவர்க்குஞ்சான்றனாய் (கூக)

வேட்பதுமங்கையர்விலங்கினொனின்
கேட்பதும்பல்பொருட்கையக்கேடற
மீட்பதுமென்வயினென்றுமெய்ப்பொருள்
வாட்பெருந்தோளினாய்மறைகள்சொல்லுமால். (கூஉ)

ஐயுறுபொருள்களையாசின்மாசொரீஇக்
கையுறநெல்லியின்கனியிற்காட்டுமென்
மெய்யுறுகட்டுரைகேட்டுமீட்டியோ
பொய்யுருமாருதியுரையும்போற்றலாய். (கூங)

தேவருமுனிவருந்திரிவகிற்பவும்
மூவகையுலகமுங்கண்கண்மோதினின்
றூவெனல்கேட்கிலையறத்தைநீக்கிவே
றேவமென்றொருபொருள்யாண்டுக்கொண்டியோ. (கூச)

பெய்யுமேமழைபுவிபிளப்பதன்றியே
செய்யுமேபொறையறநெறியிற்செல்லுமே
உய்யுமேயுலகிவளுணர்வுசீறினால்
வையுமேன்மலர்மிசையயனுமாயுமே. (கூரு)

பாடுறுபன்மொழியினையபன்னிநின்
றூடுறுதேவரோடுலகமார்த்தெழச்
சூடுறுமேனியவங்கிதோகையை
மாடுறக்கொணர்ந்தனன்வள்ளல்கூறுவான். (கூசா)

ஊழிப்பிலசான்றுநீயுலகுக்காதலான்
இழிப்பிலசொல்லிநீயிவளையாதுமோர்
பழிப்பிலளென்றனைபழியுமின்றினிக்
கழிப்பிலளென்றனன்கருணையள்ளத்தான். (கூள)

நின

வேறு.

உணர்த்துவாயுண்மையொழிவின்றுகாலம்வந்துளதால்
புணர்த்துமர்மையிற்பொதுவுறநின்றவைபுணரா
இணர்த்துழாய்த்தொங்கலிராமற்கென்றிமையவரிசைப்பத்
தணப்பிருமரைச்சதுமுகனுரைசெயச்சமைந்தான். (௯௮)

மன்னர்தொல்குலத்தவரினத்துணையொருமணித்தன்
என்னவுன்னிடனுன்னைநீயிராமகேளிதனைச்
சொன்னநான்மறைதுணிவினிற்றுணிந்தமெய்த்துணிவு
நின்னலாதில்லைநின்னின்வேறுளதிலைநெடியோய். (௯௯)

பகுதியென்றுளதியாதினும்பழையதுபயந்த
வகுதியால்வந்தவிளைவுமற்றதற்குமேனின்ற
புருதியாவர்க்குமரியவப்புருடனுநீயிம்
மிருதியுஞ்பெருமாயையினுல்வந்தவீக்கம் (௧௦௦)

முன்புபின்பிருபுடையெனுங்குணிப்பருமுறைமைத்
தம்பெருந்தன்மைதாந்தெரிமறைகளின்றலைகள்
மனபெரும்பரமாற்பமென்றுரைக்கின்றமாற்றம்
அன்பினின்னையல்லான்மற்றிங்கியாரையுமறையா. (௧௦௧)

எனக்குமென்வகையுருவற்குமிமையவர்க்கிறைவன்
றனக்கும்பல்பெருமுனிவர்க்குமுயிருடன்றழீஇய
அனைத்தினுக்குநீயேபரமென்பதையறிந்தார்
வினைத்துவக்குடைவீட்டருந்தளைநின்றுமீள்வார். (௧௦௨)

என்னைத்தான்முதலாகியவுருங்களவையும்
முன்னைத்தாய்தந்தையெனும்பெருமாயையின்மூழ்கித்
தன்னைத்தானறியாமையிற்சலிப்பவச்சலந்தீர்ந்
துன்னைத்தாதையென்றுணர்குவமுத்திவித்தொழிந்த. (௧௦௩)

ஐயஞ்சாகியதத்துவந்தெரிந்தறிந்தவற்றின்
மெய்யெஞ்சாவகைமேனின்றவினக்குமேல்யாதும்
பொய்யெஞ்சாவிலதென்னுமீதருமறைபுகலும்
வையஞ்சான்றினிச்சான்றுக்குஞ்சான்றிலைவழக்கால். (௧௦௪)

அளவையாலளந்தாமன்றென்றறிவுறுமமைதி
உளவையாவையுமுனக்கில்லையுபநிடத்துனது
களவையாய்ந்துறத்தெளிந்திலதாயினுங்கண்ணால்
துளவையாய்முடியாயுளைநீயெனத்துணியும். (௧௦௫)

கரணமென்றுளவுன்னைவந்தறிவுகாணுமே
அரணமல்லவர்க்கிவைகடந்தறிவரிதாக
மரணந்தோற்றமென்றிவற்றிடைமயங்குபவவற்றன்
சரணமல்லதோர்சரணில்லையன்னவைதவிர்ப்பான். (௧௦௬)

தோற்றமென்பதொன்றனக்கில்லைநின்கணேதோற்றம்
ஆற்றல்சான்முதற்பகுதிமற்றதனுளாம்பண்பால்
காற்றைமுன்னுடைப்பூதங்களவைசென்றுகடைக்கால்
வீற்றுவீற்றுற்றுவீவுறுநீயென்றும்விளியாய். (௪௦௭)

மின்னைக்காட்டுதல்போல்வந்துவிளியுமெய்யுலகந்
தன்னைக்காட்டவுந்தருமத்தைநாட்டவுந்தனியே
என்னைக்காட்டுதியீசனைக்காட்டுதியெமக்கு
முன்னைக்காட்டிலையொளிக்கினுமிலைமறையுளாயால். (௪௦௮)

என்னுருக்கொடிவ்வுலகினையீனுதியிடையே
உன்னுருக்கொடுபுகுந்துநின்றோம்புதியுமையோன்
றன்னுருக்கொடுதுடைத்திமற்றிதுதனியருக்கன்
முன்னுருக்கொடுபகல்செயுந்தரத்ததுமுதலோய். (௪௦௯)

திருக்குவான்மலிசெல்வத்துச்செருக்குவெந்திறத்துத்
தருக்குமாய்வுறத்தானவராக்கர்வெஞ்சமரில்
இரிக்கமாழ்கிநொந்துனைப்புகல்யாம்புகலியையாக்
கருக்குளாய்வந்துதோற்றுதியீங்கிதுகடனே. (௪௧௦)

ஓங்காரப்பொருடேருவோர்தாமுன்னையுணர்வோர்
ஓங்காரப்பொருளென்றுணர்ந்திருவினையுருப்போர்
ஓங்காரப்பொருளாமன்றென்றூழிசென்றாலும்
ஓங்காரப்பொருளேபொருளென்கலாவுரவோர். (௪௧௧)

இனையதாகலினெம்மையீன்றுலகையுமீன்றிம்
மனையின்மாட்சியைவளர்த்தவெம்மோயினைவாளா
முனையலென்றதுமுடித்தனன்முந்துநீர்முளைத்த
சினையின்பந்தமும்பகுதிகளனைத்தையுஞ்செய்தோன். (௪௧௨)

என்னுமாத்திரத்தேறமர்கடவுளுமிசைத்தான்
உன்னைநீயொன்றுமுணர்ந்திலைபோலுமாலுரவோய்
முன்னையாதியாமூர்த்திநீமூவகையுலகின்
அன்னைசீதையாமாதுநின்மார்பின்வந்தமைந்தாள். (௪௧௩)

துறக்குந்தன்மையளல்லளாற்றொல்லையெவ்வுலகும்
பிறக்கும்பொன்வயிற்றன்னையிப்பெய்வளைபிழைக்கின்
இறக்கும்பல்லுயிர்நிறைவநீயிவடிறத்திகழ்ச்சி
மறக்குந்தன்மையதென்றனன்மழுவலான்வழுத்தி. (௪௧௪)

பின்னுநோக்கினன்பெருந்தகைமுன்புதற்பிரிந்த
இன்னலாலுயிர்துறந்திருந்துறக்கத்துளிருந்த
மன்னனாங்குவற்சென்றுநீகண்டனைவணங்க
முன்னைவான்றுயர்நீக்குதிமொய்ம்பினோயென்றான் (௪௧௫)

ஆதியான்பணியருள்பெற்றவரசருக்கரசன்
காதன்மைந்தனைக்காணியவுவந்ததோர்கருத்தால்
பூதலத்திடைப்புக்கனன்புகுதலும்பொருவில்
வேதவேந்தனுமவன்மலர்த்தாண்மிசைவீழ்ந்தான். (௧௧௬)

வீழ்ந்தமைந்தனையெடுத்துத்தன்விலங்கலாகத்தின்
ஆழ்ந்தழுந்திடத்தழுவித்தன்கண்ணினீராட்டி
வாழ்ந்தசிந்தையன்மனங்களுங்களிப்புறமன்னன்
போழ்ந்ததுன்பங்கள்புறப்படநின்றிவைபுகன்றான். (௧௧௭)

அன்றுகேகயன்மகள்கொண்டவரமெனுமயில்வேல்
இன்றுகாறுமென்னிதயத்தினிடைநின்றதென்னைக்
கொன்றுநீங்கலதிப்பொழுதகன்றதுன்குலப்பூண்
மன்றலாகமாங்காந்தமாமணியின்றுவாங்க. (௧௧௮)

மைந்தரைப்பெற்றுவானுயர்தோற்றத்துமலர்ந்தார்
சுந்தரப்பெருந்தோளினாயென்றுனைத்தாளின்
பைந்துகட்களுமொக்கிலராமெனப்படைத்தாய்
உய்ந்தவர்க்கருந்துறக்கமும்புகழும்பெற்றுயர்ந்தேன். (௧௧௯)

பண்டுநான்றொழுந்தேவருமுனிவரும்பாராய்
கண்டுகண்டெனைக்கைத்தலங்குவிக்கின்றகாட்சி
புண்டரீகத்துப்புராதனன்றன்னொடும்பொருத்தி
அண்டமூலத்தோராசனத்திருத்தினையழக. (௧௨௦)

என்றுமைந்தனையெடுத்தெடுத்திறுகுறத்தழுவிக்
குன்றுபோன்றுளதோளினான்சீதையைக்குறுகத்
தன்றுணைக்கழல்வணங்கலுங்கருணையாற்றழுவி
நின்றுமற்றிவைநிகழ்த்தினனிகழ்த்தரும்புகழோன். (௧௨௧)

நங்கைமற்றுநின்கற்பினையுலகுக்குநாட்ட
அங்கிபுக்கிடென்றுணர்த்தியதுமனத்தடையேல்
சங்கையுற்றவர்பெறுவதுமுண்டதுசரதம்
கங்கைநாடுடைக்கணவனைமுனிவுறக்கருதேல். (௧௨௨)

பொன்னைத்தீயிடைப்பெய்தலப்பொன்னுடைத்தூய்மை
தன்னைக்காட்டுதற்கென்பதுமனக்கொளற்றகுதி
உன்னைக்காட்டினன்கற்பினுக்கரசியென்றுலகில்
பின்னைக்காட்டுதற்கரியதென்றெண்ணியப்பெரியோன். (௧௨௩)

பெண்பிறந்தவரருந்ததியேமுதற்பெருமைப்
பண்பிறந்தவர்க்கருங்கலமாகியபாவாய்
மண்பிறந்தகமுனக்குநீவானின்றும்வந்தாய்
எண்பிறந்தநின்குணங்களுக்கினியழுக்கிலையால். (௧௨௪)

என்னச்சொல்லியவ்வேந்திழைதிருமனத்தியாதும்
உன்னச்செய்வதோர்மூனிவின்மைமனக்கொளாவுவந்தான்
பின்னைச்செம்மலவ்விளவலையுள்ளன்புபிணிப்பத்
தன்னைத்தானெனத்தழுவினன்கண்கணீர்ததும்ப. (௧௨௫)

கண்ணினீர்ப்பெருந்தாரை மற்றவன்சடைக்கற்றை
மண்ணினீத்தமொத்திழிதரத்தழீஇநின்றமைந்த
எண்ணினீக்கரும்பிறவியுமென்னெஞ்சினிறந்த
புண்ணுநீக்கினையுமையனைத்தொடர்ந்துடன்போந்தாய் (௧௨௬)

புரந்தரன்பெரும்பகைஞனைப்போர்வென்றவுன்றன்
பரம்புயர்ந்ததோளாற்றலேதேவரும்பலரும்
நிரந்தரம்புகல்கின்றதுநீயிந்தவுலகின்
அரந்தையாம்பகைதுடைத்தறநிறுத்தினையைய. (௧௨௭)

என்றுபின்னருமிராமனையானுனக்கீவ
தொன்றுகூறுதியுயர்குணத்தோயெனவனையான்
சென்றுவானிடைக்கண்டிடர்தீர்வெனென்றிருந்தேன்
இன்றுகாணப்பெற்றேனினிப்பெறுவதென்னென்றான். (௧௨௮)

ஆயினும்முனக்கமைந்ததொன்றுரையெனவழகன்
தீயளென்றுநீதுறந்தவென்றெய்வமுமகனும்
தாயுந்தம்பியுமாம்வரந்தருகெனத்தாழ்ந்தான்
வாய்திறந்தெழுந்தார்த்தனவுயிரெலாம்வழுத்தி. (௧௨௯)

வரதகேளெனத்தயரதனுரைசெய்வான்மறுவில்
பரதனன்னதுபெறுகதான்மூடியினைப்பறித்திவ்
விரதவேடமற்றுதவியபாவிமேல்விளிவு
சரதநீங்கலதாமென்றான்றழீஇயகைதளர. (௧௩0)

ஊன்பிழைக்கிலாவுயிர்நெடிதளிக்குநீளரசை
வான்பிழைக்கிதுமுதலெனுந்தாள்வுறமதித்து
யான்பிழைத்ததல்லாலென்னையீன்றவெம்பிராட்டி
தான்பிழைத்ததுண்டோவென்றானவன்சலந்தவிர்ந்தான். (௧௩௧)

எவ்வரங்களுங்கடந்தவனப்பொருளிசைப்பத்
தெவ்வரம்பறுகானிடைச்செலுத்தினாட்கீந்த
அவ்வரங்களுமிரண்டவையாற்றினாற்கீந்த
இவ்வரங்களுமிரண்டென்றார்தேவருமிரங்கி. (௧௩௨)

வரமிரண்டளித்தழகனையிளவலைமலர்மேல்
விரவுபொன்னினைமண்ணிடைநிறுத்திவிண்ணிடையே
உரவுமானமீதேகினனும்பருமுலகும்
பரவுமெய்யினுக்குயிரளித்துறுபுகழ்படைத்தோன். (௧௩௩)

கோட்டுவார்சிலைக்குரிசிலையமரர்தங்குழாங்கள்
மீட்டுநோக்குருவீரனீவேண்டுவவரங்கள்
கேட்டியாலெனவரக்கர்களிளப்பருஞ்செருவில்
வீட்டமாண்டுளகுரங்கெலாமெழுகெனவிளம்பி. (௧௩௪)

பின்னுமோர்வரம்வானரப்பெருங்கடல்பெயர்ந்து
மன்னுமவ்வனமால்வரைக்குலங்கண்மற்றின்ன
துன்னிடங்கள்காய்கனிகிழங்கோடுதேன்றுற்ற
இன்னுணீருளவாகெனவியம்பிடுகென்றான். (௧௩௫)

வருந்தரும்முதன்மழுவலான்முனிவரர்வானோர்
புரந்தராதிமற்றேனையோர்தனித்தனிப்புகல
அருந்தைவெம்பிறப்பறுக்குநாயகனைதருளால்
குரங்கினம்பெறுகென்றனருள்ளமுங்குளிர்ப்பார். (௧௩௬)

முந்தைநாண்முதற்கடைமுறையளவையுமுடிந்த
அந்தவானரமடங்கலுமெழுந்துடனார்த்துச்
சிந்தையோடுகண்களிப்புறச்செருவெலாநினையா
வந்துதாமரைக்கண்ணனைவணங்கினமகிழ்ந்து. (௧௩௭)

கும்பகன்னனோடிந்திரசித்துவெங்குலப்போர்
வெம்புவெஞ்சினத்திராவணன்முதலியவீரர்
அம்பின்மாண்டுளவானரமருங்குவந்தார்ப்ப
உம்பர்யாவருமிறைவனைப்பார்த்திவையுரைத்தார். (௧௩௮)

இடையுவாவினிற்சுவேலம்வந்திறுத்தெயிலிலங்கைப்
புடையவாவுறச்சேனையைவளைப்புறப்போக்கிப்
படையவாவுறுமரக்கர்தங்குலமுற்றும்படுத்துக்
கடையுவாவினிலிராவணன்றனையுங்கட்டு. (௧௩௯)

வஞ்சரில்லையிவ்வண்டத்தெனும்படிமடித்த
கஞ்சநாண்மலர்க்கையினயனைசொல்காறும்
அஞ்சொடைஞ்சுநான்கென்றெனுமாண்டுபோய்முடிந்த
பஞ்சமிப்பெயர்படைத்துளதிதியின்றுபயந்த. (௧௪௦)

இன்றுசென்றுநீபரதனையெய்தலையென்னின்
பொன்றுமாலவனெரியிடையன்னதுபோக்க
வென்றிவீரநீபோதியாலென்பதுவிளம்பா
நின்றதேவர்கணீங்கினாரிராகவனினைந்தான். (௧௪௧)

ஆண்டுபத்தொருநாலுமின்றோடுமாயின்
மாண்டதாமினியென்குலம்பரதனேமாயின்
ஈண்டுபோகவோரூர்தியுண்டோவெனவின்றே
ஆண்டுமானமுன்னென்றடல்வீடணன்றொழுதான். (௧௪௨)

வாங்கினானிருநிதியொடுதனதனில்வள்ளால்
ஓங்குமால்வெள்ளமெழுபஃதேறினுமொல்கா
தீங்குளாரெலாமிவருவதிவ்ரினீயினிது
பூங்குலாநகர்புகுதியிஞ்ஞான்றெனப்புகலா. (கசங)

இயக்கர்வேந்தனுக்கருமறைக்கிழவனன்றீந்தான்
துயக்கிலாதவர்மனமெனத்தூயதுசுரர்கள்
வியக்கவான்செலும்புட்பகவிமானமுண்டென்றே
மயக்கிலான்சொலக்கொணருதிவல்லையினென்றான். (கசச)

அண்டகோடிகளநந்தமொத்தாயிரமருக்கர்
விண்டதாமெனவிசும்பிடைத்திசையெலாம்விளங்கக்
கண்டையாயிரகோடிகளொலிப்புறக்கனலக்
கொண்டணைந்தனனொடியினிரக்கர்தங்கோமான். (கசரு)

அனையபுட்பகவிமானம்வந்தவனியையணுக
இனியசிந்தனையிராகவனுவகையோடினிநம்
வினையமுற்றியதென்றுகொண்டெழுந்தனன்விண்ணோர்
புனைமலர்ச்சொரிந்தார்த்தனராசிகள்புகன்றே. (கசசு)

வணங்குநுண்ணிடைத்திரிசடைவணங்கவான்கற்பிற்
கிணங்கரின்மையாளோக்கியோரிடரின்றியிலங்கைக்
கணங்குதானெனவிருத்தியென்றையன்மாடணைந்தாள்
மணங்கொள்வேயிளங்கோளரிமானமீப்படர்ந்தான். (கசஎ)

அண்டமுண்டவன்மணியணியுதரமொத்தநிலன்.
சண்டவேகமுங்குறைதரநினைவெனுந்தகைத்தாய்
விண்டலந்திகழ்விமானமாம்புட்பகமிதன்மேற்
கொண்டகொண்டறன்றுணைவரைப்பார்த்திவைகுணித்தான். (கசஅ)

வீடணன்றனையன்புறநோக்குறுவிமலன்
தோடணைந்ததார்மௌலியாய்சொல்வதொன்றுளதுன்
னாடணைந்தவர்க்கின்பமேவழங்கினீளரசி
னூடணைந்தவர்புகழ்ந்திடவீற்றிருநலத்தால். (கசகூ)

நீதியாறெனத்தெரிவுறுநிலைமைபெற்றுடையாய்
ஆதிநான்மறைக்கிழவனின்குலமெனவமைந்தாய்
ஏதிலார்தொழுமிலங்கைமாநகரினுளினிநீ
போதியாலெனப்புகன்றனனான்மறைபுகன்றான். (கருO)

சுக்கிரீவநின்றோளுடைவன்மையாற்றசந்தொ
கக்கிரீவனைத்தடிந்துவெம்பகையினுலசந்த
மிக்கவானரச்சேனையினசாவறமீண்டோர்ப்
புக்குவாழ்கெனப்புகன்றனனீதிலாப்புகழோன். (கருக)

வாலிசேயினைச்சாம்பனைப்பநசனைவயுப்போர்
நீலனாதியநெடும்படைத்தலைவரைநெடிய
காலின்வேலையைத்தாவிமீண்டருளியகருணை
போலும்வீரனைநோக்கிமற்றிம்மொழிபுகன்றான். (௧௫௨)

ஐயனிம்மொழிபுகன்றிடத்துணுக்கமோடவர்கள்
மெய்யுமாவியுங்குலைதரவீழ்கணீர்ததும்பச்
செய்யதாமரைத்தாளிணைமுடியுறச்சேர்த்தி
உய்கிலேமினிநீங்கினெனின்றினையனவுரைத்தார். (௧௫௩)

பாரமாமதிலயோத்தியினெய்திநின்பைம்பொன்
ஆரமாமுடிக்கோலமுஞ்செவ்வியுமழகும்
சோர்விலாதியாங்காண்குறுமளவையுந்தொடர்ந்து
போரத்வேயருளென்றனருள்ளன்புபிணிப்பார். (௧௫௪)

அன்பினாலவர்மொழிந்தவாசகங்களுமவர்கள்
துன்பமெய்தியநடுக்கமுநோக்கிநீர்துளங்கல்
முன்புநானினைந்திருந்ததப்பரிசுநும்முயற்சி
பின்புகாணுமாறுரைத்ததென்றுரைத்தனன்பெரியோன் (௧௫௫)

ஐயன்வாசகங்கேட்டலுமரிகுலத்தரசும்
மொய்கொள்சேனையுமிலங்கையர்வேந்தனுமுதலோர்
வையமாளுடைநாயகன்மலர்ச்சரண்வணங்கி
மெய்யினோடுருந்துறக்கமுற்றொனவியந்தார். (௧௫௬)

அனையதாகியசேனையோடரசனையநிலன்
தனையனாதியாம்படைப்பெருந்தலைவர்கடம்மை
வனையும்வார்கழலிலங்கையர்மன்னனைவந்திங்
கினிதினேறுமின்விமானமென்றிராகவனிசைத்தான். (௧௫௭)

சொன்னவாசகம்பிற்படச்சூரியன்மகனும்
மன்னுவீருமெழுபதுவெள்ளவானரரும்
கன்னிமாமதிலிலங்கைமன்னொடுகடற்படையும்
துன்னினார்நெடும்புட்பகமிசையொருசூழல். (௧௫௮)

பத்துநாலெனவடுக்கியவுலகங்கள்பலவின்
மெய்த்தியோனிகளேறினும்வெற்றிடமிகுமால்
முத்தரானவரிதனிலைமொழிகுவதல்லால்
இத்தராதலத்தியம்புதற்குரியவர்யாரோ. (௧௫௯)

வேறு.

எழுபதுவெள்ளத்தோருமிரவிகான்முளையுமெண்ணின்
வழுவிலாவிலங்கைவேந்தும்வான்பெரும்படையுஞ்சூழத்
தழுவுசீரிளையகோவுஞ்சனகன்மாமயிலும்போற்ற
விழுமியகுணத்துவீரன்விளங்கினன்விமானத்தும்பர். (௧௬௦)

அண்டமேபோன்றதையன்புட்பகமண்டத்தும்பர்
எண்டருங்குணங்களின்றிமுதலிடையீறின்றாகிப்
பண்டைநான்மறைக்குமெட்டாப்பரஞ்சுடர்பொலிவதேபோல்
புண்டரீகக்கண்வென்றிப்புரவலன்பொலிந்தான்மன்னோ. (௧சுக)

தேனுடையலங்கன்மௌலிச்செங்கதிர்ச்செல்வன்சேயும்
மீனுடையகழிவேலையிலங்கையர்வேந்தும்வெற்றித்
தானையும்பிறருமற்றைப்படைப்பெருந்தலைவர்தாமும்
மானுடவடிவங்கொண்டார்வள்ளறன்வாய்மைதன்னால். (௧சுஉ)

குடதிசைமறைந்தபின்னர்க்குணதிசையுதயஞ்செய்வான்
வடதிசையயனமுன்னிவருவதேகடுப்பமானம்
தடையொருசிறிதின்றித்தாவிவாள்படரும்வேலை
படையமைவிழியாட்கையனிணையனபகரலுற்றான். (௧சுங)

இலங்கையைவலஞ்செய்தேகவெனவிணைந்திடுமுன்மானம்
வலங்கிளர்கீழைவாயில்வரப்பிரகத்தனீலன்
நலங்கிளர்கையின்மாண்டதிவணெனநமன்றன்வாயில்
கலந்திடவீங்குக்கண்டாய்சுபாரிசற்கட்டதென்றான். (௧சுச)

குடதிசைவாயில்வேகக்குன்றரிந்தவனைவென்ற
விடலிகர்மேகநாதனிளவலால்வீழ்ந்ததென்முன்
வடதிசைவாயின்மேவவிராவணன்மௌலிபத்தும்
உடல்முமிந்ததிங்கென்றுணர்த்திவேறுரைக்கலுற்றான். (௧சுரு)

நன்னுதனின்னைநீங்கிநாள்பலகழிந்தபின்றை
மன்னவனிரவிமைந்தன்வான்றுணையாகநட்ட
பின்னைமாருதிவந்துன்னைப்பேதறுத்தனனுபெற்றி
சொன்னபின்வானரேசர்தொகுத்ததிச்சேதுக்கண்டாய் (௧சுசா)

மற்றிதன்றூய்மையெண்ணின்மலரயன்றனக்குமெட்டா
பொற்றொடித்தெரிவையாளென்புகலுஞ்சகன்கேட்டியன்பால்
பெற்றதாய்தந்தையோடுதேசிகற்பிழைத்துச்சூழ்ந்த
சுற்றமுங்கெடுத்துளோருமெதிர்தரிற்சுரர்களாவார். (௧சுஎ)

இந்திரற்கஞ்சிமேனுளிருங்கடல்புக்குநீங்கா
சுந்தரசயிலந்தன்னுட்கண்டவர்வினைகடீர்க்கும்
கந்தமாதனமென்றேதுங்கிரிபிவண்கிடப்பகண்டாய்
பைந்தொடியடைத்தசேதுப்பாவனமாவதென்றான். (௧சுஅ)

கங்கையோடியமுனைகோதாவிரியொடுகளிந்தைசூழ்ந்த
பொங்குநீர்நதிகள்யாவும்படிந்தலாற்புன்மைபோகா
சங்கெறிதரங்கவேலைதட்டவிச்சேதுவென்னும்
இங்கிதினெதிர்ந்தோர்புன்மையாவையுநீக்குமன்றே. (௧சுகூ)

ஆவினைக்குரவரோடுமருமறைமுனிவர்தம்மைப்
பாவையர்குழுவையின்சொற்பாலனைப்பயந்துதம்மின்
மேவினவலனைச்செற்றோர்விரிகடற்சேதுவந்து
தோய்வரேல்வர்கள்கண்டாய்சுரர்தொழுஞ்சுரர்களாவார். (கஎ0)

மரக்கலமியங்கவேண்டிவரிசிலைக்குதையாற்கீறித்
தருக்கியவிடத்துப்பஞ்சபாதகரேனுஞ்சாரின்
பெருக்கியவேழுமூன்றுபிறவியும்பிணிகணீங்கி
நெருக்கியவமரர்க்கெல்லாநீணிதியாவரன்றே. (கஎக)

நெற்றியினழலுஞ்செங்கணீறணிகடவுணீடு
கற்றையஞ்சடையின்மேவுங்கங்கையுஞ்சேதுவாகப்
பெற்றிலமென்றுகொண்டுபெருந்தவம்புரிகின்றாளால்
மற்றிதன்றூய்மையெவ்வாறுரைப்பதுமலர்க்கண்வந்தாய். (கஎஉ)

தெவ்வடுஞ்சிலைக்கைவீரன்சேதுவின்பெருமையாவும்
வெவ்விடம்பொருதுமீண்டுமிளிர்தருங்கருங்கட்செவ்வாய்
நொவ்விடைக்குயிலனாட்குறுவன்றுழிவருணனோடு
இவ்விடைவந்துகண்டாய்சரணெனவியம்பிற்றென்றான். (கஎங)

இதுதமிழ்முனிவன்வைகுமியறருகுன்றுமுன்னு
னதுவளர்மணிமேலோங்கலட்புறத்துயர்ந்துதோன்றும்
அதிதிகழநந்தவெற்பென்றருடரவனுமன்றேன்றிற்
றெதுவெனவணங்கைநோக்கிற்றெனவிராமன்சொன்னான். (கஎச)

வாலியென்றளவிலாற்றல்வன்மையான்மகரநீர்சூழ்
வேலையைக்கடக்கப்பாயும்விறலுடையவனைவீட்டி
நூலியற்றருமநீதிநுனித்தறங்குணித்தமேலோர்
போலியற்றபனன்மைந்தனுறைதரும்புரமிதென்றான். (கஎரு)

கிட்கிந்தையிதுவேலையகேட்டியாலெனாதுபெண்மை
மட்குந்தானுயவெள்ளமகளிரின்றுகிவானோர்
உட்கும்பொற்சேனைசூழவொருத்தியேயயோத்தியெய்தின்
கட்கொந்தார்குழலினாயேற்றுதல்கடன்மைத்தென்றாள். (கஎசா)

அம்மொழியிரவிமைந்தற்கண்ணுறானுரைப்பவன்றன்
மெய்ம்மைசேராமன்றன்னைநோக்கிநீவிரைவின்வீர
மைம்மலிகுழலினாரைமரபினாற்கொணர்தியென்னாச்
செம்மைசேருள்ளத்தண்ணல்கொணர்ந்தனன்சென்றுமன்னோ. (கஎஎ)

வரிசையின்வழாமைநோக்கிமாருதிமாதர்வெள்ளம்
கரைசெயலரியவண்ணங்கொணர்ந்தனன்கணத்தின்முன்னம்
விரைசெறிகுழலினார்தம்வேந்தனைவணங்கிப்பெண்மைக்
கரசியையயனோடுமடியினைதொழுதுநின்றார். (கஎஅ)

மங்கலமுதலவாயமரபினிற்கலப்பையாவும்
அங்கவர்கொணர்ந்துபெண்மைக்கரசியைத்தொழுதருகுழ
நங்கையுமுவந்துவேறோர்நவையிலேயினிமற்றென்னுள்
பொங்கியவிமானந்தானுமனமெனவெழுந்துபோன. (கஎக)

வேறு.

போதாவிசும்பிற்றிகழ்புட்பகம்போதலோடும்
சூதார்முலைத்தோகையைநோக்கிமுன்றோன்றுகுழல்
கோதாவிரிமற்றதன்மாடுயர்குன்றுநின்னைப்
பேதாய்பிரிவித்துயர்பீழைபிணித்ததென்றான். (கஎ௦)

வேறு.

சிரத்துவாசவண்டலம்பிடுதெரிவைகேளிதுநீ
டரத்துவாசவர்வேள்வியர்தண்டகமதுதான்
வரத்துவாசவன்வணங்குறுசித்திரகூடம்
பரத்துவாசவனுறைவிடமிதுவெனப்பகர்ந்தான். (கஎக)

மின்னைநோக்கியவீரனீதியம்பிடும்வேலை
தன்னைநேரிலாமுனிவரனுணர்ந்துதன்னகத்தின்
என்னையாளுடைநாயகனெய்தினனென்னாத்
துன்னுமாதவர்சூழ்தரவெதிர்கொள்வான்றொடர்ந்தான். (கஎஉ)

ஆதபத்திரங்குண்டிகையொருகையினணைத்துப்
போதமுற்றியதண்டொருகையினிற்பொலிய
மாதவப்பயனுருவுகொண்டெதிர்வருமாபோல்
சீதிவித்தகனடந்தமைநோக்கினனெடியோன். (கஎங)

எட்பகத்தினையளவையுங்கருணையோடிசைந்த
நட்பகத்திலாவரக்கரைநருக்கிமாமேரு
விட்பகத்துறைகோளரியெனப்பொலிவீரன்
புட்பகத்தினைவதிகெனநினைந்தனன்புவியில். (கஎச)

உன்னுமாத்திரத்தலகினையெடுத்தும்பரோங்கும்
பொன்னினுடுவந்திழிந்தெனப்புட்பகந்தாழ
என்னையாளுடைநாயகன்வல்லையினெதிர்போய்ப்
பன்னுமாமறைத்தபோதனன்றண்மிசைப்பணிந்தான். (கஎரு)

அடியின்வீழ்தலுமெடுத்துநல்லாசியோடணைத்து
முடியைமோயினனின்றுழிமுளரியங்கண்ணன்
சடிலநீடுகளொழிதரத்தனதுகண்ணருவி
நெடியகாதலங்கலசமதாட்டினனெடியோன் (கஎசு)

கருகும்வார்குழற்சனகியோடிளவல்கைதொழுதே
அருகுசார்தரவருந்தவனுசிகள்வழங்கி
உருகுகாதலினெழுகண்ணீரினனுவகை
பருகுமாரமுதொத்துளங்களித்தனன்பரிவால். (கஎஎ)

வாண்ரோசனும்வீடணக்குரிசிலுமற்றை
ஏனைவீரருந்தொழுந்தொறுமாசிகளியம்பி
ஞானநாதனைத்திருவொடுநன்மறைகொணர்ந்தான்
ஆனமாதவர்குழாத்தொடுமருமறைபுகன்றே. (௧௮௮)

பன்னசாலையுட்புகுந்துநீடருச்சனைபலவும்
சொன்னநீதியிற்புரிந்துபின்சூரியன்மருமான்
றன்னைநோக்கினன்பன்முறைகண்கணீர்ததும்பப்
பின்னொர்வாசகமுரைத்தனன்றபோதரிற்பெரியோன். (௧௮௯)

முனிவர்வானவர்மூவுலகத்துளோர்யாரும்
துனியுழந்திடத்துயர்தருகொடுமைத்தொழிலோர்
நனிமடிந்திடவலகைகளுடனடிப்பக்
குனியும்வார்சிலைக்குரிசிலேயென்னினிக்குணிப்பாம். (௧௯௦)

வேறு.

விராதனுங்கரனுமானும்விறல்கெழுகவந்தன்றானும்
மராமரமேழும்வாலிமார்பமுமகரநீரும்
இராவணனுரமுங்கும்பகருணனதேற்றந்தானும்
அராவரும்பகழியொன்றாலழித்துலகளித்தாயைய. (௧௯௧)

சித்திரகூடந்தீர்ந்துதென்றிசைத்தீமைதீர்த்திட்
டித்திசையடைந்தெம்மில்லினிறுத்தமையிறுதியாக்
வித்தகமறந்திலேம்யாம்விருந்தினையாகியெம்மோ
டித்தினமிருத்தியென்றான்மறைகளினிறுதிகண்டான். (௧௯௨)

கரதலமதனினீடுகார்முகம்வளையவாங்கிச்
சரதவானவர்கடுன்பந்தணித்தளித்துலகந்தாங்கும்
மரகதமேனிச்செங்கண்வள்ளலேவழுவாநீதி
பரதனதியல்புமின்றேபணிக்குவன்கேட்டியென்றான். (௧௯௩)

வேறு.

வெயர்த்தமேனியன்விழிபொழிமழையன்மூவினையைச்
செயிர்த்தசிந்தையன்றெருமாலுழந்துழந்தழிவான்
அயர்த்துநோக்கினுந்தென்றிசையன்றிவேறறியான்
பயத்ததன்பமேவுருவுகொண்டென்னலாம்படியான். (௧௯௪)

இந்தியங்களைந்திருங்கனிகாய்நுகர்ந்திவுளிப்
பந்திவந்தபுற்பாயலான்பழம்பதிபுகாது
நந்தியம்பதியிருந்தனன்பரதனின்னாமம்
அந்தியும்பகலத்தினுமறப்பிலனாகி. (௧௯௫)

வேறு.

என்றுரைத்தரக்கர்வேந்தனிருபதென்றுணைக்குநீலக்
குன்றுரைத்தனையதோளுங்குலவரைக்குவடுமேய்க்கும்
என்றுரைத்தனையமௌலித்தலைபத்துமிறுத்தவீர
னின்றனைப்பிரிந்ததுண்டேயானெனநிகழ்த்தினானால். (௧௯௬)

மின்னையேருழையினுனும்விளைமலர்த்தவிசினுனும்
நின்னையேபுகழ்தற்கொத்தநீதிமாதவத்தின்மிக்கோய்
உன்னையேவணங்கியுன்றனருள்சுமந்துயர்ந்தேன்மற்றிங்
கென்னையேபொருவுமைந்தன்யானலாதில்லையென்றான் (கசுஎ)

அவ்வுரைபுகலக்கேட்டவறிவனுமருளிலுேக்கி
வெவ்வரம்பொருதவேலோய்விளம்புகேன்கேட்டிவேண்டிற்
றெவ்வரமெனினுந்தந்தேனியம்புதியெனலுமையன்
கவ்வையின்றாகிவென்றிக்கவிக்குலம்பெற்றுவாழ்க. (கசுஅ)

அரியினஞ்சென்றசென்றவடவிகளனைத்தும்வானம்
சொரிதருபருவம்போன்றுகிழங்கொடுகனிகாய்துன்றி
விரிபுனல்செழுந்தேன்மிக்குவிளங்குகென்றியம்புகென்றான்
புரியுமாதவனுமஃதேயாகெனப்புகன்றிட்டானால். (கசுக)

அருந்தவனையகின்றேடனிகவெஞ்சேனைக்கியாவும்
விருந்தினிதமைப்பெனென்னுவிளங்குமுத்தீயினுப்பண்
புரிந்ததோரவியையீந்துபுறப்படுமளவிற்போகம்
திருந்தியவானநாடுசேரவந்திறுத்ததன்றே. (உ௦௦)

அரையரோயாதியாகவடியவரந்தமாகக்
கரைசெயலரியபோகந்துய்க்குமாகண்டிராமற்
கரைசியல்வழாமைநோக்கியறுசுவையமைக்கும்வேலை
விரைசெறிகமலக்கண்ணனநுமனைவிளித்துச்சொன்னான். (உ௦க)

வேறு.

இன்றுநாம்பதிவருதுமுன்மாருதியீண்டச்
சென்றுதீதின்மைசெப்பியத்தீயவித்திளையோன்
நின்றநீர்மையுநினைவுநீதேர்ந்தெம்மினோர்தல்
நன்றெனுவவன்மோதிரங்கைக்கொடுநடந்தான். (உ௦உ)

தந்தைவேகமுந்தனதுநாயகன்றனிச்சிலையின்
முந்துசாயகக்கடுமையும்பிற்படமுடுகிச்
சிந்தைபின்வரச்செல்பவன்குகற்குமச்சேயோன்
வந்தவாசகங்கூறிமேல்வான்வழிப்போனுன். (உ௦ந)

வேறு.

இன்றிசைக்கிடமாயவிராகவன்
தென்றிசைக்கருமச்செயல்செப்பினும்
அன்றிசைக்குமரியவயோத்தியின்
நின்றிசைத்துளதன்மைநிகழ்த்துவாம். (உ௦ச)

நந்தியின்பதியின்றலைநாடொறும்
சந்தியின்றிநிரந்தரந்தம்முனூர்
வந்தியங்கழற்பாதமருச்சியா
இந்தியங்களைவென்றிருந்தானரோ. (உ௦ரு)

துன்புருக்கவுஞ்சுற்றியுருக்கொளு
என்புருக்குந்தகைமையினிட்டதாய்
முன்புருக்கொண்டொருவழிமுற்றுறு
அன்புருக்கொண்டதாமெனலாகுவான். (உ0சு)

நினைக்கவுந்தடங்கண்ணிணைநீர்வர
இனைத்ததண்டலைநாட்டிருந்தேயுமக்
கனைத்தகந்தமுங்காயுங்கனிகளும்
வனைத்தவல்லவருந்தலில்வாழ்க்கையான். (உ0எ)

நோக்கிற்றென்றிசையல்லதுநோக்குறான்
ஏக்குற்றேக்குற்றிரவிகுலத்துளான்
வாக்கிற்பொய்யான்வரும்வருமென்றுயிர்
போக்கிப்போக்கியுழக்கும்பொருமலான். (உ0அ)

உண்ணுநீர்க்குமுயிர்க்குமுயிரவன்
எண்ணுகீர்த்தியிராமன்றிருமுடி
மண்ணுநீர்க்குவரம்புகண்டாலன்றிக்
கண்ணினீர்க்கொர்கரையெங்குங்காண்கிலான். (உ0கூ)

அனையனுனபரதனலங்கலிற்
புனையுந்தம்முனூர்பாதுகப்பூசனை
நினையுங்காலநினைத்தனனுமரோ
மனையின்வந்தவனெய்தமதித்தநாள். (உக0)

யாண்டுவந்திங்கிறுக்குமென்றெண்ணினன்
மாண்டசோதிடவாய்மைப்புலவரை
ஈண்டுக்கூய்த்தருகென்னவந்தெய்தினூர்
ஆண்டகைக்கின்றறுதியென்றாரரோ. (உகக)

என்றபோதத்திராமன்வனத்திடைச்
சென்றபோதத்ததவ்வுரைசெல்வத்தை
வென்றபோதத்தவீரனும்வீழ்ந்தனன்
கொன்றபோதத்துயிர்ப்புக்குறைந்துளான். (உகஉ)

மீட்டெழுந்துவிரிந்தசெந்தாமரைக்
காட்டைவென்றெழுகண்கலுழிப்புனல்
ஓட்டவுள்ளமுயிரிணையூசனின்
ருட்டவும்மவலத்தழிந்தானரோ. (உகங)

எனக்கியம்பியநாளுமென்னின்னலும்
தனைப்பயந்தவணேயமுந்தாங்கியவ்
வனத்துவைகல்செய்யான்வந்தடுத்ததோர்
வினைக்கொடும்பகையுண்டெனவிம்மினன். (உகச)

மூவகைத்திருமூர்த்தியராயினும்
பூவகத்தில்விசும்பிற்புறத்தினில்
ஏவர்கிற்பரெதிர்நிற்கவென்னுடைச்
சேவகற்கெனவையமுந்தேறினான். (உகரு)

என்னையின்னுமரசியலிச்சையான்
அன்னனாகினவனதுகொள்கவென்
றுன்னினான்கொலுறுவதுநோக்கினான்
இன்னதேநலனென்றிருந்தானரோ. (உகசு)

அனைத்திலங்கொன்றுமாயினுமாகுக
வனத்திருக்கவிவ்வையம்புகுதுக
நினைத்திருந்துதுயரமுழக்கிலேன்
மனத்துமாசென்றுயிரொடும்வாங்குவேன். (உகஎ)

என்னப்பன்னியிளவலையென்றுழைத்
துன்னச்சொல்லுதியென்றலுந்தூதர்போய்
உன்னைக்கூயினனும்முனைனாமுனம்
முன்னர்ச்சென்றனன்மூவர்க்கும்பின்னுளான். (உகஅ)

தொழுதுநின்றதன்றம்பியைத்தோய்கணீர்
எழுதுமார்பத்திறுகத்தழுவினான்
அழுதுவேண்டுவதுண்டையவவ்வரம்
பழுதில்சிந்தையினாய்தரற்பாற்றென்றான். (உகக)

என்னதாருங்கொலவ்வரமென்றியேல்
சொன்னநாளிலிராகவன்றேன்றிலன்
மின்னுதீயிடையானினிவீடுவென்
மன்னனாதியென்சொல்லைமறுதென்றான். (உஉ0)

கேட்டதோன்றல்கிளர்தடக்கைகளால்
தோட்டதன்செவிபொத்தித்துணுக்குறு
ஊட்டுநஞ்சமுண்டானெனத்துயங்கினான்
நாட்டமும்மனமுந்நடுங்காநின்றான். (உஉக)

விழுந்துமேக்குயர்விம்மலன்வெய்துயிர்த்
தெழுந்துநானுனக்கென்னபிழைத்துள
தழுந்துதுன்பத்தினாயெனச்சாற்றினான்
கொழுந்துவிட்டுமிமிர்கின்றகோபத்தான். (உஉஉ)

வேறு.

நாளுளநலமகளைக்கைவிட்டுப்போவானைக்காத்துப்பின்பு
போனானுமொருதம்பிபோனவர்கள்வருமவதிபோயிற்றென்று
ஆனாதவுயிர்விடவென்றமைவானுமொருதம்பியயலேநாலா
யானுமிவ்வரசாள்வேனென்னேயிவ்வரசாட்சியினிதேயம்மா. (உஉங)

மன்னிற்பின்வளநகரம்புக்கிருந்துவாழ்ந்தானேபரதனென்னும்
சொன்னிற்குமென்றஞ்சிப்புறத்திருந்திவ்வருந்தவமேதொடங்கினாயே
என்னிற்பின்னிவனாளுமென்றேயுன்னடிமையுனக்கிருந்ததேனும்
உன்னிற்பின்னிருந்ததுவுமொருகுடைக்கீழிருந்ததுவுமொக்குமென்றான் ௨௨௪

முத்துருக்கொண்டமைந்தனையமுழுவெள்ளிக்கொழுநிறத்துமுளரிச்செங்கட்
சத்துருக்கனஃதுரைப்பவவனீன்றுத்தாழ்க்கின்றதன்மையானிங்
கொத்திருக்கலாலின்றேயுலந்தாற்பினிவ்வுலகையுலையவொட்டான்
அத்திருக்குங்கெடுமுடனேபுகுந்தாளுமரசெரிபோயவைமக்கவென்றான் (௨௨௫)

அப்பொழுதினிவ்வுரைசென்றயோத்தியினிசைத்தலுமேயரியையீன்ற
ஒப்பெழுதவொண்ணாதகற்புடையாள்வயிறுபுடைத்தலமந்தேங்கி
இப்பொழுதேயுலகிறக்கும்யாக்கையினைமுடித்தொழிந்தான்மகனேயென்னா
வெப்பெழுதினாலன்னமெலிவுடையாள்கடிதோடிவிலக்கவந்தாள் (௨௨௬)

மந்திரியர்தந்திரியர்வளநகரத்தவர்மறையோர்மற்றுஞ்சுற்றச்
சுந்தரியொனைப்பலருங்கைத்தலையிற்பெய்திரங்கித்தொடர்ந்துசெல்ல
இந்திரனேமுதலாயவிமையவருமுனிவருமிறைஞ்சியேத்த
அந்தரமங்கையர்வணங்கவழுதரற்றிப்பரதனைவந்தடைந்தாளன்றே. (௨௨௭)

எரியமைக்குமயானத்தையெய்துகின்றகாதலனையிடையேவந்து
விரியமைத்தநெடுவேணிப்புறத்தசைந்துவீழ்ந்தொசியமேனிதள்ளச்
சொரியமைப்பதரிதாயமழைக்கண்ணொடொருசலுந்துணுக்கமெய்தாப்
பரிவமைத்ததிருமனத்தானடிதொழுதானவள்புகுந்துபற்றிக்கொண்டாள். ()

வேறு.

மன்னிழைத்ததுமைந்தனிழைத்ததும்
முன்னிழைத்தவிதியின்முயற்சியால்
பின்னிழைத்ததுமெண்ணினப்பெற்றியால்
என்னிழைத்தனையென்மகனேயென்றாள். (௨௨௯)

நீயிதெண்ணினையேனெடுநாடெரி
பாயுமென்னருஞ்சேனையும்பாய்வரால்
தாயரோமவளன்றுதனியறம்
தீயின்வீழுமுலகுந்திரியுமால். (௨௩௦)

தருமநீதியின்றற்பயனாவதான்
கருமமாறென்றுகண்டிலங்கண்களால்
அருமையொன்றுமுணர்ந்திலையையநின்
பெருமையூழிதிரியினும்பேருமோ. (௨௩௧)

எண்ணில்கோடியிராமர்களென்னினும்
அண்ணனின்னருளுக்கருகாவரோ
புண்ணியம்மெனுநின்னுயிர்போயினால்
மண்ணும்வானுமுயிர்களும்வாழுமோ. (௨௩௨)

இன்றுவந்திலனேயெனினுனையே
ஒன்றும்வந்துனையுன்னியுரைத்தசொல்
பின்றுமென்றுணரோற்பிழைத்தானெனின்
யொன்றுந்தன்மைபுகுந்ததுபோயென்றாள். (உ௩௩)

ஒருவன்மாண்டனனென்றுகொண்டுழிவாழ்
பெருநிலத்துப்பெறலருமின்னுயிர்க்
கருவுமாண்டறக்காணுதியோகலைத்
தருமநீயலதில்லெனுந்தன்மையாய். (உ௩௪)

இறக்கையுஞ்சிலரோகலுமோகத்தால்
பிறக்கையுங்கடனென்றுபின்பாசத்தை
மறக்கைகாண்மகனேவலியாவது
துறக்கைதானுமென்றாண்மனத்தூய்மையாள். (உ௩௫)

மைந்தனென்னைமறுத்துரைத்தானெனல்
எந்தைமெய்ம்மையுமிக்குலச்செய்கையும்
நைந்துபோகவுயிர்நிலைநச்சிலேன்
முந்துசெய்தசபதமுடிப்பனால். (உ௩௬)

யானுமெய்யினுக்கின்னுயிரீந்துபோய்
வானுளெய்தியமன்னவன்மைந்தனால்
கானுளெய்தியகாகுத்தற்கேகடன்
ஏனையோர்க்கிதிழுக்கில்வழக்கன்றே. (உ௩௭)

தாய்சொற்கேட்டலுந்தந்தைசொற்கேட்டலும்
பாசத்தன்பினைப்பற்றறநீக்கலும்
ஈசற்கேகடன்யானதிழைக்கிலேன்
மாசற்றேனிதுகாட்டுவென்மாண்டென்றான். (உ௩௮)

என்றுதீயினையெய்தியிரைத்தெழுந்
தொன்றுபூசலிடுமுலகோருடன்
நின்றுபூசனைசெய்கின்றநேசற்குக்
குன்றுபோனெடுமாருதிகூடினான். (உ௩௯)

ஐயன்வந்தனனாரியன்வந்தனன்
மெய்யின்மெய்யன்னநின்னுயிர்வீடினால்
உய்யுமேயவனென்றுரைத்துட்புகாக்
கையினாலெரியைக்கரியாக்கினான். (உ௪0)

ஆக்கிமற்றவனாய்மலர்த்தாள்களைத்
தாக்கத்தன்றலைதாழ்ந்துவணங்கிக்கை
வாக்கிற்கூடப்புதைத்தொருமாற்றநீ
தூக்கிக்கொள்ளத்தகுமெனச்சொல்லினான். (உ௪௧)

இன்னநாழிகையெண்ணைத்துளவைய
உன்னைமுன்னம்வந்தெய்தவுரைத்தநாள்
அன்னதில்லையெனினடிநாயினேன்
முன்னம்வீழ்ந்திவ்வெரியின்முடிவெனால். (௨௪௨)

ஒன்றுதானுளதன்னடியேன்சொலால்
நின்றுதாழ்த்தருணேமிச்சுடர்குணக்
குன்றுதோன்றளவும்மிதுகுன்றுமேல்
பொன்றுநீயுமுலகமும்பொய்யிலாய் (௨௪௩)

எங்கணையகற்கின்னமுதீகுவான்
பங்கயத்துப்பரத்துவன்வேண்டலால்
அங்குவைகுநனல்லதுதாழ்க்குமோ
இங்கணல்லதொன்றின்னமுங்கேட்டியால். (௨௪௪)

அண்டர்நாதனருளியளித்துள
துண்டொர்பேரடையாள்முனக்கது
கொண்டுவந்தனென்கோதற்றசிந்தையாய்
கண்டுகொண்டருளாயெனக்காட்டினான். (௨௪௫)

வேறு.

காட்டியமோதிரங்கண்ணிற்காண்டலும்
ஊட்டியநல்விடமுற்றுமுற்றுவாற்
கூட்டியநன்மருந்தொத்ததாமரோ
ஈட்டியவுலகுக்குமிளையவேந்தற்கும் (௨௪௬)

அழுகின்றவாயெலாமார்த்தெழுந்தன
விழுகின்றகண்ணெலாம்வெள்ளமாறிமுன்
உழுகின்றதலையெலாமுயர்ந்தெழுந்தன
தொழுகின்றகையவாய்க்காலின்றன்றலை. (௨௪௭)

மோதிரம்வாங்கித்தன்முகத்தின்மேலணைத்
தாதரம்பெறுவதற்காக்கையோவெனு
ஓதினர்நாணுறவோங்கினான்றொழும்
சீதனைமுறைமுறைதொழுதுதுள்ளுவான் (௨௪௮)

ஆதிவெந்துயரலாலருந்தலின்மையால்
ஊதுறப்பறப்பதாயுலர்ந்தயாக்கைபோய்
ஏதிலனொருவன்கொலென்னலாயது
மாதிரம்வளர்ந்தனவிரத்தோள்களே. (௨௪௯)

அழுநகுமறுமணையாழிக்கைகளால்
தொழுமெழுந்துள்ளும்வெங்களிதுளக்கலால்
விழுமழிந்தேங்கும்போய்வீங்கும்வேர்க்குமக்
குழுவொடுங்குனிக்குந்தன்றடக்கைகொட்டுமால். (௨௫௦)

ஆடுமினாடுமினென்னுமையன்பால்
ஓடுமினோடுமினென்னுமோங்கிசை
பாடுமின்பாடுமினென்னும்பாவிகாள்
சூடுமின்சூடுமின்றாதனருளெனும். (உருக)

வஞ்சனையியற்றியமாயக்கைகையார்
அஞ்சுவரினியெனத்தோளைக்கொட்டிமால்
குஞ்சிதவடிகண்மண்டிலத்திற்கூட்டிற
அஞ்ஞனக்குன்றினின்றாடும்பாடுமால். (உருஉ)

வேதியர்தமைத்தொழும்வேந்தரைத்தொழும்
தாதியர்தமைத்தொழுந்தன்னைத்தான்றொழும
ஏதுமொன்றுணர்குறுதிருக்குறிற்குமால்
காதலென்றதுவுமோர்கள்ளிற்றோற்றிற்றே. (உருங)

அத்திறத்தாண்டகையநுமன்றன்னைநீ
எத்திறத்தாயெமக்கியம்பியீதியால்
முத்திறத்தவருளேயொருவன்மூர்த்திவே
றொத்திருந்தாயெனவுணர்கின்றேனென்றான். (உருச)

மறையவர்வடிவுகொண்டணுகவந்தனை
இறைவரிலொருவனென்றெண்ணுகின்றனென்
துறையெனக்கியாதெனச்சொல்லுசொல்லென்றான்
அறைகழலநுமனுமறியக்கூறுவான். (உருரு)

காற்றினுக்கயல்வந்தகவிக்குலத்துளாள்
நோற்றனள்வயிற்றின்வந்துதித்துநம்முனாற்
கேற்றிலாவடித்தொழிலேவலாளனேன்
மாற்றினனுருவொருகுரங்குமன்னையான். (உருசா)

அடித்தொழிலுயினேனற்பயாக்கையைக்
கடித்தடந்தாமரைக்கண்ணினேக்கெனப்
பிடித்தபொய்யுருவினைப்பெயர்த்துநீக்கினான்
முடித்தலம்வானவர்நோக்கின்முன்னுவான். (உருஎ)

வெஞ்சிலையிருவரும்விரிஞ்சன்மைந்தனும்
எஞ்சலிலதிசயமிதுவென்றெண்ணினார்
துஞ்சிலதாயினுஞ்சேனைதுண்ணென
அஞ்சியதஞ்சனைசிறுவனாக்கையால். (உருஅ)

ஈங்குவின்றியாமுனக்கிசைத்தமாற்றமத்
தாங்கிருங்குண்டலச்செவியின்சூழ்வர
ஓங்கலவாதலினுலப்பில்யாக்கையை
வாங்குதிவிரைந்தெனமன்னன்வேண்டினான். (உருகூ)

சுருக்கியவுருவனுத்தொழுதுமுன்னின்ற
அருக்கன்மாணவகனுக்கையனன்பினுச்
பொருக்கெனநிதியமும்புனைபொற்பூண்களின்
வருக்கமும்வரம்பிலநனிவழங்கினுன். (உ௬௦)

கோவொடுதூசுநற்குலமணிக்குலம்
மாவொடுபரிக்குலம்வாவுதேரினம்
தாவுநீருடுத்தநற்றரணிதன்னுடன்
ஏவருஞ்சிலைவலான்யாவுநல்கினுன். (உ௬௧)

இவ்வலையண்ணலுக்கெதிர்கொளென்றுநம்
வளைமதிலயோத்தியில்வாழுமாக்களைக்
கிளையொடுமேகெனக்கிளத்திவெங்கணும்
அளையொலிமுரசினமறைவிப்பாயென்முன். (உ௬உ)

தோரணநட்டுமேற்றுகில்பொதிந்துநற்
பூரணப்பொற்குடம்பொலியவைத்துநீள்
வாரணமிவுளிதேர்வரிசைதான்வழாச்
சீரணியணிகெனச்செப்புவாயென்முன். (உ௬௩)

பரத்துவனுறைவிடத்தளவும்பைம்பொனீள்
சிரத்தொகைமதிற்புறத்திறுதிசேர்தர
வரத்தகுதாளமென்பந்தர்வைத்துவான்
புரத்தையும்புதுக்குவபுகறிபோயென்முன். (உ௬௪)

என்றலுமவனடியிறைஞ்சியெய்தியக்
குன்றுறழ்வரிசிலைக்குவவுத்தோளினுன்
நன்றுணர்கேள்வியனவையில்செய்கையன்
தன்றுணைச்சுமந்திரற்கறியச்சாற்றினுன். (உ௬௫)

அவ்வுரைகேட்டலுமறிவின்வேலையான்
கவ்வையிலன்பினிற்களிக்குஞ்சிந்தையான்
வெவ்வெயிலெறிமணிவீதிவெங்கணும்
எவ்வமின்றறைபறையெற்றுகென்றிட. (உ௬௬)

வானையுந்திசையையுங்கடந்தவான்புகழ்க்
கோனையின்றெதிர்கொள்வான்கோலமாநகர்த்
தானையுமரசருமெழுகதானென
யானையின்வள்ளுவன்முரசமெற்றினுன். (உ௬௭)

முறைசொலிகேட்டலுமுழங்குமாநகர்
அரைசருமாந்தருமந்தணளரும்
கரைசெயலரியதோருவகைக்கடைத்
திரைசெறிகடலெனவெழுந்துசென்றதால். (உ௬௮)

அங்கனையெதிர்கொளென்றறைந்தபேரிநற்
கனகநல்கூர்ந்தவன்கைப்பட்டென்னவும்
சனகனதூர்க்கெனமுன்னஞ்சாற்றிய
வனைகடிப்பேரியுமொத்தவாமரோ. (௨௬௯)

அறுபதினாயிரம்க்குரோணியென்
றிறுதிசெய்சேனையுமேனைவேந்தரும்
செறிநகர்மாந்தருந்தெரிவைமார்களும்
உறுபொருளெதிர்ந்தெனவுவந்துபோயினார். (௨௭௦)

அன்னையர்மூவருமமரர்போற்றிடப்
பொன்னினற்சிவிகையினெழுந்துபோயபின்
தந்நிகர்முனிவருந்தமருஞ்சூழ்தர
மன்னவன்மாருதிமலர்க்கைபற்றுறு (௨௭௧)

திருவடியிரண்டுமேசெம்பொன்மௌலியா
இருபுறஞ்சாமரையிரட்டவேழ்கடல்
வெருவருமுழக்கெனவேழமார்த்தெழப்
பொருவருவெண்குடைநிழற்றப்போயினான். (௨௭௨)

எல்லவன்மறைந்தனனென்னையாளுடை
வில்லியையெதிர்கொளப்பரதன்மீச்செல்வான்
அல்லியங்கமலமேயனையதாள்களில்
கல்லதர்சுடுந்தனகதிரினென்னவே. (௨௭௩)

அவ்வழிமாருதியங்கைபற்றிய
செவ்வழியுள்ளத்தான்றிருவினாயகன்
எவ்வழியுறைந்ததச்செயலெலாம்விரித்
திவ்வழியெமக்குநீயியம்புவாயென்றான். (௨௭௪)

என்றலுமாருதிதொழுதிங்கெம்பிரான்
மன்றலர்தொடையினாயயோத்திமாநகர்
நின்றதுமணவினைவிரப்பிமீண்டுதான்
சென்றதுநாயினேன்செப்பல்வேண்டுமோ. (௨௭௫)

சித்திரகூடத்தைத்தீர்ந்தபின்சிரம்
பத்துடையவனுடன்விளைந்தபண்புந்தான்
இத்தலையடைந்ததுமிறுதியாமென
வித்தகத்ததனும்விரிக்குஞ்சிந்தையான். (௨௭௬)

குன்றுறழ்வரிசிலைக்குரிசிலெம்பிரான்
தென்றிசைச்சித்திரகூடந்தீர்ந்தபின்
வன்றிறல்விராதனைமடித்துமாதவர்
துன்றியதண்டகவனத்துட்டுன்னினான். (௨௭௭)

ஆங்குறைதபோதனரரக்கர்க்காற்றலே
நீங்கினந்தவத்துறைநீதியோவெனத்
தீங்குசெய்தவர்களைச்செகுத்தறிண்ணநீர்
வாங்குமின்மனத்துயர்வாய்மையாலென்றான். (உஎஅ)

ஆறுநாலாண்டவண்வைகியப்புறத்
தீறிலாமுனிவரரேயவாணையால்
மாறிலாத்தமிழ்முனிவனத்தைநண்ணினான்
ஊறிலாமுனிவரனுவந்துமுன்வர. (உஎகூ)

குடங்கையில்வாரிதியனைத்துங்கொண்டவன்
தடங்கணன்றனையெதிர்தழுவிச்சாபமும்
கடுங்கணைப்புட்டிலுங்கவசந்தானுமற்
றிடம்படுசரிகையுஞ்சேரவீந்தனன். (உஅ0)

அப்புறத்தெருவையினரசைக்கண்ணுற்றுத்
துப்புறச்சிவந்தவாய்த்தோகைதன்னுடன்
மெய்ப்புகழ்த்தம்பியும்வீரன்றானும்போய்
மைப்பொழிறுறுபஞ்சவடியின்வைகினான். (உஅக)

வேறு.

பல்பகலிறந்தபின்றைப்பாதகவரக்கிதோன்றி
மெல்லியவிடையினாளைவெருண்டிழியிளையவீரன்
அல்கியதிருவைத்தேற்றியவளுடைச்செவியுமூக்கும்
மல்கியமுலையுங்கொய்தான்மறித்திவள்கரற்குச்சொன்னாள். (உஅஉ)

கரனொடுதிரிசிராவுங்கரியதூடணனுங்காற்றி
எரியுமூன்றனலேயொப்பாரெழுந்துவெஞ்சேனையோடும்
விரவினரையன்செங்கைவில்லினைநோக்குமுன்போர்
எரிதழற்பஞ்சியொத்தாரரக்கியுமிலங்கைபுக்காள். (உஅங)

இருபதுதடக்கையான்மாட்டிசைத்தலுமெழுந்துபொங்கி
ஒருபதுதிசையுமுட்கவஞ்சகவுழையொன்றேவித்
தருபதஞ்சன்மந்தமுக்கோற்றாபதர்வடிவங்கொள்ளாத்
திருவினைநிலத்தோடேந்தித்தென்றிசையிலங்கைபுக்கான். (உஅச)

போகின்றகாலையேற்றசடாயுவைப்பொருதுவீட்டி
வேகின்றவுள்ளத்தாளைவெஞ்சிறையதனின்வைத்தான்
ஏகின்றவஞ்சமான்மாரீசற்கொன்றிளவலோடு
பாகின்றகீர்த்தியண்ணறந்தையைப்பரிவிற்கண்டான். (உஅரு)

அன்னவன்றனக்குவேண்டுமருங்கடன்முறையினாற்றி
நன்னுதறன்னைத்தேடித்தென்றிசைநடக்குமையன்
மன்னியகவந்தன்றன்னையுயிரொடுசாபமாற்றித்
தன்னையேமறப்பிலாதசவரிபூசனையுங்கொண்டான். (உஅசு)

ஆங்கவடனதுசொல்லாலருக்கன்மாமகனையெய்திப்
பாங்குறநட்டுவாலிபருவரல்கெடுப்பேனென்று
ஓங்கியமராமும்வாலியுரமுமூடுருவவெய்திட்
டாங்கவன்றனக்குச்செல்வமரசொடுமருளினீந்தான். (௨௮௭)

காலமாமாரிநீங்கக்கவயனோடிடவன்காந்து
நீலன்மாமயிந்தன்சாம்பன்சதவலிபநசனீடும்
வாலிமாமைந்தனென்றிவ்வானரத்தலைவராய
கூலவான்சேனைசூழவடைந்தனனங்கள்கோமான். (௨௮௮)

எழுபதுவெள்ளத்தற்றகுரங்கினமெழுந்துபொங்கி
அழுவநீர்வேலையென்னவடைந்துழியருக்கன்மைந்தன்
தழுவியதிசைகடோறுந்தனித்தனியிரண்டுவெள்ளம்
பொழுதிறைதடாதுமீளப்போக்கினன்றிருவைநாடி. (௨௮௯)

தென்றிசையிரண்டுவெள்ளஞ்சேனையும்வாலிசேயும்
வன்றிறற்சாம்பனோடுவாவினரோவநாயேன்
குன்றிடையிலங்கைபுக்குத்திருவினைக்குறித்துமீண்ட
பின்றைவந்தளக்கர்வேலைபெரும்படையிறுத்ததன்றே. (௨௯0)

அறிவினுக்கறிவுபோல்வான்வீடணனலங்கற்றோளான்
செறிபுயத்தரக்கன்றம்பிதிருவினைவிடுதியன்றேல்
இறுதியுற்றனைநின்வாழ்நாளெனவவனுரைப்பச்சீறிக்
கறுவுறப்பெயர்ந்துபோந்துகருணையான்சரணம்பூண்டான் (௨௯௧)

ஆங்கவற்கவயநல்கியரசொடுமுடியுமீந்து
பாங்கினல்வருணன்றன்னையழைத்திடப்பரிவிலாமை
தாங்கினன்சிறிதுபோதுதாமரைநயனஞ்சேப்ப
ஓங்கிநீரேழுமன்றனுடலமும்வெந்தவன்றே. (௨௯௨)

மற்றவனவயமென்னமலர்ச்சரணடைந்தவேலை
வெற்றிவானரர்கள்பொங்கிவெற்பினல்வேலைகட்டல்
முற்றுறநன்கியற்றிமொய்யொளியிலங்கைபுக்குப்
பற்றினர்சுற்றியார்த்தார்வானவர்பயங்கடீர்ந்தார். (௨௯௩)

மலையினையெடுத்ததோளுமதமலைதிளைத்தமார்பும்
தலையொருபத்துஞ்சிந்தித்தம்பிதன்றோளுந்தாளும்
கொலைத்தொழிலரக்கராயோர்குலத்தொடுந்தலத்துவீழச்
சிலையினைவளைவித்தையதேவர்கள்டுக்கந்தீர்த்தான். (௨௯௪)

இலக்குவன்பகழியொன்றாலிந்திரசித்தென்றோனும்
விலக்கருவலத்தினனுமிளைஞருங்கிளையும்வீழ்ந்தார்
அலக்கணுண்டுழலுந்தேவரலர்மழைதூவியார்த்தன்
றுலக்குநாற்குழுக்கடோறுமுடற்குறையாடல்கண்டார் (௨௯௫)

தேவருமுனிவர்தாமுஞ்சித்தருந்தெரிவைமாரும்
மூவகையுலகுளோருந்தனித்தனிப்புகழ்ந்துமொய்ப்பப்
பூவைபோனிறத்தினானும்வீடணப்புலவர்கோமாற்
கியாவையுமியம்பிமாண்டோர்க்கியற்றுதிகடன்களென்றான் (௨௯௬)

நான்முகன்விடையையூருநாரியோர்பாகத்தண்ணல்
மான்முகன்முதலாயுள்ளவானவர்தொழுதுபோற்ற
ஊன்முகங்கெழுவுவேலாயும்பர்நாயகியைச்சீறித்
தேன்முகமலருந்தாரானரிசொலச்சீற்றந்தீர்ந்தான் (௨௯௭)

மெய்யினுக்குயிரையீந்தவேந்தர்கோன்விமானத்தெய்த
ஐயனுமிளையகோவுமன்னமுமடியில்வீழ்க்
கையினாற்பொருந்தப்புல்லிக்கண்ணினீர்க்கலசமாட்டிச்
செய்வரமருளுகென்றான்றிருவினாயகனுங்கொண்டான். (௨௯௮)

என்னநன்கருணைதன்னாலீன்றெடுத்தினிதுபேணும்
அன்னையுமகனுமுன்போலாகெனவருளினீந்து
மன்னவன்போயபின்றைவானரம்வாழ்வுகூரப்
பொன்னெடுநாட்டிலுள்ளார்வரம்பலவழங்கிப்போனார். (௨௯௯)

வெள்ளமோரேழுபத்துவிலங்கரும்வீரராகி
உள்ளவாறுபத்தேழுகோடியுமொற்றையாழி
வள்ளறன்மகனுமுள்ளமகிழ்வுறவிமானமீந்தான்
எள்ளலிலாதகீர்த்திவீடணனிலங்கைவேந்தன் (௩௦௦)

ஆரியன்பின்னைநின்னையன்பினானினைந்துகாதற்.
சூரியன்மகனுந்தொல்லைத்துணைவருமிலங்கைவேந்தும்
பேரியற்படையுஞ்சூழப்பெண்ணினுக்கரசியோடும்
சீரியவிமானத்தேறிப்பரத்துவனிருக்கைசேர்ந்தான் (௩௦௧)

அன்பினாலென்னைநின்பாலாழியுங்காட்டியான்ற
துன்பெலாந்துடைத்தியென்றேதுரந்தனன்றோன்றலென்று
முன்பினூலியன்றவெல்லாமொழிந்தனன்முதுநீர்தாவி
அன்பினாலிலங்கைமுற்றுமெரிக்குணவாகவைத்தோன் (௩௦௨)

காலின்மாமதலைசொல்லப்பரதனுங்கண்ணீர்சோர.
வேலிமாமதில்கள்சூழுமிலங்கையில்வேட்டங்கொண்ட
நீலமாமுகில்பின்போனானொருவனானின்றுணைவேன்
போலுமாலிவைகள்கேட்பேன்புகழுடைத்தடிமைமன்னோ (௩௦௩)

என்றவனிரங்கியேங்கியிருகணுமருவிசோர
வன்றிறலநுமன்செங்கைவலக்கையாற்பற்றிக்காலின்
சென்றனனிருளினூடுசெறிபுனற்கங்கைசேர்ந்தான்
குன்றினைவலஞ்செய்தேரோன்குணகடற்றோன்றுமுன்னர். (௩௦௪)

இராவணன்வேட்டம்போய்மீண்டெம்பிரானயோத்தியெய்தித்
தராதலமகளும்பூவிற்றையளுமகிழச்சூடும்
அராவுபொன்மௌலிக்கேய்ந்தசிகாமணிகுணபாலண்ணல்
விராவுறவெடுத்தாலெனனவெய்யவனுதயஞ்செய்தான. (ந.0

காலைவந்திறுத்தபின்னர்க்கடன்முறைகமலக்கண்ணன்
கூலநீள்கழல்களைத்திக்குரக்கினத்தரசைநோக்கிச்
சாலவுங்கலைகள்வல்லோய்தவறுண்டுபோலும்வாய்மை
மூலமேயுணரினுன்றன்மொழிக்கெதிர்மொழியுமுண்டோ. (ந.0௬

எழுபதுவெள்ளஞ்சேனைவானரரிலங்கைவேந்தன்
ஏழுமுதற்சேனைவெள்ளங்கணக்கிலமொய்த்தவென்றால்
அழுவநீர்வேலைசுற்றுமரவமின்றாகவற்றே
விழுமிதெம்பிரான்வந்தானென்றுரைத்ததுவீரவென்றான். (ந.0௬

ஓசனையிரண்டுண்டன்றேபரத்துவனுறையுஞ்சோலை
வீசுதெண்டிரையிற்றாயவெள்ளமோரேழுபத்தும்
மூசியபழுவமிங்ஙன்கிடப்பதோமுரற்றலின்றிப்
பேசியதமையுநங்கோனெங்குளன்பெருமவென்றான். (ந.0

பரதனைக்குறைத்தலோம்பணிந்துமாருதியுஞ்சீர்சால்
விரதமாதவன்மற்றோராவிண்ணவர்தமையும்வேண்டி
வரந்தனுண்டளிப்பவந்தவரத்தினன்மலருந்தேனும்
சரதமேமாந்திமாந்தித்துயினறதுபோலுந்தானை. (ந.0க்ஷ

வானவர்கொடுக்கவந்தவரத்தினன்மதுபமூசும்
தேனொடுகிழங்குங்காயுங்கனிகளும்பிறவுஞ்சீர்த்துக்
கானகம்பொலிதலாலேகவிக்குலமவற்றைமாந்தி
ஆனனமலர்ந்ததில்லையாகுநீதுயரலெந்தாய். (ந.௧0

இனியொருகணத்தினங்கோனெழுந்தருடன்மையீண்டுப்
பனிவருங்கண்ணினீயேபார்த்தியென்றுரைத்தானிப்பால்
முனிதனதிடத்துவந்தமுளரியங்கண்ணன்வண்ணக்
குனிசிலைக்குரிசில்செய்ததிற்றெனக்குணிகளுற்றாம். (ந.௧௧

அருந்தவன்சுவைகளாறோடமுதினிதளிப்பவையன்
கருந்தடங்கண்ணியோடுங்கிளைஞருந்துணைவரோடும்
விருந்தினுதருந்திநின்றவேலைபின்வேலைபோலும்
பெருந்தடந்தானையோடுங்கிராதர்கோனபெயர்ந்துவந்தான். (ந.௧௨)

தொழுதனன்மனமுங்கண்ணுந்துளங்கினன்குழைவோடி
அழுதனன்கமலமன்னவடித்தலமதனின்வீழ்ந்தான்
தழுவினனெடுத்துமார்பிற்றம்பியைத்தழுவுமாபோல்
வழுவிலாவழியரன்றோமக்களுமனையுமென்றான். (ந.௧ந)

அருளுனதுளதாயேற்கவொலாமரியவாய
பொருளலர்வின்னேநீங்காப்புணர்ப்பினுற்றொடர்ந்துபோந்து
தெருடருமிளையவீரன்செய்வனசெய்கலாதேன்
மருடருமனத்தினேனுக்கினிதன்ருேவாழ்வுமன்ருே. (௩௧௪)

ஆயனபிறவும்பன்னியழுங்குவான்றன்னையைய
நீயிவையுரைப்பதென்னேபரதனினீவேறுண்டோ
போயினிதிருத்தியென்னப்புள்ளிஞர்கோனிளவல்பொற்றாள்
மேயினன்வணங்கியன்னேவிரைமலர்த்தாளின்வீழ்ந்தான். (௩௧௫)

தொழுதுநின்றவனைநோக்கித்துணைவர்கடமையுநோக்கி
முழுதுணர்கேள்விமேலோன்மொழிகுவான்முழுநீர்க்கங்கை
தழுவிருகரைக்குநாதன்றுயினுமுயிர்க்குநல்லன்
வழுவிலாவெயினர்வேந்தன்குகனெனும்வள்ளலென்பான். (௩௧௬)

அண்ணலஃதுரைத்தலோடுமரிகுலத்தரசனுதி
நண்ணியதுணைவர்யாருமினிதுறத்தழுவிநட்டார்
கண்ணகன்ஞாலமெல்லாங்கங்குலாற்பொதிவான்போல
வண்ணமால்வரைக்குமப்பான்மறைந்தனனிரவியென்பான். (௩௧௭)

அலங்கலந்தொடையினுனுமந்தியின்கடன்களாற்றிப்
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
அதிர்பொலன்கழலினுனவ்வருந்தவன்றன்னையேத்தி
விதிதருவிமானமேவிவிளங்கிழையோடுங்கொற்றம்
முதிர்தருகருணையோடுமுனிமனந்தொடரப்போனுன். (௨௧௧)

தாவிவான்படர்ந்துமானந்தடையிலதேகும்வேலைத்
தீவியகன்னியாகிச்செருக்கியகாமச்செவ்வி
ஓவியமுயிர்பெற்றென்னவும்பர்கோனகருமொவ்வா
மாவியலயோத்திருழுமதிற்புறந்தோன்றிற்றன்றே. (௩௨0)

பொன்மதிற்கிடக்கைசூழப்பொலிவுடைநகரந்தோன்ற
நன்மதிக்கிழவர்தம்மைநோக்கியஞானமூர்த்தி
சொன்மதித்தொருவராலுஞ்சொலப்படாவயோத்திதோன்றிற்
றென்னலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சிநின்றார். (௩௨௧)

வேறு.

அன்னதோரளவையின்விசும்பதாயினும்
துன்னிருங்கதிரவர்தோன்றினுலெனப்
பொன்னணிபுட்பகப்பொருவின்மானமும்
மன்னவர்க்கரசனுந்தானுந்தோன்றிற்றல். (௩௨௨

அண்ணலேகாண்டியாலலர்ந்ததாமரைக்
கண்ணனும்வானரக்கடலுங்கற்புடைப்
பெண்ணருங்கலமுநின்பின்புதோன்றிய
வண்ணவிற்குமரனும்வருகின்றார்களே. (௩௨௩)

ஏழிரண்டாகியவுலகமேறினும்
பாழ்புறங்கிடக்குறுபடியதாயதோர்
சூழொளிமானத்துத்தோன்றுகின்றனன்
ஊழியோனென்றுகொண்டுணர்த்துங்காலையே. (௩௨௪)

பொன்னொளிமேருவின்பொதும்பிற்புக்கதோர்
மின்னொளிமேகம்போல்வீரன்றோன்றலும்
மன்னெதிர்வருநகர்களார்ப்பிராவணன்
தென்னகர்க்கப்புறத்தளவுஞ்சென்றதால். (௩௨௫)

ஊனுடையாக்கைவிட்டுண்மைவேண்டிய
வானுடைத்தந்தையார்வரவுகண்டெனக்
கானிடைப்போகியகமலக்கண்ணனைத்
தானுடையுயிரினைத்தம்பிநோக்கினான். (௩௨௬)

கெட்டவான்பொருள்வந்துகிடைப்பமுன்புதாம்
பட்டவான்படரொழிந்தவரிற்பையுளாய்
சுட்டவண்மானவற்றொழுதலுன்னியே
விட்டனன்மாருதிகரத்தைமேன்மையான். (௩௨௭)

அக்கணத்தநுமனுமவணின்றேகியத்
திக்குறுமானத்தைச்செவ்வனெய்தியச்
சக்கரத்தண்ணலைத்தாழ்ந்துமுன்னின்றான்
உக்குறுகண்ணநீரொழுகுமார்பினான். (௩௨௮)

உருப்பவிர்கனலிடையொளிக்கலுற்றவப்
பொருப்பவிர்தோளனைப்பொருந்திநாயினேன்
திருப்பொலிமார்பநின்வரவுசெப்பினேன்
இருப்பனவாயனவுலகம்யாவையும் (௩௨௯)

தீவினையாம்பலசெய்யத்தீர்விலா
வீவிலமுறைமுறைவிளைவமெய்ம்மையால்
நீயிவைதுடைத்துநின்றளிக்கநேர்ந்ததால்
ஆயினுமன்பினாயான்செய்மாதவம். (௩௩0)

என்றுரைத்தநுமனையிறுகப்புல்லினான்
ஒன்றுரைத்திருப்பதென்னுனக்குமெந்தைக்கும்
இன்றுனைத்தம்பிக்கும்யார்க்குமென்றனன்
குன்றினைத்தனவுயர்குவவுத்தோளினான். (௩௩௧)

ஈடுறுவான்றுணையிராமன்சேவடி
சூடியசென்னியன்றொழுதகையினன்
ஊடுயிருண்டெனவுலந்தயாக்கையன்
பாடுறுபெரும்புகழ்ப்பரதன்றோன்றினான். (௩௩௨)

தோன்றியபரதனைத்தொழுதுதொல்லறச்
சான்றெனநின்றவனிளையதம்பியை
வான்றொடர்பேரரசாண்டமன்னனை
ஈன்றவள்பகைஞனைக்காண்டியீண்டென்றான். (௩௩௩)

காட்டினன்மாருதிகண்ணிற்கண்டவத்
தோட்டலர்செரியலானிலைமைசொல்லுங்கால்
ஓட்டியமானத்துளுயிரிற்றந்தையர்
கூட்டிருக்கண்டனன்தன்மைக்கூடினான். (௩௩௪)

வேறு.

அவ்வயினயோத்திவைகுஞ்சனமொடுமக்குரோணி
தவ்வலிலாறுபத்தாயிரமொடுந்தாயரோடும்
இவ்வயினடைந்துளோரைக்காண்பெனென்றிராமனுன்னச்
செவ்வயினிலத்தைவந்துசேர்ந்ததுவிமானந்தானும். (௩௩௫)

வேறு.

எவ்வயினுயிர்கட்குமிராமனேறிய
செவ்வியபுட்பகநிலத்தைச்சேர்தலும்
அவ்வவர்க்கணுகியவமரர்நாடெய்க்கும்
எவ்வமின்மானமென்றிசைக்கலாயதால். (௩௩௬)

வேறு.

தாயருக்கன்றுசார்ந்தகன்றெனுந்தகையனானான்
மாயையிற்பிரிந்தோர்க்கெல்லாமனோலயம்வந்ததொத்தான்
ஆயிளையர்க்குக்கண்ணுளாடிரும்பாவையானான்
நோய்வுறுத்துலந்தயாக்கைக்குயிர்புகுந்தாலுமொத்தான். (௩௩௭)

எளிவருமுயிர்கட்கெல்லாமீன்றதாயெதிர்ந்ததொத்தான்
அளிவருமனத்தோர்க்கெல்லாமரும்பதவமுதமானான்
ஒளிவறப்பிறந்ததொத்தானுலகினுக்கொண்கணார்க்குத்
தெளிவருகளிப்புச்செய்யுந்தேம்பிழித்தேறலொத்தான். (௩௩௮)

ஆவியஞ்சுவனலான்மற்றின்மையாலனையனீங்கக்
காவியங்கழனிநாடுநகரமுங்கவன்றவாழும்
மாவியலொண்கணாருமைந்தரும்வள்ளலெய்த
ஓவியமுயிர்பெற்றாலேயொத்தனருணர்வுபெற்றார். (௩௩௯)

சுண்ணமுஞ்சாந்துமெய்யுஞ்சுரிவளைமுத்தும்பூவும்
எண்ணெயுங்கலினமாவிலாழியுமெண்ணில்யானை
வண்ணவார்மதமுந்நீருமான்மதந்தழுவுமாதர்
உண்ணவாம்புனலுமோடிக்கடலையுங்கடந்தவன்றே. (௩௪௦)

அனைவருமனையராகியடைந்துழியருளின்வேலை
தனையினிதளித்ததாயர்மூவருந்தம்பிமாரும்
புனையுநூன்முனிவன்றானும்பொன்னணிவிமானத்தேற
வனைகழற்குரிசின்முந்திமாதவன்றாளில்வீழ்ந்தான். (௩௪௧)

எடுத்தனன்முனிவன்மற்றவ்விராமனையாசிகூறி
அடுத்தன னன்பினீங்கவனைத்தனைத்தன்புகூர்ந்து
விடுத்துழியிளையவீரன்வேதியன்றாளில்வீழ
வடித்தநூன்முனியுமுன்போல்வாழ்த்தினானாசிகூறி. (௩௪௨)

கைகயன்றநயைமுந்தக்காலுறப்பணிந்துமற்றை
மொய்குழலிருவர்தாளுமுறைமையின்வணங்குஞ்செங்கண்
ஐயனையவர்கடாமுமன்புறத்தழுவித்தத்தஞ்
செய்யதாமரைக்கணீரான்மஞ்சனத்தொழிலுஞ்செய்தார். (௩௪௩)

அன்னமுமுன்னர்ச்சொன்னமுறைமையினடியில்வீழ்ந்தாள்
தன்னிகரிலாதவென்றித்தம்பியுந்தாயர்தங்கள்
பொன்னடித்தலத்தில்வீழத்தாயரும்பொருந்தப்புல்லி
மன்னவற்கிளவனீயேவாழியென்றாசிசொன்னார். (௩௪௪

சேவடியிரண்டுமன்பினடியுறையாகச்சேர்த்திப்
பூவடிபணிந்துவீழ்ந்தபரதனைப்பொருமிவிம்மி
நாவிடைபெயர்ப்பதொன்றிமுணர்ந்திலனின்றநம்பி
ஆவியுமுடலுமொன்றத்தழுவினனழுதுசோர்வான். (௩௪௫)

தழுவினனின்றகாலைத்தத்திவீழருவிகாலும்
விழுமலர்க்கண்ணீர்மூரிவெள்ளத்தான்முருகிற்செவ்வி
வழுவுறப்பின்னிமூசுமாசுண்டசடையின்மாலை
கழுவினனுச்சிமோந்துகன்றுகாண்கறவையன்னான். (௩௪௬)

அனையதோர்காலத்தம்பொற்சடைமுடியடியதாகக்
கனைகழலமரர்கோமாற்கட்டவற்படுத்தகாளை
துனைபரிகரிதேரூர்தியென்றிவைபிறவுந்தோலின்
வினையுறுசெருப்புக்கீந்தான்விரைமலர்த்தாளின்வீழ்ந்தான். (௩௪௭)

ஊடுறுகமலக்கண்ணீர்திசைதொறுஞ்சிவிறியோடத்
தாடொடுதடக்கையாரத்தழுவினன்றனிமைநீங்கிக்
காடுறைந்துலைந்தமெய்யோகையறுகவலையூர
நாடுறைந்துலைந்தமெய்யோநைந்ததென்றுலகநைவ. (௩௪௮)

மூவர்க்குமிளையவள்ளன்முடிமிசைமுகிழ்த்தகையன்
தேவர்க்குந்தேவன்றாளுஞ்செறிகழலிளவல்றாளும்
பூவர்க்கம்பொழிந்துவீழ்ந்தானெடுத்தனர்பொருந்தப்புல்லி
வாவிக்குளன்னமன்னாண்மலரடித்தலத்துவீழ்ந்தான். (௨௪௯)

பின்னிணைக்குரிசிறன்னைப்பெருங்கையால்வாங்கிவீங்கும்
தன்னிணைத்தோள்களாரத்தழுவியத்தம்பிமாருக்
கின்னுயிர்த்துணைவர்தம்மைக்காட்டினானிருவர்தாமும்
மன்னுயிர்க்குவமைகூரவந்தவர்வணக்கஞ்செய்தார். (௩௫0)

குரக்கினத்தரசைச்சேயைக்குமுதனைச்சாம்பன்றன்னைச்
செருக்கிளர்நீலன்றன்னைமற்றுமத்திறத்தினோரை
அரக்கருக்கரசைவெவ்வேறடைவினின்முதன்மைகூறி
மருக்கமழ்தொடையன்மாலைமார்பினன்பரதனின்றான். (௩௫௧)

மந்திரச்சுற்றத்துள்ளார்தம்மொடும்வயங்குதானைத்
தந்திரத்தலைவரோடுந்தமரொடுந்தரணியாளும்
சிந்துரக்களிறுபோல்வாரொவொரொடுஞ்சேனையோடும்
சுந்தரத்தடந்தோள்வெற்றிச்சுமந்திரன்றோன்றினால். (௩௫௨)

அழுகையுமுவகைதானுந்தனித்தனியமர்செய்தேறத்
தொழுதனனெழுந்துவிம்மிச்சுமந்திரனிற்றலோடும்
தழுவினனிராமன்மற்றைத்தம்பியுமனையநீரான்
வழுவினியுளதின்றிந்தமாநிலக்கிழத்திக்கென்றான். (௩௫௩)

ஏறுகசேனையெல்லாம்விமானமீதென்றுதன்போல்
மாறிலாவீரன்கூறவந்துளவனிகவெள்ளம்
ஊறிரும்பரவைவானத்தெழிலியுளொடுங்குமாபோல்
ஏறிமற்றிளையவீரனிணையடிதொழுததன்றே. (௩௫௪)

உரைசெயினுலகமுண்டான்மணியணியுதரமொவ்வா
கரைசெயலரியவேதக்குறுமுனிகையுமொவ்வா
விரைசெறியலங்கன்மாலைப்புட்பகவிமானமென்றென்
றுரைசெய்துவானுளோர்களொண்மலர்தூவியார்த்தார். (௩௫௫)

அசனியின்குழுவுமாழியேழுமொத்தார்த்ததென்ன
விசையுறுமுரசும்வேதத்தோதையும்விளிகொள்சங்கும்
இசையுறுகுரலுமேற்றினரவமுமெழுந்துபொங்கித்
திசையுறச்சென்றுவானோரந்தரத்தொலியிற்றீர்ந்த. (௩௫௬)

அவ்வையின்விமானந்தாவியந்தரத்தயோத்திநோக்கிச்
செவ்வையிற்படரலுற்றசெகதலமடந்தையோடும்
இவ்வுலகத்துளோர்களிந்திரற்குவமைகூரக்
கவ்வையினேகுமென்றநீர்மையைக்கடுக்குமன்றே. (௩௫௭)

வேறு.

ஆனதோரளவையினமரர்கோனொடும்
வானவர்திருநகர்வருவதாமென
மேனிறைவானவர்வீசும்பூவொடும்
தானுயர்புட்பகநிலத்தைச்சார்ந்ததால். (௩௫௮)

மீட்சிப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௪௨௬௮.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

நம்பியப்பரதனோடுநந்தியம்பதியைநண்ணி
வம்பலர்சடையுமாற்றிமயிர்வினைமுற்றிமற்றத்
தம்பியரோடுந்தானுந்தண்புனல்படிந்தபின்னர்
உம்பருமுவகைகூர்வொப்பனையொப்பச்செய்தார். (௧)

நிருதியின்றிசையிற்றோன்றுநந்தியம்பதியைநீங்கிக்
குருதிகொப்புளிக்கும்வேலோன்கொடிமதிலயோத்திமேவச்
சுருதியொத்தனையவெள்ளைத்துரகதக்குலங்கள்பூண்டு
பரிதியொத்திலங்கும்பைம்பூட்பருமணித்தேரனானான். (௨)

ஊழியினிறுதிகாணும்வலியினதுயர்பொற்றேரின்
ஏழுயர்மதமாவன்னவிலக்குவன்கவிகையேந்தப்
யாழியமற்றைத்தம்பிபாணிறக்கவரிபற்றப்
பூழியையடக்குங்கண்ணீர்ப்பரதன்கோல்கொள்ளப்போனான். (௩)

வீடணக்குரிசின்மற்றைவெங்கதிர்ச்செல்வன்வெற்றிக்
கோடணைகுன்றமேறிக்கொண்டற்றேர்மருங்குபோதத்
தோடணைமௌலிச்செங்கண்வாலிசேய்தூசுசெல்லச்
சேடனைப்பொருவும்வீரமாருதிபின்புசென்றான். (௪)

அறுபத்தேழமைந்தகோடியானைமேல்வரிசைக்கான்ற
திறமுற்றசிறப்பராகிமானுடச்செவ்விவீரம்
பெறுகுற்றவனப்பருச்சிபிறங்குவெண்குடையர்செச்சை
மறுவற்றவலங்கன்மார்பர்வானரத்தலைவர்போனார். (௫)

எட்டமையிறுத்தபத்தினேழ்பெருவளாகவேந்தர்
பட்டம்வைத்தமைந்தநெற்றிப்பகட்டினர்பைம்பொற்றேரர்
வட்டவெண்குடையர்வீசுசாமரைமருங்கர்வானைத்
தொட்டவெஞ்சோதிமோலிச்சென்னியர்தொழுதுசூழ்ந்தார். (௬)

வானரமகளிரெல்லாம்வானவர்மகளிராய்வந்
தூனமில்பிடியுமொண்டார்ப்புரவியும்பிறவுமூர்ந்து
மீனினமதியைச்சூழ்ந்ததன்மையின்விரிந்துசுற்றப்
பூசிறவிமானந்தன்மேன்மிதிலைநாட்டன்னம்போனாள். (௭)

தேவருமுனிவர்தாமுந்திசைதொறுமுறையிற்சிந்த
ஓவலின்மாரியேய்ப்பவெங்கணுமுதிர்ந்துவீங்கிக்
கேவலமலரால்வேறோரிடமின்றிக்கிடந்தவாற்றால்
பூவெனுநாமமன்றிவ்வுலகிற்கும்பொருந்திற்றன்றே. (௮)

கோடையில்வறந்தமேகக்குலமெனப்பதினாலாண்டு
பாடுறுமதஞ்செலாதபணைமுகப்பருமயானை
காடுறைந்தண்ணலெய்தக்கடாந்திறந்துகுத்துவாரி
ஓடினவோடிற்றுள்ளங்களிதிறந்துடைந்ததேபோல். (௯)

துரகத்தார்ப்புரவியெல்லாமுங்கையர்சொற்பெற்றென்ன
அரவப்போர்மேகமென்னவாலித்தமரங்களான்று
பருவத்தாற்பூத்தவென்னப்பூத்தனபகையிற்சீறும்
புருவத்தார்மேனியெல்லாம்பொன்னிறப்பசலைபூத்த (௧௦)

ஆயதோரளவில்செல்வத்தண்ணலுமயோத்திநண்ணித்
தாயரைவணங்கித்தங்களிறையொடுமுனியைத்தாழ்ந்து
நாயகக்கோயிலெய்திநானிலக்கிழத்தியோடும்
சேயொளிக்கமலத்தாளுநதிருநடஞ்செய்யக்கண்டான். (௧௧)

வாங்குதுந்துயில்களென்றுமனமிலரொனினும்பல்கால்
தாங்கினரொன்றபோதுமைந்தருந்தையலாரும்
வீங்கியவுவகைமேனிசிறக்கவுமேன்மேற்றுள்ளி
ஓங்கவுங்களியாற்சோர்ந்தவுடையிலாதாரையொத்தார். (௧௨)

வேசியருடுத்தகூறைவேதியர்சுற்றவெற்பில்
பாசிழைமகளிராடையந்தணர்பரிந்துசுற்ற
வாசமென்கலவைசாந்தென்றினையனமயக்கந்தன்னால்
பூசினர்க்கிரட்டியானூர்பூசலார்புகுந்துளோரும். (௧௩)

இறைப்பெருஞ்செல்வநீத்தவேழிரண்டாண்டும்யாரும்
உறைப்பிலராதலானேவேறிருந்தொழிந்தமின்னார்
பிறைக்கொழுந்தனையநெற்றிப்பெய்வளைமகளிர்மெய்யை
மறைத்தனர்பூணின்மைந்தருயிர்களுமறுக்கந்தோன்ற. (௧௪)

விண்ணுறைவோர்தந்தெய்வவெறியொடுவேறுளோர்தந்
தண்ணறுநாற்றந்தம்மிற்றலைதடுமாறுநீரால்
மண்ணுறைமாதரார்க்கும்வானுறைமடந்தைமார்க்கும்
உண்ணிறைந்துயிர்ப்புவீங்கியூடலுண்டாயிற்றன்றே. (௧௫)

ஆயதோரளவிலையன்பரதனையருளினோக்கித்
தூயவீடணற்குமற்றைச்சூரியன்மகற்குந்தொல்லை
மேயவானரங்களாயவீரர்க்கும்பிறர்க்குநந்தம்
நாயகக்கோயிலுள்ளநலமெலாந்தெரித்தியென்றான். (௧௬)

என்றலுமிறைஞ்சிமற்றைத்துணைவர்கள்யாவரோடும்
சென்றனனெழுந்துமாடம்பலவொரீஇயுலகிற்றெய்வப்
பொன்றிணிநதமரரோடும்பூமகளுறைந்துவாழும்
குன்றெனவிளங்கித்தோன்றுநாயகக்கோயில்புக்கான். (௧௭)

வயிரமாணிக்கநீலமரகதமுதலாயுள்ள
செயிரறுமணிகளீன்றசெழுஞ்சுடர்க்கற்றைசுற்ற
உயிர்துணுக்குற்றுநெஞ்சுமுள்ளமுமூசலாட
மயர்வறுமனத்தின்வீரரிமைப்பிலர்மயங்கினின்றார். (௧௮)

விண்டுவின்மார்பிற்காந்துமணியெனவிளங்குமாட்டம்
கண்டனர்பரதன்றன்னைவினுயினரவர்க்குக்காதற்
புண்டரிகத்துவைகும்புராதனன்கன்னற்றேளாற்
கொண்டவந்தன்னினுலேயுவந்துமுன்னுதவிற்றென்றான். (௧௯)

பங்கயத்தொருவனிக்குவாருவிற்களித்தபான்மைத்
திங்கிதுமலரோள்வ...குமாடமென்றிசைத்தபோதின்
எங்களாற்றுதிக்கலாகுமியல்பதோவென்றுகூறிச்
செங்கைகள்கூப்பிவேறோர்மண்டபமதனிற்சேர்ந்தார். (உ௰)

இருந்தனரினையமாடத்தியல்பெலாமெண்ணியெண்ணிப்
பரிந்தனனிரவிமைந்தன்பரதனைவணங்கித்தூயோய்
சுருந்தடமுகிலனுற்குக்காப்புநாணணியுநன்னாள்
தெரிந்திடாதிருத்தலென்னேவென்றலுமண்ணல்செப்பும். (உ௧)

ஏழ்கடலதனிற்றேயமிருநதிபிறவிற்றெயம்
தாழ்விலாதிவண்வந்தெய்தற்கருமைத்தோர்தன்மைத்தென்ன
ஆழியொன்றுடையோன்மைந்தனுமனைக்கடிதினேக்கச்
சூழ்புவியதனையெல்லாங்கடந்தனன்காலின்றேன்றல். (உஉ)

கோமுனியோடுமற்றைக்கணிதரைக்கொணர்கவென்று
ஏவினன்றேர்வலான்சென்றிசைத்தலுமுலகமீன்ற
பூமகன்றந்தவந்தப்புனிதமாதவன்வந்தெய்த
யாவருமெழுந்துபோற்றியிணையடிதொழுதுநின்றார். (உ௩)

அரியணைபரதனீயவதன்கணுண்டிருந்தவந்தப்
பெரியவனவனைநோக்கிப்பெருங்கிலக்கிழத்தியோடும்
உரியமாமகளிரோடுமுகந்தனனொருவில்செல்வம்
கரியவன்றுய்த்தற்கேய்ந்தகாப்புநாணுளேயென்றான். (உ௪)

இந்திரகுருவுமுன்னுற்கேனையனொன்னநின்ற
மந்திரவிதியினூர்க்குமயர்வறவரைந்துவிட்டார்
சந்திரகவிகையோங்குந்தயரதராமுன்றமச்
சுந்திரமௌலிசூடுவாரமுநாளுந்தூற்றி. (உ௫)

அடுக்கியவுலகமூன்றுமாதரத்தூதர்கூவ
இடுக்கொருபெருமின்றியயோத்திவந்திறுத்தவென்றால்
தொடுக்குறுகவியான்மற்றைத்துழனியையிறுதிதோன்ற
ஒடுக்குறுத்துரைக்குந்தன்மைநான்முகத்தொருவற்குண்டோ. (உ௬)

அவ்வயின்முனிவனேடும்பரதனுமரியின்சேயும்
செவ்வியினிருதர்கோனுஞ்சாம்பனும்வாலிசேயும்
எவ்வமிலாற்றல்வீரர்யாவருமெழுந்துசென்றங்
கவ்வியமவித்தசிந்தையண்ணலைதொழுதுசொன்னார். (உ௭)

நாளைநீமௌலிசூடுநலந்திகழ்பெரியநன்னாள்
காளைநீகிரிச்சமெல்லாங்கழித்தியென்றுரைத்துக்கன்னல்
வேளையேபொடியதாகவிழிக்குநீணுதலின்வெண்பூம்
பூளையேசூடுவானைப்பொருவுமாமுனியும்போனான். (௨௮)

நான்முகத்தொருவனேவநயனறிமயனென்றோதும்
நூன்முகத்தோங்குகேள்விநுணங்கியோன்வணங்குநெஞ்சன்
கோன்முகத்துகந்துகுற்றஞ்செற்றுலகெல்லாங்கொள்ளு
வான்முகத்தொருவனந்நாண்மண்டபம்வயங்கக்கண்டான். (௨௯)

சூழ்கடனான்கிற்றோயமெழுவகைத்தாகச்சொன்ன
ஆழ்திரையாற்றினீரோடமைந்தனவென்னவாமென்
றூழியினிறுதிசெல்லுந்தாதையினுலாவியொன்று
ஏழ்கடனீருந்தானிருந்துய்யமருந்துதந்தான். (௩௦)

எரிமணிக்குடங்கள்பன்னூற்றியானைமேல்வரிசைக்கான்ற
விரிமதிக்குடையினீழல்வேந்தர்கள்பலருமேந்திப்
புரைமணிக்காளமார்ப்பப்பல்லியந்துவைப்பப்பொங்கும்
சரயுவிற்புனலுந்தந்தார்சங்கினமார்ப்பமன்னோ. (௩௧)

மாணிக்கப்பலகைதைத்துவயிரத்திண்கால்கள்சேர்த்தி
ஆணிப்பொன்சுற்றுமுச்சியழகுறச்சமைத்தபீடம்
ஏணுற்றபளிக்குமாடத்திட்டனரிதனின்மீது
சேணுற்றதிரடோள்வீரன்றிருவொடுபொலிந்தான்மன்னோ. (௩௨)

மங்கலகீதம்பாடமறையொலிமுழங்கவல்வாய்ச்
சங்கினங்குமுறப்பாண்டிறண்ணுமையொலிப்பத்தாவில்
பொங்குபல்லியங்களார்ப்பப்பூமழைபொழியவிண்ணோர்
எங்கணாயகனைவெவ்வேறெதிரபிடேகஞ்செய்தார். (௩௩)

மாதவர்மறைவலாளர்மந்திரக்கிழவர்மற்றும்
மூதறிவாளருள்ளஞ்சான்றவர்முதனீராட்டச்
சோதியான்மகனுமற்றைத்துணைவருமறுமன்றனும்
தீதிலாவிலங்கைவேந்தும்பின்னபிடேகஞ்செய்தார். (௩௪)

அங்கண்வானுலகந்தாயவடிமலர்த்தவிசோனாட்டும்
கங்கைவார்சடையினோற்றன்கண்ணுதலொருவனிந்நாள்
சிங்கவேறனையான்செய்யதிருமுடியாட்டுநன்னீர்
எங்கணேற்றன்னோன்வாழுமென்றனர்புலவரெல்லாம். (௩௫)

மரகதவசலஞ்செந்தாமரைமலர்க்காடுபூத்துத்
திரைகெழுகங்கைவீசுந்திவலையாணனைநந்துசெய்ய
இருகுழைதொடரும்வேற்கண்மயிலொடுமிருந்ததேய்ப்பப்
பெருகியசெல்விகண்டார்பிறப்பெனும்பிணிகடீர்த்தார். (௩௬)

தெய்வநீராட்டற்கொத்தசெய்வினைவசிட்டன்செய்ய
ஐயமில்சிந்தையானைச்சுமந்திரவமைச்சனோடும்
நொய்தினியற்றிநோன்பின்மாதவனுதித்துக்காட்ட
வெய்தினினியன்றபல்வேறிந்திரற்கேயவென்ன. (௩௭)

அரியணையநுமன்றாங்கவங்கதனுடைவாளேந்தப்
பரதன்வெண்கவிகைபற்றவிருவருங்கவரிவீச
விரைசெறிமாலைமார்பன்வெண்ணெய்நல்லூரான்றன்ன
மரபுளோர்கொடுக்கவாங்கிவசிட்டனேபுனைந்தான்மௌலி. (௩௮)

வெள்ளியும்பொன்னுமென்பார்விதிமுறைமெய்யிற்கொண்ட
ஒள்ளியராளினல்லவோவாயினுலகமூன்றும்
துள்ளினகுனிப்பமௌலிசூடினன்சுருதிநான்கும்
தெள்ளியதிருவுந்தெய்வப்பூமியுஞ்செங்கணானே. (௩௯)

சித்தமொத்தனனென்றோதுந்திருநகர்த்தெய்வநன்னூல்
வித்தகனொருவன்சென்னிமிலைச்சியதேனுமெய்ம்மை
ஒத்தமூவுலகத்தோர்க்குமூவகையினிறுதியுன்னின
தத்தமுச்சியின்மேல்வைத்ததொத்ததத்தாமமோலி, (௪0)

புன்னெடுங்காலநோற்றுத்தானுடைப்பண்புக்கேற்ற
பின்னெடுங்கணவன்றன்னைப்பெற்றிடைபிரிந்துதேம்பும்
தன்னெடும்பீழைநீங்கத்தழுவினடளிர்க்கைநீட்டி
நன்னெடும்பூமியென்னுநங்கைதன்கொங்கையார. (௪௧)

விரதநூன்முனிவன்சொன்னவிதிநெறிவழாமைநோக்கி
வரதனுமிளைஞர்க்காங்கண்மாமணிமகுடஞ்சூடிப
பரதனைத்தனதுசெங்கோனடாவுறப்பணித்துநாளும்
கரைதெரிவிலாதபோகக்களிப்பினுளிருந்தகாலை. (௪௨)

திருமுடிசூட்டுப்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம் ௪௩௧0.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

---

## ௩௮-வது. விடைகொடுத்தபடலம்.

பூமகட்கணியதென்னப்பொலிபசும்பூரிசேர்த்தி
டாமணித்தூணிற்செய்தமண்டபமதனினுப்பண்
கோமணிச்சிவிகைமீதேகொண்டலுமின்னும்போலத்
தாமரைக்கிழத்தியோடுந்தயரதராமன்சார்ந்தான். (௧)

விரிகடனடுவட்பூத்தமின்னெனவாரம்வீங்க
ரிகதிர்க்கடவுடனையினமணிமகுடமேய்ப்பக்
கருமுகிற்கரசுசெந்தாமரைமலர்க்காடுபூத்தோ
ரியணைபொலிந்ததென்னவிருந்தனனயோத்திவேந்தன். (௨)

மரகதசைலமீதுவானிலாப்பாய்வதென்ன
இருகுழையிடறும்வேற்கணிளமுலையினலார்தம்
கரகமலங்கள்பூத்தகற்றையங்கவரிதெற்ற
உரகருநரரும்வானத்தும்பரும்பரவியேத்த (௩)

உலகமீரேழுந்தன்னவொளிநிழல்பரப்பவானில்
நிலைகுலாம்பனிவெண்டிங்கணெஞ்சுநொந்தெளிதிற்றேயக்
கலகவாணிருதர்கோனைக்கட்டழித்திட்டகீர்த்தி
இலகிமேனிவந்ததென்னவெழுதனிக்குடைநின்றேய. (௪)

மங்கலகீதம்பாடமறையவராசிகூறச்
சங்கினங்குமறப்பாண்டிறண்ணுமைதுவைப்பத்தாவில்
பொங்குபல்லியங்களார்ப்பப்பொருங்கயற்கருங்கட்செவ்வாய்ப்
பங்கயமுகத்தினார்கள்பயினடம்பயிலமாதோ. (௫)

திரைகடற்கதிருநாணச்செழுமணிமகுடகோடி
கரைதெரிவிலாதசோதிக்கதிரொளிபரப்பநாளும்
வரைபொருமாடவாயினெருக்குறவந்துமன்னர்
பரசியேவணங்குந்தோறும்பதயுகஞ்சேப்பமன்னோ. (௬)

மந்திரக்கிழவர்சுற்றமறையவர்வழுத்தியேத்தத்
தந்திரத்தலைவர்போற்றத்தம்பியர்மருங்குசூழச்
சிந்துரப்பவளச்செவ்வாய்த்தெரிவையர்பலாண்டுகூற
இந்திரற்குவமையேய்ப்பவெம்பிரானிருந்தகாலை. (௭)

மயிந்தன்மாதுமிந்தன்கும்பனகம்பன்மற்றநுமன்மாதில்
சயந்தருகுமுதக்கண்ணன்சதவலிகுமுதன்றண்டார்
நயந்தெரிததிமுகன்கோத்தசமுகன்முதலநண்ணார்
வியந்தெழுமறுபத்தேழுகோடியாம்வீரரோடும். (௮)

ஏனையர்பிறருஞ்சுற்றவெழுபதுவெள்ளத்திற்ற
வானரரோடும்வெய்யோன்மகன்வந்துவணங்கிச்சூழத்
தேனிமிரலங்கற்பைந்தார்வீடணக்குரிசில்செய்ய
மானவாளரக்கரோடுவந்தடிவணங்கிச்சூழ்ந்தான். (௯)

வெற்றிவெஞ்சேனையோடும்வெறிப்பொறிப்புலியின்வெவ்வால்
சுற்றுறத்தொடுத்துவீக்குமரையினன்சுழல்செங்கண்ணன்
கற்றிரள்வயிரத்திண்டோட்கடுந்திறனமடங்கலன்னான்
எற்றுநீர்க்கங்கைநாவாய்க்கிறைகுகன்றொழுதுசூழ்ந்தான். (௧0)

வள்ளலுமவர்கடம்மேல்வரம்பின்றிவளர்ந்தகாதல்
உள்ளுறப்பிணித்தசெய்கையொளிமுகக்கமலங்காட்டி
அள்ளுறத்தழுவினான்போலகமகிழ்ந்தினிதினோக்கி
எள்ளலிலாதமொய்ம்பரீண்டினிதிருத்தினான். (௧௧)

நன்னெறியறிவுசான்றோர்நான்மறைக்கிழவர்மற்றைச்
சொன்னெறியறிவுநீரார்தோமறுபுலமைச்செல்வர்
பன்னெறித்தொன்றுதோன்றும்பருமணிப்பண்பிற்கேளார்
மன்னவர்க்கரசன்பாங்கர்மரபினுற்சுற்றமன்றே. (௧௨)

தேம்புனற்படப்பைமூதூர்த்திருநகரயோத்திசேர்ந்த
பாம்பணையமலன்றன்னைப்பழிச்சொடும்வணக்கம்பேணி
வாம்புனற்பரவைஞாலத்தரசருமற்றுளோரும்
ஏம்பலுற்றிருந்தார்நொய்தினிருமதியிறந்ததன்றே. (௧௩)

நெருக்கியவமரொல்லாநெடுங்கடற்கிறைநின்றேத்தப்
பெருக்கெனவயோத்தியெய்திமற்றவர்பொருமதீர
வருக்கமோடரக்கர்யாருமடிதரவரிவில்கொண்ட
திருக்கிளர்மார்பினான்பிற்செய்ததுசெப்பலுற்றும். (௧௪)

மறையவர்தங்கட்கெல்லாமணியொடுமுத்தும்பொன்னும்
நிறைவளம்பெருகும்பூவுஞ்சுரபியுநிரைத்துமேன்மேல்
குறையிதென்றிரந்தோர்க்கெல்லாங்குறைவறக்கொடுத்துப்பின்னர்
அறைகழலரசர்தம்மைவருகெனவருளவந்தார் (௧௫)

ஐயனுமவர்கடம்மையகமகிழ்ந்தருளினோக்கி
வையகஞ்சிவிகைதொங்கன்மாமணிமகுடம்பொற்பூண்
கொய்யுளைப்புரவிதிண்டேர்குஞ்சரமாடையின்சொல்
மெய்யுறக்கொடுத்தபின்னர்க்கொடுத்தனன்விடையுமன்றே. (௧௬)

சம்பரன்றன்னைவென்றுதயரதனின்றகாலத்
தும்பர்தம்பெருமானீந்தவொளிமணிக்கடகத்தோடும்
கொம்புடைமலையுந்தேருங்குரகதக்குழுவுந்தூசும்
அம்பரத்தனந்தர்நீத்தானலரிகாதலனுக்கீந்தான். (௧௭)

அங்கதமிலாதகொற்றத்தண்ணலுமகிலமெல்லாம்
அங்கதனென்னுநாமமழகுறத்திருத்துமாபோல்
அங்கதங்கன்னற்றோளாற்கயன்கொடுத்ததனையீந்தான்
அங்கதன்பெருமைமண்மேலாரறிந்துரைக்கிற்பார். (௧௮)

பின்னருமவனுக்கையன்பெருவிலையாரத்தோடும்
அன்னதுண்டேசுமாவுமதமலைக்கரசுமீயா
உன்னைநீயன்றியிந்தவுலகினிலொப்பிலாதாய்
மன்னுககதிரோன்மைந்தன்றன்னொடுமருவியென்றான். (௧௯)

மாருதவிமலசேயைமகிழ்ந்தினிதருளினோக்கி
ஆருதவிடுதற்கொத்தார்நீயலாலன்றுசெய்த
பேருதவிக்கியான்செய்செயல்பிறிதில்லைமெய்ப்பூண்
போருதவியதிண்டோளாய்பொருந்துறப்புல்லுகென்றான். (௨0)

என்றலும்வணங்கிநாணிவாய்புதைத்திலங்குதானை
முன்றலையொதுக்கிநின்றமொய்ம்பனைமுழுதுநோக்கிப்
பொன்றிணிவயிரப்பைம்பூணாரமும்புனைமென்றூசும்
வன்றிறற்கயமுமாவும்வழங்கினன்வழங்குசீரான். (உக)

பூமலர்த்தவிசைநீத்துப்பொன்மதின்மிதிலைபூத்த
தேமொழித்திருவையன்றிருவருண்முகந்துநோக்கப்
பாமறைக்கிழத்தியீந்தபருமுத்தமாலைகைக்கொண்
டேமுறக்கொடுத்தாளன்னாளிடரறிந்துதவினாற்கே. (உஉ)

சந்திரற்குவமைசான்றதாரகைக்குழுவைவென்ற
இந்திரற்கேய்ந்ததாகுமென்னுமுத்தாரத்தோடு
கந்தடுகளிறுவாசிதூசணிகலன்கண்மற்றும்
உந்தினனெண்ணினவேந்தற்குலகமுந்துதவினானே. (உ௩)

நவமணிக்காசுமுத்துமாலையுநலங்கோடேசும்
உவமைமற்றிலாதபொற்பூணுலப்பிலபிறவுமொண்டார்க்
கவனவெம்பரியும்வேகக்கதமலைக்கரசுங்காதற்
யவனனுக்கினியநண்பன்பயந்தெடுத்தவனுக்கீந்தான். (உ௪)

பதவலிச்சதங்கைப்பைந்தார்ப்பாய்பரிபணைத்திண்கோட்டு
மதவலிச்சைலம்பொற்பூண்மாமணிக்கோவைமற்றும்
உதவலிற்றகைவன்றியில்லனவுள்ளவெல்லாம்
சதவலிதனக்குத்தந்தான்சதுமுகத்தவனைத்தந்தான். (உ௫)

பேசரிதொருவர்க்கேயும்பெருவிலையிதனுக்கீறுக்
கோசரியிலதென்றெண்ணுமொளிமணிப்பூணுந்தூசும்
மூசரிக்குவமைமும்மைமும்மதக்களிறுமாவும்
கேசரிதனக்குமீந்தான்கிளர்மணிமுழவுத்தோளான். (உ௬)

வளனணிகலனுந்தூசுமாமதக்களிறுமாவும்
நளனெடுகுமுதன்றாரனவையறுபனசன்மற்றோர்
உளமகிழ்வெய்தும்வண்ணமுலப்பிலபிறவுமீந்தான்
சுளனமர்கமலவேலிக்கோசலக்காவலோனே. (உ௭)

அவ்வகையறுபத்தேழுகோடியாமரியின்வேந்தர்க்
கெவ்வகைத்திறனுநல்கியினியனபிறவுங்கூறிப்
பவ்வமொத்துலகிற்பல்குமெழுபதுவெள்ளம்பார்மேல்
கவ்வையற்றினிதுவாழக்கொடுத்தனன்கடைக்கணோக்கம். (உ௮)

மின்னையேர்மௌலிச்செங்கண்வீடணப்புலவர்கோமான்
றன்னையேயினிதுநோக்கிச்சராசரஞ்சுமந்தசால்பின்
நின்னையேயொப்பார்நின்னையலதிலருளரோவைய
பொன்னையேயிரும்புநேருமாயினும்பொருவன்றென்றான். (உ௯)

என்றுரைத்தமரீந்தவெரிமணிக்கடகத்தோடு
வன்றிறற்களிறுந்தேரும்வாசியுமணிப்பொற்பூணும்
பொன்றிணிதூசும்வாசக்கலவையும்புதுமென்சாந்தும்
நன்றறவவனுக்கீந்தானுகனைத்துயிலைத்தீர்ந்தான். (௩0)

சிருங்கபேரியமென்றோதுஞ்செழுநகர்க்கிறையைநோக்கி
மருங்கினியுரைப்பதென்னோமறுவறுதுணைவற்கென்னாக்
கருங்கைம்மாக்களிறுமாவுங்கனகமுந்தூசும்பூணும்
ஒருங்கறவுதவிப்பின்னருதவினன்விடையுமன்றே. (௩௧)

அநுமனைவாலிசேயைச்சாம்பனையருக்கன்றந்த
கனைகழற்காலினானைக்கருணையங்கடலுநோக்கி
நினைவதற்கரிதுநும்மைப்பிரிவென்றனீவிர்வைப்பும்
எனததுகாவற்கின்றென்னேவலிற்சென்மினென்றான். (௩௨)

இலங்கைவேந்தனுக்குமிவ்வாறினியனயாவுங்கூறி
அலங்கல்வேன்மனுகையண்ணல்விடைகொடுத்தருளலோடும்
நலங்கொள்பேருணர்வின்மிக்கோர்நலனுறுநெஞ்சர்பின்னர்க்
கலங்கலோயசெய்தல்கடனெனக்கருதிச்சூழ்ந்தார். (௩௩)

பரதனையிளையகோவைச்சத்துருக்கனனைப்பண்டை
விரதமாதவனைத்தாயர்மூவரைமிதிலைப்பொன்னை
வரதனைவலங்கொண்டேத்திவணங்கினர்விடையுங்கொண்டே
சரதமாநெறியும்வல்லோர்தத்தமபதியைச்சார்ந்தார். (௩௪)

குகனைத்தன்பதியினுய்த்துக்குன்றினைவலஞ்செய்தேரோன்
மகனைத்தன்புரத்தில்விட்டுவாளெயிற்றரக்கர்சூழக்
ககனத்தின்மிசையேயெய்திக்கனைகடலிலங்கைபுக்கான்
அகனுற்றகாதலண்ணலலங்கல்வீடணன்சென்றன்றே. (௩௫)

ஐயனுமவரைநீக்கியடிசெறிதுணைவரோடும்
வையகமுழுதுஞ்செங்கோன்மனுநெறிமுறையிற்செல்லச்
செய்யமாமகளுமற்றைச்செகதலமகளுமற்றும்
நையுமாறின்றிக்காத்தானிலம்பொறைகடீர்த்தே. (௩௬)

உம்பரோடிம்பர்காறுமுலகமோரேழுமேழும்
எம்பெருமானென்றேத்தியிறைஞ்சிநின்றேவல்செய்யத்
தம்பியரோடுந்தானுந்தருமமுந்தரணிகாத்தான்
அம்பரத்தனந்தர்நீங்கியயோத்திவந்திறுத்தகாளை. (௩௭)

விடைகொடுத்தபடலம்முற்றிற்று. ஆ படலம்-௩௮ இ-திருவிருத்தம்-௪௩௭

## உயுத்தகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீமத்-உபய-ஆத்தான், கிருஷ்ணமாசாரியர்திருவடிகள்வாழ்க.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

ஶ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கரு | கூக | உ | மமரோ | மமரோ |
| ககூ | உகா | ரு | அந்தனள | அந்தணுள |
| உக | சச | உ | மந்திற | மந்திர |
| உச | எக | ச | ஞெருவணெண் | ஞெருவனெண் |
| எரு | உக | ரு | முன்றினுரு | முன்றிலுரு |
| ககஉ | உஎ | ரு | குப்பிற்றீர் | குப்புற்றீர் |
| ககஎ | காகூ | ச | தோளின்ன | தோளினன் |
| கருயி | கஅரு | ரு | நடைவா | நட்வா |
| கருகா | உச0 | ரு | மரசதசிகர | மரகதசிகர |
| கசச | ருரு | ச | னெழுந்தாபோற் | னெழுந்தாப்போற் |
| கருயி | ககக | உ | னடுவனின்ற | னடுவணின்ற |
| ககாகா | உருஉ | க | வெண்கொடை | வெண்குடை |
| ககாஎ | உகாகா | க | யொருவர்குற் | யொருவருற் |
| ககாஅ | உகாகூ | ச | பென்னு | பென்னு |
| கஎக | ரு0க | உ | சொண்டெழும் | கொண்டெழுந் |
| உ0எ | கஎ0 | ரு | நெஞ்சாரதி | நெடுஞ்சாரதி |
| உஉகூ | அகூ | க | ஐய்ய | ஐய |
| உருஉ | ககரு | ரு | குஞ்சரக்கன்ன | குஞ்சரகன்ன |
| உசகா | உசரு | ச | மிமிசை | மிசை |
| உசகூ | உகாகா | ச | தெரிக்கலாதன் | தெரிக்கலாதான் |
| உகாச | க0உ | ச | னிருந்துபுழிக் | னிருந்துழிபுக் |
| உஅஅ | கஎஅ | க | சுடேட்டணன் | சுசேட்டணன் |
| உகூச | ச | க | வாணுட்டு | வாணுட்டு |
| ருருஉ | எச | உ | படிந்து | படந்து |
| 0 | 0 | ச | இடிந்து | இடந்து |
| ருருச | அஅ | ச | னமனுக்குகோர் | னமனுக்கோர் |
| ருசஎ | உரு | உ | முடுகியவவ | முடுகியவ |
| ருகாகா | க0 | உ | வெறிந்து | எறிந்து |
| ருஎஉ | எ0 | ச | வாளித்தூளி | வாளித்தூணி |
| ருகூஉ | கஉ | உ | மடைந்தை | மடந்தை |
| ருகூச | ருகா | ச | பாயினன் | போயினன் |
| ச0உ | கஎ | ரு | பொருட்டினேலே | பொருட்டினுலே |
| சருஉ | கஉ | ச | திமில | துமில |
| சஉச | கஉச | ரு | பறத்த | பிறத்த |
| சஉரு | கருரு | க | ஆர்ப்பாரணு | ஆர்ப்பாராணு |
| சருஎ | ககாரு | ச | மிந்த | மிழந்த |
| சஅகா | உஅ | ச | கவ்வகை | கவ்வை |

பிழைதிருத்தம்-முற்றிற்று.

